ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்







ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்களருளிச் செய்த திவ்வியப் பிரபந்தங்களிலிருந்து
முன்னோர்கள் தொகுத்த

# நித்யாநுஸந்தானம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி இயற்றிய திவ்யார்த்த தீபிகை
யுரையின் ஸாரமான வியாக்கியானம் கொண்டது.

மூன்ரும் பதிப்பு

சென்னை ரத்தினம் (கிளை) அச்சகத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

கிடைக்குமிடம் :—
**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

1964 [விலை ரூ. 5.

17-9-72

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.

    

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்களருளிச் செய்த திவ்யப்பிரபந்தங்களிலிருந்து
முன்னோர்கள் தொகுத்த

# நித்யாநுஸந்தானம்.

— முதற் பகுதி —

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி இயற்றிய திவ்யார்த்த தீபிகையுரையின் ஸாரமான வியாக்கியானம் கொண்டது.

(இரண்டாம் பதிப்பு.)

ஸ்ரீ ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தி நினைவுமாலையின் பதினாறுவது மலராக வெளியிடப்பட்டது.

சென்னை புரசைவாக்கம் கமர்ஷியல் ஸிண்டிகேட் பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

கிடைக்குமிடம்—கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்.

இத[illegible]விலை 2—0—0

1953.

ஸ்ரீ

## இம்முதற் பகுதியில் அடங்கியுள்ள திவ்யப்பிரபந்தங்களின் அட்டவணை



---

## இரண்டாம் பகுதியில் சேரும் பிரபந்தங்களாவன :

1. உபதேசரத்தின மாலை.
2. திருவாய்மொழி நூற்றந்தாதி.
3. ஆர்த்திப் பிரபந்தம்.
4. ஞானஸாரம்.
5. பிரமேயஸாரம்.
6. ஸப்த காதை, வாழித் திருநாமங்கள்.

---

முக்கிய அறிவிப்பு :—நாலாயிர திவ்யப்ரபந்தங்கள், ஸகலஸ்தோத்ரபாடங்கள், ஸ்ரீவசநபூஷணாதிரஹஸ்யங்கள் ஆளவந்தார் தொடங்கி மணவாளமாமுனிகள் வரையிலுள்ள பூர்வாசாரியர்களருளிச் செய்த வடமொழி தென்மொழி நூல்கள் யாவும் இங்கே கிடைக்கும். தமிழ் தெலுங்கு நாகரி கியாட்லாகுகள் தருவித்துப் பார்க்க. புத்தகங்களை வி. பி. மூலமாக அனுப்ப ஆர்டர் பண்ணுபவர்கள் முன் பணம் அனுப்ப வேண்டியது அவசியம்.

இப்படிக்கு,
மானேஜர்—க்ரந்தமாலா ஆபீஸ்,
காஞ்சீபுரம்,

15—4—53.

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



## ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

———

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்ஸ்வாமி அருளிய
திவ்யார்த்த தீபிகையுரையின் ஸங்க்ரஹத்தோடு கூடின

# நித்யாநுஸந்தானம்.

## பொதுத்தனியன்கள்

———

நம்பெருமாள் அருளிச்செய்தது

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்:
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் யதீந்த்ர ப்ரவணம் ரம்ய ஜாமாதரம் முநிம் வந்தே.

திருமலையாழ்வார் என்னும் திருவாய்மொழிப் பிள்ளையின் திருவருளுக்குப் பாத்ரபூதரும் ஞானம் பக்தி முதலிய நற்குணங்களுக்குக் கடல் போன்றவரும் எம்பெருமானார் பக்கலிலே ப்ராவண்ய முடையவருமான மணவாள மாமுனிகளை வணங்கா நின்றேன்.

"இப்புவியிலரங்கேசற்கு ஈடளித்தான்வாழியே" என்று வாழ்த்தப்படா நின்ற மணவாளமாமுனிகள் திருவரங்கம் பெரியகோயிலில் ஸ்ரீ ரங்கநாதன் திருமுன்பே, திருவாய்மொழியின் சிறந்த வியாக்கியான மாகிய ஈடுமுப்பத்தாறாயிரப்படியைக் காலக்ஷேபம் ப்ரஸாதித்துவருகிற அடைவிலே காலக்ஷேபசாத்துமுறையன்று ஸ்ரீ ரங்கநாதன் தானே ஒரு சிறுபிள்ளை வடிவுடன் திருவோலக்கத்தினிடையே ஓடிவந்து கைகூப்பி நின்று ஸ்ரீ சைலேசதயாபாத்ரமென்று தொடங்கி இந்தத் தனியனை வெளியிட்டுச் சென்றது மன்றியில், வடமொழிவேதத்தின் ஆதியிலும் அந்தத்திலும் ப்ரணவோச்சாரணம் பண்ணுவது நியதமாயிருப்பதுபோலத் தமிழ்வேத பாராயணத்தின் ஆதியிலும் அந்தத்திலும் இந்தத்தனியனை ஸ்ரீ வைஷ்ணவர்களனைவரும் நியதமாக அநுஸந்திக்கக் கடவர்களென்று நியமனமு மருளினன்.

மணவாளமாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளைக்கு ஸ்ரீ சைலேசர் என்று திருநாமம்.

.... .... ... ....

கூரத்தாழ்வான் அருளிச்செய்தது

லக்ஷ்மீ நாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாத யாமுந மத்யமாம் அஸ்மதாசார்ய பர்யந்தாம் குருபரம்பராம் வந்தே.

எம்பெருமானைத் தொடக்கத்திலே உடைத்தாய் ஸ்ரீமந் நாதமுனிகளையும், ஆளவந்தாரையும் இடையிலே உடைத்தாய் எமக்கு ஆசார்யரான எம்பெருமானாரை முடிவிலே உடைத்தான ஆசார்ய பரம்பரையை வணங்காநின்றேன்.

இதுவும் ஆழ்வானருளிச் செய்தது

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

ய: நித்யம் அச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம வ்யாமோஹத : தத் இதராணி த்ருணாய மேநே, அஸ்மத் குரோ : பகவத : தயா ஏக ஸிந்தோ: அஸ்ய ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

யாவரொரு எம்பெருமானார் எந்நாளும் எம்பெருமானது திருவடித்தாமரை யிணைகளாகிற ஸுவர்ணத்தினுள்ள மிகுந்த விருப்பத்தினாலே அத்திருவடிகளுக்குப் புறம்பாயுள்ள விஷயங்களைத் துரும்பாக நினைத்துத் தள்ளி விட்டாரோ எமக்கு ஆசார்யராய் ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணராய் திருவருட்கடலான இந்த எம்பெருமானாருடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்.

ஆளவந்தார் அருளிச்செய்தது

மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

மத் அந்வயாநாம் நியமேந மாதா பிதா யுவதய: தநயா: விபூதி:ஸர்வம் யத் ஏவ, ந : ஆத்யஸ்ய குலபதே: வகுள அபிராமம் ஸ்ரீமத் தத் அங்க்ரியுகளம் மூர்த்நா ப்ரணமாமி.

என்னைச் சேர்ந்தவர்களுக்கு எப்பொழுதும் தாய், தந்தை, மாதர், மக்கள், செல்வம் (மற்றுமுள்ள) எல்லாமும் யாதொரு ஆழ்வார் திருவடியேயோ, நமக்குக் குலகூடஸ்தராகிய ஆழ்வாருடையமகிழ மலர்களினால் அழகாயும் நித்யோஜ்வலமாயு மிருக்கிற அந்தத் திருவடியிணையைத் தலையால் வணங்குகிறேன்.

ஸ்ரீபராசரபட்ட ரருளிச்செய்தது

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்,
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

பூதம் ஸரச் ச மஹத் ஆஹ்வய பட்டநாத ஸ்ரீ பக்திஸார குலசேகர யோகி வாஹாந், பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ர மிச்ராந் ஸ்ரீமத்பராங் குசமுநிம் நித்யம் ப்ரணத: அஸ்மி.

பூதத்தாழ்வாரையும் பொய்கை யாழ்வாரையும் பேயாழ்வார் பெரியாழ்வார் திருமழிசை யாழ்வார் குலசேகராழ்வார் திருப்பாணாழ்வார் இவர்களையும் தொண்டரடிப் பொடியாழ்வார் திருமங்கையாழ்வார் எம்பெருமானார் இவர்களையும் நம்மாழ்வாரையும் நாள்தோறும் ஸேவிக்கிறேன்.

ஆழ்வார்கள் பதின்மரையும் ஆசாரியர்களில் முக்கியரான எம்பெருமானாரையும் சேர்த்து அநுஸந்திக்கும் ச்லோகமாமிது. இதில், பொய்கையார் பூதத்தார் பேயார் என்கிற முறைமைப்படியே திருநாமங்களைப்பதியாமல் பூதத்தாழ்வாரை முன்னேபதிந்தும் நம்மாழ்வாரை முடிவிற் பதிந்துமிருப்பது ச்லோகம் கூடினவகையிலே அமைந்த அமைப்பு என்று நினைத்திடுவர் சிலர். அங்ஙனன்று; "காஸார பூத மஹதாஹ்வய பக்திஸாராங் ஸ்ரீமச்சடாரி குலசேகர பட்டநாதாந, பக்தாங்க்ரிரேணு முநிவாஹந கார்த்திகேயாங் ராமாநுஜஞ்சயமிநம் ப்ரணதோஸ்மி நித்யம்" என்று அடைவுபடக் கவி சொல்லுவதில் அருமையொன்றுமில்லை: ஆயினும், பூதத்தாழ்வார் தொடங்கி நம்மாழ்வார் முடிவாக அமைக்கப்பட்ட இந்த ப்ரக்ரியைக்கு நல்ல நியாமகம் ஒன்றுண்டு கேண்மின்—

ஆழ்வார்களுள் முக்கியரான நம்மாழ்வாரை அவயவியாகவைத்து மற்றுள்ள ஆழ்வார்களை அவர்க்குத் திருமுடி திருக்கண் முதலிய அவயவங்களாக வைத்துப் பூருவாசாரியர்கள் ச்லோகங்களருளிச் செய்துள்ளார்கள். அவற்றில், பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும், பொய்கை பேயாழ்வார்களைத் திருக்கண்களாகவும், பட்டர்பிரானைத் திருமுகமாகவும், திருமழிசைப்பிரானைத் திருக்கழுத்தாகவும் குலசேகரப்பெருமானையும் திருப்பாண்பெருமாளையும் திருக்கைகளாகவும், தொண்டரடிப்பொடிகளைத் திருமார்பாகவும், கலியனைத் திருநாபியாகவும், எதிராசனைத்திருவடியாகவும் உருவகப்படுத்தியிருத்தலால் அந்தப்ரக்ரியைக்கு ஏற்ப இந்தத்தனியன் திருவவதரித்ததென்று பெரியார் கூறுவர். அவயவபூதர்களை முந்துற வரிசையாகச் சொல்லி, அவயவியான ப்ரபந்நஜநகூடஸ்தரை முடிவில் சொல்லியிருப்பது இவ்வகையிலே நன்கு பொருந்துமென்றுணர்க. பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கும்போது நஞ்சீயருடைய பிரார்த்தனையினால் அருளிச்செய்த ச்லோகமிது. .... .... *

போதுத்தனியன்களின் உரை முற்றிற்று.

———

## திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழிகளின்

# தனியன்கள்

(ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்தது)

குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந்
நரபதிபரிக்ல்ப்தம் சுல்கமாதாதுகாம:,
ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி.

ய: நரபதி பரிக்ல்ப்தம் சுல்கம் ஆதாது காம: குருமுகம் அநதீத்ய அசேஷாந் வேதாந் ப்ராஹ, அமர வந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத் ச்வசுரம் த்விஜகுல திலகம் தம் விஷ்ணு சித்தம் நமாமி.

யாவரொரு பெரியாழ்வார் வல்லபதேவனென்கிற அரசனால் ஏற்படுத்தப்பட்ட பந்தயப் பொருளாகிய பொற்கிழியை கிரஹிக்க எண்ணமுடையவராய் ஆசார்யமுகமாக ஒரு கல்வியும் கற்காமலே (பரதத்துவ நிர்ணயத்திற்கு வேண்டிய) வேதங்களெல்லாவற்றையும் (பகவத் கிருபையினால்) எடுத்துரைத்தாரோ, தேவர்களினால் ஸேவிக்கத்தகுந்தவரும் ஸ்ரீ ரங்கநாதனுக்கு நேராக மாமனாரும் பிராமண குலத்திற்குத் திலகம் போன்றவருமான அப்பெரியாழ்வாரை வணங்குகிறேன்.

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகால்
சொன்னார் கழற்கமலஞ் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோங் கீழ்மையினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

மின் ஆர் தட மதிள் சூழ் வில்லிபுத்தூர் என்று ஒருகால்சொன்னார் கழல்கமலம் சூடினோம், முன் நாள் கிழி அறுத்தான் என்று உரைத்தோம், நெஞ்சமே வந்து கீழ்மையினில் சேரும் வழி அறுத்தோம்.

"ஒளி நிறைந்த பெரிய திருமதிலாலே சூழப் பட்ட ஸ்ரீ வில்லிபுத்தூர்" என்று ஒருதரம் உச்சரித்தவருடைய திருவடித் தாமரைகளை சிரமேற் கொண்டோம்; "புருஷார்த்தம் வெளியாகாத காலத்தில் (பரதத்த்வ நிர்ணயம் பண்ணி) பொருள் முடிப்பை அறுத்தருளினர்" என்று சொல்லப் பெற்றோம்; ஓ! நெஞ்சே! நீ அநுகூலமாய் வரப் பெற்று அதோகதியாகிற நரகத்தில் சேருகைக்குடலான வழியை அறப்பண்ணினோம்.

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
ஈண்டிய சங்க மெடுத்தூத—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

பாண்டியன் கொண்டாட பட்டர் பிரான் வந்தான் என்று ஈண்டிய சங்கம் எடுத்து ஊத, வேண்டிய வேதங்கள் ஓதி விரைந்து கிழி அறுத்தான் பாதங்கள் யாமுடைய பற்று.

வல்லபதேவ னென்கிற பாண்டிய ராஜன் ப்ரசம்ஸிக்க, "ப்ராஹ்மணர்களுக்கு உபகாரகரான பெரியாழ்வார் எழுந்தருளினர்" என்று திரள்திரளான சங்குகளைக் கையில் கொண்டு (பலர்) ஊத, (விஷ்ணு பாரம்யஸ்தாபநத்துக்கு) ஆவச்யகங்களான வேதவாக்கியங்களை உபந்யஸித்து விளம்பியாமல் [த்வரித்து] வித்யாசுல்கமாக வைத்த பொருள் முடிப்பை அறுத்தருளின பெரியாழ்வாருடைய திருவடிகளானவை நமக்குப் புகலிடம்.

தனியன் உரை முற்றிற்று.

## பெரியாழ்வார் வைபவச்சுருக்கம்

ஸ்ரீ வில்லிபுத்தூரில் அந்தணர்குலத்திலே ஆனிமாதத்து ஸ்வாதீநக்ஷத்திரத்தில் அவதரித்து விஷ்ணுசித்தரென்னுந் திருநாமமுடையராயிருந்த இவ்வாழ்வார் அவ்வூர்ப்பெருமாளுக்கு நந்தவனமமைத்துத் திருமாலைகட்டிச் சாத்துபவராயிருந்தார். அக்காலத்து, தென் மதுரையரசனான வல்லபதேவன் நற்கதி நண்ணும் வழியைச் சிந்தித்துத் தன் புரோஹிதனான செல்வநம்பியின் உபதேசத்தினால் பல வித்வான்களையும் திரட்டிப் பரதத்துவநிர்ணயம் பண்ணுவிக்க விரும்பி, மதுரையில் ஒரு பெரியஸ்தலத்தில் அபாரமான பணத்தை வித்யாசுல்கமாகக் கிழிச்சீரையில் வைத்துப் பலவிடங்களிலுமுள்ள பண்டிதர்களுக்கு அழைப்புப்பத்திரிகையனுப்பினன். இவ்வாழ்வாரைக்கொண்டு பரதத்துவநிர்ணயம் செய்விக்கவிரும்பிய ஸ்ரீ வில்லிபுத்தூர்ப்பெருமாள் கனவிலே இவர்க்கு நியமனம் தந்தருளி, இவர் ஸர்வஜ்ஞராம்படியான விசேஷகடாக்ஷமும் செய்தருளி மதுரை வித்வத்ஸபைக்கு இவரையனுப்ப, இவரும் கம்பீரமாய் எழுந்தருளி ஸ்ரீமந்நாராயணனே பரமபுருஷனென்று சுருதி ஸ்மிருதி இதிஹாஸ புராணாதிகளைக்கொண்டு பலவாறாக உபந்யஸித்து அக்கிழியை அறுத்துக்கொண்டார். இங்ஙனம் பரதத்துவநிர்ணயஞ் செய்தருளின இவ்வாழ்வார்க்கு அரசன் யானையின்மீது மஹோத்ஸவம் செய்

விக்க, பரமபதநாதனுன எம்பெருமான் இந்த மஹோத்ஸவத்தைத் தானுங்கண்டு களிக்க விரும்
பிப் பரிஜநபரிவாரங்களோடு கருடன்மீது எழுந்தருளி நெருங்கிநிற்க, ஆழ்வார் ஸேவித்து
வியந்து யானைமணிகளைத் தாளமாகக் கொண்டு பல்வகையாலும் திருப்பல்லாண்டு பாடினர்.
பிறகு விசேஷ பஹுமானம் பெற்று ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு எழுந்தருளி மதுரையிற் கிடைத்த
பொருள்களையெல்லாம் பகவானுக்கே ஸமர்ப்பித்துப் 'பெரியாழ்வார் திருமொழி' என்னும்
திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்து முன்போலவே நந்தவனத் திருப்பணியில் நிரதராயிருந்து *
வாழ்ந்து விளங்கினர். ... ... .... .... ....

பெரியாழ்வார் வைபவச்சுருக்கம் முற்றிற்று

———

ஸ்ரீ

# திருப்பல்லாண்டு முன்னுரை

———

இப்பிரபந்தத்திற்குத் திருப்பல்லாண்டென்று திருநாமம் வழங்குதற்குக் காரணம்
யாதெனில்; ஒவ்வொரு பாசுரத்திலும் பல்லாண்டு பல்லாண்டு என்றுசொல்லி மங்களாசாஸ
நம் செய்திருப்பதனுல் அதனையே நிரூபகமாக்கிப் பல்லாண்டு என்று திருநாமம் சாத்தினர். திரு
என்பது வடமொழியில் ஸ்ரீசப்தம்போல் மேன்மையையுணர்த்தும்; மேன்மைதங்கிய மங்களா
சாஸந ப்ரபந்தம் என்றபடி, இப்பிரபந்தம் பல்லாண்டென்று தொடங்கப்படுவதால் முதற்குறிப்பு
என்னுமிலக்கணத்தால் திருப்பல்லாண்டெனத் திருநாமம் பெற்றதென்னவுமாம்.

அவாப்த ஸமஸ்தகாமனென்றும் ஸர்வரக்ஷகனென்றும் ப்ரஸித்தனுன ஈச்வரனைக் கண்
டால் தமக்கு வேண்டிய மங்களங்களை அவனிடத்தில் பிரார்த்தித்துப் பெறவேண்டியிருக்க, தாம்
அவனுக்கு மங்களமுண்டாகுமாறு ஆசாஸிப்பது தகுதியோவென்னில்; பகவத்கிருபையினுல்
கிடைத்த பக்தியினுல் அந்த பகவானுடைய ஸர்வரக்ஷகத்வம் முதலான குணங்களை அடியோடு
மறந்து 'பகவானுக்குக் குறையொன்றுமில்லாமலிருப்பதே நமக்கு மங்களம்' என்று இவ்
வாழ்வார் நினைத்து மங்களாசாஸநம் பண்ணுகிருர் என்றுணர்க.

மற்றுள்ள ஆழ்வார்களுக்கும் மங்களாசாஸநத்தில் ஊற்றமிருந்தாலும் அவர்களுக்கு அது
எப்போதோ ஒருகாலுள்ளதேயன்றி இப்பெரியாழ்வார்க்குப்போலே நித்யமாயும் முக்கியமாயு
மிராது. அவர்கள் எம்பெருமானை ரக்ஷகனுகப்பற்றி அவனிடத்தில் தங்களுடைய வாழ்ச்சி
யைப்பெறுவதற்கு விரும்புவர்கள். இவ்வாழ்வார் அப்படியல்லாமல் எம்பெருமானுடைய
வாழ்வையே தமக்கு வாழ்வாக நினைத்துப் பெருமாளுக்கு என்ன தீங்குவருகிறதோவென்று
பயப்பட்டுக் காப்பிடத்தேடுகிற பரமபக்தராவர். ஆனதுபற்றியே மற்றுள்ள ஆழ்வார்களைவிட
மிக்க பெருமையையுடையவரானது காரணமாகவே இவர்க்குப் பெரியாழ்வாரென்று ப்ரசித்தி
யுண்டாயிற்று;

"மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள்
தங்களார்வத்தளவு தானன்றிப்—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்முன்
பெரியாழ்வா ரென்னும் பெயர்"

என்று உபதேசரத்தினமாலையிலே இவ்வர்த்தத்தை மணவாளமாமுனிகள் அருளிச்செய்தார்.

———

ஸ்ரீ

பெரியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு

(ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமி யருளிச்செய்த
உரையோடு கூடியது.)

---

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு *
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா * உன்
சேவடி செவ்விதிருக் காப்பு. (1)

மல் ஆண்ட திண் தோள் மணிவண்ணா பல் ஆண்டு பல் ஆண்டு பல் ஆயிரம் ஆண்டு பல கோடி நூறு ஆயிரம் உன் சே அடி செவ்வி திருக் காப்பு.

மல்லர்களை நிரஸித்த திண்ணிய தோள்களை யுடையனாய் நீலமணி போன்ற திருநிறத்தை யுடையனானவனே! பல பல வருஷங்களிலும் அநேக ப்ரஹ்மகல்பங்களிலும் இப்படி உண்டான காலமெல்லாம் உன்னுடைய சிவந்த திருவடிகளினுடைய அழகுக்குக் குறைவற்ற ரக்ஷை உண்டாயிடுக.

* * *—பாண்டியராஜனுடைய பண்டிதஸபையிலேவந்து பரதத்வநிர்ணயம் பண்ணின பெரியாழ்வார்க்கு அவ்வரசன் யானையின்மேலே மஹோத்ஸவம் செய்வித்தபோது அந்த உத்ஸவத்தைக்கண்டு ஆநந்திப்பதற்காக ஸ்ரீவைகுண்டநாதன் ஸபரிவாரனாய் எழுந்தருளி எதிரே ஸேவைஸாதிக்க, ஆழ்வார் ஸேவித்து 'இந்த அருமருந்தன்ன எம்பெருமானுக்கு எழும்பூண்டெல்லாம் அஸுரராக்ஷஸமயமாயிருக்கிற இந்நிலத்திலே யாராலே என்ன தீங்கு விளைகிறதோ வென்று அதிசங்கைப்பட்டு 'ஒரு அமங்களமும் நேரிடாதபடி மங்களமே யாயிருக்கவேணும்' என்று பல்லாண்டு பாடுகிறார். அதாவது—ஜயவிஜயீபவ என்கிறார் என்றபடி.*

ஆழ்வார் இப்படி அதிசங்கையாலே மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்று தெரிந்துகொண்ட எம்பெருமான் 'ஐயோ! ஏன் இவர் இப்படி பயப்படுகிறார். எப்படிப்பட்ட எதிரிகளையும் ஒரு விரல் நுனியாலே வென்றொழிக்கவல்ல தேஹவலிவு நமக்கு உண்டென்பது இவர்க்குத் தெரியவில்லை போலும்; அந்த வலிவைக் காட்டினோமாகில் இவருடைய அச்சம் அடங்கிவிடும்' என்று நினைத்து, முன்னே க்ருஷ்ணாவதாரகாலத்தில் தன்னைக்கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்டுவந்த சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லர்களை நுறுக்கித்தள்ளின தன்னுடைய புஜபலத்தைக் காட்டினான்; ஆழ்வாருடைய அச்சம் தணிவதற்காகக் காட்டின அந்த வலிவு ஆழ்வாருடைய பயம் அதிகரிப்பதற்கே காரணமாயிற்று. புத்திரன் சூரனாயிருந்தால் அவனுடைய தாயானவள் 'இவன் ஒருவரையும் லக்ஷியம் பண்ணாமல் யுத்தம் செய்யப்போய்விடுவனே! யாராலே என்ன கெடுதி நேர்ந்துவிடுமோ' என்று பயப்படுவதுபோல் இவரும் அந்த மல்லாண்ட திண்டோள் வலிமைக்குப் பயப்பட்டு மீண்டும் மங்களாசாஸநம்பண்ணுகிறார். (1)

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றியாயிரம்பல்லாண்டு *
வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு *
வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு *
படைபோர்புக்குமுழங்கும் அப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே. (2)

அடியோமோடும் நின்னோடும் பிரிவு இன்றி ஆயிரம் பல்லாண்டு; வடிவு ஆய் நின் வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு; வடிவு ஆர் சோதி வலத்து உறையும் சுடர் ஆழியும் பல்லாண்டு; படைபோர் புக்கு முழக்கும் அ பாஞ்ச சன்னியமும் பல்லாண்டு.

தாஸபூதர்களாய் அடியேன் தொடக்கமாயுள்ள சேதநர்களோடும் ஸ்வாமியான தேவரீரோடும் பிரிவில்லாமல் (இந்த ஸம்பந்தம்) நித்யமாய்ச் செல்லவேணும். (உனக்கு) நிரூபகபூதையாய் உன்னுடைய திருமார்பின் வலது பக்கத்தில் பொருந்தியிரா நின்றுள்ள நித்யயௌவந சாலிநியான பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களும் பல்லாண்டு; (உன்) திருமேனியை வ்யாபித்திருக்கிற ஜ்யோதிஸ்ஸை யுடையனாய் வலத்திருக்கையிலே நித்யவாஸம் பண்ணுமவனாய்ப் பகைவரை எரிக்குமவனான திருவாழியாழ்வானும் பல்லாண்டு—; சேனைகளையுடைய யுத்தங்களில் புகுந்து கோஷிக்கின்ற அளவற்ற பெருமையை யுடைய ஸ்ரீ பாஞ்சஜந்யாழ்வானும் பல்லாண்டு. [ஏ—ஈற்றசை.]

***—சேஷபூதர்களான அடியோங்களும் ஸர்வசேஷியான தேவரீரும் ஒருவரையொருவர் விட்டுப்பிரியாமல் நெடுநாளளவும் மங்கலமாக வாழவேணும்; பெரியபிராட்டியாரும் தேவரீருமான சேர்த்தி எப்போதும் மாறாமல் நித்தியவாழ்ச்சியாகச் செல்லவேணும்; திருவாழியாழ்வானும் திருச்சங்காழ்வானும் குறையொன்றுமின்றி வாழவேணும் என்று இப்பாட்டால் உபய விபூதிகளோடுங் கூடின நிலைமைக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறார். "அடியோமோடும்" என்று இந்த லீலாவிபூதியிலிருக்கிற தங்களையும், மற்ற மூன்றடிகளாலே பரமபதமாகிய நித்ய விபூதியிலுள்ள பெரியபிராட்டியார் முதலானவர்களையும் இப்பாட்டில் கூறியிருப்பதனால் உபய விபூதியுக்தனான எம்பெருமானுக்கு இப்பாசுரத்தால் பல்லாண்டுபாடினாராயிற்று. முதலிரண்டு பாட்டுக்களையும் சேர்த்தே அநுஸந்திப்பர். .... .... .... (2)

வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல் வந்துமண்ணும்மணமும்கொண்மின்
கூழாட்பட்டுநின்றீர்களை யெங்கள்குழுவினில்புகுதலொட்டோம்*
ஏழாட்காலும்பழிப்பிலோம்நாங்கள் இராக்கதர்வாழ்* இலங்கை
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (3)

வாழ் ஆள் பட்டு நின்றீர் உள்ளீர் எல் வந்து மண் கொள்மின் மணமும் கொள்மின்; கூழ் ஆள்பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில் புகுதல் ஒட்டோம்; நாங்கள் எழ் ஆள் காலும் பழிப்பு இலோம்; இராக்கதர் வாழ் இலங்கை பாழ் ஆள் ஆக படை பொருதானுக்கு பல்லாண்டு கூறுதும்.

உஜ்ஜீவிப்பதற்கு உறுப்பான (எம்பெருமானுடைய) அடிமைத்தொழிலில் ஈடுபட்டு நிலைத்து நின்றவர்கள் இருப்பீர்களாகில் (நீங்கள் எங்களோடே) வந்து சேர்ந்து (எம்பெருமானுடைய உத்ஸவார்த்தமான திருமுளைத் திருநாளுக்குப்) புழுதிமண் சுமவுங்கள்; (அந்த உத்ஸவத்துக்கு) அபிமானிகளாகவும் இருங்கள்; சோற்றுக்காக (ப்பிறரிடத்தில்) அடிமைப் பட்டிருப்பவர்களை எங்களுடைய கோஷ்டியிலே அங்கீகரிக்கமாட்டோம்; (எங்களுக்குள்ள சிறப்பு என்னவென்கிறீர்களோ,) நாங்களோ வென்றால் ஏழு தலைமுறையாக ஒரு வகைக் குற்றமும் இல்லாதவர்கள்; (எங்களுடைய தொழிலோவென்னில்) ராக்ஷஸர் வஸிக்கிற லங்கையிலிருந்த ஆண் புலிகள் யாவரும் வேரோடே அழிந்துபோம்படி (வாநர) சேனையைக் கொண்டு போர்செய்த பெருமாளுக்குப் பல்லாண்டு பாடுகிறவர்களா யிருக்கின்றோம்.

***—இவ்வாழ்வார் தனியாயிருந்து மங்களாசாஸநம் பண்ணுவதில் த்ருப்திபெறாமையும், 'போக்யமான வஸ்துவைத் தனியே அநுபவிப்பது தகாது' என்கிற நியாயத்தைக்

கொண்டும் இன்னும் பலபேர்களையும் மங்களாசாஸநத்திற்குத் துணைகூட்டிக்கொள்ள வேணுமென்று நினைத்தார்; உலகத்தில் எத்தனைவகையான அதிகாரிகள் இருக்கிறார்களென்று ஆராய்ந்து பார்த்தார்; செல்வத்தை விரும்புமவர்கள், ஆத்மாநுபவமாகிற கைவல்யத்தை விரும்புமவர்கள், எம்பெருமானுடைய அநுபவத்தை அபேக்ஷிப்பவர்கள் என்றிப்படிப்பட்ட அதிகாரிகள் இருப்பதைக் கண்டார்; இம்மூவகை யதிகாரிகளில் செல்வத்தை விரும்புமவர்களும் கைவல்யத்தை விரும்புமவர்களும் ப்ரயோஜநாந்தரபரர்களா யிருந்தாலும் அந்த அற்பபலனுக்காகவாவது எம்பெருமானைப் பணிந்து பிரார்த்திக்கின்றார்களாகையால் அவர்களையும் திருத்திப் பணிகொள்ளலாமென்று ஆழ்வார் நிச்சயித்து மேற்சொன்ன மூவகை யதிகாரிகளையும் மங்களாசாஸநத்துக்கு அழைக்க விரும்பி, முதல்முதலாக எம்பெருமானுடைய அநுபவத்தையே விரும்புமவர்களான ஜ்ஞாநிகளை அழைக்கிறார்.

[மண்ணும்மணமும் கொண்மின்.] மண் கொள்ளுகையாவது—மஹோத்ஸவத்தில் அங்குரார்ப்பணத்திற்குப் புழுதிமண் சுமப்பது. மணங்கொள்ளுகையாவது—அந்த மஹோத்ஸவத்தினிடத்தில் அபிமானங்கொண்டிருப்பது. முற்காலத்தில் அடிமையோலை யெழுதும்போது "மண்ணுக்கும் மணத்துக்கும் உரியேனாகக் கடவேன்" என்றெழுதுவது வழக்கமாம்.

ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்து எங்கள்குழாம்புகுந்து *
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ *
நாடுநகரமும் நன்கறிய நமோ நாராயணாயவென்று *
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டுகூறுமினே. (4)

வந்து எங்கள் குழாம் புகுந்து கூடும் மனம் உடையீர்கள் ஏடுநிலத்தில் இடுவதன் முன்னம் வரம்பு ஒழி வந்து ஒல்லை கூடுமின்; நாடும் நகரமும் நன்கு அறிய நமோ நாராயணாய என்று பாடும் மனம் உடை பத்தர் உள்ளீர் வந்து பல்லாண்டு கூறுமின்.

(கைவல்யாநுபவத்தை விரும்பி உபாஸனை செய்பவர்களே! நீங்கள்) (கைவல்யத்தில் ஆசையைவிட்டு) வந்து (அநந்யப்ரயோஜனரான) எங்களுடைய கோஷ்டியிலே அந்வயித்து ஒன்றாய்ச் சேர்ந்துவிடவேணுமென்கிறவிருப்பமுடையவர்களாயிருந்தால் பொல்லாதஸ்தானமாகிய கைவல்யத்திலே உங்களைக்கொண்டு தள்ளுவதற்கு முன்னே (ஆத்மாநுபவம் மாத்திரம் செய்வோமென்று நீங்கள் வைத்துக்கொண்டிருக்கிற) வரம்பை ஒழித்துக்கொண்டு (இனி பூர்ணாநுபவம் பண்ணுவோமென்று) வந்து சீக்கிரமாக எங்களோடு சேர்ந்து விடுங்கள்; (அப்படிச் சேர்ந்தபின்பு) நாட்டிலுள்ளவர்களும் நகரத்திலுள்ளவர்களும் (உங்களுடைய) நன்மையை அறிந்துகொள்ளும்படி திருமந்திரத்தைச் சொல்லிப்பாடவேணுமென்கிற எண்ணத்தையுடைய பக்தர்களுக்குள் சேர்ந்தவர்களாயிருந்து (எம்பெருமானுக்கு) மங்களா சாஸநம் பண்ணுங்கள்.

ஏடுநிலம் என்று கைவல்யஸ்தாநத்தை எங்ஙனே சொல்லுமென்னில்; பிரகரணபலத்தினால் சொல்லும்; பொல்லாத ஸ்தானமென்று பதப்பொருள். அன்றியே, ஏடு—ஸூக்ஷ்மசரீரமானது நிலத்தில்—தனக்குக் காரணமான மூலப்ரக்ருதியிலே, இடுவதன்முன்னம்—லயிப்பதற்கு முன்னமே, என்றும் பொருள் கொள்ளலாம்.

"வரம்பொழிய" என்பது வரம்பொழி என்று கடைக்குறையாயிருக்கிறது. வரம்பொழியவந்து என்றபடி. இவ்விடத்தில் வரம்பாவது—அவரவர்கள் ஏற்படுத்திக்கொண்ட ஒரு எல்லை; ஆத்மாநுபவத்தோடு நாம் நின்றுவிட வேண்டியது; பகவானை யநுபவிக்கப் போகக்கூடாது என்று நீங்கள் வைத்துக் கொண்ட வரம்பை ஒழித்துவிட்டு உடனே வந்து சேருங்கள் என்று அழைக்கிறார்.

காக்ஷாம் ப்ரஹ்ம வ்யா ஹாங் மாமநுஸ்மரங்'' என்கிற சாஸ்த்ரப்படி தங்கள் கோரிக்கை நிறை
வேறுதற்காகப் பிரணவத்தை மாத்திரம் உச்சரிப்பார்கள்; இனி அப்படியல்லாமல் திருவஷ்டா
க்ஷரத்தையும் பூர்த்தியாகக் கோஷித்துக்கொண்டு வரவேணுமென்று பின்னடிகளால் அழைக்
கின்றார். பத்தர்—பக்தர்..... (4)

அண்டக் குலத்துக்கதிபதியாகி அசுரரிராக்கதரை*
இண்டைக் குலத்தை யெடுத்துக்களைந்த இருடீகேசன் றனக்கு*
தொண்டக் குலத்திலுள்ளீர் வந்தடி தொழுது ஆயிரநாமஞ் சொல்லி*
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்மினே. (5)

அண்டம் குலத்துக்கு அதிபதி ஆகி அசுரர் இராக்கதரை இண்டை குலத்தை எடுத்து களைந்த இருடீகேசன்தனக்கு தொண்டர் குலத்தில் உள்ளீர் பண்டைக் குலத்தை தவிர்ந்து வந்து அடி தொழுது ஆயிரம் நாமம் சொல்லி பல்லாண்டு பல்லாயிரத்

அண்ட ஸமூஹங்களுக்கெல்லாம் நியாமகனாய் அஸுர
ராக்ஷஸர்களுடைய நெருக்கமான கூட்டத்தை நிர்மூல
மாக்கின ஹ்ருஷீகேசனான பகவானுக்கு அடியவரா
யிருப்பவர்களுடைய கோஷ்டியில் சேர்ந்தவர்களே! [ஐச்வர்
யார்த்திகளே!] (நீங்கள்) (பிரயோஜநாந்தரத்தை விரும்பிக்
கிடந்தமையாகிற) பழையதன்மையை நீக்கிக்கொண்டு எங்க
ளோடு சேர்ந்து பகவானுடைய திருவடிகளை ஸேவித்து எல்
லாத் திருநாமங்களையும் அநுஸந்தித்து எப்போதும் மங்களா
சாஸநம் பண்ணிக் கொண்டிருங்கள்.

***—இப்பாட்டில்ஐச்வர்யார்த்திகளை அழைக்கிறார். அவர்கள் இருவகைப்படுவர்;—நெடு
நாளாக இருந்து கைதப்பிப்போன செல்வத்தை மறுபடியும் அடைய விரும்புகிறவர்கள் ஒரு
வகுப்பு; நெடுநாள் தரித்ராராகவேயிருந்து புதிதாகச் செல்வமடைய விரும்புகிறவர்கள்மற்றொரு
வகுப்பு. (முதல்வகுப்பினர்—ப்ரஷ்டைச்வர்யகாமர்களென்றும் இரண்டாம் வகுப்பினர் அபூர்
வைச்வர்யகாமர்களென்றும் சொல்லப்படுவர்.) இவ்விருவகுப்பினரையும் இப்பாட்டில் அழைக்
கிறார். இவ்வர்த்தம் இப்பாட்டில் எங்ஙனே தெரிகின்றதென்றால்; கேண்மின்;—"அண்டக்
குலத்துக்கதிபதியான இருடீகேசனுக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்!'' என்றும் 'அசுரரிராக்க
தரை இண்டைக்குலத்தை யெடுத்துக்களைந்த இருடீகேசனுக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்!''
என்றும் விளியை இரண்டாகப் பகுத்துக்கொள்க. அண்டங்களுக்கு அதிபதியாயிருக்கை ஐச்
வரியத்துக்கு முடிவெல்லையாயிருப்பதால், புதிதான ஐச்வரியத்தைப் பெற விரும்புகிற அதிகாரி
கள் அப்படிப்பட்ட அண்டாதிபதித்வத்தைப் பெறவிரும்பி அந்தவிருப்பம் வெளிப்படும்படி
"அண்டாதிபதயே நம", "அண்டாதிபதயே நம:'' என்று எப்போதும் உருப்போடுவர்கள்; அந்த
அதிகாரிகளை யழைக்கிறாரென்பது முதல் விளியால்விளங்கும்; ஏற்கெனவேயிருந்த செல்வத்தை
அஸுரராக்ஷஸாதிகள் போன்ற சத்துருக்கள் அபஹரித்துக் கொண்டதனால் அச்செல்வத்தை
மறுபடியும் ஸம்பாதித்துக்கொள்ள விரும்புமவர்கள் அந்தவிருப்பம் வெளிப்படும்படி 'அஸுர
சத்ரவே நம:, அஸுரசத்ரவே நம:'' என்று உருப்போடுவர்கள்; அந்த அதிகாரிகளை அழைக்கி
றாரென்பது இரண்டாம் விளியால் விளங்கும்.

அண்டமாவது—உலகவுருண்டை; அது அளவற்றதாகையாலே 'அண்டக்குல' மென்கிறது.
அதுக்கு அதிபதியென்று எம்பெருமானைச் சொல்வது கருத்துடன் கூடியதாகும்; உன்னைப்
போலே நாங்களும் அண்டாதிபதியாக வேணுமென்று தெரிவித்துக்கொண்டபடி.

இண்டைக்குலம்—நெருக்கமான கூட்டம் என்றபடி. 'இண்டக்குலம்' என்று பாடமா
கில், "இண்டர்—குலம்'' என்று பிரியும்; அஸுரராக்ஷஸர்களாகிற சண்டாளருடைய கூட்
டத்தை என்றபடி. இருடீகேசன்—ஹ்ருஷீகேசன்; இந்திரியங்களை அடக்கியாள்பவன் என்கை
தொண்டர்=குலம்; தொண்டக்குலம். .... .... .... (5)

எந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி *
வந்துவழிவழியாட்செய்கின்றோம் * திருவோணத் திருவிழவில்
அந்தியம்போதிலரியுருவாகி அரியையழித்தவனை *
பந்தனைதீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே.

எந்தைதந்தை தந்தைதந்தைதம்மூத்தப்பன் ஏழ்படி கால் தொடங்கி வந்து வழி வழி ஆள் செய்கின்றோம்; திரு ஓணம் திரு விழவில் அந்தி அம் போதில் அரி உரு ஆகி அரியை அழித்தவனை பந்தனை தீர பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்று பாடுதும்

(அநந்யப்ரயோஜநரான நாங்கள்) என் பிதாவும் அவருடைய பிதாவும் அவருடைய பிதாவும் அவருடைய பிதாவும் அவருடைய பாட்டனுமாகிய ஏழு தலை முறையாக (உரிய காலங்களில்) வந்து முறை தப்பாமல் கைங்கரியம் பண்ணுகிறோம்: ச்ரவண நக்ஷத்ரமென்கிற திரு நாளிலே அழகிய ஸாயம் ஸந்தியா காலத்தில் நரஸிம்ஹ மூர்த்தியாய்த் தோன்றி ஆச்ரிதனான ப்ரஹ்லாதனுக்குப் பகைவனான இரணியனைக் கொன்றொழித்த பெருமானுக்கு (அன்றைய) அனுக்கம் தீரும்படியாக மங்களாசாஸநம் செய்வோம்.

* * *—"வாழாட்பட்டு" என்கின்ற பாசுரத்தில் அநந்யப்ரயோஜநர்களான முமுக்ஷுக்களை யழைத்தாரன்றே; அழைக்கும்போது "ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்" என்று தம்முடைய பெருமையைச் சொல்லி யழைத்தார். அப்படி அழைக்கப்பட்ட அநந்யப்ரயோஜநர்கள் 'நாங்களும் உம்மைப் போலவே ஏழுதலைமுறையாக அடிமை செய்கிறவர்கள்' என்று தங்களுடைய பெருமையையும் எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறவர்களென்கிற தங்களுடைய தினசரியையும் சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்ததாக இப்பாசுரம் அருளிச் செய்யப்படுகிறது. .... .... .... .... (6)

தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின்*
கோயிற்பொறியாலேயொற்றுண்டுநின்று குடிகுடியாட்செய்கின்றோம் *
மாயப்பொருபடைவாணனை ஆயிரந்தோளும்பொழிகுருதி
பாய * சுழற்றியவாழிவல்லானுக்குப் . பல்லாண்டுகூறுதுமே.

தீயின் பொலிகின்ற செம் சுடர் திகழ் திரு சக்கரத்தின் கோயில் ஆழி பொறியாலே ஒற்றுண்டு நின்று குடி குடி ஆள் செய்கின்றோம்; மாயம் பொரு படை வாணனை ஆயிரம் தோளும் பொழி குருதி பாய சுழற்றிய ஆழி வல்லானுக்கு பல்லாண்டு கூறுதும்.

(சந்திரன் ஸூர்யன் அக்நி முதலிய) சுடர்ப்பொருள்களெல்லா வற்றையும்விட பிரபலமாகப் பிரகாசிப்பதும் சிவந்த ஒளியோடு கூடி விளங்குவதுமான திருவாழி யாழ்வான் எழுந்தருளியிருக்கிற ஸ்தானமாகிய வட்டவடிவமான அடையாளத்தினால் அடையாளம் செய்யப்பட்டவர்களாயிருந்து அநாதிஸந்தாநமாக (எம்பெருமானுக்குக்) கைங்கரியம்செய்துவருகின்றோம்; (அதுவும் தவிர) க்ருத்ரிம யுத்தம் செய்பவனும் சேனைகளை யுடையவனுமான பாணாஸுரனுடைய ஆயிரந் தோள்களினின்றும் வெளிக்கிளம்புகிற ரக்தமானது வெள்ளமாகப் பாய்ந்தோடும்படி திருக்கையிலே சுழலச்செய்த சக்ராயுதத்தை ஆளவல்ல எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் செய்வோம்.

* * *—"ஏடுநிலத்தில்" என்னும் பாசுரத்தில் கைவல்யார்த்திகளை அழைத்தாரன்றோ அழைக்கும் போது "நாடுநகரமும் நன்கறிய" என்று உங்களுடைய நன்மையை எல்லாரும் தெரிந்து கொள்ளும்படி நீங்கள் வரவேணுமென்று ஒரு வார்த்தை சொன்னார்; அவர்களும் அப்படியே வரவேணுமென்று நிச்சயித்து 'சங்கு சக்கரங்களாலே திருவிலச்சினை செய்துகொள்வது நல்ல உபாயம்' என்று அதைச் செய்துகொண்டு அடிமை செய்பவர்களாய் பாணாஸுரயுத்தத்தில் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு அடிமைசெய்த திருவாழியாழ்வானுக்கும் அவனை அடிமைகொண்ட ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அக்காலத்தில் மங்களாசாஸநம் செய்யப்பெறாத குறைதீர மங்களாசாஸநம் செய்பவர்களாக ஆய்விட்டோம்' என்று தாங்கள் குடும்பமாகத் திருந்தினபடியைச் சொல்லிக்கொண்டு வந்தார்களாக அருளிச் செய்யும் பாசுரம் இது. (7)

நெய்யிடைநல்லதோர்சோறும் நியதமுமத்தாணிச்சேவகமும் *
கையடைக்காயுங்கழுத்துக்குப்பூணொடு காதுக்குக்குண்டலமும் *
மெய்யிடநல்லதோர்சாந்தமுந்தந்து என்னைவெள்ளுயிராக்கவல்ல *
பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டுகூறுவனே. (8)

நெய் எடை நல்லது ஓர் சோறும் நியதமும் அத்தாணி சேவகமும் கை அடைக்காயும் கழுத்துக்கு பூணொடு காதுக்கு குண்டலமும் மெய் இட நல்லது ஓர் சாந்தமும் தந்து என்னை வெள் உயிர் ஆக்க வல்ல பை உடை நாகம் பகை கொடியானுக்கு பல்லாண்டு கூறுவன்

நெய்யோடு ஸமமான நிறையையுடையதாய் போக்யமாய் விலக்ஷணமான ப்ரஸாதத்தையும் எப்போதும் பிரியாமல் கூடவேயிருந்து செய்கிற ஸேவக வ்ருத்தியையும் திருக்கையால் ப்ரஸாதிக்கும் தாம்பூலத்தையும் கழுத்தில் தரித்துக் கொள்ளவேண்டிய ஆபரணத்தையும் காதில் இட்டுக் கொள்ள வேண்டிய குண்டலத்தையும் உடம்பில் பூசிக் கொள்ளும்படி சிறந்த சந்தனத்தையும் (ரஜஸ்தமோ குணங்களால் ஐச்வரியத்தை விரும்பின என்னுடைய விருப்பத்தின்படியே) கொடுத்து
இப்படி ஸம்ஸாரியாய்க் கிடந்த என்னை சுத்தஸாத்விகனாகச் செய்தருளினவனும் படத்தையுடைய பாம்புக்கு விரோதியன கருடனைக் கொடியாக வுடையனுன எம்பெருமானுக்கும் மங்களாசாஸநம் பண்ணுவேன்.

* * * —"அண்டக்குலத்துக்கதிபதியாகி" என்னும் பாசுரத்தில் ஐச்வர்யார்த்திகளை அழைத்தாரே; அவர்கள்தாம் எம்பெருமானிடத்தில் சில ஐச்வர்யங்களைப் பெற்றுக்கொண்டு திருந்தி மங்களாசாஸநத்துக்கு வித்தாக வந்தபடியைச் சொல்லிக் கொள்ளுகிறார்களாக அருளிச் செய்வது இந்தப்பாசுரம். கீழ்ப்பாசுரங்களிற்போல் இதில் பன்மையின்றியே "பல்லாண்டு கூறுவன்" என்று ஒருமையாகப் பிரயோகமிருப்பதற்குக் காரணம் கேண்மின்; —உலகத்தில் அநந்ய ப்ரயோஜநர்களுடைய கூட்டமும் கைவல்யார்த்திகளுடைய கூட்டமும் மிகவும் ஸ்வல்பமா யிருக்குமாகையாலே அந்தக் கூட்டங்களிலுள்ள நாலைந்து பேர்கள் பேசினதாகக்கொண்டு அவர்களது பாசுரங்களில் "பல்லாண்டு பாடுதுமே" என்றும் "பல்லாண்டு கூறுதுமே" என்றும் பஹுவசந ப்ரயோகம் பண்ணப்பட்டது. ஐச்வர்யார்த்திகளான இவர்களுடைய கூட்டம் அப்படி ஸ்வல்பமாயிராமல், அளவற்றிருக்குமாகையால், ஒரு பெரிய கூட்டத்துக் கெல்லாம் ஒருவன் பிரதானனாய் நின்று பேசுவது வழக்கமாகையால் அப்படியே இங்கும் ஒருவன் பேசுவதாக வைக்கப்பட்டது. மேல் 'அல்வழக்கொன்றுமில்லா" என்கிற பாட்டிலுள்ள ஏகவசநத்துக்கும் இதுவே ஸமாதாநம்.

உலகத்தார்க்கு வேண்டிய பதார்த்தங்கள் மூன்று விதம்—தாரகம், போஷகம், போக்யம் என. அன்னம் தாரகம்; நெய் பால் தயிர் முதலானவை போஷகம்; சந்தனம் புஷ்பம் தாம்பூலம் முதலியவை போக்யம். ஆகஇந்தப்பதார்த்தங்கள்ஒருவனுக்குப்போதுமானவை கிடைத்தால அவ்வளவில் த்ருப்தி பெற ப்ராப்தம். ஊர்ப்பட்ட அண்டாதிபத்தியமெல்லாம் வேணுமென்று விரும்புவது பகவத் விபூதியை யெல்லாம் தன்னதாக்கிக்கொண்டு அநர்த்தப் படுவதற்கே காரணமாகும். ஆகையால் ஸ்வரூபஜ்ஞாநமில்லமால் அண்டாதிபத்யம் அளிக்கவேணுமென்று நாங்கள் எம்பெருமானைப் பிரார்த்தித்தாலும் அவன் பரமக்ருபாளுவாய் எங்களை உஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளம்பற்றி எங்களுக்கு உசிதமாய் வேண்டியவளவு தாரக-போஷக-போக்ய வஸ்துக்களைக் கொடுத்து இனிமேலாவது எங்களுக்கு நல்லபுத்தி யுண்டாகும்படி குளிரக் கடாக்ஷித்து "ஐச்வரியம் த்யாஜ்யம், பகவத்கைங்கர்யமே புருஷார்த்தம்" என்னும் அத்யவஸாயத்தைப் பிறப்பித்து எங்களை சுத்தஸ்வரூபராக ஆக்கினான். அப்படிப்பட்ட எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் பண்ணுவோம் நாங்கள்—என்று ஐச்வர்யார்த்திகள் சொல்லுவதாக இந்தப் பாசுரம் உள்ளது.

"நெய் எடை" என்றும் "நெய் இடை" என்றும் பாடபேதமுண்டு; முந்தின பாடத்தில், நெய் பாதி சோறு பாதியாய் இரண்டும் அளவொத்திருக்கு மென்கை. ஒருவிசைச்

சோற்றுக்கு ஒருவீசை நெய் சேர்ப்பதென்றால் இதனில் விஞ்சிய நல்ல சோறு இல்லையன்றோ, 'நெய்யிடை'' என்ற பாடத்தில், நெய்யின் நடுவே உள்ள சோறு என்ற பொருளாய், நெய்யின், அளவு அதிகமாயும் ப்ராஸாதத்தினளவு அல்பமாயுமிருக்குமென்கை.

அத்தாணிச் சேவகமாவது—ஆஸ்தாநஸேவகம்; எம்பெருமானிருக்குமிடத்தில் கூடவேயிருந்துகொண்டு பிரியாமல் நின்று செய்கிற கைங்கரியம். ஐச்வர்யார்த்தியானவன் சொல்லுகிற இந்தப்பாசுரத்தில் ''அத்தாணிச் சேவகமும் தந்து' என்று எங்ஙனே சொல்லலாம்? அநந்யப்ரயோஜநனுக்கன்றோ அத்தாணிச் சேவகமுள்ளது; சோறு அடைக்காய் பூண் குண்டலம் ஆகிய இவற்றைத்தந்து என்பது சேருமேயொழிய அத்தாணிச் சேவகமும் தந்ததாகச் சொல்லுகிறது சேராதேயென்னில்; ஐச்வர்யார்த்தியாயிருந்தாலும் பகவத் க்ருபையாலே திருந்தி அநந்யப்ரயோஜநனுப் வந்தமை தோற்றும்படியாகச் சொல்லுகிற பாசுரமாகையாலே சேருமென்க. நான் அபேக்ஷித்த ஜீவநத்தை மாத்திரம் கொடுத்து விடாமல் உஜ்ஜீவநத்தையுமுண்டாக்கி என்னைப் பரிசுத்தாத்மாவாகச் செய்தானே! என்று ஸந்தோஷித்துச் சொல்லுகிற பேச்சு. (8)

உடுத்துக்களைந்தநின்பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு *
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம் *
விடுத்ததிசைக்கருமந்திருத்தித் திருவோணத்திருவிழவில் *
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (9)

உடுத்து களைந்த நின் பீதகவாடை உடுத்து கலத்தது உண்டு, சூடிகளைந்தன தொடுத்த துழாய்மலர் சூடும் இத்தொண்டர்களோம்; விடுத்த திசை கருமம்திருத்தி, படுத்த பைநாகம் அணை பள்ளி கொண்டானுக்கு திரு ஓணம் திரு விழவில் பல்லாண்டு கூறுதும்.

(எம்பெருமானே!) தேவரீர் அரையில் சாத்திக்கொண்டு கழித்துவிட்ட தேவரீருடைய பீதாம்பரத்தை உடுத்துக்கொண்டும் தேவர் அமுதுசெய்த பாத்திரத்தில் மிகுந்திருப்பதை புஜித்தும், தேவர் சாத்திக்கொண்டு களைந்தவைகளான தொடுக்கப்பட்டுள்ள திருத்துழாய் மலர் மாலைகளைச் சூட்டிக் கொள்ளுகிறவர்களாய் இப்படிப்பட்ட தாஸர்களான நாங்கள்,—தேவரீர் ஏவியனுப்பிய திக்கிலே ஆகவேண்டிய காரியங்களை ஒழுங்காகச்செய்து, கீழே பரப்பிய படத்தையுடைய பாம்பாகிற படுக்கையில் சயனித்திருக்கிற தேவரீருக்குத் திருவோணத் திருநாளிலே மங்களாசாஸநம் செய்வோம்.

* * *—''வாழாட்பட்டு'' என்னும் பாசுரத்தில் அழைக்கப்பட்டு ''எந்தை தந்தை தந்தை' என்னும் பாசுரத்தால் தங்கள் வ்ருத்தியைச் சொல்லிக்கொண்டு வந்துசேர்ந்த அநந்யப்ரயோஜநர்கள் தாம் எம்பெருமானை நோக்கிப் பல்லாண்டு பாடும்படியை அருளிச்செய்வது இப்பாட்டு' ''நின் பீதகவாடை'' என்று முன்னிலையாகச் சொல்லியிருப்பதால் இந்தப்பாசுரம் எம்பெருமானையே நோக்கி அவர்கள் சொல்லுவதாக நன்கு விளங்கும். கீழே ஆழ்வாரால் அழைக்கப்பட்ட மூவகை அதிகாரிகளும் வரிசையாக 'எந்தை தந்தை' 'தீயிற்பொலிகின்ற' 'நெய்யிடை நல்லது' என்னும் பாசுரங்கள் சொன்னது ஆழ்வாரை நோக்கிச் சொன்னதாம். இனி, 'உடுத்துக்களைந்த' 'எந்நாளெம்பெருமான்' 'அல்வழக்கொன்றுமில்லா' என்கிற மூன்று பாசுரங்களும்—அவர்கள் எம்பெருமானையே ஸாக்ஷாத்தாக நோக்கிச் சொல்வதாம். மேலிரண்டு பாசுரங்களில் எம்பெருமானுடைய விளி வ்யக்தமாகவுள்ளது; இப்பாசுரத்தில் அப்படி வ்யக்தமாக இல்லாவிடினும் ''நின் பீதகவாடை'' என்கிற சொல்லாற்றலால் வ்யக்தமாகிறது. .... .... (9)

எந்நாளெம்பெருமான் உன்றனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
வந்நாளே * அடியோங்களடிக்குடில் வீடுபெற்றுய்ந்ததுகாண் *
செந்நாள்தோற்றித் திருமதுரையுட்சிலைகுனித்து * ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே உன்னைப்பல்லாண்டுகூறுதுமே.

எம்பெருமான் உன்தனக்கு அடியோம் என்று எழுத்து பட்ட நாள் எந்நாள் அந்நாளே அடியோங்கள் அடி குடில் வீடு பெற்று உய்ந்தது காண்; செம் நாள் தோற்றி திருமதுரையுள் சிலை குனித்து ஐந்தலைய பை நாகம் தலை பாய்ந்தவனே உன்னை பல்லாண்டு கூறுதும்,

ஸ்வாமிந்! தேவரீர்க்கு நாங்கள் அடிமைப்பட்டவர்களென்ற சொல்லானது எங்களுடைய வாயில் உண்டாகப்பெற்ற நாள் எந்த தினமோ, அந்ததினம் முதலாகவே அடியோங்களுடைய அடிமைப்பட்ட ஸந்தானமெல்லாம் நல்ல கதியையடைந்து உஜ்ஜீவித்து விட்டது; நல்ல நக்ஷத்திரத்திலே திருவவதரித்து அழகிய வடமதுரையிலே (கம்ஸனுடைய ஆயுத சாலையில் புகுந்து) வில்லை வளைத்து முறித்து ஐந்து தலைகளையுடைய படத்தோடு கூடின காளிய நாகத்தினுடைய தலைமேலே குதித்தவனே! தேவரீருக்கு மங்களாசாஸநம் செய்வோம்.

* * *—"ஏடு நிலத்தில்" என்கிற பாசுரத்தில் அழைக்கப்பட்டு "தீயிற் பொலிகின்ற" என்னும் பாசுரத்தால் தாம் திருந்தினபடியைச் சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்த கைவல்யார்த்திகள் எம்பெருமானை நோக்கி மங்களாசாஸநம் பண்ணுகிறபடியைச் சொல்வது இந்தப் பாசுரம்.

எம்பெருமானே! நாங்கள் கைவல்ய புருஷார்த்த ப்ராப்திக்கு ஸாதநமாக "ஓம், நம:' முதலிய சொற்களைச் சொல்லிக்கொண்டு தேவரீரை பஜநம் பண்ணினோம்; தேவரீர் எங்களைக் கடாக்ஷித்து நாங்கள் மீட்சியற்ற கைவல்யத்தை யடைந்து கெட்டுப்போகாதபடி அருள்புரிந்து நல்லபுத்தியை யுண்டாக்கினபடியால் அடியோங்கள் இப்போது திருந்தி தேவரீருக்குப் பல்லாண்டு பாடுகிறவர்களாக ஆய்விட்டோமென்கிறார்கள். .... .... (10)

அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் * அபிமானதுங்கன்
செல்வனைப்போலத் திருமாலேநானுமுனக்குப்பழவடியேன் *
நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பலபரவி *
பல்வகையாலும்பவித்திரனே உன்னைப்பல்லாண்டுகூறுவனே. (11)

திருமாலே அல்வழக்கு ஒன்றும் இல்லா அணி கோட்டியர் கோன் அபிமானம் துங்கன் செல்வனை போல நானும் உனக்கு பழ அடியேன்; பல் வகையாலும் பவித்திரனே நல்வகையால் நமோ நாராயணா என்று பல நாமம் பரவி உன்னை பல்லாண்டு கூறுவன்.

ச்ரியப்பதியே! அநீதிகள் ஒன்றுமில்லாமலிருக்கிற அழகிய திருக்கோட்டியூரிலுள்ளவர்களுக்குத் தலைவரும் ஸ்ரீவைஷ்ணவாபிமாநத்தாற் சிறந்தவருமான செல்வநம்பியைப் போலவே நானும் தேவரீருக்குப் பழமையான தாஸனாய் விட்டேன்; எல்லாவிதங்களாலும் பரிசுத்தனான பெருமானே! அடியேனுக்கு நன்மையுண்டாகும்படி திருமந்திரத்தை அநுஸந்தித்து (தேவரீருடைய) அனேக திருநாமங்களைச் சொல்லியேத்தி தேவரீருக்கு மங்களாசாஸநம் பண்ணுவேன்.

* * *—"அண்டக்குலத்துக்கு" என்னும் பாசுரத்தாலே அழைக்கப்பட்டு "நெய்யெடை" என்னும் பாசுரத்தால் தாங்கள் திருந்தினபடியைச் சொல்லிக் கொண்டுவந்த ஐச்வர்யார்த்திகள் எம்பெருமானை நோக்கி மங்களாசாஸநம் பண்ணுகிறார்கள் இதில். ஐச்வர்யார்த்திகள் எண்ணிறந்தவகளாகையாலே அவர்களுள் ஒருவன் சொல்லுகிறானென்று "நெய்யடை" என்கிற பாசுரத்தில் "கூறுவனே" என்று ஏகவசநப்ரயோகம் பண்ணினதுபோலவே இதிலும் கொள்வது. ... ... ... ... (11)

பல்லாண்டென்றுபவித்திரனைப் பரமேட்டியை * சார்ங்கமென்னும்
வில்லாண்டான்தன்னை வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல் *
நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று *
பல்லாண்டும்பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே. (12)

பவித்திரனை பரமேட்டியை சார்ங்கம் என்னும் வில் ஆண்டான் தன்னை வில்லிபுத்தூர் விட்டு சித்தன் பல்லாண்டு என்று விரும்பிய சொல் நல் ஆண்டு என்று நவின்று உரைப்பார் பரமாத்மனை சூழ்ந்து இருந்து நமோநாராயணாய என்று பல் ஆண்டும் பல்லாண்டு ஏத்துவர்.

பரிசுத்தனும் பரமபத நிலயனும் ஸ்ரீ சார்ங்கமென்கிற தநுஸ்ஸை அடக்கி ஆள்பவனுமான எம்பெருமானை ஸ்ரீ வில்லிபுத்தூரிற் பிறந்த பெரியாழ்வார் ஆதரத்தோடு சொன்ன சொல்லாகிய இப்பிரபந்தத்தை, நமக்கு நல்ல காலம் வாய்த்ததென்று (மகிழ்ந்து) ஸர்வதா அநுஸந்திப்பவர்கள் ஸ்ரீமந் நாராயணனை சுற்றும் சூழ்ந்துகொண்டு நமோ நாராயணாய என்று; எப்போதும் மங்களாசாஸநம் பண்ணப் பெறுவர்கள்.

* * *—பரமபதத்திலெழுந்தருளியிருப்பவனாய் நித்யபரிசுத்தனாய்ப் பஞ்சாயுதங்களைத் தரித்துக்கொண்டிருப்பவனான ஸர்வேச்வரன் விஷயத்தில் பெரியாழ்வார் பொங்கும்பரிவாலே பாடின இத்திருப்பல்லாண்டு திவ்ய ப்ரபந்தத்தை, நமக்கு நல்லகாலம் வந்துவிட்டதென்கிற கொண்டாட்டத்துடன் இவ்விபூதியில் எஞ்ஞான்றும் பாடுகிறவர்கள் மூறுமையில் மோக்ஷ லோகத்தையடைந்து அங்கும் எம்பெருமானுடைய முகோல்லாஸத்தையே புருஷார்த்தமாக நினைத்து அனேக தேஹங்களை எடுத்துக்கொண்டு அப்பெருமானுடைய நான்கு பக்கங்களிலும் இருந்துகொண்டு மங்களாசாஸநம் பண்ணப் பெறுவர்களென்று இதனால் பலன்சொல்லித் தலைகட்டிற்றாயிற்று. .... ... ... (12)

அடிவரவு :—பல் அடி வாழ் ஏடு அண்டம் எந்தை தீ நெய் உடுத்து எந்நாள் அல்வழக்கு பல்லாண்டு வண்ணம்.

[ஆதி கூறுதும், அநந்தரம் கூறுமின், அண்டம் என்மின், எந்தை பாடுதும், தீ உடுத்து எந்நாள் கூறுதும், நெய்யும் அல்லும் கூறுவனே.]

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்
திருப்பல்லாண்டு முற்றிற்று.

---

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பள்ளியெழுச்சி

---

## தனியன் உரை

(திருமாலையாண்டான் அருளிச்செய்தது.)

தமேவ மத்வா பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம்
ப்ராபோதிகீம் யோக்ருத ஸூக்திமாலாம் பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே.

ய: பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவத் அர்ஹணீயமேவ மத்வா ப்ராபோதிகீம் ஸூக்திமாலாம் அக்ருத, தம் பகவந்தம் பக்தாங்கிரிரேணும் ஈடே.

யாவரொரு ஆழ்வார் பரவாஸுதேவ மூர்த்தியான பெரிய பெருமாளை ராஜோபசார யோக்யராக நினைத்து திருப்பள்ளி யுணர்த்துமதான திவ்யப்ரந்தத்தை அருளிச் செய்தாரோ (அப்படிப்பட்ட) ஞானம் முதலிய குணங்கள் அமைந்த தொண்டரடிப் பொடியாழ்வாரைத் துதிக்கின்றேன்.

(திருவரங்கப்பெருமாளரையர் அருளிச்செய்தது.)

மண்டங்குடியென்பர் மாமறையோர் மன்னியசீர்த்
தொண்டரடிப்பொடி தொன்னகரம்—வண்டு
திணர்த்தவயல்தென்னரங்கத்தம்மானைப் பள்ளி
யுணர்த்தும்பிரானுதித்த வூர்.

வண்டு திணர்த்த வயல் தென் அரங்கத்து அம்மானை பள்ளி உணர்த்தும் பிரான் தொண்டரடிப்பொடி உதித்த ஊர் மா மறையோர் மன்னிய சீர் மண்டங்குடி தொல் நகரம் என்பர்

வண்டுகளானவை நெருங்கிப்படிந்திருக்கப்பெற்ற கழனிகள் சூழ்ந்த அழகிய திருவரங்கத்தில் (கண்வளர்ந்தருள்கிற) பெரியபெருமாளைத் திருப்பள்ளி யுணர்த்துமவராய்ப்பரமோபகாரகராய் "தொண்டரடிப்பொடி" என்னும் திருநாமமுடையரான ஆழ்வார் திருவவதரித்த திவ்ய தேசமாவது—: சிறந்த வைதிகர்கள் பொருந்தி வாழ்தற்கிடமான சீர்மையையுடைய 'திருமண்டங்குடி' என்கிற அநாதியான நகரமாகும் என்று பெரியோர் கூறுவர்.

தனியனுரை முற்றிற்று.

கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான் கனவிருளகன்றதுகாலையம்பொழுதாய்*
மதுவிரிந்தொழுகினமாமலரெல்லாம் வானவரரசர்கள்வந்துவந்தீண்டி*
எதிர்திசைநிறைந்தனரிவரொடும்புகுந்த இருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும்*
அதிர்தலிலலைகடல்போன்றுளதெங்கும் அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (1)

அரங்கத்து அம்மா கதிரவன் குணதிசை சிகரம் வந்து அணைந்தான்; கனம் இருள் அகன்றது; அம் காலை பொழுது ஆய் மா மலர் எல்லாம் விரிந்து மது ஒழுகின; வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி எதிர் திசை நிறைந்தனர்; இவரொடும் புகுந்த இரு களிறு ஈட்டமும் பிடியொடு முரசும் அதிர்தலில் எங்கும் அலை கடல் போன்று உளது; பள்ளி எழுந்தருளாய்.

திருவரங்கத்தில் பள்ளிகொண்டருளும் ஸ்வாமியே! ஸூர்யனானவன் கிழக்குத் திக்கிலே (உதயகிரியின்) கொடுமுடியிலே வந்து கூடினான்; (இரவில்) அடர்ந்திருந்த இருளானது நீங்கி யொழிந்தது; அழகிய காலைப் பொழுதுவர, சிறந்த புஷ்பங்களெல்லாம் விகாஸமடைய தேன் வெள்ளமிடா நின்றன; தேவர்களும் ராஜாக்களும் ஒருவர்க்கொருவர் முற்கோலி வந்து திரண்டு திருக்கண்ணோக்கான தெற்கு திக்கிலே நிறைந்துநின்றார்கள்; இவர்களோடு கூடவந்த (இவர்களது வாஹநமாகிய) பெரிய ஆண்யானைத் திரள்களும் பெண்யானைத் திரள்களும் பேரிவாத்யங்களும் சப்திக்கும்போது எத்திசையும் அலையெறியாநின்ற ஸமுத்ரகோஷத்தை யொத்திருக்கது; (ஆதலால்) திருப்பள்ளியை விட்டு எழுந்திருக்கவேணும்.

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக் கூர்ந்ததுகுணதிசைமாருதமிதுவோ*
எழுந்தனமலரணைப்பள்ளிகொள்ளன்னம் ஈன்பனிநனைந்த தமிருஞ்சிறகுதறி*
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய் வெள்ளெயிறுறவதன்விடத்தினுக்கனுங்கி*
அழுங்கியவானையினருந்துயர்கெடுத்த அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (2)

குணதிசை மாருதம் கொழு கொடி முல்லையின் கொழு மலர் அணவி இதுவோ கூர்ந்தது; மலர் அணை பள்ளிகொள் அன்னம் ஈன் பனி நனைந்த தம் இரு சிறகு உதறி எழுந்தன; விழுங்கிய முதலையின் பிலம் புரை பேழ் வாய் வெள் எயிறு உற அதன் விடத்தினுக்கு அனுங்கி அழுங்கிய ஆனையின் அரு துயர் கெடுத்த அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாய்.

கீழ்காற்றானது செழுமை தங்கிய கொடியையுடைத்தான முல்லைச் செடியிலுண்டான அழகிய மலர்களை அணைந்து கொண்டு இதோ வீசாநின்றது; புஷ்பசயநத்திலே உறங்குகின்ற ஹம்ஸங்களானவை, (மழைபோல்) சொரிகிற பனியாலே நனைந்த தங்களுடைய அழகிய சிறகுகளை உதறிக்கொண்டு உறக்கம் விட்டெழுந்தன; (தன்காலை) விழுங்கின முதலையினுடைய பாழிபோன்ற பெரியவாயிலுள்ளவெளுத்த கோரப்பற்கள் ஊன்ற அம்முதலையினுடைய பல்விஷத்திற்கு மிகவும் நோவுபட்ட கஜேந்திராழ்வானுடைய பெரிய துக்கத்தைப் போக்கியருளின அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாய்.

சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம் துன்னியதாரகைமின்னொளிசுருங்கி *
படரொளிபசுத்தனன்பனிமதியிவனோ பாயிருளகன்றதுபைம்பொழிற்கமுகின் *
மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற வைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ *
அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (3)

சூழ் திசை எல்லாம் சுடர் ஒளி பரந்தன; துன்னிய தாரகை மின் ஒளி சுருங்கி படர் ஒளி பனி மதி இவன் பசுத்தனன்; பாய் இருள் அகன்றது; வைகறை மாருதம் இது பை பொழில் கமுகின் மடலிடை கீறி வண் பாளைகள் நாற கூர்ந்தது; அடல் ஒளி திகழ்தரு திகிரி அம் தடகை அரங்கத்தம்மா பள்ளியெழுந்தளாயே

கண்டவிடமெங்கும் ஸூர்ய கிரணங்களானவை பரவிவிட்டன; (ஆகாசத்தில்) நெருங்கிய நக்ஷத்திரங்களினுடைய மிக்க தேஜஸ்ஸானது குறைவுபட்டது மன்றி மிக்க ஒளியையுடைய இக்குளிர்ந்த சந்திரனும் ஒளிமழுங்கினான்; பரந்த இருட்டானது நீங்கிற்று; இந்த விடியற்காற்றானது பசுமை தங்கிய சோலைகளிலுள்ள பாக்குமரங்களினுடைய மடலைக் கீற (அத்தாலே) அழகிய பாளைகளானவை பரிமளிக்க (அப்பரிமளத்தை முகந்துகொண்டு) வீசாநின்றது; பெருத்த மிடுக்கையுடைத்தாய் தேஜஸ்ஸு விளங்காநின்றுள்ள திருவாழியாழ்வானை அழகிய பெரிய திருக்கையிலேயுடைய அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாய்.

மேட்டிளமேதிகள்தளைவிடுமாயர்கள் வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும் *
ஈட்டியவிசைதிசைபரந்தனவயலுள் இரிந்தனசுரும்பினமிலங்கையர்குலத்தை *
வாட்டியவரிசிலைவானவரேறே! மாமுனிவேள்வியைக்காத்து * அவபிரதம்
ஆட்டியவடுதிறலயோத்தி யெம்மரசே! அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே.

மேடு இள மேதிகள் தளை விடும் ஆயர்கள் வேய்ங்குழல் ஓசையும் விடை மணி குரலும் ஈட்டிய இசை திசை பரந்தன; வயலுள் சுரும்பு இனம் இரிந்தன; இலங்கையர் குலத்தை வாட்டிய வரி சிலை வானவர் ஏறே மாமுனி வேள்வியை காத்து அவபி:தம் ஆட்டிய அடு திறல் அயோத்தி எம் அரசே அரங்— அருளாயே.

உயர்த்தியும் இளமையும் தங்கிய எருமைகளை (மேய்கைக்குக்) கட்டவிழ்த்து விடுகிற இடையர் (ஊதுகிற) புல்லாங்குழலின் நாதமும் எருதுகளின் கழுத்திற் கட்டியுள்ள) மணிகளினுடைய ஓசையும் (ஆகிய) இவ்விரண்டும் கூடின த்வநியானது திக்குக்களெங்கும் பரவிவிட்டது; கழனிகளிலுள்ள வண்டுகளின் திரள் ஆரவாரித்துக்கொண்டு கிளம்பின; ராக்ஷஸவர்க்கத்தை உருவழித்த அழகிய சார்ங்கத்தையுடைய தேவாதிதேவனே! விச்வாமித்ர மஹர்ஷியினுடைய யாகத்தை நிறைவேற்றுவித்து அவப்ருதஸ்நாநம் செய்வித்தருளின (விரோதிகளை) ஒழிக்கவல்ல மிடுக்கையுடையனாய் அயோத்தியாபுரியை ஆளுகையாலே எங்களுக்கு ஸ்வாமியானவனே! அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாய்.

புலம்பினபுட்களும்பூம்பொழில்களின்வாய் போயிற்றுக்கங்குல்புகுந்ததுபுலரி *
கலந்ததுகுணதிசைக்கனைகடலரவம் களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த*
அலங்கலந்தொடையல்கொண்டடியிணைபணிவான் அமரர்கள்புகுந்தனராதலிலம்மா!*
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில் எம்பெருமான்! பள்ளியெழுந்தருளாயே. (5)

பூ பொழில்களின் வாய் புட்களும் புலம்பின கங்குல் போயிற்று புலரி புகுந்தது குணதிசை கனை கடல் ஆரவம் கலந்தது களி வண்டு மிழற்றிய கலம்பகன் புனைந்த அம் அலங்கல் தொடையல் கொண்டு அமரர்கள் அடி இணை பணிவான் புகுந்தனர் ஆதலில் அம்மா இலங்கையர் கோன் வழிபாடு செய் கோயில்

பூத்திராநின்றுள்ள சோலைகளிலுள்ள பறவைகளும் (உணர்ந்து) ஆரவாரஞ்செய்யாகின்றன; இரவானது கழிந்தது; ப்ராத:காலமானது வந்தது; கீழ்த்திசையிலே கோஷஞ்செய்கிற கடலினுடைய ஓசையானது வியாபித்தது; தேனைப்பருகிக் களிக்கின்ற வண்டுகளானவை சப்தியாநிற்கிற பலவகைப் பூக்களாலே தொடுக்கப்பட்ட அழகிய அலங்கல்மாலைகளை ஏந்திக்கொண்டு தேவர்கள் (தேவரீருடைய) திருவடியிணைகளில் பணிமாறுகைக்காக வந்துநின்றனர்; ஆகையாலே, ஸர்வஸ்வாமிந்! லங்கேச்வரனான வீபீஷணாழ்வான் தாஸவ்ருத்தி பண்ணப்பெற்ற கோயிலிலே (கண்வளர்ந்தருளுகிற) எம்பெருமான்! அஸ்மத்ஸ்வாமியே! பள்ளி எழுந்தருளாயே—.

இரவியர்மணிநெடுந்தேரொடுமிவரோ இறையவர்பதினொருவிடையருமிவரோ*
மருவியமயிலினனறுமுகனிவனோ மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டி *
புரவியோடாடலும்பாடலும்தேரும் குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம் *
அருவரையனையநின்கோயில்முன்னிவரோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (6)

மணி நெடு தேரொடும் இரவியர் இறைய
வர் பதினொரு விடையரும் மருவிய மயிலி
னன் அறுமுகன் மருதரும் வசுக்களும்
வந்து வந்து ஈண்டி புரவியோடு தேரும்
பாடலும் ஆடலும் குமரதண்டம் புகுந்து
ஈண்டியவெள்ளம் அருவரை அனைய
கோயில் நின்முன்

விலக்ஷணமாய் பெரிதான தேரோடுகூட பன்னிரண்டு ஆதித்தர்களும் ஜகத்துக்கு நிர்வாஹகர்களான ஏகாதச ருத்ரர்களும் பொருந்திய மயில்வாகனத்தையுடைய ஸுப்ரஹ்மண்யனும் மருத்கணங்களான ஒன்பதின்மரும் அஷ்டவசுக்களும் ஒருவருக்கொருவர் முந்திக்கொண்டு வந்து நெருங்கி நிற்க (இவர்களுடைய வாஹநமான) குதிரைகள் பூண்ட ரதங்களும் பாட்டும் கூத்துமாய் தேவஸேநா ஸமூகங்கள் வந்து புகுந்து நெருங்கியிருக்கிற திரளானது பெரிய மலை போன்ற கோயிலில் தேவரீர் திருக்கண்ணோக்கத்திலே (நிற்கின்றது;) அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே—.

அந்தரத்தமரர்கள்கூட்டங்களிவையோ அருந்தவமுனிவரும்மருதருமிவரோ*
இந்திரனானையும்தானும்வந்திவனோ எம்பெருமானுனகோயிலின்வாசல் *
சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க இயக்கரும்மயங்கினர்திருவடிதொழுவான் *
அந்தரம்பாரிடமில்லைமற்றிதுவோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (7)

எம்பெருமான் உன கோயிலின் வாசல்
இந்திரன் தானும் ஆனையும் வந்து அந்த
ரத்து அமரர்கள் கூட்டங்கள் அரு தவம்
முனிவரும் மருதரும் இயக்கரும் சுந்தரர்
நெருக்க விச்சாதரர் நூக்க திருவடி தொழு
வான் மயங்கினர் அந்தரம் பார் இடம்
இல்லை

எமக்கு ஸ்வாமியான தேவரீருடைய திருக்கோயிலின் வாசலிலே தேவேந்திரனும் (அவனது வாஹனமான) ஐராவத யானையும் வந்திருப்பதுமன்றி, அண்டத்துக்குள் இராநின்ற தேவர்களும் இவர்களுடைய பரிவாரங்களும் மஹாதபஸ்விகளான ஸநகாதி மஹர்ஷிகளும் மருத்கணங்களும், யக்ஷர்களும், கந்தர்வர் நெருக்கவும் வித்யாதரர்கள் தள்ளவும் (தேவரீருடைய) திருவடிகளைத் தொழுவதற்காக வந்து மயங்கி நின்றனர்; ஆகாசமும் பூமியும் அவகாசமற்றிரா நின்றது; அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாய்—.

வம்பவிழ்வானவர்வாயுறைவழங்க மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா *
எம்பெருமான்படிமைக்கலங்காண்டற்கு ஏற்பனவாயினகொண்டுநன்முனிவர் *
தும்புருநாரதர்புகுந்தனரிவரோ தோன்றினனிரவியும்துலங்கொளிபரப்பி *
அம்பரதலத்தில்நின்றகல்கின்றதிருள்போய் அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (8)

வழங்க வம்பு அவிழ் வாயுறை மா நிதி
வானவர் கபிலை ஒண் கண்ணாடி முதலா
எம்பெருமான் காண்டற்கு ஏற்பன ஆயின
படிமைக் கலம் கொண்டு நல் முனிவர் தும்
புரு நாரதர் புகுந்தனர் இரவியும் துலங்கு
ஒளி பரப்பி தோன்றினன் இருள் அம்பர
தலத்தில் நின்று போய் அகல்கின்றது

(தேவரீருக்கு) ஸமர்ப்பிப்பதற்காக பரிமளம் மிகுந்த அறுகம்புல்லும் சிறந்த சங்கநிதி பத்மநிதிகளும் (கையிலேயுடையராய்க் கொண்டு) தேவர்களும், காமதேநுவும் ஒளிபொருந்திய கண்ணாடி முதலாக, ஸ்வாமியான தேவரீர் கண்டருளுகைக்கு தகுதியாயுள்ளவையான உபகரணங்களெல்லாவற்றையுங்கொண்டு மஹர்ஷிகளும் தும்புரு நாரதர்களும் வந்து நின்றார்கள்; (இதுவுமன்றி) சூரியனும் (தனது) மிக்க தேஜஸ்ஸை எங்கும் பரவச்செய்து கொண்டு உதயமானான்; இருளானது ஆகாசத்தினின்றும் நீங்கிப்போயிற்று; அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாய்—.

ஏதமில்தண்ணுமையெக்கம்மத்தளி யாழ்குழல்முழவமோடிசைதிசைகெழுமி *
கீதங்கள்பாடினர்கின்னரர்கருடர்கள் கெந்தருவருமிவர்கங்குலுமெல்லாம் *
மாதவர்வானவர்சாரணரியக்கர் சித்தரும்மயங்கினர்திருவடிதொழுவான் *
ஆதலிலவர்க்குநாளோலக்கமருள அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (9)

ஏதம் இல் தண்ணுமை எக்கம் மத்தளி யாழ் குழல் திசை முழவமோடு இசை கெழுமி கீதங்கள் பாடினர் கின்னரர் கருடர்கள் கெந்தருவரும் இவர் மாதவர் வானவர் சாரணர் இயக்கர் சித்தரும் திருவடி தொழுவான் கங்குலும் எல்லாம் மயங்கினர் ஆதலில் அவர்க்கு நாள் ஓலக்கம் அருள

குற்றமற்ற சிறுபறையும் ஒற்றைத் தந்தியையுடைய வாத்யமும் மத்தளமும் வீணையும் புல்லாங்குழல்களுமாய் திக்குக்களெங்கும் இவற்றின் முழக்கத்தோடு இசை மாட்டிப் பாட்டு பாடக் கடவரான கின்னரர்களும் கருடர்களும் கந்தர்வர்களும் இதோ மற்றுள்ளவர்களும் மஹர்ஷிகளும் தேவர்களும் சாரணர்களும் யக்ஷர்களும் வித்தர்களும் (தேவரீருடைய) திருவடிகளில் வணங்குகைக்காக இரவெல்லாம் (நெருக்கத்தில்வருந்தி) மோஹமுற்றனர்; ஆகையாலே அவர்களுக்கு பகலோலக்கமருளுகைக்காக அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாய்—.

கடிமலர்க்கமலங்கள்மலர்ந்தனவிவையோ கதிரவன்கனைகடல்முளைத்தனனிவனோ *
துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித் துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா *
தோடையொத்ததுளவமும் கூடையும்பொலிந்து தோன்றியதோள்தொண்டரடிப்பொடியென்னு
மடியனை * அளியனென்றருளியுன்னடியார்க்காட்படுத்தாய் பள்ளியெழுந்தருளாயே. (10)

புனல் சூழ் அரங்கா! கடி கமலம் மலர்கள் மலர்ந்தன; கதிரவன் கனை கடல் முளைத்தனன்; துடி இடையார் சுரி குழல் பிழிந்து உதறி துகில் உடுத்து ஏறினர்; தொடை ஒத்த துளவமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப் பொடி யென்னும் அடியனை அளியன் என்று அருளி உன் அடியார்க்கு ஆள் படுத்தாய்; பள்ளி எழுந்தருளாய்.

திருக்காவேரித் தீர்த்தத்தாலே சூழப்பட்ட அரங்கத்தில் கண்வளர்ந்தருளுமவனே ; பரிமளமுடைய தாமரைப்பூக்களானவை (நன்றாக) மலர்ந்து விட்டன ; (தாமரையை மலர்த்தவல்ல) ஸூர்யனானவன் கோஷஞ் செய்கையையே இயல்வாகவுடைய கடலிலே உதயகிரியிலே வந்து தோன்றினான்; உடுக்கை போன்ற (ஸூக்ஷ்மமான) இடையையுடைய மாதர் (தமது) சுருண்ட மயிர்முடியை நீர்ப்பசையறப் பிழிந்து உதறி விட்டு (தம்தம்) ஆடைகளை உடுத்துக் கொண்டு கரையேறிவிட்டார்கள் ; ஒழுங்காகத் தொடுக்கப்பெற்ற திருத்துழாய் மாலையும் பூக்குடலையும் விளங்கா நிற்கப்பெற்ற தோளையுடைய 'தொண்டரடிப்பொடி' என்ற பெயருடைய தாஸனை 'கிருபை பண்ணுகைக்கு உரிய பாத்திரம்' என்று திருவுள்ளம்பற்றி அங்கீகரித்தருளி தேவரீருடைய நித்யகிங்கரர்களான பாகவதர்களுக்கு ஆளாக்க வேணும் ; (அதற்காக) திருப்பள்ளியை விட்டு எழுந்தருள வேணும்.

அடிவரவு :—கதிர் கொழு சுடர் மேட்டு புலம்பின இரவியர் அந்தரம் வம்பு ஏதம் கடி அமலன்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்

—

ஸ்ரீ:

சூடிக்கொடுத்த நாச்சியார் அருளிச்செய்த

# திருப்பாவையின் தனியன்கள்

---

நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்த்யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ்ஸித்தமத்யாபயந்தீ,
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நமஇதமிதம் பூயஏவாஸ்து பூய:

நீளா துங்க ஸ்தநகிரி தடீஸுப்தம் ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் க்ருஷ்ணம் உத்போத்ய ச்ருதி சத சிரஸ் ஸித்தம் ஸ்வம் பாரார்த்த்யம் அத்யாபயந்தீ பலாத் க்ருத்ய யா கோதா புங்க்தே தஸ்யை பூயோ பூய ஏவ இதமிதம் நம: அஸ்து.

நப்பின்னைப் பிராட்டியினது உயர்ந்த திருமுலைத் தடங்களாகிற மலைச் சாரலில் கண் வளர்ந்தருளுமவனும், தன்னால் சூடிக் களையப்பட்ட மாலையிலே விலங்கிடப்பட்டவனுமான கண்ணப்பிரானை திருப்பள்ளி யுணர்த்தி பற்பல வேதங்களின் தலையான பாகங்களாலேதேறின [வேதாந்த வித்தமான] தன்னுடையதான பாரதந்திரியத்தை அறிவியாநின்றவளாய் பலாத்காரம் செய்து யாவளொரு ஆண்டாள் (அக்கண்ணபிரானை) அநுபவிக்கிறாளோ அப்படிப்பட்ட பெருமையை யுடையவளான ஆண்டாளின் பொருட்டு காலதத்துவமுள்ளதனையும் இந்த இந்த நமஸ்காரமானது ஆயிடுக.

*** —நப்பின்னைப் பிராட்டியின் திருமுலைத்தடங்களில் தலைசாய்த்துக் கண்வளர்ந்தருளா நின்ற கண்ணபிரானைத் திருப்பள்ளியுணர்த்தி, அடிமை செய்யும் விஷயத்தில் தனக்குள்ள ஆவலை அறிவித்துத் தன் குழலிற் சூட்டிய பூமாலையாலே அப்பிரானை விலங்கிட்டு அநுபவித்த ஆண்டாளைத் திருவடி தொழுகின்றேன் என்றவாறு.

அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையாற்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

அன்னம் வயல் புதுவை ஆண்டாள் பன்னு திருப்பாவை பல்பதியம் இன் இசையால் பாடி அரங்கற்கு நல் பா மாலை கொடுத்தாள் பூ மாலை சூடி கொடுத்தாளை சொல்.

ஹம்ஸங்கள் (உலாவுகின்ற) வயல்களை யுடைய ஸ்ரீவில்லிபுத்தூரில் (திருவவதரித்த) 'ஆண்டாள்' என்னுந் திருநாமத்தை யுடையவளும் ஆராய்ந்து அருளிச் செய்யப்பட்ட திருப்பாவை யென்னும் பல பாசுரங்களை இனிய இசையுடன் பாடி (அவற்றை) ஸ்ரீரங்கநாதனுக்கு விலக்ஷணமான பாமாலையாகஸமர்ப்பித்தவளும், (செண்பகம் முதலிய) பூக்களினாலாகிய மாலையை (தான் முந்துறக் குழலிற்) சூடி (பிறகு ரங்கநாதனுக்கு) ஸமர்ப்பித்தவளுமான கோதையை அநுஸந்திக்கக் கடவை.

*** —ஆண்டாள் அருளிச்செய்த திவ்வியப் பிரபந்தங்களை ஓதுவதிற் காட்டிலும் அவ்வாண்டாள் தன்னுடைய திருநாம ஸங்கீர்த்தனமே முக்கியமென்பது இப்பாட்டின் கருத்தாம்.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்—நாடிநீ
வேங்கடவற் கென்னை விதியென்ற விம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.

சூடிக்கொடுத்த சுடர் கொடியே தொல் பாவை பாடி அருள் வல்ல பல் வளையாய்! நீ நாடி என்னை வேங்கடவற்கு விதி என்ற இம்மாற்றம் நாம் கடவா வண்ணம் நல்கு.

பூமாலையைத் திருக் குழலிற் சூடி, (அதனை எம்பெருமானுக்கு) ஸமர்ப்பித்த தேஜோமயமான கொடி போன்றவளே! அநாதி ஆசாரஸித்தமான நோன்பை (திருப்பாவை முகமாகக்) கூறி (அடியார் திறத்துக்) கருணைபுரிய வல்லவளும் பல வளைகளை அணிந்துள்ளவளுமான சோதாய்! நீ (மன்மதனை) நாடி ("காமதேவா; நீ என்னைத் திருவேங்கடமுடையானுக்கு வாழ்க்கைப்படுத்த வேணும்") என்று காமனைக் குறித்துக் கூறிய கூற்றை யாம் மீறாதொழியுமாறு அருள்புரிவாயாக.

***—இப்பாட்டால், நாச்சியார் திருமொழியில் மிக்க அன்பு எமக்குப் பிறக்க வேணுமெனப் பிரார்த்தித்தவாறு. அதில் முதற்றிருப்பதிகத்தில் "அனங்கதேவா!, உய்யவுமாங்கொலோ வென்று சொல்லி யுன்னையு மும்பியையுந்தொழுதேன், வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே" இத்தியாதி பாசுரங்களினால், ஆண்டாள் காமனை வணங்கி, "வேங்கடவாணனுக்கு நான் வாழ்க்கைப்படுமாறு நீ விதிக்கவேணும்" என வேண்டினமை அறிக. .... .... .... .... *

தனியன் உரை முற்றுப்பெற்றது.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

———

## திருப்பாவையின் உரை அவதாரிகை

ஆழ்வார்கள் தாங்கள் ஸம்ஸாரத்திற் கிடந்துறங்காநிற்க, எம்பெருமான் தானுகவந்து அவர்களை உணர்த்த, பிறகு உணர்ந்தனர் அவர்கள். ஆண்டாள் அங்ஙனன்றி மணத்துடன் முளைக்கும் திருத்துழாய் போன்று எம்பெருமான் திறத்து ஆராதகாதலுடன் அவதரித்து இவள்தானே அவ்வெம்பெருமான் ஸந்நிதியிற் சென்று "உப்பர்கோமானே! உறங்காதெழுந்திராய்" என்று அவனை உணர்த்தினளாதலால் ஆழ்வார்களினும் ஆண்டாளுக்குள்ள வைலக்ஷண்யம் சொல்லாற்கூறும்பரமன்று. அன்றியும், ஆடவரை ஆடவர்கண்டு காமுறுவதிற் காட்டிலும் பெண்டிர்கண்டு காமுறுதல் பள்ளமடையா யிருக்குமென்பது உலகத்து எளிதிலுணர்ந்த விஷயமாதலால், பகவத் விஷயத்தில் ஆழ்வார்களின் காமம்போல் மேட்டுமடையா யிருக்கையன்றியே இவ்வாண்டாளுடைய காமம் பள்ளமடையா யிருக்கையாகிற மற்றொரு வைலக்ஷண்யமும் உற்று நோக்கத்தக்கது. ஆழ்வார்கள், காமத்தின் மெய்ப்பாட்டுக்காகப் பெண்ணுடை உடுத்துப் பேசினர்கள்; இவட்கு அங்ஙன் ஆரோபித்துக் கொள்ளவேண்டிய ஆகாரமொன்றுமில்லையே.

இங்ஙன் அமைந்த அதிசய விசேஷங்களுடன் வளர்ந்தருளாநின்ற சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஒரு கொள்கொம்புடன் கூடவேண்டும் பருவமாய், அதற்குரிய ஞானபக்திகள் மீதூர்ந்து செல்லப்பெற்று "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்று மாநுஷ நாற்றத்தைப் பொறுக்கமாட்டாதே *அங்கைத்தலத்திடை யாழிகொண்டானவன் முகத்தன்றி விழியாதாளாய், ஸ்ரீ வில்லிபுத்தூரில் எழுந்தருளியிராநின்ற வடபெருங் கோயிலுடையானுடனே தழுவி முழுசிப் பரிமாறப் பெறவேணுமென்று விரும்பிச்செல்ல, அவ்விருப்பத்திற்கீடாக வடபெருஞ்சாயி முகங்காட்டாமையாலே மிகவும் மனம் நொந்து "இவ்வெம்பெருமானோடு கலவிபெற்றுக் களித்தார் ஆரேனுமுண்டோ?" என்று ஆராய்ந்தவிடத்து, "திருவாய்ப்பாடியிலுள்ள அஞ்சுலக்ஷங்குடி ஆயர்மங்கைகள் இவனுடன் கலந்து களிக்கப்பெற்றார்கள்" என்றுணர்ந்து, "அக்கலவி காலாந்தரத்தில் நடந்தொன்றாகையாலே அதில் நமக்கு அந்வயமின்றியொழிந்தது. இனி, அவன் உலாவிப்போன அடிச்சுவடும் அவனும் பெண்களுமாகத் திளைத்த யமுநாநதியும், அவன் கோநிரைகாக்க எடுத்த கோவர்த்தனகிரியும் கிடந்தனவாகில், அவற்றைக் கொண்டாகிலும் தரிப்போம்" என்று அங்குச்செல்ல நினைக்க, பகவத் விரஹத்தாலே உடல் மெலிவுற்ற இவ்வாண்டாள் அவ்வளவு செல்லமாட்டாதாளாய், "ஜநகராஜன் தன் மகளான சீதைக்கு வில்முறி என்று ஒரு

அவதி வைத்தாப்போலவும், கும்பர் தம் மகளான நப்பின்னைப்பிராட்டிக்கு ஏறு தழுவுதல் என்று ஒரு அவதி வைத்தாப்போலவும் நம், தந்தை நமக்கு ஓர் அவதியும் கற்பிக்கவில்லையே! இனி நாம் வாழ்வது எங்ஙனேயோ?" என்று சிந்தித்துத் தளர்ந்திருக்க; அவ்வளவில் சில தார்மிகர்கள்—"திருவாய்ப்பாடியிற் கண்ணபிரான் ஆயர்மங்கைகளுடன் [1]குரவைகோத்து விளையாடும்போது ஆநந்தரஸம் தலைப்பற்றி வாய்க்கொண்டு செல்ல, 'இனி நற்கேடு கெடலாகாது' என்று அந்த ரஸம் மாறுகைக்காக கண்ண பிரான் பெண்களைப் பிரிந்து மறைந்திருக்க, அப்போது அப் பெண்பிள்ளைகள் தங்கள் ஆற்றாமையாலே, 'இனி எவ்வகையாலாயினும் நாம் தரிக்கவேணும்' என்று ஓர் ஆய்ச்சி 'நான் காளியநாகத்தின் வலியை அடக்குகிறேன்காண்' என்பது, மற்றொருத்தி 'நான் தேநுகாஸுரனைத் தொலைத்தொழிக்கிறேன்காண்' என்பது, வேறொருத்தி நான் பூதனை முலையைச் சுவைத்துண்ணுகிறேன் காண்என்பதாய் இப்படி அனைவரும் தாங்கள் கண்ணபிரான்போல அநுகாரஞ்செய்து ஒருவாறு துயர்தீர்ந்து தரித்தார்கள்" என்று[2] சொல்லக்கேட்ட ஆண்டாள் தானும் அவ்வாய்ச்சிகளைப்போல் அநுகரித்துத் தரிக்கும்படியைக் கூறுவது திருப்பாவை என்கிற இத்திவ்வியப் பிரபந்தம். ... ... ... ... *

அவதாரிகை முற்றுப்பெற்றது.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

## திருப்பாவை

மார்கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால் *
நீராடப்போதுவீர் போதுமினோநேரிழையீர் *
சீர்மல்குமாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் *
கூர்வேற்கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன் *
ஏரார்ந்தகண்ணி யசோதை யிளஞ்சிங்கம் *
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல்முகத்தான் *
நாராயணனே நமக்கேபறைதருவான் *
பாரோர்புகழப் படிந்தேலோரெம்பாவாய். (1)

சீர்மல்கும் ஆய்ப்பாடி செல்வம் சிறுமீர்காள் நேர் இழையீர்! மார்கழி திங்கள் மதி நிறைந்த நல் நாள்; கூர் வேல் கொடு தொழிலன் நந்தகோபன் குமரன் ஏர் ஆர்ந்த கண்ணி அசோதை இள சிங்கம் கார்மேனி செம் கண் கதிர் மதியம் போல் முகத்தான் நாராயணனே நமக்கே பறை தருவான்; ஆல், பாரோர் புகழ படிந்து நீர் ஆடபோதுவீர் போதுமின்.

செல்வம் நிறைந்துள்ள திருவாய்ப்பாடியில் கைங்கர்ய ஸம்பத்தையும் இளம் பருவத்தையுமுடைய பெண்காள்! விலக்ஷணமான பூஷணங்களை அணிந்துள்ளவர்களே! (மாதங்களிற்சிறந்தமார்கழிமாஸமும்பூர்ணசந்திரோதயத்தையுடைய (சுக்கிலபக்ஷத்திய) நல்லநாளும் (நமக்கு வாய்த்திராநின்றன.) கூர்மைபொருந்திய வேலாயுதத்தை யுடையவனும் (கண்ணபிரானுக்குத் தீங்கு செய்ய வரும் க்ஷுத்ரஜந்துக்கள் பக்கலிலுஞ் சீறிக்) கொடுமைத் தொழிலைப் புரியுமவனுமான நந்தகோபனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்தவனும், அழகு நிறைந்த கண்களை யுடையளான யசோதைப்பிராட்டிக்கு சிங்கக்குட்டி போலிருப்பவனும், காளமேகத்தோடொத்த திருமேனியையும் செந்தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையும் ஸூர்யனையும் சந்திரனையும்போன்ற திருமுகத்தையுமுடையனுமான ஸ்ரீமந்நாராயணன் தானே (அவனால் பேறு என்றிருக்கிற) நமக்கே பறையைக் கொடுக்குமவனாயிராநின்றான். ஆதலால், இவ்வுலகத்தவர்கள்கொண்டாடும்படி (இந்நோன்பிலேஊன்றி) நீராட வர விருப்பமுடையீர்களே! வாருங்கள்; ஏல் ஓர் எம் பாவாய்!—.

---

1. இக்குரவைக்கூத்து வடமொழியில் ராஸக்ரீடை என வழங்கும். அஃதாவது கண்ணபிரான்பல திருவுருக்கொண்டு ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாக நின்று ஆடுவதொரு கூத்து.

2. ஸ்ரீவிஷ்ணுபுராணம்—ஐந்தாவது அம்சத்தில் பதின்மூன்று மத்தியாயத்தில் இது கூறப்பட்டுள்ளமை காண்க.

*** — ஆயர் சிறுமிகள் “நாம் நோன்பு நோற்பதற்கீடாக நமக்கு இங்ஙனே விலக்ஷணமானதொரு காலம் நேர்பட்டபடி என்!” என்று காலத்தைக் கொண்டாடி, மார்கழி நீராட்டத்தில் விருப்பமுடைய பெண்களை விளிக்குமாறு கூறுவது இப்பாட்டு. ஏலோரெம் பாவாய்=நோன்பு நோற்பதில் அவகாஹித்தமையைக் காட்டுகின்ற ஓர் சொற்றொடர். (1)

வையத்துவாழ்வீர்காள் நாமும்நம்பாவைக்கு *
செய்யுங்கிரிசைகள் கேளீரோ * பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி *
நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி *
மையிட்டெழுதோம் மலரிட்டுநாமுடியோம் *
செய்யாதனசெய்யோந் தீக்குறளைசென்றோதோம் *
ஐயமும்பிச்சையு மாந்தனையுங்கைகாட்டி *
உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம்பாவாய். (2)

வையத்து வாழ்வீர்காள்! நாமும் உய்யும்ஆறு எண்ணி பால் கடலுள் பைய துயின்ற பரமன் அடி பாடி ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி உகந்து நம் பாவைக்கு செய்யும் கிரிசைகள் கேளீர்; நாம் நெய் உண்ணோம் பால் உண்ணோம் நாட்காலே நீர் ஆடி மை இட்டு எழுதோம் மலர் இட்டு முடியோம் செய்யாதன செய்யோம் தீ குறளை சென்று ஓதோம்.

இப்பூமண்டலத்தில்வாழ்ந்திராநின்றுள்ளவர்களே! (எம்பெருமானாலேயே பேறுஎன்ற அத்யவஸாயமுடைய) நாமும் உஜ்ஜீவிக்கும் வழியை ஆராய்ந்து, திருப்பாற்கடலில் அவதாநத்துடன் கண்வளர்ந்தருளாநின்ற பரமபுருஷனுடைய திருவடிகட்கு மங்களாசாஸனம் பண்ணி (ஆசார்யாதிகளுக்கு இடுகைபாகிற) ஐயத்தையும், (ஆர்த்தர்கட்கு இடுகையாகிற) பிக்ஷையையும் சக்தியுள்ளளவும் இட்டு மகிழ்ந்து நமது நோன்புக்கு (அங்கமாகச்) செய்யவேண்டிய க்ரியைகளை காதுகொடுத்துக் கேளுங்கள். நோன்பு நோற்கத் தொடங்கின நாம் நெய் உண்ணக் கடவோமல்லோம்; பால் உண்ணக் கடவோமல்லலோம்; விடியற்காலத்திலேயே ஸ்நாநஞ் செய்துவிட்டு (கண்ணில்) மையிட்டு அலங்காரம் பண்ணக்கடவோமல்லோம்; (குழலிற்) பூவைத்துமுடிக்கக் கடவோமல்லோம்; (மேலைத் தலைவர்கள்) செய்யாதவற்றை செய்யக் கடவோமல்லோம்; கொடியகோட்சொற்களை (எம்பெருமானிடத்துச்) சென்று கூறக்கடவோமல்லோம்; ஏல் ஓர் எம் பாவாய்.—

*** — ஒரு விசேஷகாரியத்தில் ஒருப்பட்டவர்கள் அக்காரியம் தலைக்கட்டுமளவும் சிலவற்றைப் பரிஹரிக்க வேண்டுமென்றும் சிலவற்றைப் பற்றவேண்டு மென்றும் வீடுபற்றுக்களை முதலில் ஸங்கல்பித்துக்கொள்ள வேண்டுமென்றும் சாஸ்திரங்களிற் கூறியுள்ளதனால், அதற்கேற்ப, நோன்பு ஆகிற விசேஷ காரியத்தில் ஒருப்பட்ட இவ்வாயர்மங்கைகள் தாங்கள் விடுமவற்றையும் பற்றுமவற்றையும் ஸங்கல்பிக்கிறார்கள், இப்பாட்டில். .... .... (2)

ஓங்கியுலகளந்த வுத்தமன்பேர்பாடி *
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றிநீராடினால் *
தீங்கின்றி நாடெல்லாந் திங்கள்மும்மாரிபெய்து *
ஓங்குபெருஞ்செந்நெ லூடுகயலுகள *
பூங்குவளைப்போதிற் பொறிவண்டுகண்படுப்ப *
தேங்காதேபுக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்க * குடம்நிறைக்கும் வள்ளற்பெரும்பசுக்கள் *
நீங்காதசெல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய். (3)

ஓங்கி உலகு அளந்த உத்தமன் பேர் நாங்கள் பாடி நம் பாவைக்கு சாற்றி நீர் ஆடி

மஹாபலி வார்த்த நீர் கையில் விழுந்தவாறே) ஆகாசத்தளவும் வளர்ந்து (மூன்று) லோகங்களையும் (திருவடிகளாலே தாவி அளந்து கொண்ட புருஷோத்தமனுடைய திருநாமங்களை (ப்ரயோஜநாந்தரத்தை விரும்பாத) நாங்கள் (ப்ரீதிக்குப்

னால் நாடு எல்லாம் தீங்கு இன்றி திங்கள் மும்மாரி பெய்து ஓங்கு பெரு செந்நெல் ஊடு கயல் உகள பூ குவளை போதில் பொறி வண்டு கண் படுப்ப புக்கு தேங்காதே இருந்து சீர்த்த முலை பற்றி வாங்க வள்ளல் பெரும் பசுக்கள் நீங்காத செல்வம் நிறைந்து குடம் நிறைக்கும்.

போக்கு வீடாகப்) பாடி நம் நோன்புக்கென்று சங்கற்பித்துக்கொண்டு நீராடினால் தேசமெங்கும் (அதிவ்ருஷ்டி, அநாவ்ருஷ்டி ஆகிற) தீங்கு ஒன்றுமில்லாமல் மாதந்தோறும் மூன்றுதரம் மழை பெய்ய (அதனால்,) ஆகாசத்தளவும் வளர்ந்து பெருத்துள்ள செந்நெற் பயிர்களின் நடுவே மீன்கள் துள்ள அழகிய நெய்தல்மலரில் மிக்க புகரையுடைய வண்டுகளானவை உறங்க, (மாட்டுத் தொழுவிற்) புகுந்து சலியாமல் பொருந்தியிருந்து (பசுக்களின்) பருத்த முலைகளை (இரு கையாலும்) பிடித்து வலிக்க (எல்லார்க்கும் கட்டி அடிக்கலாம்படி விதேயமாயிருக்கையாகிற) உதாரஸ்வபாவமுடைய பெரியபசுக்களானவை நீங்காதஸம்பத்து நிறையும்படி (பால் வெள்ளத்தாலே) குடங்களை நிறைக்கும், ஏல் ஓர் எம் பாவாய்.—

* * *—உலகத்தில்சுவர்க்கத்தை முக்கியமான பேறாகக்கொண்டு ஜ்யோதிஷ்டோமயாகஞ் செய்வதற்கு, ஆயுஸ்ஸு, ஸந்தானம் என்று சில அவாந்தர பலன்களும் உடன்கூடும்; இவ்வாய்ச்சியர் எம்பெருமானையே எல்லாவகைப் பயனாகவும் உள்ளத்துக்கொண்டவர்களாதலால் அவ்வெம்பெருமானொழிய வேறொரு பயனையும் விரும்பமாட்டார்கள்; ஆயினும் இவர்கள் விரும்ப வேண்டுவதொன்றுண்டு; அதாவது தாங்கள் நோன்பு நோற்குமாறு அநுமதி அளித்தவர்கட்குச் சில ஸம்ருத்திகளை ஆசாஸிக்கை. அஃது இப்பாட்டிற் சொல்லும். [யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே—ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்ப்பிக்ஷதஸ்கரா:] என்று திருவெட்டெழுத்து வல்லானொருவனிருந்த நாடு ஸம்ருத்தமாயிருக்குமென்னா நின்றால் இத்தனை மஹாநுபாவைகள் இருக்கும் நாடு ஸம்ருத்தமாகச் சொல்லவேண்டாவே. (3)

ஆழி மழைக்கண்ணா ஒன்றுநீ கைகரவேல் *
ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி *
ஊழிமுதல்வ னுருவம்போல் மெய்கறுத்து *
பாழியந் தோளுடைப் பற்பநாபன் கையில் *
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல் *
வாழ வுலகினிற் பெய்திடாய் * நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(4)

ஆழி மழை கண்ணா நீ கை ஒன்றும் கரவேல் ஆழியுள் புக்கு முகந்து கொடு ஆர்த்து ஏறி ஊழி முதல்வன் உருவம்போல் மெய் கறுத்து பாழி அம் தோள் உடை பற்பநாபன் கையில் ஆழி போல் மின்னி வலம்புரி போல் நின்று அதிர்ந்து சார்ங்கம் உதைத்த சரம் மழைபோல் வாழ நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராட உலகினில் தாழாதே பெய்திடாய்

மண்டல வர்ஷத்துக்குத் தலைவனான பர்ஜந்யனே! நீ (உன்னுடைய) கொடையில் ஒன்றையும் ஒளியாதொழிய வேணும்; (நீ செய்ய வேண்டிய பணி என்னவென்றால்) கடலினுட் புகுந்து (அங்குள்ள நீரை) மொண்டு கொண்டு கர்ஜனை பண்ணி (-பேரொலி செய்து) (ஆகாயத்தே) ஏறி காலம் முதலிய ஸகல பதார்த்தங்களுக்குங் காரணபூதனான, எம்பெருமானுடைய திருமேனி போல் (உனது) உடம்பிற் கருமைபெற்று பெருமையும் அழகும் பொருந்திய தோள்களையுடையவனும், நாபிக்கமல முடையனுமான எம்பெருமானுடைய கையில் (வலப்பக்கத்திலுள்ள) திருவாழி யாழ்வானைப்போல் ஒளி மல்கி, (இடப்பக்கத்திலுள்ள) பாஞ்சஜந்யாழ்வானைப்போல் நிலை நின்று முழங்கி, ஸ்ரீசார்ங்கத்தாலே தள்ளப்பட்ட பாணவர்ஷம்போல், (உலகத்தாரனைவரும்) வாழும் படியாகவும் (கண்ணபிரானோட்டைக் கலவிக்கு நோன்பு நோற்கிற) நாங்களும் ஸந்தோஷித்து மார்கழி நீராட்டம் செய்யும்படியாகவும் இவ்வுலகத்தில் தாமதம் செய்யாமல் (சடக்கென) மழைபொழியக் கடவை. ஏல் ஓர் எம் பாவாய்.—

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை *
தூய பெருநீர் யமுனைத் துறைவனை *
ஆயர் குலத்தினில் தோன்று மணிவிளக்கை *
தாயைக் குடல்விளக்கஞ் செய்த தாமோதரனை *
தூயோமாய் வந்துநாம் தூமலர்கள் தூய்த்தொழுது
வாயினாற் பாடி மனத்தினாற் சிந்திக்க *
போய பிழையும் புகுதருவா னின்றனவும் *
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய். (5)

மாயனை மன்னுவடமதுரை மைந்தனை தூய பெரு நீர் யமுனை துறைவனை ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை தாயை குடல் விளக்கம் செய்த தாமோதரனை நாம் தூயோம் ஆய் வந்து தூ மலர்கள் தூய் தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசு ஆகும் செப்பு.

மாயச் செயல்களை யுடையவனும், (பகவத் ஸம்பந்தம்) நித்யமாகப் பெற்றுள்ள வடமதுரைக்குத் தலைவனும், பரிசுத்தமாய் ஆழம்மிக்கிருக்கிற தீர்த்தத்தை யுடைய யமுனை யாற்றங்கரையை நிரூபகமாக வுடையவனும், இடைக்குலத்தில் விளங்கா நின்றுள்ள மங்கள தீபம் போன்றவனும், தாயாகிய தேவகிப் பிராட்டியின் வயிற்றை விளங்கச் செய்தவனுமான கண்ணபிரானை, (அடிச்சியோமாகிய) நாம் பரிசுத்தியுள்ளவர்களாய்க்கிட்டி நல்ல மலர்களைத் தூவி வணங்கி வாயாரப் பாடி நெஞ்சார தியானம் பண்ண (அதன் பிறகு) (சேஷ சேஷிபாவ ஜ்ஞான முண்டாவதற்கு) முன்பு கழிந்த பாவங்களும், பின்பு (தன்னை யறியாமல்) வரக்கூடிய பாவங்களும் நெருப்பிலிட்ட பஞ்சு போலே உருமாய்ந்து போம்; (ஆன பின்பு) அவ்வெம்பெருமான் திருநாமங்களைச் சொல்; ஏல் ஓர் எம் பாவாய்—.

புள்ளுஞ் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில் *
வெள்ளை விளிசங்கின் பேரரவங் கேட்டிலையோ *
பிள்ளா யெழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு *
கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி *
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை *
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும் *
மெள்ள வெழுந்து அரியென்ற பேரரவம் *
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். (6)

புள்ளும் சிலம்பினகாண் புள் அரையன் கோ இல்லில் வெள்ளை விளி சங்கின் பேர் அரவம் கேட்டிலையோ? பிள்ளாய் எழுந்திராய்; பேய் முலை நஞ்சு உண்டு கள்ளம் சகடம் கலக்கு அழிய கால் ஓச்சி வெள்ளத்து அரவில் துயில் அமர்ந்த வித்தினை முனிவர்களும் யோகிகளும் உள்ளத்து கொண்டு மெள்ள எழுந்து அரி என்ற பேர் அரவம் உள்ளம் புகுந்து குளிர்ந்து.

பறவைகளும் (இரை தேடுகைக்காக எழுந்து) ஆரவாரங்கள் செய்யா நின்றனகாண்; பறவைத் தலைவனான பெரிய திருவடிக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய ஸந்நிதியிலே வெண்மை நிற முடையதும் (அனைவரையும்) அழையா நிற்பதுமான சங்கினுடைய பேரொலியையும் செவிப்படுத்துகின்றிலையோ? (பகவத் விஷயரஸ மறியப்பெறாத) பெண்ணே! (சடக்கென) எழுந்திரு; பூதனையின் முலையில் (தடவிக்கிடந்த) விஷத்தை (அவளது ஆவியுடன்) அமுது செய்து, வஞ்சனைபொருந்திய (அஸுரா விஷ்டமான) சகடமானது கட்டுக் குலையும்படி திருவடியை ஓங்கச்செய்தவனும் திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது திருக்கண்வளர்ந்தருளின ஜகத்காரணபூதனுமான எம்பெருமானை மநநசீலரான ரிஷிகளும் யோகப்பயிற்சியில் ஊன்றினவர்களும் (தம்து) ஹ்ருதயத்தில் அமர்த்திக்கொண்டு (ஹ்ருதயஸ்தனான) அவ்வெம் பெருமான் அசையாதபடி) ஸாவதானமாக எழுந்து ஹரிர் ஹரி:' என்ற பேரொலியானது (எமது) நெஞ்சிற் புகுந்து குளிர்ந்தது; ஏல் ஓர் எம் பாவாய்—.

(இனியாகிலும் எழுந்திரு என்று ஒருத்தியை உணர்த்துகிறபடி,)

இப்பாட்டு முதல், மேல் "எல்லேயிளங்கிளியே" என்ற பாட்டளவாகப் பத்துப் பாசுரங்களிலே அநுபோக்தாக்களைக் குறித்துத் திருப்பள்ளியெழுச்சி பாடப்படுகின்றது. (6)

கீசுகீசென்றெங்குமானைச்சாத்தன் கலந்து *
பேசின பேச்சரவங் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே *
காசும் பிறப்புங் கலகலப்பக் கைபேர்த்து *
வாச நறுங்குழலாய்ச்சியர் * மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவங் கேட்டிலையோ *
நாயகப் பெண்பிள்ளாய் நாராயணன்மூர்த்தி *
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ *
தேசமுடையாய் திறவேலோ ரெம்பாவாய். (7)

பேய் பெண்ணே எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து கீசுகீசு என்று பேசின பேச்சு அரவம் கேட்டிலையோ வாசம் நறு குழல் ஆய்ச்சியர் காசும் பிறப்பும் கலகலப்ப கை பேர்த்து மத்தினால் ஓசை படுத்த தயிர் அரவம் கேட்டிலையோ நாயகப் பெண் பிள்ளாய் நாராயணன் மூர்த்தி கேசவனை பாடவும் நீ கேட்டே கிடத்தியோ தேசம் உடையாய் திற

மதிகெட்ட பெண்ணே! எல்லாவிடங்களிலும் பரத்வாஜபக்ஷிகளானவை (ஒன்றோடொன்று) ஸம்ச்லேஷித்து கீச்சுகீச்சென்று பேசிய பேச்சினுடைய ஆரவாரத்தை (இன்னும்நீ) கேட்கவில்லையோ? பரிமள வஸ்துக்களினால் மணம்கமழ்கின்றுள்ள கூந்தலையுடைய இடைப்பெண்கள் (கழுத்தில் அணிந்துள்ள) அச்சுத் தாலியும் ஆமைத்தாலியும் கலகலவென்று சப்திக்கும்படியாக கைகளை அசைத்து மத்தாலே ஓசைபடுத்தின தயிரின் ஒலியையும் கேட்கவில்லையோ பெண்களுக்கெல்லாம் தலைமையா யிருப்பவளே! ஸ்ரீமந் நாரயணாவதாரமான கண்ணபிரானை (நாங்கள்) பாடாநிற்கச்செய்தேயும் நீ (அப்பாட்டைக்) கேட்டு வைத்தும் (இங்ஙனே) உறங்குவாயோ? மிக்க தேஜஸ்ஸையுடையவளே. (நீயே எழுந்துவந்து கதவைத் திற; எல் ஓர் எம் பாவாய்—

கீழ்வானம் வெள்ளென்றெருமை சிறுவீடு *
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும் *
போவான் போகின்றாரைப் போகாமற் காத்து* உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம் * கோதுகலமுடைய
பாவா யெழுந்திராய் பாடிப் பறைகொண்டு *
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய *
தேவாதி தேவனைச் சென்றுநாஞ் சேவித்தால் *
ஆவாவென் றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய். (8)

கோதுகலம் உடைய பாவாய் கீழ் வானம் வெள்ளென்று எருமை மேய்வான் சிறுவீடு பரந்தன போவான் போகின்றார் மிக்குள்ள பிள்ளைகளும் போகாமல் காத்து உன்னை கூவுவான் வந்து நின்றோம் எழுந்திராய் பாடி பறைகொண்டு மா வாய் பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதி தேவனை நாம் சென்று சேவித்தால் ஆராய்ந்து ஆ ஆ என்று அருளும்

கிருஷ்ணனாலே மிகவும் விரும்பத்தக்க பதுமைபோன்றவளே! கீழ்த்திசைப்பக்கத்து ஆகாசமானது வெளுத்தது; (அன்றியும்,) எருமைகளானவை (பனிப்புல்) மேய்கைக்காக சிறு தோட்டங்களில் சென்று புக்கன; (திருவேங்கட யாத்திரை போலே) போகையையே பிரயோஜனமாகக் கொண்டு போகின்ற மற்றுள்ள எல்லாப் பெண் பிள்ளைகளையும் போகவொட்டாமல் தடுத்து உன்னை அழைத்தற்பொருட்டு (உன் மாளிகை வாசலில்) வந்திரா நின்றோம்; (எங்களுடன் கூடுவதற்காக) எழுந்திரு; (கண்ணபிரானுடைய குணங்களைப்) பாடி (அவனிடத்துப்) பறையைப் பெற்று, குதிரையுருவமெடுத்து வந்த கேசி யென்னுமசுரனுடைய வாயைக்கீண்டெறிந்தவனும் மல்லர்களை மாளச் செய்தவனுமான அத்தேவ தேவனை நாம் அணுகி அடிபணிந்தால் (அவன்) நமது குறைகளை) ஆராய்ந்து ஐயோ! என்று இரங்கியருள்வன் எல் ஓர் எம் பாவாய்—.

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய *
தூபங் கமழத் துயிலணைமேற் கண்வளரும் *
மாமான் மகளே மணிக்கதவந் தாள்திறவாய் *
மாமீ ரவளை யெழுப்பீரோ * உன்மகள்தான்
ஊமையோ அன்றிச் செவிடோ வனந்தலோ *
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ *
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று *
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்.

(9)

தூ மணி மாடத்து சுற்றும் விளக்கு எரிய தூபம் கமழ துயில் அணைமேல் கண் வளரும் மாமான் மகளே மணி கதவம் தாள் திறவாய் மாமீர் அவளை எழுப்பீரோ உன் மகள் ஊமையோ அன்றி செவிடோ அனந்தலோ பெருதுயில் ஏமப்பட்டாளோ மந்திரப் பட்டாளோ மாமாயன் மாதவன் வைகுந்தன் என்று என்று நாமம் பலவும் நவின்று

பரிசுத்தமான மாணிக்கங்களழுத்திச் சமைத்த மாளிகையில் நாற்புறமும் விளக்குகள் எரியவும் (அகில் முதலியவற்றின்) வாசனைப்புகைகள் மணம் வீசவும், மென்மையான படுக்கையின் மீது நித்திரை செய்யா நின்ற, அம்மான் பெண்ணே! மாணிக்கக் கதவினுடைய தாழ்ப்பாளை திறந்திடுவாயாக! அம்மாமீ! (உள்ளே உறங்குகிற) உன் மகளை எழுப்ப மாட்டீரோ? உன் மகளானவள் வாய்ப்புலன் இல்லாதவளோ! அல்லாமற் போனால் செவிப்புலன் இல்லாதவளோ! (அன்றி) பேருறக்கமுடையவளா யிருக்கின்றாளோ! (அன்றி) பெரிய படுக்கையில் காவலிடப்பட்டாளோ! (அன்றி) மந்திர வாதத்தினால் கட்டுப் படுத்தப்பட்டாளோ! அளவிறந்த ஆச்சரியச் செய்கைகளை யுடையவனே! 'திருமகள் கேள்வனே!' 'ஸ்ரீ வைகுண்ட நாதனே'! என்று பலகால் சொல்லி (எம்பெருமானுடைய) திருநாமங்கள் பலவற்றையும் (வாயாரக் கற்றோம்; (இனியாகிலும் உன் மகள் உணரலாகாதா?) ஏல் ஓர் எம்பாவாய்—.

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்! *
மாற்றமுந் தாராரோ வாசல் திறவாதார் *
நாற்றத் துழாய்முடி நாராயணன் * நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் * பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும் *
தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ *
ஆற்றவனந்தலுடையா யருங்கலமே *
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.

(10)

நோற்று சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய் வாசல் திறவாதார் மாற்றமும் தாராரோ நாற்றம் துழாய் முடி நாராயணன் நம்மால் போற்ற பறை தரும் புண்ணியனால் பண்டு ஒரு நாள் கூற்றத்தின் வாய் வீழ்ந்த கும்பகரணனும் தோற்று பெருந் துயில் உனக்கேதான் தந்தானோ ஆற்ற அனந்தல் உடையாய் அரு கலமே தேற்றம் ஆய்வந்து திற

நோன்பு நோற்று ஸுகாநுபவம் பண்ணுகின்ற அம்மே! வாசற்கதவைத் திறவாதவர்கள்ஒருவாய்ச்சொல்லுங்கொடுக்க மாட்டாரோ? நறு நாற்றம் வீசாநின்றுள்ள திருத்துழாய் மாலையை அணிந்துள்ள திருமுடியை யுடைய நாராயணனும், நம்மால் மங்களா சாஸனம் பண்ணப் பெற்றுப் புருஷார்த்தங்களைத் தந்தருள்பவனும் தர்மமே வடிவுகொண்டு வந்தாற் போன்றவனுமான இராமபிரானால் முன் ஒரு காலத்திலே யமன் வாயில் (இரையாக) விழுந்தொழிந்த கும்பகர்ணனும் தோல்வியடைந்து (தனது) பேருறக்கத்தை உனக்கே தான் கொடுத்துவிட்டானோ? மிகவும் உறக்கமுடையவளே! பெறுதற்கரிய ஆபரணம் போன்றவளே! தெளிந்து வந்து (கதவைத்) திறந்திடு; ஏல் ஓர் எம்பாவாய்—.

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும் *
குற்றமொன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே *
புற்றர வல்குற் புனமயிலே போதராய் *
சுற்றத்துத் தோழிமாரெல்லாரும் வந்து * நின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட *
சிற்றாதே பேசாதே செல்வப்பெண்டாட்டி * நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய். (11)

கன்று கறவை பல கணங்கள் கறந்து செற்றார் திறல் அழிய சென்று செரு செய்யும் குற்றம் ஒன்று இல்லாத கோவலர் தம் பொன் கொடியே புற்று அரவு அல்குல் புனம் மயிலே செல்வம் பெண்டாட்டி போதராய் வந்து நின் முற்றம் புகுந்து முகில் வண்ணன் பேர் பாட நீ சிற்றாது பேசாது உறங்கும் பொருள் எற்றுக்கு

கன்றாகிய பசுக்களினுடைய பல திரள்களை கறப்பவர்களும் சத்துருக்களினுடைய வலி அழியும்படி (தாமே படையெடுத்துச்) சென்று போர் செய்யுமவர்களும் ஒருவகைக் குற்றமும் அற்றவர்களுமான கோபாலர்களுடைய (குடியிற் பிறந்த) பொன்கொடி போன்றவளே! புற்றிலிருக்கிற பாம்பின் படம் போன்ற அல்குலையும், காட்டில் (இஷ்டப்படி திரிகிற) மயில் போன்ற சாயலையுமுடையவளே! செல்வமுள்ள பெண் பிள்ளாய்! (எழுந்து) வருவாயாக, நாங்கள் (திரண்டு) வந்து உனது (திருமாளிகையின்) முற்றத் தேறப் புகுந்து கார்மேகவண்ணனான கண்ணபிரானுடைய திருநாமங்களைப் பாடச் செய்தேயும் (பேருறக்கமுடைய) நீ சலியாமலும் (ஒன்று.) பேசாமலும் உறங்குவது என்ன பிரயோஜனத்திற்காகவோ? (அறியோம்) ஏல் ஓர் எம்பாவாய்—.

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி *
நினைத்து முலைவழியே நின்று பால்சோர *
நனைத்தில்லஞ் சேறாக்கும் நற்செல்வன் தங்காய் *
பனித்தலை வீழ நின் வாசற்கடை பற்றி *
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற *
மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய்திறவாய் *
இனித்தா னெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம் *
அனைத்தில்லத்தாரு மறிந்தேலோ ரெம்பாவாய். (12)

இள் கன்று எருமை கனைத்து கன்றுக்கு இரங்கி நினைத்து முலை வழியே நின்று பால் சோர இல்லம் நனைத்து சேறு ஆக்கும் நல் செல்வன் தங்காய் பனி தலை வீழ நின் வாசல் கடை பற்றி சினத்தினால் தென் இலங்கை கோமானை செற்ற மனத்துக்கு இனியானை பாடவும் நீ வாய் திறவாய் இனித் தான் எழுந்திராய் ஈது என்ன பேர் உறக்கம் அனைத்து இல்லத்தாரும் அறிந்து

இளங்கன்றுகளையுடைய எருமைகளானவை (பால் கறப்பார் இல்லாமையாலே) கதறிக்கொண்டு (தன்) கன்றின்மீது இரக்கமுற்று (கன்று ஊட்டுவதாக) நினைத்து (அந்நினைவினால்) முலை வழியால் இடைவிடாமல் பால் பெருக, (அப்பெருக்கினால்) வீட்டை (முழுதும்) ஈரமாக்கி சேறாகப் பண்ணுகையாகிற சிறந்த செல்வத்தையுடையவனுடைய தங்கையானவளே! பனியானது எங்கள் தலையிலே விழும்படி உனது மாளிகையின் வாசற்கடையை அவலம்பித்துக் கொண்டு, (பிராட்டியைப் பிரித்தான் என்னுஞ்) சீற்றத்தினால் தென்திசையிலுள்ள லங்காபுரிக்கு அரசனான இராவணனை கொன்றொழித்தவனும் சிந்தனைக்கு இனியனுமான இராமபிரானை (நாங்கள்) பாடா நிற்கச் செய்தேயும் நீ வாய் திறந்து பேசுகிறாயில்லை. எங்களாற்றாமையை அறிந்து கொண்ட பின்பாகிலும் எழுந்திரு; இஃது என்ன ஓயாத தூக்கம்? (இச்சேரியிலுள்ள) எல்லா வீட்டுக்காரர்களாலும் (நாங்கள் உன் மாளிகை வாசலில் திரண்டு நிற்கிறவிது) அறியப்பட்டதாயிற்று. ஏல் ஓர் எம் பாவாய்—

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லாவரக்கனை *
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய் *
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார் *
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று *
புள்ளுஞ் சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய்! *
குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே *
பள்ளிக்கிடத்தியோ பாவாய்நீ நன்னாளால் *
கள்ளந் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய். (13)

புள்ளின் வாய் கீண்டானை பொல்லா அரக்கனை கிள்ளி களைந்தானை கீர்த்திமை பாடி போய் பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம் புக்கார் வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று புள்ளும் சிலம்பின போது அரி கண்ணினாய் பாவாய் நீ நல் நாள் கள்ளம் தவிர்ந்து கலந்து குள்ளக் குளிர குடைந்து நீர் ஆடாதே பள்ளி கிடத்தியோ ஆல்

பறவையுருவம் பூண்டுவந்த பகாசுரனுடைய வாயைக்கீண்டெறிந்தவனும், கொடியனான இராவணனை முடித்து (அரக்கர் குலத்தை வேரோடு) களைந்தொழித்தவனுமான எம்பெருமானுடைய வீர சரிதங்களைப் பாடிக் கொண்டு சென்று எல்லாப் பெண்பிள்ளைகளும் நோன்பு நோற்பதர்காகக் குறிக்கப்பட்ட இடத்திற் புகுந்தனர்; சுக்ரோதயமாகி ப்ருஹஸ்பதி அஸ்தமித்தான். (அன்றியும்) பறவைகளும் (இரை தேடப் போன இடங்களில்) ஆரவாரஞ் செய்தன; புஷ்பத்தின் அழகைக் கொள்ளை கொள்ளாநின்ற கண்ணையுடையவளே! பதுமை போன்றவளே! நீ க்ருஷ்ணனும் நாமும் கூடுகைக்கு வாய்த்த காலமாகிய இந்த நல்ல நாளில் (க்ருஷ்ணனுடைய குண சேஷ்டிதங்களைத்தனியே நினைத்துக் கிடக்கையாகிற) கபடத்தை விட்டு எங்களுடன் கூடி உடம்பு வவ்வலிடும்படி குளத்திற்படிந்து ஸ்நானம் பண்ணாமல் படுக்கையிற் கிடந்துறங்கா நின்றாயோ! ஆச்சரியம்! ஏல் ஓர் எம் பாவாய்—.

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள் *
செங்கழுநீர் வாய்நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பினகாண்*
செங்கற் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர் *
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார் *
எங்களை முன்ன மெழுப்புவான் வாய்பேசும் *
நங்கா யெழுந்திராய் நாணாதாய் நாவுடையாய் *
சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன் *
பங்கயக்கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய். (14)

உங்கள்புழைக்கடைதோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பினசெங்கல் பொடி கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருகோயில் சங்கு இடுவான் போகின்றார் எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும் நங்காய் நாணாதாய் நா உடையாய் சங்கொடு சக்கரம் ஏந்தும் தட கையன் பங்கயம் கண்ணானை பாட எழுந்திராய்

உங்கள் (வீட்டுப்) புழைக்கடைத் தோட்டத்திலிருக்கிற தடாகத்திலுள்ள செங்கழுநீர்ப் பூக்களானவை விகஸிக்க, ஆம்பல் மலர்களின் வாய மூடிப்போயின; (அன்றியும்,) காவிப் பொடியில் (தோய்த்த) வஸ்திரங்களையும் வெளுத்த பற்களையுமுடையராய் தபஸ்விகளாயிருந்துள்ள ஸந்நியாஸிகள், தமது திருக்கோயில்களைத் திறவுகோலிட்டுத்திறக்கைக்காக போகாநின்றனர், முந்தி வந்து எழுப்புவதாகச் சொல்லிப்போன நங்கையே! ('சொன்னபடி எழுப்பவில்லையே!' என்னும்) வெட்கமுமில்லாதவளே! (இனிய பேச்சுப் பேசவல்ல) நாவைப் படைத்தவளே! சங்கையும் சக்கரத்தையும் தரியா நின்றுள்ள விசாலமான திருக்கைகளையுடையவனும் தாமரைபோற் கண்ணனுமான கண்ணபிரானை பாடுகைக்கு எழுந்திரு; ஏல் ஓர் எம் பாவாய்—.

எல்லே யிளங்கிளியே யின்ன முறங்குதியோ *
சில்லென் றழையேன்மின் நங்கைமீர் போதர்கின்றேன் *
வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும் *
வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக *
ஒல்லைநீ போதா யுனக்கென்ன வேறுடையை *
எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்தெண்ணிக்கொள் *
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை * மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்.

15)

இள கிளியே எல்லே இன்னம் உறங்குதியோ நங்கைமீர் போதர்கின்றேன் சில் என்று அழையேல்மின் வல்லை உன் கட்டுரைகள் உன் வாய்பண்டே அறிதும் நீங்களே வல்லீர்கள் நானே தான் ஆயிடுக நீ ஒல்லை போதாய் உனக்கு வேறு என்ன உடையை எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்து எண்ணிக் கொள் வல் ஆனை கொன்றானை மாற்றாரை மாற்று அழிக்க வல்லானை மாயனை பாட

இளமைதங்கிய கிளி போன்றுள்ளவளே! (இஃது) என்னே! இத்தனை பெண்பிள்ளைகள் திரண்டுவந்த பின்பும் தூங்குகின்றாயோ? (என்று உணர்த்த வந்தவர்கள் கேட்க;) பெண்காள்! (இதோ) புறப்பட்டு வருகிறேன்; சிலுகு சிலுசென்று அழையாதேயுங்கள்; (என்று உறங்குகிறவர்கள் விடைசொல்ல,) இளங்கிளியே!) (நீ வார்த்தை சொல்லுவதில்) வல்லமையுடையவள்; உனது கடுமையான சொற்களையும் உன் வாயையும் நெடுநாளாகவே நாங்கள் அறிவோம் (என்று உணர்த்தவந்தவர்கள் சொல்ல.) (இப்படிச்சொல்லுகிற) நீங்கள்தான் (பேச்சில்( வல்லமை யுடையீர் (அன்றேல்) (நீங்கள் சொல்லுகிறபடி) நான்தான் (வல்லவளாய்) ஆகக்கடவேன்; (உங்களுக்கு நான் செய்யவேண்டுவதென்? என்று உள்ளுறங்குமவள் கேட்க;) நீ சீக்கிரமாக எழுந்துவா; (தனியே) உனக்குமட்டும் (நீ) வேறு என்ன (அதிசயத்தை) உடையையாயிராநின்றாய்? (என்று உணர்த்தவந்தவர்கள் கேட்க;) (வரவேண்டியவர்கள்) எல்லாரும் வந்தனரோ? (என்று உறங்குமவள் கேட்க;) (எல்லோரும்) வந்தனர்; (நீ எழுந்துவந்து எண்ணிப் பார்த்துக்கொள்; (என்று உணர்த்தவந்தவர்கள் கூற,) (என்னை எதுக்காகவரச் சொல்லுகிறீர்களென்று உறங்குமவள் கேட்க;) (குவலயாபீட மென்னும்) வலிய யானையை கொன்றொழித்தவனும் சத்துருக்களான கம்ஸாதிகளை மிடுக்கு அழிந்தவர்களாகச்செய்தருள வல்லவனும் அற்புதனுமான கண்ணபிரானை பாடுகைக்காக (ஒல்லை நீ போதாய், என்றழைக்கிறார்கள்) ஏல் ஓர் எம் பாவாய்—.

* * *—எல்லாப் பெண்களுடைய திரட்சியையுங் காணக்கருதிக் கிடப்பாளொருத்தியை உணர்த்தும் பாசுரம், இது.

கீழ்ப் பத்துப்பாட்டிலும் நிகழ்ந்த வினாவிடைகள் இப்பாட்டில் வெளிப்படையாகக் காணப்படும். "புள்ளுஞ் சிலம்பினகாண்" என்ற பாட்டுத் தொடங்கிக் கீழ்ப்பரட்டளவுமுள்ள ஒன்பது பாட்டுக்களிலும் உணர்த்துமவர்களுடைய பாசுரமொன்றேயன்றி உறங்குமவளுடைய ஆக்ஷேபாதிரூபமான பாசுரமொன்றும் வ்யக்தமாகக் காணப்படவில்லை; அது, சொற்றொடை நோக்கி அவதாரிகையாக எடுத்துரைக்கத்தக்கது; இப்பாட்டிலோ வென்னில்;

முதலடி-உணர்த்துமவர்களின் பாசுரம்;
இரண்டாமடி-உறங்குமவளின் பாசுரம்,
மூன்றாமடி-உணர்த்துமவர் பாசுரம்;
நான்காமடி-உறங்குமவள் பாசுரம்;

ஐந்தாமடி-உணர்த்துமவர் பாசுரம்;
ஆறாமடியில், முற்கூறு-உறங்குமவள் பாசுரம்
மேல் முழுதும்-உணர்த்துமவர்பாசுரம், (15)

நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே * கொடித்தோன்றுந் தோரண
வாசல் காப்பானே * மணிக்கதவந் தாள் திறவாய் *
ஆயர் சிறுமியரோமுக்கு * அறை பறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான் *
தூயோமாய் வந்தோந் துயிலெழப் பாடுவான் *
வாயால் முன்ன முன்னம் மாற்றாதே யம்மா * நீ
நேச நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய். (15)

நாயகன் ஆய் நின்ற நந்தகோபனுடைய கோயில் காப்பானே கொடி தோன்றும் தோரணம் வாசல் காப்பானே மணி கதவம் தாள் திறவாய் ஆயர் சிறுமியரோமுக்கு மாயன் மணி வண்ணன் நென்னலே அறை பறை வாய் நேர்ந்தான் துயில் எழ பாடுவான் தூயோம் ஆய் வந்தோம் அம்மா முன்னம் முன்னம் வாயால் மாற்றாதே நேசம் நிலை கதவம் நீ நீக்கு

(எமக்கு) ஸ்வாமியாயிருக்கிற நந்தகோபருடைய திருமாளிகையை காக்குமவனே த்வஜபடங்கள் விளங்காநிற்கப்பெற்ற தோரணவாசலை காக்குமவனே! அழகிய கதவினுடைய தாழ்ப்பாளை திறக்கவேணும்; இளமை தங்கிய இடைப்பெண்களாகிய எமக்கு ஆச்சரியச் செயல்களையுடையவனும் நீலமணி போன்ற திருநிறத்தையுடையவனுமான கண்ணபிரான் நேற்றே ஒலி செய்யும் பறையைத் தருவதாக வாக்களித்தான்; (அவ்வெம்பெருமான்) துயிலினின்றும் எழுந்திருக்கும்படி பாடுகைக்காக பரிசுத்தைகளாய் (அடியோம்) வந்திருக்கின்றோம்; ஸ்வாமி! முதல் முதலிலே (உமது) வாயினால் மறுக்காதொழியவேணும்; (அன்றியும் (கண்ணபிரான் பக்கலில்) பரிவுற்றிருக்கும் நிலைமையையுடைய கதவை நீயே நீக்கவேணும், எல் ஓர் எம் பாவாய்—.

“ துயிலெழை பாடுவான் ” “ துயிலெடை பாடுவான் ” என்பன பாடபேதங்கள். (16)

அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும் *
எம்பெருமான் நந்தகோபாலா வெழுந்திராய் *
கொம்பனார்க் கெல்லாங் கொழுந்தே குலவிளக்கே *
எம்பெருமாட்டி யசோதா யறிவுறாய் *
அம்பர மூடறுத் தோங்கி யுலகளந்த *
உம்பர் கோமானே யுறங்கா தெழுந்திராய் *
செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா *
உம்பியும் நீயு முறங்கேலோ ரெம்பாவாய். (17)

அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும் எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய் கொம்பு அனார்க்கு எல்லாம் கொழுந்தே குலம் விளக்கே எம்பெருமாட்டி அசோதாய் அறிவுறாய் அம்பரம் ஊடு அறுத்து ஓங்கி உலகு அளந்த உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய் செம் பொன் கழல் அடி செல்வா பலதேவா உம்பியும் நீயும் உறங்கேல்

வஸ்த்ரங்களையே தீர்த்தத்தையே சோற்றையே தருமமாக அளிக்கின்ற எமக்குஸ்வாமியான நந்தகோபரே! எழுந்திருக்கவேணும்; வஞ்சிக்கொம்பு போன்ற மாதர்க்கெல்லாம் முதன்மையானவளே! (இக்) குலத்திற்கு (மங்கள) தீபமாயிருப்பவளே! எமக்குத் தலைவியானவளே! யசோதைப் பிராட்டியே! உணர்ந்தெழு; ஆகாசத்தை இடைவெளியாக்கிக்கொண்டு உயரவளர்ந்து (எல்லா) உலகங்களையும் அளந்தருளின தேவாதி தேவனே! (இனிக்) கண்வளர்ந்தருளாமல் எழுந்திருக்கவேணும்! சிவந்த பொன்னாற் செய்த வீரக்கழலை அணிந்துள்ள திருவடியை யுடைய சீமானே! பலதேவனே! உன் தம்பியாகிய கண்ணனும் நீயும் உறங்காதொழியவேணும்; எல் ஓர் எம் பாவாய்—.

உந்து மதகளிற்ற னோடாத தோள்வலியன் *
நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய் *
கந்தங் கமழுங் குழலீ கடைதிறவாய் *
வந்தெங்குங் கோழி யழைத்தனகாண் * மாதவிப்
பந்தல் மேற் பல்காற் குயிலினங்கள் கூவினகாண் *
பந்தார்விரலி யுன் மைத்துனன் பேர்பாட *
செந்தாமரைக்கையாற் சீரார் வளையொலிப்ப *
வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (18)

உந்து மதகளிற்றன் ஓடாத தோள் வலியன் நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய் கந்தம் கமழும் குழலீ கடை திறவாய் கோழி எங்கும் வந்து அழைத்தனகாண் மாதவி பந்தல் மேல் குயில் இனங்கள் பல்கால் கூவின காண் பந்து ஆர் விரலி உன் மைத்துனன் பேர் பாட சீர் ஆர் வளை ஒலிப்ப வந்து செம் தாமரை கையால் மகிழ்ந்து திறவாய்

(தன்னால் வென்று) தள்ளப்படுகிற மதயானைகளையுடையவனும் போர்க்களத்தில் முதுகு காட்டி) ஓடாத புஜபலத்தையுடையவனுமான நந்தகோபனுக்கு மருமகளானவளே! ஓ! நப்பின்னைப் பிராட்டியே! பரிமளம் வீசாநின்றுள்ள கூந்தலையுடையவளே! தாழ்ப்பாளைத் திறந்திடு; கோழிகளானவை எல்லா விடங்களிலும் பரவி கூவா நின்றனகாண்; (அன்றியும்), குருக்கத்திக் கொடிகளாலாகிய பந்தலின் மேல் (உறங்குகிற) குயிற் கூட்டங்கள் பல தடவை கூவா நின்றனகாண்; (க்ருஷ்ணனோடு விளையாடுகைக்கு உபகரணமான) பந்து பொருந்திய விரலையுடையவளே! உனது கணவனான கண்ணபிரானுடைய திருநாமங்களை (நாங்கள்) பாடும்படியாக சீர்மை பொருந்திய (உன்) கைவளைகள் ஒலிக்கும்படி (நடந்து) வந்து செந்தாமரை பூப்போன்ற (உன்) கையினால் (எங்கள் மீது) மகிழ்ச்சிகொண்டு (தாழ்ப்பாளைத்) திறந்திடு; ஏல் ஓர் எம் பாவாய்—.

குத்து விளக்கெரியக் கோட்டுக்காற் கட்டில்மேல் *
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி *
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய் *
மைத்தடங் கண்ணினாய் நீயுன் மணாளனை *
எத்தனைபோதுந் துயிலெழ வொட்டாய்காண் *
எத்தனையேலும் பிரிவாற்ற கில்லாயால் *
தத்துவமன்று தகவேலோ ரெம்பாவாய். (19)

குத்து விளக்கு எரிய கோடு கால் கட்டில் மேல் மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேல் ஏறி கொத்து அலர் பூகுழல் நப்பின்னை கொங்கை மேல் வைத்து கிடந்த மலர் மார்பா வாய் திறவாய் மை தட கண்ணினாய் நீ உன் மணாளனை எத்தனை போதும் துயில் எழ ஒட்டாய் எத்தனையேலும் பிரிவு ஆற்ற கில்லாய் ஆல் தகவு அன்று தத்துவம்

நிலைவிளக்குகளானவை (நாற்புறமும்) எரியா நிற்க, யானைத் தந்தங்களினாற் செய்த கால்களையுடைய கட்டிலிலே மெத்தென்றிருக்குமதாயும் (அழகு, குளிர்த்தி, மென்மை, பரிமளம், வெண்மை என்னும், ஐந்து குணங்களையுடையதுமான படுக்கையின் மீதேறி, கொத்துக் கொத்தாக அலர்கின்ற பூக்களை யணிந்த கூந்தலை யுடையளான நப்பின்னைப் பிராட்டியினுடைய திருமுலைத் தடங்களை தன்மேல் வைத்துக்கொண்டு பள்ளிகொள்கின்ற அகன்ற திருமார்பையுடைய பிரானே! வாய்திறந்து ஒரு வார்த்தை அருளிச் செய்யவேணும், மையிட்டு அலங்கரிக்கப்பெற்றதும் விசாலமுமான கண்ணை யுடைய நப்பின்னாய்! நீ உனக்குக் கணவனான கண்ணபிரானை ஒரு நொடிப்பொழுதும் படுக்கையை விட்டு எழுந்திருக்க ஒட்டுகிறாயில்லை; க்ஷணகாலமும் (அவனைப்) பிரிந்து தரித்திருக்க மாட்டுகிறாயில்லை; ஆ! ஆ!! (நீ இப்படி இருப்பது உனக்குத்) தகுதியன்று; (இஃது) உண்மை; ஏல் ஓர் எம் பாவாய்—.

முப்பத்து மூவ ரமரர்க்கு முன்சென்று *
கப்பந் தவிர்க்குங் கலியே துயிலெழாய் *
செப்பமுடையாய் திறலுடையாய் * செற்றார்க்கு
வெப்பங்கொடுக்கும் விமலா துயிலெழாய் *
செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல் *
நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய் *
உக்கமுந் தட்டொளியுந் தந்துன் மணாளனை
இப்போதே யெம்மை நீராட்டேலோ ரெம்பாவாய். (20)

முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே துயில் எழாய்
செப்பம் உடையாய் திறல் உடையாய்
செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா
செப்பு அன்ன மென் முலை செம் வாய்
சிறு மருங்குல் நப்பின்னை நங்காய் திருவே
உக்கமும் தட்டொளியும் உன் மணாளனை
தந்து எம்மை இப்போதே நீராட்டு

முப்பத்து முக்கோடி தேவர்கட்கு (துன்பம் வருவதற்கு) முன்னமே எழுந்தருளி (அவர்களுடைய) நடுக்கத்தை நீக்கியருளவல்ல மிடுக்கையுடைய கண்ணபிரானே! படுக்கையினின்றும் எழுந்தருள்; (ஆச்ரித ரக்ஷணத்தில்) ருஜுவாயிருக்குந் தன்மையை யுடையவனே; (பகைவர் மண்ணுண்ணும்படியான) வலிமை யுடையவனே! சத்துருக்களுக்கு (பயமாகிற) ஜ்வரத்தை கொடுக்கவல்ல பரிசுத்தஸ்வபாவனே! துயில் எழாய்—: பொற்கலசம் போன்ற விரஹம் பொறாத முலைகளையும் சிவந்த வாயையும் நுண்ணிதான இடையையு முடைய நப்பின்னைப் பிராட்டியே! ஸ்ரீமஹாலக்ஷ்மியே! துயில் எழாய்—: (துயிலெழுந்த பின்பு,) (நோன்புக்கு உபகரணமான) ஆலவட்டத்தையும் [விசிறியையும்] கண்ணாடியையும் உனக்கு வல்லபனான கண்ணபிரானையும் கொடுத்து (விரஹத்தால் மெலிந்த) எங்களை இந்த க்ஷணத்திலேயே நீராட்டக் கடவாய்; ஏல் ஓர் எம் பாவாய்—.

ஏற்ற கலங்க ளெதிர்பொங்கி மீதளிப்ப *
மாற்றாதே பால் சொரியும் வள்ளற் பெரும்பசுக்கள் *
ஆற்றப் படைத்தான் மகனே யறிவுறாய் *
ஊற்றமுடையாய் பெரியாய் * உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே துயிலெழாய் *
மாற்றாருனக்கு வலிதொலைந்துன் வாசற்கண் *
ஆற்றாது வந்துன் னடிபணியு மாபோலே *
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய். (21)

ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீது
அளிப்ப மாற்றாதே பால் சொரியும் வள்
ளல் பெரு பசுக்கள் ஆற்ற படைத்தான்
மகனே அறிவுறாய் ஊற்றம் உடையாய்
பெரியாய் உலகினில் தோற்றம் ஆய் நின்ற
சுடரே மாற்றார் உனக்கு வலிதொலைந்து
உன் வாசல் கண் ஆற்றாது வந்து உன்
அடி பணியும் ஆ போலே யாம் புகழ்ந்து
போற்றி வந்தோம்

(சுரந்தபாலை) ஏற்றுக்கொண்ட கலங்களானவை எதிரே பொங்கி மேலே வழியும்படியாக இடைவிடாமல் பாலைச் சுரக்கின்ற (பெண்களும் பேதைகளும் அணைத்துக் கொள்ளும்படி) நற்சீலத்தை யுடைய பெரிய பசுக்களை விசேஷமாகப் படைத்துள்ள நந்தகோபர்க்குப் பிள்ளையானவனே! திருப்பள்ளி யுணரவேணும்; (அடியாரைக் காப்பதில்) ச்ரத்தை யுடையவனே! பெருமை பொருந்தியவனே! (இவ்) வுலகத்திலே ஆவிர்ப்பவித்த தேஜோரூபியானவனே! துயில் எழாய்—; சத்துருக்கள் உன் விஷயத்தில் (தங்களுடைய) வலிமாண்டு [உபயோக மற்ற வலிவை யுடையராய்.] உன் மாளிகை வாசலில் கதியற்று வந்து உன் திருவடிகளில் சரணாகதி பண்ணிக் கிடப்பதுபோல் நாங்கள் (உன்னைத்) (துதித்து (உனக்கு) மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு உன் திருமாளிகை வாசலில்) வந்து சேர்ந்தோம்; ஏல் ஓர் எம்பாவாய்—.

அங்கண்மா ஞாலத் தரசர் * அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட்டிற்கிழே *
சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம் *
கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போலே *
செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ *
திங்களு மாதித்தியனு மெழுந்தாற்போல் *
அங்க ணிரண்டுங்கொ ண் டெங்கள்மேல் நோக்குதியேல் *
எங்கள்மேற் சாப மிழிந்தேலோ ரெம்பாவாய். (22)

அம் கண் மாஞாலத்து அரசர் அபிமான பங்கம் ஆய் வந்து நின் பள்ளி கட்டில் கீழே சங்கம் இருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம் கிங்கிணி வாய்ச் செய்த தாமரைபூ போலே செம் கண் சிறச் சிறிது எம் மேல் விழியாவோ திங்களும் ஆதித்தி யனும் எழுந்தால் போல் அம் கண் இரண் டும் கொண் டு எங்கள் மேல் நோக்குதி எல் எங்கள் மேல் சாபம் இழிந்து.

அழகியதாய் விசாலமாய்ப் பெரிதாயுள்ள பூமியில் (அர சாட்சிசெய்த ராஜாக்கள் (தங்களுடைய) அஹங்கார மடங்கி வந்து உன் சிங்காசனத்தின் கீழ் திரள்திரளாக இருப்பது போலே (நாங்களும் உன் இருப்பிடத் தேற) விடை கொண்டு கிட்டினேம்; கிண்கிணியின் வாய்போலிரா நின்ற (பாதி விகஸிதமான) செந்தாமரைப் பூப்போன்ற சிவந்த திருக்கண்கள் கொஞ்சங் கொஞ்சமாக எங்கள் மேலே விழிக் கமாட்டாவோ? சந்திரனும் ஸூர்யனும் உதித்தாற்போல அழகிய திருக்கண்களிரண்டினாலும் எங்களைக் கடாக்ஷித்த ருள்வாயாகில் எங்கள் பக்கலிலுள்ள பாபம் கழிந்து விடும்; ஏல் ஓர் எம் பாவாய்.

மாரி மலைமுழஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் *
சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து *
வேரி மயிர்பொங்க வெப்பாடும் பேர்ந்துதறி *
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு *
† போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா * உன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளி * கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து * யாம் வந்த
காரிய மாராய்ந் தருளேலோ ரெம்பாவாய் (23)

மாரி மலைமுழஞ்சில் மன்னி கிடந்து உறங் கும் சீரிய சிங்கம் அறிவுற்று தீ விழித்து வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி மூரி நிமிர்ந்து முழங்கி புறப்பட்டு போதரும் ஆ போலே பூவை பூ வண்ணா நீ உன் கோயில் நின்று இங்ஙனே போந்த ருளி கோப்பு உடைய சீரிய சிங்காசனத்து இருந்து யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்

மழை காலத்தில் மலையிலுள்ள குஹைகளில் (பேடையும் தானும் ஒருவஸ்து என்னலாம்படி) ஒட்டிக்கொண்டு கிடந்து உறங்காநின்ற (வீர்யமாகிற) சீர்மையுடைய சிங்கமானது உணர்ந்தெழுந்து நெருப்புப்பொறி பறக்கும்படி கண்களை விழித்து (ஜாதிக்கு உரிய) பரிமளமுள்ள உளைமயிர்களா னவை சிலும்பும்படி நாற்புறங்களிலும் புடைபெயர்ந்து [அசைந்து] (சரீரத்தை) உதறி சோம்பல் முறித்து கர்ஜனை பண்ணி வெளிப் புறப்பட்டு வருவது போல, காயாம் பூப் போன்ற நிறத்தை யுடைய பிரானே! நீ உன்னுடைய திருக்கோயிலினின்றும் இவ்விடத்தேற (ஆஸ்தானத்தில்) எழுந்தருளி அழகிய ஸந்நிவேசத்தையுடைய லோகோத்தர மான ஸிம்ஹாஸநத்தின் மீது எழுந்தருளியிருந்து நாங்கள் (மநோரதித்துக்கொண்டு) வந்த காரியத்தை விசாரித்து கிருபை செய்யவேணும். ஏல் ஓர் எம் பாவாய்.

அன்றிவ் வுலக மளந்தா யடிபோற்றி *
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி *
பொன்றச் சகட முதைத்தாய் புகழ் போற்றி *
கன்று குணிலா வெறிந்தாய் கழல்போற்றி *

---

* "போருமாபோலே" என்ற பாடம் எதுகையின்பத்திற்கு இயைந்திருக்குமென்பர் சிலர்; அது பொருத்தமுடைய பாடமேயாயினும் எங்கும் வழங்காத பாடமாதலாலும், "போதருமாபோலே" என்ற பாடத்தில் விசேஷ விரோதமில்லாமையாலும் முன்னோர்மொழிந்த முறையே கொண்டோம்.

குன்று குடையா வெடுத்தாய் குணம் போற்றி *
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி *
என்றென்றுன் சேவகமே யேத்திப் பறைகொள்வான் *
இன்றியாம் வந்தோ மிரங்கேலோ ரெம்பாவாய் (24)

அன்று இ உலகம் அளந்தாய் அடி போற்றி அங்கு சென்று தென் இலங்கை செற்றாய் திறல் போற்றி சகடம் பொன்ற உதைத்தாய் புகழ் கன்று குணிலா எறிந்தாய் கழல் குன்று குடையா எடுத்தாய் குணம் வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி என்று என்று உன் சேவகமே ஏத்தி யாம் இன்று பறை கொள்வான் வந்தோம் இரங்கு

(இந்திரன் முதலானவர்கள் மஹாபலியால் நலிவுபட்ட) அக்காலத்தில், இந்த லோகங்களை (இரண்டடியால் அளர்ந்தருளினவனே! (உன்னுடைய அத்) திருவடிகள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க; பிராட்டியைக் களவு கண்ட இராவணனிருக்குமிடத்தில் எழுந்தருளி (அவனுடைய பட்டணமாகிய அழகிய) லங்காபுரியை அழித்தருளினவனே! (உன்னுடைய) மிடுக்கு பல்லாண்டு வாழ்க; சகடாஸுரன் முடியும்படி (அச்சகடத்தை) உதைத்தருளினவனே (உன்னுடைய) கீர்த்தியானது போற்றி!—; கன்றாய் நின்ற அஸுரனை [வத்ஸாஸுரனை,] எறிதடியாகக் (கொண்டு) (கபித்தாஸுரன் மீது) எறிந்தருளினவனே! (உன்னுடைய) திருவடிகள் போற்றி!—; கோவர்த்தனகிரியை குடையாக தூக்கினவனே! (உன்னுடைய ஸௌசீல்ய ஸௌலப்யாதி) குணங்கள் போற்றி!—; (பகைவரை) ஜயித்து த்வேஷத்தை அழிக்கின்ற உனது திருக்கையிலுள்ள வேல் வாழ்க; என்றிப்படிப் பலவாறாக மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு உன்னுடைய வீர்யங்களையே புகழ்ந்து கொண்டு அடியோம் இப்போது பறைகொள்வதற்காக உன்னிடம் விடை கொண்டோம்; கிருபை பண்ணியருள்: ஏல் ஓர் எம் பாவாய்,

இன்று+யாம், இன்றியாம்; "யவ்வரினிய்யாம்" என்பது நன்னூல். (24)

ஒருத்தி மகனாய்ப் பிறந்து * ஓரிரவில்
ஒருத்தி மகனா யொளித்து வளர *
தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த *
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில் *
நெருப்பென்ன நின்ற நெடுமாலே * உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில் *
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி *
வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (25)

ஒருத்தி மகன் ஆய் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகன் ஆய் ஒளித்து வளர தான் தரிக்கிலான் ஆகி தீங்கு நினைந்த கஞ்சன் கருத்தை பிழைப்பித்து வயிற்றில்நெருப்பு என்ன நின்ற நெடுமாலே உன்னை அருத்தித்து வந்தோம்பறை தருதிஆகில்திருதக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து

தேவகிப் பிராட்டியாகிற ஒருத்திக்கு பிள்ளையாய் அவதரித்து அவதார காலமாகிய அந்த) ஒரு ராத்திரியில் (திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் வந்து சேர்ந்து) யசோதைப் பிராட்டியாகிற ஒருத்தியினுடைய பிள்ளையாக ஏகாந்தமாக வளருங் காலத்தில் தான் [கம்ஸன்] (அங்ஙனம் வளர்வதைப்) பொறாதவனாய் (இவனை எப்படியாகிலும் கொல்லவேணும் என்று) தீங்கை நினைத்த கம்ஸனுடைய எண்ணத்தை வீணாக்கி (அக்கஞ்சனுடைய) வயிற்றில் 'நெருப்பு' என்னும்படி நின்ற ஸர்வாதிகனான எம்பெருமானே! உன்னிடத்தில் (புருஷார்த்தத்தை) யாசியா நின்று கொண்டு வந்தோம்; எங்களுடைய மனோரதத்தைநிறைவேற்றித் தருவாயாகில் பிராட்டி விரும்பத்தக்க ஸம்பத்தையும் வீர்யத்தையும் நாங்கள் பாடி (உன்னைப் பிரிந்து படுகிற) துயரம் நீங்கி மகிழ்ந்திடுவோம்; ஏல் ஓர் எம்பாவாய்;—

மாலே மணிவண்ணா மார்கழி நீராடுவான் *
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல் *
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன *
பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன்னியமே *

போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே *
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே *
கோல விளக்கே கொடியே விதானமே *
ஆலி னிலையா யருளேலோ ரெம்பாவாய். (26)

மாலே மணி வண்ணா ஆலின் இலையாய் மார்கழி நீராடுவான் மேலையார் செய்வன ...ன் வேண்டுவன கேட்டி எல் ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன பால் அன்ன வண்ணத்து உன் பாஞ்ச சன்னியமே போல்வன சங்கங்கள் போய் பாடு உடை ...ன சால பெரு பறை பல்லாண்டு இசைப் ...ார் கோலம் விளக்கு கொடி விதானம் அருள்

(அடியார் பக்கலில்) வியாமோஹமுடையவனே! நீலமணி போன்ற வடிவை உடையவனே! (ப்ரளயகாலத்தில்) ஆலந் தளிரில் பள்ளிகொள்பவனே! மார்கழி நீராட்டத்திற்காக உத்தம புருஷர்கள் அனுஷ்டிக்கும் முறைமையில் வேண்டிய வற்றை கேட்கிறாயாகில்; (அவற்றைச் சொல்லுகிறோம்:) பூமியடங்கலும் நடுங்கும்படி ஒலிசெய்யக் கடவனவும் பால் போன்ற நிறமுடையதான உன்னுடைய ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை ஒத்திருப்பனவுமான சங்கங்களையும் மிகவும் இடமுடையனவும் மிகவும் பெரியனவுமான பறைகளையும் திருப்பல்லாண்டு பாடுமவர்களையும் மங்கள தீபங்களையும் த்வஜங்களையும் மேற்கட்டிகளையும் ப்ரஸாதித்தருளவேணும்; எல் ஓர் எம் பாவாய்

கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா * உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம் *
நாடு புகழும் பரிசினால் நன்றாக *
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே *
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம் *
ஆடையுடுப்போ மதன்பின்னே பாற்சோறு *
மூடநெய் பெய்து முழங்கை வழிவார *
கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். (27)

கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா உன் தன்னை பாடி பறை கொண்டு யாம் பெறு சம்மானம் நாடு புகழும் பரிசினால் சூடகம் தோள் வளை தோடு செவிப் பூ பாடகம் என்றனைய பல்கலனும் யாம் நன்றாக அணி வோம்; ஆடை உடுப்போம் அதன் பின்னே பால் சோறு மூட நெய்பெய்து முழங்கை வழி வார கூடி இருந்து குளிர்ந்து

தன் அடிபணியாதவர்களை வெல்லுகின்ற குணங்களையுடைய கண்ணபிரானே! உன்னை (வாயாரப்) பாடி (உன்னிடத்து யாம் வேண்டுகின்ற) பறையைப் பெற்று (பின்னும்) நாங்கள் பெறும் படியான ஸம்மாநமாவது:— நாட்டார் புகழும் படியாக (கையிலணியும் ஆபரணமான) சூடகங்களும் தோள் வளைகளும் (காதுக்கிடும் ஆபரணமான) தோடும் கர்ணப்பூவும் பாதகடகமும் என்று சொல்லப்படும் இவ்வாபரணங்கள் போன்ற மற்றும் பல ஆபரணங்களும் (உன்னாலும் நப்பின்னைப் பிராட்டியினாலும் பூட்டப்பட) யாம் நன்றாக அணிவோம்—, சேலைகளை (நீ உடுத்த) உடுத்துக்கொள்வோம்; அதற்குப் பின்பு, பாற் சோறானது [க்ஷீராந்நம்] மறையும் படியாக நெய் பரிமாறி முழங்கையால் வழியும்படியாக (உண்டு) (நீயும் நாங்களுமாகக்) கூடியிருந்து குளிரவேணும்; எல் ஓர் எம் பாவாய்—.

கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம் *
அறிவொன்று மில்லாத வாய்க்குலத்து * உன்றன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம் *
குறைவொன்று மில்லாத கோவிந்தா * உன்றன்னோ
டுறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது *
அறியாத பிள்ளைகளோ மன்பினால் * உன்றன்னைச்
சிறுபே ரழைத்தனவுஞ் சீறியருளாதே *
இறைவாநீ தாராய் பறையேலோ ரெம்பாவாய். (28)

யாம் கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்போம் அறிவு ஒன்றும் இல்லாத ஆய் குலத்து உன் தன்னை பிறவி பெறும் தனை புண்ணியம் உடையோம் இறைவா உன் தன்னோடு உறவு இங்கு நமக்கு ஒழிக்க ஒழியாது அறியாத பிள்ளைகளோம் உன் தன்னை அன்பினால் சிறு பேர் அழைத்தனவும் நீ சீறி அருளாதே பறை தாராய்

குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா:— நாங்கள் பசுக்களின் பின்னேபோய் காடு சேர்ந்து சரீரபோஷணமே பண்ணித்திரியு மவர்களாயும், சிறிதளவும் அறிவில்லாத இடைக்குலத்தில் உன்னை (ஸஜாதீயனாகப்) பெறுவதற்குத் தக்க புண்ணியமுடையவர்களாயுமிராநின்றோம்; ஸ்வாமியான கண்ணபிரானே! உன்னோடு (எங்களுக்குண்டான) உறவானது இங்கு உன்னாலும் எம்மாலும் ஒழிக்க ஒழியமாட்டாது. (லோகமரியாதை ஒன்றும்) அறியாத சிறு பெண்களான நாங்கள் உன்னை ப்ரீதியினாலே சிறிய பேராலே (நாங்கள்) அழைத்ததைக் குறித்தும் (ஆச்ரிதவத்ஸலனான) நீ கோபித்தருளாமல் பறை தந்தருளவேணும்;
ஏல் ஓர் எம்பாவாய்—.

சிற்றஞ் சிறுகாலை வந்துன்னைச் சேவித்து * உன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய் *
பெற்றம்மேய்த்துண்ணுங் குலத்திற் பிறந்(து)த நீ *
குற்றேவலெங்களைக் கொள்ளாமற் போகாது *
இற்றைப்பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா *
எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் * உன்றன்னோடு
உற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம் *
மற்றைநங்காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய். (29)

கோவிந்தா சிற்றஞ் சிறுகாலை வந்து உன்னை சேவித்து உன் பொன் தாமரை அடி போற்றும் பொருள் கேளாய் பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்த நீ எங்களை குற்றேவல் கொள்ளாமல் போகாது இற்றை பறை கொள்வான் அன்று காண் எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆள்செய்வோம் நம் மற்றை காமங்கள் மாற்று

கண்ணபிரானே! விடிகாலத்திலே (இவ்விடத்தேற) வந்து உன்னைத் தெண்டனிட்டு உனது அழகிய திருவடித் தாமரைகளை மங்களாசாஸநம் பண்ணுவதற்குப் பிரயோஜனத்தை கேட்டருளவேணும்; பசுக்களை மேய்த்து உண்ணும் இடைக்குலத்தில் பிறந்த நீ எங்களிடத்தில் அந்தரங்க கைங்கர்யத்தை திருவுள்ளம் பற்று தொழிய வொண்ணாது; இன்று (கொடுக்கப்படுகிறதைப்) பறையைப் பெற்றுக் கொள்வதற்காக நாங்கள் வந்தோமல்லோம்; காலமுள்ளவளவும் (உன்னுடைய) எவ் வவதாரங்களிலும் உன்னோடு உறவு உடையவர்களாகக் கடவோம்; உனக்கு மாத்திரமே நாங்கள் அடிமை செய்யக் கடவோம்; எங்களுடைய இதர விஷய விருப்பங்களை தவிர்த்தருளவேணும்; ஏல் ஓர் எம்பாவாய்.—

வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனை *
திங்கள் திருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி *
அங்கப்பறைகொண்டவாற்றை * அணிபுதுவைப்
பைங்கமலத் தண்டெரியற் பட்டர்பிரான்கோதைசொன்ன *
சங்கத்தமிழ்மாலை முப்பதுந்தப்பாமே *
இங்கிப்பரிசுரைப்பா ரீரிரண்டுமால்வரைத்தோள் *
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் *
எங்குந் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவய். (30)

வங்கக்கடல் கடைந்த மாதவனை கேசவனை திங்கள் திருமுகத்து சே இழையார் சென்று இறைஞ்சி அங்கு பறைகொண்ட அ ஆற்றை அணி புதுவை பைங்கமலம் தண் தெரியல் பட்டர் பிரான் கோதை சொன்ன சங்கம் தமிழ்மாலை முப்பதும்

கப்பல்களையுடைய திருப்பாற்கடலை (தேவர்களுக்காகக்) கடைந்த ச்ரிய:பதியான கண்ணபிரானை சந்திரன் போன்ற அழகிய முகத்தையும் செவ்விய ஆபரணங்களையுமுடைய ஆய்ச்சிகள் அடைந்து வணங்கி அத்திருவாய்ப்பாடியில் (தாங்கள்)புருஷார்த்தத்தைப் பெற்ற அந்த வ்ருத்தாந்தத்தை, அழகிய ஸ்ரீவில்லி புத்தூரில் (திருவவதரித்த) பசுமை பொருந்திய தாமரை மலர்களினாலான குளிர்ந்த மாலையையுடைய பெரியாழ்வாருடைய (திருமகளான) ஆண்டாள் அருளிச் செய்த, திரள் திரளாக அநுபவிக்க வேண்டிய தமிழ்மாலையாகிய இம் முப்பது பாசுரங்களையும் தப்பாமல் இங்கிலத்தில் இவ்வண்ணமாக ஓதுமவர்கள் பெரிய மலைபோன்ற நான்

தப்பாமே இங்கு இப்பரிசு உரைப்பார் ஈர் இரண்டுமால் வரை தோள் செங்கண் திரு முகத்து செல்வம் திருமாலால் எங்கும் திரு அருள்பெற்று இன்புறுவர். திருத்தோள்களையுடையனும் சிவந்த திருக்கண்களையுடைய திருமுகத்தையுடையனும், ஐச்வர்யத்தையுடையனும் ச்ரிய:பதியுமான எம்பெருமானாலே எவ்விடத்தும் (அவனுடைய) க்ருபையைப்பெற்றுப்ரஹ்ருஷ்டமானந்தசாலிகளாவர். எம்பாவாய்—.

அடிவரவு:—மார்கழி, வையம், ஓங்கி, ஆழி, மாயன், புள்ளும், கீசு, கீழ்வானம், தூமணி, நோற்று, கற்று, கனைத்து, புள், உங்கள், எல்லே, நாயகன், அம்பரம், உந்து, குத்து, முப்பது, ஏற்ற, அங்கண், மாரி, அன்றி, ஒருத்தி, பாலே, கூடாரை, கறவை, சிற்றம், வங்கம், தை.

---

## திருப்பாவையில் ஆறு முதல் பதினைந்து வரையிலுள்ள பாசுரங்களின்

## ஸ்வாபதேசார்த்த ஸங்க்ரஹம்.

திருப்பாவையில் ஆறாவது பாசுரந் தொடங்கிப் பதினைந்தாவது பாசுரத்தளவும் பத்துப் பாசுரங்களினால் ஆண்டாள் தன்னுடைய திருத்தகப்பன்மார்களான ஆழ்வார்கள் பதின்மரையும் திருப்பள்ளியுணர்த்துகிறாளென்பது பெரியோர் நிர்வஹித்துப்போரும் ஒரு பரம ரஸ்ய ரஹஸ்ய விசேஷார்த்தம். ஆழ்வார்களை எந்த அடைவில் ஆண்டாள் பேசியிருக்கின்றாளென்னில், தன்னைப் பெற்றெடுத்து வளர்த்த பெரியாழ்வார் தொடங்கி அவரோஹணக் கிரமமாகப் பொய்கையாழ்வாரளவுஞ் சென்று, அவ் வேழு திருநாமங்களையும் ஏழு பாசுரங்களினாலுணர்த்தி, பிறகு தன் காலத்திற்குப் பின்பு திருவவதரிக்கப்போகின்ற அன்பர்தாள்தூளி, நற்பாணன், நன்கலியன் என்ற மூன்று ஆழ்வார்களையும் அகக்கண்ணினாலுணர்ந்து அவர்களை மூன்று பாசுரங்களினால் அடைவே உணர்த்தித் தலைக்கட்டுகிறாள்.

ஆகவே ஆழ்வார்கள் திருப்பள்ளியெழுச்சியான இப்பத்துப் பாசுரங்களில் ஒவ்வொரு பாசுரத்தில் ஒவ்வொரு ஆழ்வார்க்குண்டான சொற்பொருத்தம், பொருட்பொருத்தம் முதலியன ஈண்டுச்சுருக்கமாக நிரூபிக்கப்படுகின்றன.

1. புள்ளுஞ் சிலம்பினகாண்—இது பெரியாழ்வாரைத் திருப்பள்ளியுணர்த்தும் பாசுரம். பிள்ளாய்! என்பது இதில் விளி. அறிவில்லாதவனைப் பிள்ளையென்பது. எம்பெருமானுடைய ஸர்வரக்ஷகத்வம் முதலிய திருக்குணங்களை மறந்தே இவ்வாழ்வார் மங்களாசாஸநத்தில் ஒருப்பட்டாராதலால் பிள்ளையென்னத் தகுதியுடையாராயினர். "ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்ற ஸ்ரீ வசநபூஷண திவ்ய ஸூக்தியும் மங்களாசாஸநத்திற்கு அஜ்ஞானத்தையே மூலமாகக் காட்டிற்று. இவ்வாழ்வார் பெரும்பாலும் நந்தவனத்திலேயே போது போக்குவாராதலால் அவ்விடத்து அடையாளமாகிய 'புட்களின் சிலம்புதல்' முன்னே கூறப்பட்டது. புள்ளரையன் என்று பெரியதிருவடியின் ப்ரஸ்தாவம்செய்திருப்பதில் இப்பெரியாழ்வார் பெரியதிருவடியின் அம்சமாகத் திருவவதரித்தவர் என்று குருபரம்பரா ப்ரபாவாதிகளிற் கூறியுள்ள விஷயம் முத்ராலங்காரரீதியில் ஸூசிதமாகிறது.

'வெள்ளை விளிசங்கு' என்கிற சொல்தொடர் முதன் முதலாகப் பெரியாழ்வாருடைய திருவாக்கில் தோன்றியது. (பெரியாழ்வார் திருமொழி 4—1—7 காண்க.) அதனை இங்கு அநுவதித்துக் காட்டுவது ஒரு வகையான லிங்கம். [பேய்முலை நஞ்சுண்டு] பெரியாழ்வார் திருமொழியில் (சீதக்கடலில்) கண்ணபிரானுடைய சரித்திரங்களில் பேய்முலை நஞ்சுண்ட கதை முதன்முதலாக அநுஸந்திக்கப்பட்டது. "பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்துண்டிட்டு" என்றது காண்க. மறுபடியும் அந்தச் சரித்திரத்தை அநுஸந்திக்கையில் சகடாஸுரபங்கத்தையும் கூட்டி யநுஸந்தித்தார். "தாள்களைஎார் நாலைந்து" என்ற பாசுரங் காண்க. அதற்குப் பொருந்த இங்கு "பேய்முலை நஞ்சுண்டு கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி" என்றது. "வெள்ளத்தரவில்" என்று தொடங்கிப் பெரியாழ்வார்க்குள்ள 'விஷ்ணுசித்தர்' என்னுந் திருநாமமும் அதற்கு விவரணமான "அரவத்தமளியினோடும்" "பணிக்கடலில் பள்ளிகோளை" என்ற பாசுரங்களின் தாற்பரியமும் நன்கு ஸூசிதம்.

2. கீசுகீசென்றெங்கும்.—இது, பெரியாழ்வார்க்கு அடுத்த முந்தினவரான குலசேகராழ்வாரையுணர்த்தும் பாசுரம். பேய்ப்பெண்ணே!, நாயகப் பெண்பிள்ளாய்!, தேசமுடையாய்!, என்ற மூன்று விளிகளும் குலசேகராழ்வாரை வற்புறுத்துவன. பெருமாள் திருமொழியில் *மெய்யில் வாழ்க்கையை*

சடரே உன்மேனி சொல் ஆர நின்று ஏத்தி வாழ்த்தி சொப்பட

திருமேனியை சொல் நிறையும்படி நின்று ஸ்தோத்ரஞ்செய்து மங்களாசாஸநஞ் செய்து நன்றாக காப்பு இட வாராய்—.

கஞ்சன் கறுக்கொண்டுநின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை *
வஞ்சிப்பதற்குவிடுத்தான் என்பதோர்வார்த்தையுமுண்டு *
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறைநின்றாய் *
அஞ்சுவன்நீயங்குநிற்க அழகனேகாப்பிடவாராய். (6)

மஞ்சு தவழ் மணிமாடம் மதிள் கஞ்சன் நின்மேல் கறுக்கொண்டு கரு நிறம் செம்மயிர் பேயை வஞ்சிப்பதற்கு விடுத்தான் என்பது ஓர் வார்த்தையும் உண்டு நீ அங்கு நிற்க அஞ்சுவன்

மேகங்கள் ஊர்ந்து செல்கின்ற ரத்நமயமான வீடுகளையும் மதிலையுமுடைய திரு வெள்ளறை(யில்) நின்றாய்—. 'கம்ஸனானவன் உன்மேல் கோபங்கொண்டு கரு நிறத்தையும் செம்பட்ட மயிரையுமுடைய பூதனையை (உன்னை) வஞ்சனையாகக் கொல்வதற்கு அனுப்பினான்' என்பதான ஒரு சொல்லும் கேட்டிருப்பதுண்டு, (ஆதலால்) நீ அவ்விடத்திலே நிற்பதற்கு நான் அஞ்சா நின்றேன்; அழகனே! காப்பு இட வாராய்—.

கள்ளச்சகடுமருதும் கலக்கழியவுதைசெய்த *
பிள்ளையரசேநீபேயைப்பிடித்து முலையுண்டபின்னை *
உள்ளவாறொன்றுமறியேன் ஒளியுடைவெள்ளறைநின்றாய் *
பள்ளிகொள்போதிதுவாகும் பரமனேகாப்பிடவாராய். (7)

கள்ளம் சகடும் மருதும் கலக்கு அழிய உதை செய்த பிள்ளை அரசே நீ பேயை முலை பிடித்து உண்ட பின்னை உள்ள ஆறு ஒன்றும் அறியேன் இது பள்ளி கொள் போது ஆகும்

வஞ்சனையையுடைய சகடாஸுரனையும் யமளார்ஜுநங்களையும் (வடிவம்) கட்டுக்குலைந்தழியும்படி (திருவடிகளால்) உதைத்துத் தள்ளிய பிள்ளைத் தன்மையைக் கொண்ட பெருமையனே! நீ பூதனையினுடைய முலையைப் பிடித்து (வாய் வைத்து) உண்டபின்பு உள்ளபடி ஒன்று மறிகிறேனில்லை; ஒளி உடை வெள்ளறை நின்றாய்!—. இப்போது படுத்து உறங்குகிற வேளையாகும்; பரமனே! காப்பு இடவாராய்—.

இன்பமதனையுயர்த்தாய் இமையவர்க்கென்றுமரியாய் *
கும்பக்களிறட்டகோவே கொடுங்கஞ்சன்நெஞ்சினிற்கூற்றே *
செம்பொன்மதிள்வெள்ளறையாய் செல்வத்தினால்வளர்பிள்ளாய் *
கம்பக்கபாலிகாணங்குக் கடிதோடிக்காப்பிடவாராய். (8)

இன்பம் அதனை உயர்த்தாய் இமையவர்க்கு என்றும் அரியாய் கும்பம் களிறு அட்ட கோவே கொடு கஞ்சன் நெஞ்சினில் கூற்றே செல்வத்தினால் வளர் பிள்ளாய் அங்கு கம்பம் கபாலி காண் கடிது ஓடி

(உன் குணசேஷ்டிதங்களால்) பரமாநந்தத்தை (எனக்கு) மேன் மேலுண்டாக்கினவனே! தேவர்களுக்கு எந்நாளும் அருமையானவனே! மஸ்தகத்தையுடைய குவலயாபீடயானையை கொன்ற ஸ்வாமியே! கொடுமைதங்கிய கம்ஸனுடைய மநஸ்ஸிலே யமன் போல் பயங்கரனாய்த் தோன்றுமவனே! செம்பொன் மதிள் வெள்ளறையாய்!— செல்வச் செருக்கோடு வளர்கின்ற குழந்தாய்! நீ இருக்கிறவிடத்தில் (கண்டார்க்கு) நடுக்கத்தை விளைக்கவல்ல துர்க்கையாகும்; (ஆகையால் அங்கு நில்லாமல்) மிகவும் விரைந்தோடி காப்பு இட வாராய்—.

இருக்கொடுநீர்சங்கிற்கொண்டிட்டு எழில்மறையோர்வந்துநின்றார் *
தருக்கேல்நம்பிசந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள் *
திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறைநின்றாய் *
உருக்காட்டுமந்திவிளக்கு இன்றொளிகொள்ளவேற்றுகேன்வாராய். (9)

இருக்கொடு நீர் சங்கில் கொண்டிட்டு எழில் மறையோர் வந்து நின்றார் நம்பி சந்தி நின்று தருக்கேல் சில நாள் தாய் சொல்லு கொள்ளாய் தேசு உடை இன்று நான் திரு காப்பு உன்னை சாத்த உரு காட்டும் அந்தி விளக்கு ஒளி கொள்ள ஏற்றுகேன் வாராய்

(புருஷஸூக்தம் முதலிய) ருக்குக்களைச் சொல்லிக் கொண்டு தீர்த்தத்தை சங்கத்திலே கொணர்ந்து விலக்ஷணரான ப்ராஹ்மணர் (உனக்கு ரக்ஷையிடுவதற்கு) வந்து நிற்கிறார்கள்; தீம்பு நிறைந்தவனே! நாற்சந்தியிலே நின்று செருக்கித்திரியாதே; சிலகாலம் தாய் வார்த்தையை கேட்பாயாக. தேஜஸ்ஸை உடைய வெள்ளறை நின்றாய்!—இப்போது நான் அழகிய ரக்ஷையை உனக்கு இடுதற்காக உன் திருமேனி வடிவத்தைக் காட்டுகின்ற அந்த விளக்கை ஒளியையுடையதாக ஏற்றுவேன்; (இதைக்காண கடுக வருவாயாக.)

போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்றன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. (10)

மாதர்க்கு உயர்ந்த அசோதை மகன் தன்னை காப்பு இட்ட மாற்றம் போது அமர் செல்வம் கொழுந்து புணர் திரு வெள்ளறையானை வேதம் பயன் கொள்ளவல்ல விட்டுசித்தன் சொன்ன மாலை பாதம் பயன் கொள்ளவல்ல பத்தர்உள்ளார் வினைபோம்

ஸ்த்ரீகளுள்சிறந்த யசோதைப்பிராட்டி தன்புத்ரனான கண்ணனை ரக்ஷையிட அழைத்த வார்த்தையை தாமரைப்பூவைப் (பிறப்பிடமாகப்) பொருந்திய செல்வத்திற்கு உரியவளாய் மற்றைத் தேவியரிற் சிறந்தவளான பிராட்டி ஸம்ச்லேஷிக்கப் பெற்ற திருவெள்ளறையில் நின்றருளியவனைப் பற்றி—, (எம்பெருமானுக்கு மங்களாசஸநம் செய்கையே) வேததாத்பர்யமாக அறியவல்ல பெரியாழ்வார் அருளிச்செய்த பாமாலையினுடைய ஓரடி கற்றதனாலாகிய பயனை அடையவல்ல பக்தராக உள்ளவரது வினைகளெல்லாம் கழிந்துவிடும்.

அடிவரவு:—இந்திரன் கன்று செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளம் இன்பம் இருக்கு போதமர் வெண்ணெய்.

---

## [பெரியாழ்வார் திருமொழி முடிவு பதிகம்] சென்னியோங்கு

நித்தியாநுஸந்தானத்திற்குப் பெரியாழ்வாருடைய திவ்யப்பிரபந்தமே முதன்மையாகக் கொள்ளப்பட்டதனால் அதன் முடிவு திருமொழியாகிய இப்பதிகமும் சேர்த்து அநுஸந்திக்கப்பட்டு வருகிறது.

சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய் * உலகு
தன்னைவாழநின்றநம்பீ தாமோதராசதிரா *
என்னையுமென்னுடைமையையும் உன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு *
நின்னருளேபுரிந்திருந்தேன் இனியென்திருக்குறிப்பே. (1)

சென்னி ஓங்கு தண் திரு வேங்கடம் உடையாய் உலகு தன்னை வாழ நின்ற நம்பி தமோதரா சதிரா என்னையும் என் உடைமையையும் உன் சக்கரப் பொறி ஒற்றிக் கொண்டு நின் அருளே புரிந்திருந்தேன் இனி திருக்குறிப்பு என்

கொடுமுடியானது (ஆகாசத்தளவும்) உயர்ந்திருக்கப் பெற்ற குளிர்ந்த திருவேங்கடமலையை (இருப்பிடமாக) உடையவனே! உலகத்தவர்களை வாழ்விப்பதற்காக எழுந்தருளியிராநின்ற (கல்யாண குணங்களால்) நிறைந்தவனே! தாமோதரனே! (அடியாருடைய குற்றத்தைக் கண்ணெடுத்துப் பாராத) சதிரையுடையவனே! எனது ஆத்துமாவுக்கும் என் உடைமையான சரீரத்திற்கும் உன்னுடைய ஸுதர்சனாழ்வானுடைய திரு விலச்சினையை இடுவித்து உன்னுடைய கருணையையே (ஸ்வயம் ப்ரயோஜநமாக) விரும்பி யிராநின்றேன்; இப்படியான பின்பு திருவுள்ளக்கருத்து எதுவா யிருக்கின்றது?

பறவையேறுபரம்புருடா நீயென்னைக்கைக்கொண்டபின் *
பிறவியென்னுங்கடலும்வற்றிப் பெரும்பதமாகின்றதால் *
இறவுசெய்யும்பாவக்காடு தீக்கொளீஇவேகின்றதால் *
அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றிவாய்க்கொண்டதே. (2)

பறவை ஏறு பரம்புருடா நீ என்னை கைக் கொண்டபின் பிறவி என்னும் கடலும் வற்றி பெரும்பதம் ஆகின்றது இறவு செய்யும் பாவம் காடு தீக் கொளீஇ வேகின்றது அறிவை என்னும் அமுதம் ஆறு தலைப்பற்றி வாய்க் கொண்டது

பெரிய திருவடிமேல் ஏறுமவனான புருஷோத்தமனே! (ஸர்வ ரக்ஷகனான) நீ (வேறு கதியற்ற) என்னை ஆட்படுத்திக் கொண்டபிறகு ஸம்ஸாரமாகிற ஸமுத்ரமும் வறண்டுபோய் (அதனால்) பெரிய தரம் பெற்றதாகிறது; (இவ்வாத்துமாவை) முடிக்கிற பாபஸமூஹமானது நெருப்புப்பட்டு வெந்திட்டது; ஞானமாகிற அம்ருதநதியானது மேன்மேலும் பெருகிச்செல்லாநின்றது.

எம்மனாவென்குலதெய்வமே யென்னுடைநாயகனே *
நின்னுளேனாய்ப்பெற்றநன்மை யிவ்வுலகினிலார்பெறுவார் *
நம்மன்போலேவீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ளபாவமெல்லாம் *
சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே. (3)

எம் மனா என் குல தெய்வமே என்னுடைய நாயகனே நின்னுளேன் ஆய் பெற்ற நன்மை இ உலகினில் ஆர் பெறுவார்? நம்மன் போலே வீழ்த்து அமுக்கும் நாட்டில் உள்ள பாவம் எல்லாம் சும்மெனாது கைவிட்டு ஓடி தூறுகள் பாய்ந்தன

எமக்குத் தலைவனே! என் குடிக்குப் பரதேவதையானவனே! எனக்கு நாதனானவனே! (அடியேன்) உன் அபிமாநத்தில் ஒதுங்கினவனாய் பெற்ற நன்மையை இந்த உலகத்தினுள் மற்ற யார்தான் பெறுவர்? (பூதப்ரேத பிசாசங்களைப்போல்) (உருத் தெரியாமல் ஒளிந்து வந்து) கீழேதள்ளி மேலே அமுக்கா நின்றுள்ள உலகத்திலுள்ள எல்லாருடைய பாவங்களும் மூச்சுவிடவும் மாட்டாமல் ஸவாஸநமாக விட்டுட்டு ஓடிப்போய் புதர்களில்ஒளிந்துகொண்டன.

கடல்கடைந்தமுதங்கொண்டு கலசத்தைநிறைத்தாற்போல் *
உடலுருகிவாய்திறந்து மடுத்துன்னைநிறைத்துக்கொண்டேன் *
கொடுமைசெய்யுங்கூற்றமும் என்கோலாடிகுறுகப்பெறா *
தடவரைத்தோள்சக்கரபாணீ சார்ங்கவிற்சேவகனே. (4)

தடவரை தோள் சக்ரபாணீ சார்ங்கம் வில் சேவகனே கடல் கடைந்து அமு

பெரிய மலைபோன்ற தோள்களையுடையவனும் திருவாழி யாழ்வானைத் திருக்கையி லுடையனுமானவனே! சார்ங்கத்தை வில்லாகக் கொண்ட வீரனே! திருப்பாற்

தம் கொண்டு கலசத்தை நிறைத்தது போல் உடல் உருகி வாய் திறந்து உன்னை மடுத்து நிறைத்துக் கொண்டேன் கொடுமை செய்யும் கூற்றமும் என் கோல் ஆடி குறுக பெறு

கடலை (மந்தர மலையாகிற) மத்தினால் கடைந்து (அக்கடலினின்றும்) அம்ருதத்தை யெடுத்து கலசத்தில் (நீ) நிறைத்தது போல (அடியேன்) உடல் உருவப் பெற்று வாயைத் திறந்து கொண்டு (ஆராவமுதமாகிய) உன்னை உட்கொண்டு தேக்கிக் கொண்டேன்; (இனி,) கொடிய தண்டங்களை நடத்துமவனான யமனும் எனது செங்கோல் செல்லு மிடங்களில் அணுகவல்லவனல்லன்.

பொன்னைக்கொண்டுரைகல்மீதே நிறமெழவுரைத்தாற்போல் *
உன்னைக்கொண்டென்னாவகம்பால் மாற்றின்றியுரைத்துக்கொண்டேன் *
உன்னைக்கொண்டென்னுள்வைத்தேன் என்னையுமுன்னிலிட்டேன் *
என்னப்பாவென்னிருடீகேசா என்னுயிர்காவலனே. (5)

என் அப்பா இருடீகேசா என் உயிர் காவலனே பொன்னை நிறம் எழ உரை கல்மீது கொண்டு உரைத்தால் போல் உன்னை என் நா அகம் பால் கொண்டு மாற்று இன்றி உரைத்துக் கொண்டேன். உன்னை என்னுள் கொண்டு வைத்தேன் என்னையும் உன்னில் இட்டேன்.

எனக்குத் தந்தையானவனே! எனது இந்திரியங்களை (உன் வசப்பட்டொழுகும்படி) நியமிக்க வல்லவனே!) என் ஆத்மாவை (அந்யசேஷ மாகாதபடி) காக்க வல்லவனே! ஸுவர்ணத்தை நிறமறிய [நிறத்தைப் பரீக்ஷிப்பதற்காக] உரைகல்லில் இட்டு உரைப்பதுபோல (பரமபோக்யனான) உன்னை என்நாவினுட் கொண்டு மாற்று அழியும்படி உரைத்துக் கொண்டேன். (யோகிகட்கும் அரியனான) உன்னை என் நெஞ்சினுள் அமைத்தேன்; (நீசனான) அடியேனையும் உனக்குச் சேஷப்படுத்தினேன்.

உன்னுடையவிக்கிரமம் ஒன்றொழியாமலெல்லாம் *
என்னுடையநெஞ்சகம்பால் சுவர்வழியெழுதிக்கொண்டேன் *
மன்னடங்கமழுவலங்கைக்கொண்ட இராமநம்பீ *
என்னிடைவந்தெம்பெருமான் இனியெங்குப்போகின்றதே. (6)

மன் அடங்க மழு வலம் கை கொண்ட இராமன் நம்பீ உன்னுடைய விக்கிரமம் ஒன்று ஒழியாமல் எல்லாம் என்னுடைய நெஞ்சகம் பால் சுவர்வழி எழுதிக் கொண்டேன் எம்பெருமான் என்னிடை வந்து இனி போகின்றது எங்கு

(துஷ்ட) க்ஷத்திரியர்கள் அழியும்படி மழு என்னும் ஆயுதத்தை வலக்கையில் ஏந்தியிரா நின்றுள்ள பரசுராமனாய்த் திருவவதரித்த குணபூர்த்தியை யுடையவனே! உன்னுடைய வீரச் செயல்களில் ஒன்று தப்பாமல் எல்லாவற்றையும் என்னுடைய நெஞ்சினுள்ளே சுவரில் சித்திர மெழுதுவது போல எழுதிக் கொண்டேன்; எமக்குத் தலைவனே! என் பக்கலில் எழுந்தருளி இனிமேல் போவதானது வேறு எவ்விடத்தைக் குறித்து?

பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல் *
திருப்பொலிந்தசேவடி யென்சென்னியின்மேற்பொறித்தாய் *
மருப்பொசித்தாய்மல்லடர்த்தாய் என்றென்றுன்வாசகமே *
உருப்பொலிந்தநாவினேனை உனக்குரித்தாக்கினையே. (7

பருப்பதத்து கயல் பொறித்த பாண்டியர் குல பதி போல் திரு பொலிந்த சே அடி என் சென்னியின் மேல்

மஹாமேரு பர்வதத்தில் (தனது) மகரகேதுவை நாட்டின பாண்டிய வம்சத்து அரசனைப்போல். அழகு விளங்கா நின்றுள்ள செந்தாமரைமலர் போன்ற திருவடிகளை என் தலையின்மீது (அடையாளமாக

பொறித்தாய் என்று மருப்பு ஒசித்தாய் என்று மல் அடர்த்தாய் என்று உன் வாசகமே உரு பொலிந்த நாவினேனை உனக்கு உரித்து ஆக்கினையே

நாட்டியருளினவனே! என்றும், (குவலயாபீடத்தின்) கொம்பை முறித்தவனே! என்றும், மல்லரை நிரஸித்தவனே! என்றும் (இவ்வாறுன) உனது செயல்களுக்கு வாசகமான திருநாமங்களின் அநுஸந்தானத்திறைலேயே தழும்பேறின நாக்கையுடைய அடியேனை உனக்கு அநந்யார்ஹசேஷனுக ஆக்கிக்கொண்டாயே.

அனந்தன் பாலுங்கருடன்பாலும் ஐதுநொய்தாகவைத்து * என்
மனந்தனுள்ளேவந்துவைகி வாழச்செய்தாயெம்பிரான் *
நினைந்தெனுள்ளேநின்றுநெக்குக் கண்களசும்பொழுக *
நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேன் நேமிநெடியவனே. (8)

நேமி நெடியவனே எம் பிரான் அனந்தன்பாலும் கருடன் பாலும் ஐது நொய்து ஆகவைத்துஎன்மனம்தன்உள்ளே வந்து வைகி வாழ செய்தாய் என் உள்ளே நினைந்துநின்று நெக்குகண்கள் அசம்புஒழுக நினைந்து இருந்தே சிரமம் தீர்ந்தேன்

திருவாழியாழ்வானையுடைய ஸர்வாதிகனே எனக்குப் பரமோபகாரகனுனவனே! திருவனந்தாழ்வானிடத்திலும் பெரிய திருவடியினிடத்திலும் (அன்பை) மிகவும் அற்பமாக வைத்து எனது ஹ்ருதயத்தினுள்ளே வந்து பொருந்தி (என்னை) வாழ்வித்தருளினுய்; (இப்படி வாழ்வித்த உன்னை) என்நெஞ்சில் அநுஸந்தித்துக் கொண்டு (அதனுல்) நெஞ்சு சிதிலமாகப் பெற்று கண்களினின்றும் நீர் பெருகும்படி நீசெய்த நன்றிகளை) அநுஸந்தித்துக்கொண்டே இளைப்பாறப் பெற்றேன்.

பனிக்கடலிற்பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்து * என்
மனக்கடலில்வாழவல்ல மாயமணாளநம்பீ *
தனிக்கடலேதனிச்சுடரே தனியுலகேயென்றென்று *
உனக்கிடமாயிருக்க என்னையுனக்குரித்தாக்கினையே. (9)

பனிகடலில் பள்ளிகோளை பழக விட்டு ஓடி வந்து என் மனம் கடலில் வாழ வல்ல மாயம் மணாள நம்பீ தனி கடல் என்று தனி சுடர் என்று தனி உலகு என்று உனக்கு இடம் ஆய் இருக்க என்னை உனக்கு உரித்து ஆக்கினையே

குளிர்ந்த திருப்பாற்கடலில் பள்ளிகொள்ளுதலை பழகியதாக விட்டு (மறந்து விட்டு) (அங்கு நின்றும்) ஓடிவந்து என்னுடைய ஹ்ருதயமாகிற கடலில் வாழ வல்லவனும் ஆச்சரிய சக்தியை யுடையவனும் (பெரிய பிராட்டியார்க்குக்) கணவனும் குணபூர்ணனுமான எம்பெருமானே! ஒப்பற்றதிருப்பாற்கடலென்றும் ஒப்பற்ற ஆதித்ய மண்டலமென்றும் ஒப்பற்ற பரமபதமென்றும் (சொல்லப்படுகிற இவை) உனக்கு (ஏற்ற) வாஸஸ்தானமாயிருக்கச்செய்தேயும், (அவற்றை உபேக்ஷித்து விட்டு) (மிகவும் நீசனுன) அடியேனை உனக்கு உரிய வாஸஸ்தானமாக அமைத்துக் கொண்டருளினையே! (இஃது என்ன ஸௌசீல்யம்!)

தடவரைவாய்மிளிர்ந்துமின்னும் தவளநெடுங்கொடிப்போல் *
சுடரொளியாய்நெஞ்சினுள்ளே தோன்றுமென்சோதிநம்பீ *
வடதடமும்வைகுந்தமும் மதிள்துவராவதியும் *
இடவகைகளிகழ்ந்திட்டு என்பாலிடவகைகொண்டனையே. (10)

தடவரைவாய் மிளிர்ந்துமின்னும் தவளம் நெடு கொடி போல் சுடர் ஒளி ஆய் என் நெஞ்சின் உள்ளே தோன்றும் சோதி நம்பீ வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராவதியும் இடவகைகள் இகழ்ந்திட்டு என்பால் இடவகை கொண்டனையே

பெரிய பர்வதத்தில் மிகவும் விளங்காநின்றுள்ள பரிசுத்தமான பெரியதொரு கொடிபோல, மிக்க தேஜஸ் ஸ்வரூபியாய் எனது ஹ்ருதயத்தினுள் விளங்காநின்றுள்ள ஒளியினுல் நிரம்பியவனே!, வடதிசையிலுள்ள திருப்பாற்கடலும் ஸ்ரீவைகுண்டமும் மதிள்களையுடைய த்வாரகையும் (ஆகிய) இடங்களையெல்லாம் உபேக்ஷித்துவிட்டு என்னிடத்தில் வாஸஸ்தானபுத்தியைப் பண்ணியருளினையே! (இஃது என்ன வாத்ஸல்யம்!)

வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தன்மனத்தே *
கோயில்கொண்டகோவலனைக் கொழுங்குளிர்முகில்வண்ணனை *
ஆயரேற்றையமரர்கோவை அந்தணர்தமமுதத்தினை *
சாயைபோலப்பாடவல்லார் தாமுமணுக்கர்களே.

வேயர் தங்கள் குலத்து உதித்த விட்டு சித்தன் மனத்து கோயில் கொண்ட கோவலனை கொழு குளிர் முகில் வண்ணனை ஆயர் ஏற்றை அமரர் கோவை அந்தணர்தம் அமுதத்தினை பாடவல்லார்தாம் சாயை போல அணுக்கர்கள்

வேயர்களுடைய வம்சத்தில் அவதரித்த பெரியாழ்வாருடைய ஹ்ருதயத்தில் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிற கோபாலனும், கொழுமையும் குளிர்ச்சியும் பொருந்திய மேகம்போன்ற நிறத்தையுடையவனும், இடையர்களுக்குத் தலைவனும், நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனும், (ஸநகர் முதலிய) மஹர்ஷிகளுக்கு அம்ருதம்போல் இனியனுமான எம்பெருமானை (இத்திருமொழியினால்) பாடவல்லவர்கள் நிழல்போல (எம்பெருமானை எப்போதும்) அணுகி யிருக்கப் பெறுவர்கள்.

அடிவரவு :—சென்னி பறவை எம்மனை கடல் பொன் உன் பருப்பு அனந்தன் பனிதட வேயர் மார்கழி.

பெரியாழ்வார்திருவடிகளே சரணம்

---

## நாச்சியார் திருமொழியில் ஆறுவது திருமொழி, வாரணமாயிரம்

(ஆண்டாள் தனது திருமணத்தைப்பற்றிக் கனாக்கண்ட திருப்பதிகம்)

அல்லிநாள்தாமரைமேலாரணங்கினின்துணைவி * மல்லிநாடாண்டமடமயில் *
மெல்லியலாள் ஆயர்குல வேந்தனாகத்தாள் * தென்புதுவை வேயர்பயந்த விளக்கு.

---

வாரணமாயிரம் சூழவலஞ்செய்து * நாரணநம்பி நடக்கின்றானென்றெதிர் *
பூரணபொற்குடம் வைத்துப்புரமெங்கும்* தோரணம்நாட்டக்கனாக்கண்டேன்தோழீ நான். (1)

தோழீ நம்பி நாரணன் ஆயிரம் வாரணம் சூழ வலம் செய்து நடக்கின்றான் என்று எதிர் பொன் பூரணகுடம் வைத்து புரம் எங்கும் தோரணம் நாட்ட நான் கனாக்கண்டேன்

என் உயிர்த்தோழியே!, ஸகல குண பரிபூர்ணனை ஸ்ரீமந்நாராயணன் ஆயிரம்யானைகள் சூழ்ந்துவரபிரதக்ஷிணமாக எழுந்தருளுகிறானென்று (வாத்திய கோஷாதிகளால் நிச்சயித்து) எதிரே பொன்மயமான பூர்ணகும்பங்களை வைத்து பட்டணம் முழுதும் தோரணஸ்தம்பங்கள் நாட்ட (இந்த நிலைமையை) நான் ஸ்வப்நத்தில் அநுபவித்தேன்.

நாளைவதுவை மணமென்றுநாளிட்டு * பாளைகமுகு பரிசுடைப்பந்தற்கீழ் *
கோளரிமாதவன் கோவிந்தனென்பானோர் *காளைபுகுதக் கனாக்கண்டேன்தோழீநான். (2)

நாளை வதுவை மணம் என்று நாள் இட்டு பாளை கமுகு பரிசு உடைபந்தல் கீழ் கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை புகுத

தோழீ!—; நாளைக்கு விவாஹ மஹோத்ஸவமென்று முஹூர்த்தம்நிர்ணயித்து பாளைகளோடு கூடின பாக்குமரங்களாகிற அலங்காரங்களை யுடைத்தான மணப்பந்தலின் கீழே நரஸிம்ஹனென்றும் மாதவனென்றும் கோவிந்தனென்றும் திருநாமங்கள் பூண்ட ஒரு யுவாவானவன் பிரவேசிக்க நான் கனாக்கண்டேன்—.

இந்திரனுள்ளிட்ட தேவர்குழாமெல்லாம்* வந்திருந்தென்னை மகட்பேசிமந்திரித்து *
மந்திரக்கோடியுடுத்தி மணமாலை * அந்தரிசூட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (3)

இந்திரன் உள்ளிட்ட தேவர்குழாம் எல்லாம் வந்து இருந்து என்னை மகள்

இந்திரன் முதலான தேவஸமூஹங்களெல்லாம் (இந்நிலத்திலே) வந்திருந்து என்னைக் கல்யாணப் பெண்ணாக வார்த்தை சொல்லி அதற்குமேல் ஸம்பந்திகள் ஒருவர்க்கொருவர் செய்துகொள்ளவேண்டிய ஏற்பாடு

பேசி மந்திரித்து அந்தரி மந்திரக் கோடி உடுத்தி மணம் மாலை சூட்ட

கள் விஷயமாகயோசித்து முடிவு செய்துகொண்டு, (பிறகு) 'துர்க்கை' என்கிற நாத்தனார் கல்யாணப் புடவையை எனக்கு உடுத்தி பரிமளம் மிக்க புஷ்பங்களையும் சூட்ட தோழீ! நான் கனாக் கண்டேன்—.

நாற்றிசைத்தீர்த்தம் கொணர்ந்துநனிநல்கி * பார்ப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தி *
பூப்புனைகண்ணிப்புனிதனோடென்றன்னை* காப்புநாண்கட்டக்கனாக்கண்டேன்தோழீநான். (4)

பார்ப்பனர் சிட்டர்கள் பல்லார் நால் திசை தீர்த்தம் கொணர்ந்து நனி நல்கி எடுத்து ஏத்தி பூ புனை கண்ணி புனிதனோடு என்றன்னை காப்பு நான் கட்ட

தோழீ!—; சிஷ்டர்களான பல ப்ராஹ்மணர்கள் நான்கு திசைகளிலுமிருந்து தீர்த்தங்களை கொண்டு வந்து நன்றாகத்தெளித்து உச்சஸ்வரமாக வெடுத்து மங்களாசாஸநம் பண்ணி (பலவகைப்) புஷ்பங்கள் புனைந்த மாலையை யுடையவனாய்ப் பரமபாவநனை கண்ணபிரானோடு என்னை (இணைத்து) கங்கணங்கட்ட நான் கனாக் கண்டேன்—.

கதிரொளிதீபம் கலசமுடனேந்தி* சதிரிளமங்கையர் தாம் வந்தெதிர்கொள்ள *
மதுரையார்மன்னன் அடிநிலைதொட்டெங்கும்* அதிரப்புகுதக் கனாக்கண்டேன்தோழீநான். (5)

சதிர் இள மங்கையர் தாம் கதிர் ஒளி தீபம் கலசம் உடன் ஏந்தி வந்து எதிர் கொள்ள மதுரையார் மன்னன் அடி நிலை தொட்டு எங்கும் அதிர புகுத

தோழீ!— அழகிய இளம் பெண்கள் ஸூர்யனுடைய ஒளிபோன்ற ஒளியை யுடைய மங்கள தீபத்தையும் பொற்கலசங்களையும் கையில் ஏந்திக்கொண்டு எதிர்கொண்டுவர, மதுரையிலுள்ளார்க்கு அரசனான கண்ணபிரான் பாதுகைகளைச் சாத்திக்கொண்டு பூமியெங்கும் அதிரும்படியாக எழுந்தருள நான் கனாக் கண்டேன்—.

மத்தளம்கொட்ட வரிசங்கம்நின்றூத* முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ் *
மைத்துனன்நம்பி மதுசூதன்வந்தென்னை* கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன்தோழீநான் (6)

மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்று ஊத மைத்துனன் நம்பி மதுசூதன் முத்து உடை தாமம் நிரை தாழ்ந்த பந்தல் கீழ் வந்து என்னை கைத்தலம் பற்ற

தோழீ!— மத்தளங்கள் அடிக்கவும்ரேகைகளையுடைய சங்குகளைஊதவும்,மைத்துனமைமுறையையுடையனாய் பூர்ணனான கண்ணபிரான் முத்துக்களையுடைய மாலைத்திரள்கள் தொங்கவிடப் பெற்ற பந்தலின் கீழேவந்து என்னைப் பாணிக்ரஹணம் செய்தருள நான் கனாக் கண்டேன்—.

வாய்நல்லார் நல்லமறையோதிமந்திரத்தால்* பாசிலைநாணல்படுத்துப் பரிதிவைத்து *
காய்சினமாகளிறன்னான் என்கைப்பற்றி* தீவலஞ்செய்யக் கனாக்கண்டேன்தோழீநான். (7)

வாய் நல்லார் நல்ல மறை ஓதி மந்திரத்தால் பாசு இலை நாணல் படுத்து பரிதி வைத்து காய் சினம் மா களிறு அன்னான் என் கை பற்றி தீ வலம் செய்ய

தோழீ!—; நன்றாக ஓதின வைதிகர்கள் சிறந்தவேத வாக்கியங்களை உச்சரிக்க, (அந்தந்த க்ரியைகளுக்கு இசைந்த) மந்த்ரங்களைக்கொண்டு பசுமைதங்கிய இலைகளையுடைத்தான நாணற்புல்லைப் பரிஸ்தரணமாக அமைத்து ஸமித்துக்களை இட்டு, மிக்க சினத்தை யுடைய மத்த கஜம்போல் செருக்கனான கண்ணபிரான் என் கையைப் பிடித்துக்கொண்டு அக்நியைச் சுற்றிவர நான் கனாக் கண்டேன்—.

இம்மைக்கும் ஏழேழ்பிறவிக்கும்பற்றாவான் * நம்மையுடையவன் நாராயணன்நம்பி *
செம்மையுடைய திருக்கையால்தாள்பற்றி * அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன் தோழீநான்.(8)

இம்மைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் பற்று ஆவான் நம்மை உடையவன் நம்பி நாராயணன் செம்மை உடைய திரு கையால் தாள் பற்றி அம்மி மிதிக்க

தோழீ!—; இப்பிறவிக்கும் மேலுள்ள பிறவிகள் எல்லாவற்றிற்கும் சரண்யனாயிருப்பவனாய் நமக்கு சேஷியாய் ஸகல கல்யாணகுணபரிபூர்ணனாய் நாராயணனான கண்ணபிரான் செவ்விய (தனது) திருக்கையினால் (எனது) காலைப்பிடித்து அம்மியின்மேல் எடுத்து வைக்க நான் கனாக் கண்டேன்—.

வரிசிலைவாண்முகத்து என்னைம்மார்தாம்வந்திட்டு * எரிமுகம்பாரித்து என்னைமுன்னேநிறுத்தி *
அரிமுகனச்சுதன்கைம்மேலென்கைவைத்து * பொரிமுகந்தட்டக் கனக்கண்டேன்தோழிநான்.

வரி சிலைவாள் முகம் என் ஐம்மார் தாம் வந்திட்டு எரி முகம் பாரித்து முன்னே என்னை நிறுத்தி அரி முகன் அச்சுதன் கை மேல் என் கை வைத்து பொரி முகந்து அட்ட

தோழீ !—; அழகிய வில்போன்ற புருவத்தையும் ஒளி பொருந்திய முகத்தையு முடையவர்களான எனது தமையன்மார்கள் வந்து அக்கினியை நன்றாக ஜ்வலிக்கச் செய்து அந்த அக்கினியின் முன்னே என்னை நிறுத்தி (ஹிரண்ய வதத்திற்காக) ஸிம்ஹ முகத்தை யுடைய வனாய் அவதரித்த கண்ணபிரானுடைய திருக்கையின் மேலே என்னுடைய கையை வைத்து பொரிகளை அள்ளிப் பரிமாற நான் கனக் கண்டேன்—.

குங்குமமப்பிக் குளிர்சாந்தம்மட்டித்து * மங்கலவீதி வலஞ்செய்துமணநீர் *
அங்கவனோடும் உடன்சென்றங்கானைமேல் * மஞ்சனமாட்டக் கனக்கண்டேன்தோழிநான். (9)

குங்குமம் அப்பி குளிர் சாந்தம் மட்டித்து ஆனை மேல் அவனோடும் உடன் சென்று மங்கலம் வீதி வலம் செய்து மணம் நீர் மஞ்சனம் ஆட்ட

தோழீ !—; குங்குமக் குழம்பை உடம்பெல்லாம் பூசி குளிர்ந்த சந்தனத்தை கனக்கத்தடவி மத்தகஜத்தின் மேலே அக் கண்ணபிரானோடு கூடியிருந்து (விவாஹ நிமித்தமான) அலங்காரங்கள் விளங்குகின்ற வீதிகளிலே ஊர்வலம் வந்து வஸந்த ஜலத்தினால் (எங்களிருவரையும்) திருமஞ்சனம் பண்ணுவதாக நான் கனக் கண்டேன்—.

ஆயனுக்காகத் தான்கண்டகனாவினை * வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன்கோதைசொல் *
தூயதமிழ்மாலை ஈரைந்தும்வல்லவர் * வாயுநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (10)

வேயர் புகழ் வில்லிபுத்தூர் கோன் கோதை தான் ஆயனுக்கு ஆக கண்ட கனாவினை சொல் தூய தமிழ் மாலை ஈர் ஐந்தும் வல்லவர் வாயும் நல் மக்களை பெற்று மகிழ்வர்

வேயர் குலத்தவரால் புகழப் பட்டவராய் ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வாருடைய (திருமகளான) ஆண்டாள்தான் கோபால க்ருஷ்ணனுக்கு வாழ்க்கைப்பட்டதாகக் கனக் கண்டபடியைக் குறித்து அருளிச்செய்த பரிசுத்தமான தமிழ்த் தொடையான இப்பத்துப் பாட்டுக்களையும் ஓதவல்லவர்கள் நற்குணங்களமைந்தவிலக்ஷணரானபுத்திரர்களைப்பெற்று ஆநந்திக்கப் பெறுவார்கள்.

அடிவரவு :—வாரணம் நாளை இந்திரன் நால் கதிர் மத்தளம் வாய் இம்மை வரிசிலை குங்குமம் ஆயன் கருப்பூரம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

---

## திருப்பாணாழ்வார் அருளிச்செய்த அமலனாதிபிரான்

ஆபாதசூடமநுபூய ஹரிம் சயாநம் மத்யே கவேரதுஹிதுர் முதிதாந்தராத்மா,
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம் யோ நிச்சிகாய மநவை முநிவாஹநம் தம்.

ய: கவேர துஹிது: மத்யே சயாநம் ஹரிம் ஆபாதசூடம் அநுபூய முதித அந்தராத்மா நயநயோ: விஷயாந்தராணாம் அத்ரஷ்ட்ருதாம் நிச்சிகாய தம் முநிவாஹநம் மநவை

யாவரொரு திருப்பாணாழ்வார் திருக்காவேரியின் நடுவில் திருக்கண் வளர்ந்தருளுகிற அழகிய மணவாளப் பெருமாளை திருவடி தொடங்கித் திருமுடியளவாக (கண்குளிர) அநுபவித்துமகிழ்ந்தசிந்தையராய் (தமது) திருக்கண்கள் (அப்பெருமானன்றி) மற்றொன்றையும் காணமாட்டாமையை அறுதியிட்டருளினாரோ, அப்படிப்பட்ட லோகஸாரங்கமஹாமுநியை வாஹநமாகக் கொண்ட திருப்பாணாழ்வாரை சிந்திக்கக் கடவேன்.

காட்டவே கண்டபாத கமலநல் லாடையுந்தி
தேட்டரு முதரபந்தந் திருமார்வு கண்டஞ்செவ்வாய்
வாட்டமில் கண்கள்மேனி முனியேறித் தனிபுகுந்து
பாட்டினால் கண்டுவாழும் பாணர்தாள் பரவினோமே.

முனி ஏறி தனி புகுந்து காட்டவே கண்ட பாத கமலம் நல் ஆடை உந்தி தேட்டரும் உதர பந்தம் திரு மார்வு கண்டம் செம் வாய் வாட்டம் இல் கண்கள் மேனி பாட்டினால் கண்டு வாழும் பாணர் தாள் பரவினோம்

லோகஸாரங்க முனியின் (தோளின் மேல்) ஏறி தனியே உள்ளே புகுந்து (அம்முனிவரர்) காண்பித்த படியே கண்டு ஸேவிக்கப்பட்ட திருவடித் தாமரைகளும் விலக்ஷணமான திருப்பீதாம்பரமும் திருநாபியும் கிடைத்தற்கு அரிதான பொன் அரைநாணும் பிராட்டி வாழ்கிற மார்பும் திருக்கழுத்தும் சிவந்த வாயும் சோர்வு இல்லாத திருக்கண்களும் (ஆகிய இவற்றோடு கூடிய) திருமேனியை பாசுரங்களின் அநுஸந்தானத்தோடுகூட ஸேவித்து ஆனந்தித்த திருப்பாணாழ்வாருடைய திருவடிகளை துதிக்கப் பெற்றோம்.

---

அமலனாதிபிரான் அடியார்க்கென்னை யாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் *
நிமலன்நின்மலன் நீதிவானவன் நீண்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந்து என்கண்ணினுள்ளனவொக்கின்றதே. (1)

அமலன் ஆதி பிரான் என்னை அடியார்க்கு ஆள்படுத்த விமலன் விண்ணவர்கோன் விரை ஆர்பொழில் வேங்கடவன் நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள் மதிள் அரங்கத்து அம்மான் திருக் கமலபாதம் வந்து என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே

பரிசுத்தனாய் ஜகத்காரணபூதனாய் உபகாரகனாய் (இழிகுலத்தவனான) என்னை (தனது) அடியவர்களான பாகவதர்களுக்கு ஆட்படுத்துகையாலே வந்த சிறந்த புகரை யுடையனாய் நித்யஸூரிகட்குத் தலைவனாயிருந்து வைத்து (ஆச்ரிதர்கட்காக) பரிமளம் மக்க சோலைகளை யுடைய திருவேங்கடமலையில் வந்து தங்குமவனாய் ஆச்ரயிப்பார்க்கு அரியனாயிருக்கையாகிற குற்றமற்று, ஆச்ரித பாரதந்திரியத்தை வெளியிட்டு நிற்குமவனாய் அடியாருடைய குற்றத்தைக் காண்கையாகிற தோஷமில்லாத வத்ஸலனாய், சேஷசேஷி முறை வழுவாதபடி நியாயமே செல்லும் நிலமான பரமபதத்துக்கு நிர்வாஹகனாய் உயர்ந்த மதிள்களையுடைய கோயிலிலே (கண்வளர்ந்தருளுகிற) ஸ்வாமியான அழகிய மணவாளனுடைய திருவடித்தாமரைகளானவை தானேவந்து என் கண்ணுக்குள்ளே புகுந்தன போலிரா நின்றனவே.

உவந்தவுள்ளத்தனாய் உலகமளந்தண்டமுற *
நிவந்தநீண்முடியன் அன்றுநேர்ந்தநிசாசரரை *
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத்தம்மான் * அரைச்
சிவந்தவாடையின்மேல் சென்றதாமென்சிந்தனையே. (2)

உவந்த உள்ளத்தன் ஆய் உலகம் அளந்து அண்டம் உற நிவந்த நீள் முடியன் அன்று நேர்ந்த நிசாசரரை கவர்ந்த வெம் கணை காகுத்தன் கடி ஆர் பொழில் அரங்கத்து அம்மான் அரை சிவந்த ஆடையின் மேல் என் சிந்தனை சென்றது ஆம்

மகிழ்ச்சியோடு கூடிய மனத்தையுடையனாய்க்கொண்டு மூவுலகங்களையும் அளந்து அண்டகடாஹத்தளவுஞ் சென்று முட்டும்படி உயர்த்தியை அடைந்த பெரிய திருமுடியை யுடையவனாய் முற்காலத்தில் எதிர்ந்து வந்த ராக்ஷஸர்களை உயிர்வாங்கின கொடிய அம்புகளை யுடைய இராமபிரானாய், மணம் மிக்க சோலைகளை யுடைய ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனான எம்பிரானுடைய திருவரையில் (சாத்திய) பீதாம்பரத்தின் மேல் என்னுடைய நினைவானது பதிந்ததாம்.

மந்திபாய் வடவேங்கடமாமலை* வானவர்கள்
சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவினணையான்*
அந்திபோல்நிறத்தாடையும் அதன்மேலயனைப்படைத்ததோரெழில்*
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே. (3)

மந்தி பாய் வடவேங்கடம் மா மலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத்து அரவு இன் அணையான் அந்தி போல் நிறம் ஆடையும் அதன் மேல் அயனை படைத்தது ஓர் எழில் உந்தி மேலது அன்றோ அடியேன் உள்ளத்து இன் உயிர்

குரங்குகளானவை (ஒரு கிளையில் நின்றும் மற்றொரு கிளையில்) பாயப் பெற்ற வடதிசையிலுள்ள திருவேங்கடமென்னும் திருமலையிலே நித்யஸூரிகள் பூக்களைக்கொண்டு ஆராதிக்கும்படி நிற்பவனாய், கோயிலிலே திருவனந்தாழ்வானாகிற போக்யமான படுக்கையுடையனான அழகிய மணவாளனுடைய செவ்வானம் போன்ற நிறத்தையுடைய திருப்பீதாம்பரமும் அப்பீதாம்பரத்தின் மேலே பிரமனைப்படைத்த ஒப்பற்ற அழகையுடைய திருநாபிக் கமலமும் ஆகிய இவற்றின் மேற் படிந்ததன்றோ என்னுடைய மனஸ்ஸிலே விளங்குகிற இனிதான ஆத்ம ஸ்வரூபம்.

சதுரமாமதிள்சூழிலங்கைக்கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி* ஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன் *
மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான்* திருவயிற்
றுதரபந்தம் என்னுள்ளத்துள்நின்றுலாகின்றதே. (4)

சதுரம் மா மதிள் சூழ் இலங்கைக்கு இறைவன் ஓட்டி தலை பத்து உதிர ஓர் வெம் கணை உய்த்தவன் ஓதம் வண்ணன் வண்டு மதுரமா பாட மா மயில் ஆடு அரங்கத்து அம்மான் திருவயிறு உதர பந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றது

நாற்சதுரமாய் உயர்ந்திருக்கிற மதிள்களாலே சூழப்பட்ட லங்காநகரத்திற்கு நாதனான இராவணனை (முதல் நாள் யுத்தத்தில்) தோற்று ஓடும்படி செய்து (மறு நாட்போரில்) (அவனது) தலை பத்தும் (பனங்காய் போல்) உதிரும்படி ஒப்பற்ற கூர்மையான அஸ்த்ரத்தைப் ரயோகித்தவனும், கடல்போன்ற (குளிர்ந்த) வடிவையுடையவனும், வண்டுகளானவை மதுரமாக இசைபாட (அதற்குத் தகுதியாக) சிறந்த மயில்கள் கூத்தாடப் பெற்ற திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியுமான ஸ்ரீரங்கநாதனுடைய திருவயிற்றில் சாத்தியுள்ள ‘உதரபந்த’ மென்னும் திருவாபரணமானது என் நெஞ்சினுள் நிலைத்து நின்று உலாவுகின்றது.

பாரமாய பழவினைபற்றறுத்து* என்னைத்தான்
வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றியென்னுள்புகுந்தான் *
கோரமாதவம்செய்தனன்கொலறியேன் அரங்கத்தம்மான் * திரு
வாரமார்பதன்றோ அடியேனையாட்கொண்டதே. (5)

பாரம் ஆய பழ வி பற்று அறுத்து என்னை தன் வாரம் ஆக்கி வைத்தான் வைத்தது அன்றி என்னுள் புகுந்தான் கோரம் மா தவம் செய்தனன் கொல் அறியேன் அரங்கத்து அம்மான் திருஆரம் மார்பு அதுஅன்றோ அடியேனை ஆள்கொண்டது

பொறுக்கமுடியாத சுமையாயிராநின்ற அநாதியான பாபங்களின் சம்பந்தத்தைத் தொலைத்து (அதனால் பாபம் நீங்கப்பெற்ற) அடியேனை தன்னிடத்தில் அன்பு உடையவனாகப் பண்ணி வைத்தான் (ரங்கநாதன்;) இப்படி செய்து வைத்தது மல்லாமல் என் ஹ்ருதயத்திலும் ப்ரவேசித்து விட்டான் ; (இப்படிப் பட்ட பாக்கியத்தைப் பெறுதற்கு உறுப்பாக, நான்) உக்ரமான பெரியதொரு தபஸ்ஸை (முற்பிறவியில்) செய்திருப்பேனோ என்னவோ? அறிகிறேனில்லை! ஸ்ரீரங்கநாதனுடைய பிராட்டியையும் முக்தாஹாரத்தையும் உடைத்தான அத்திருமார்பன்றோ தாஸனான என்னை அடிமைப்படுத்திக் கொண்டது.

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூழ் அரங்கநகர்மேயவப்பன் *
அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலமெழுமால்வரை * முற்றும்
உண்டகண்டங்கண்டீர் அடியேனையுய்யக்கொண்டதே. (6)

துண்டம் வெண்பிறையன் துயர் தீர்த்
தவன் அம் சிறைய வண்டு வாழ்
பொழில் சூழ் அரங்கம் நகர் மேய
அப்பன் அண்டர் அண்டம் பகிரண்
டம் ஒரு மா நிலம் எழு மால் வரை
முற்றும் உண்ட கண்டம் கண்டீர்
அடியேனை உய்யக் கொண்டது.

ஒரு துண்டாயிருக்கிற (கலா மாத்ரமான) வெளுத்த சந்திரனை (முடியிலே) உடையவனான சிவனுடைய (பிச்சை யெடுத்துத் திரிந்த) பாதகத்தைப் போக்கின வனும் அழகிய சிறகையுடைய வண்டுகள் வாழ்தற் கிடமான சோலைகள் சூழப்பெற்ற திருவரங்கப்பெரு நகரிலே பொருந்தியிரா நின்ற ஸ்வாமியுமான ஸ்ரீரங்க நாதனுடைய அண்டத்துக்குட்பட்ட தேவாதி வர்க்கங் களையும் அண்டங்களையும் அண்டாவரணங்களையும் ஒப் பற்ற மஹாப்ருதிவியையும் ஏழு குலபர்வதங்களையும் சொல்லிச் சொல்லாத மற்றெல்லாவற்றையும் அமுது செய்த திருக்கழுத்துக்கிடீர் தாஸனான என்னை உஜ்ஜீ விப்பித்தது.

கையினார்சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் * துளபவிரையார் கமழ்நீண்முடியெம்
ஐயனார் * அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாயனார்*
செய்யவாய்ஐயோ! என்னைச்சிந்தைகவர்ந்ததுவே. (7)

கையின் ஆர் சுரி சங்கு அனல் ஆழியர்
நீள் வரைபோல் மெய்யனார் துளபம்
விரை ஆர் கமழ் நீள் முடி எம் ஐய
னார் அணி அரங்கனார் அரவு இன்
அணை மிசை மேய மாயனார் செய்ய
வாய் என்னை சிந்தை கவர்ந்தது ஐயோ

திருக்கையில் பொருந்தியிருக்கிற சுரியையுடைய திருச் சங்கையும் தீ வீசுகின்ற திருவாழியையும் உடையராய் பெரியதொரு மலைபோன்ற திருமேனியையுடையராய் திருத்துழாயின் பரிமளம் மிகப்பெற்று அதனால் பரிமளியா நின்றுள்ள உயர்ந்த திருவபிஷேகத்தை யுடையராய் எமக்கு ஸ்வாமியாய் அழகு பொருந்திய திருவரங்கத்திற் கண் வளர்ந்தருள்பவராய் திருவனந் தாழ்வானாகிற இனிய திருப்பள்ளியின்மீது பொருந் திய ஆச்சரிய செய்கைகளை யுடையரான ஸ்ரீரங்கநாத ருடைய சிவந்த திருப்பவளமானது என்னுடைய நெஞ்சைக்கொள்ளை கொண்டது (ஆநந்தாதிசயக் குறிப்பு.)

பரியனாகிவந்த அவுணனுடல்கீண்ட * அமரர்க்
கரியவாதிப்பிரான் அரங்கத்தமலன்முகத்து *
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி * நீண்டவப்
பெரியவாயகண்கள் என்னைப்பேதைமை செய்தனவே. (8)

பரியன் ஆகி வந்த அவுணன் உடல்
கீண்ட அமரர்க்கு அரிய ஆதி பிரான்
அரங்கத்து அமலன் முகத்து கரிய
ஆகி புடை பரந்து மிளிர்ந்து செவ்வரி
ஓடி நீண்ட பெரிய ஆய அக் கண்கள்
என்னை பேதைமை செய்தன

மிகவும் ஸ்தூலமான வடிவையுடையனாய்க் கொண்டு (ப்ரஹ்லாதனை நலிய) வந்த அஸுரனான இரணிய னுடைய சரீரத்தை கிழித்துப் பொகட்டவனும், பிர மன் முதலிய தேவர்கட்கும் அணுகமுடியாத வனும் ஜகத்காரண பூதனும் மஹோபகாரகனும் கோயிலில் எழுந்தருளியிருக்கிற பரமபாவநனுமாகிய எம்பெருமானுடைய திருமுக மண்டலத்தில் கறுத்த நிறமுடையவையாய் விசாலங்களாய் பிரகாசமுடைய வையாய் செவ்வரி படர்ந்திருப்பனவாய்(காது வரை) நீண்டிருப்பனவாய் பெருமை பொருந்தியவையுமான அந்தத் திருக்கண்களானவை அடியேனை உன்மத்தனா கச் செய்விட்டன.

ஆலமாமரத்தினிலைமேல் ஒருபாலகனாய் *
ஞாலமேழுமுண்டான் அரங்கத்தரவினணையான் *
கோலமாமணியாரமும் முத்துத்தாமமும்முடிவில்லதோரெழில்*
நீலமேனிஐயோ ! நிறைகொண்டதென்நெஞ்சினையே. (9)

மா ஆலமரத்தின் இலைமேல் ஒரு பாலகன் ஆய் ஞாலம் ஏழும் உன்டான் அரங்கத்து அரவு இன் அணையான் கோலம் மா மணி ஆரமும் முத்து தாமமும் முடிவு இல்லது ஓர் எழில் நீலம் மேனி என் நெஞ்சினை நிறை கொண்டது

பெரிதான ஆலமரத்தினுடைய(சிறிய) இலையிலே ஒரு சிறு பிள்ளையாகி ஏழுலகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கினவனும் கோயிலிலே திருவந்தாழ்வானாகிற திருப்பள்ளியின்மீது சாய்ந்தருள்பவனுமான ஸ்ரீரங்கநாதனுடைய அழகிய சிறந்த ரத்நங்களால் செய்யப்பட்ட ஹாரமும் முத்துவடமும் (ஆகியஇவைபோன்ற பல்லாயிரம் திருவாபரணங்கள்) எல்லைகாண முடியாமல் அபரிமிதமாக விளங்காநிற்கப் பெற்றதும் ஒப்பற்ற அழகையுடையதும் கருநெய்தல் மலர்போன்றதுமான திருமேனியானது எனது நெஞ்சினுடைய அடக்கத்தை கொள்ளைகொண்டுபோயிற்று; ஐயோ இதற்கென் செய்வேன்? என்கிறார்.

கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணெய்
உண்டவாயன் * என்னுள்ளங்கவர்ந்தானை *
அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக்
கண்டகண்கள் * மற்றொன்றினைக் காணாவே. (10)

கொண்டல் வண்ணனை கோவலன் ஆய் வெண்ணெய் உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை அண்டர் கோன் அணி அரங்கன் என் அமுதினை கண்ட கண்கள் மற்று ஒன்றினை காணா

காளமேகம் போன்ற வடிவையுடையவனும் கோபாலகுமாரனாகப் பிறந்து வெண்ணெ யமுது செய்த திருவாயையுடையவனும் என்னுடைய நெஞ்சை கொள்ளை கொண்டவனும் நித்யஸூரிகட்குத் தலைவனும் (பூமண்டலத்துக்கு) அலங்காரமான திருவரங்கத்தில் கண் வளர்ந்தருள்பவனும் எனக்குப் பரம போக்யமான அம்ருதமாயிருப்பவனுமான அழகிய மணவாளனை ஸேவிக்கப்பெற்ற (எனது) கண்களானவை வேறொன்றையும் (பரமபத நாதனையும்) காணமாட்டா.

இப்பாட்டு அருளிச்செய்தவுடனே பெரியபெருமாள் அத்திருமேனியோடு ஆழ்வாரை அங்கீகரித்தருள, அனைவருங்காண அப்பிரானது திருமேனியிலே அந்தர்ப்பவித்துக் காய்ந்த இரும்பு உண்டநீராயினர் என்று—ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர்கள் அருளிச் செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும். (10)

அடிவரவு :– அமலன் உவந்த மந்தி சதுரம் பாரம் துண்டம் கை பரி ஆலம் கொண்டல் கண்ணி.

திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்

ஆழ்வார் திருவடிகளேசரணம்

எம்பெருமானார் திருவடிகளேசரணம் ஜீயர்திருவடிகளேசரணம்

அமலனாதிபிரான் உரை முற்றிற்று.

---

மதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண் சிறுத்தாம்பு

---

## தனியன் உரை

அவிதிதவிஷயாந்தரச்சடாரே : உபநிஷதாமுபகாநமாத்ரபோக :,
அபிச குணவசாத் தததேகசேஷீ மதுரகவிர் ஹ்ருதயே மமாவிரஸ்து.

| | | | |
|---|---|---|---|
| அவிதித விஷயாந்தர: | (நம்மாழ்வாரைத் தவிர) வேறொரு விஷயத்தை யுமறியாதவரும் | குணவசாதபிச | குணமடியாகவும் |
| சடாரே : | நம்மாழ்வாருடைய (திவ்ய ஸூக்திகளாகிய) | தததேகசேஷீ | அந்த நம்மாழ்வாரொருவரையே தமக்கு சேஷியாகக்கொண்டவருமான |
| உபநிஷதாம் | த்ரமிடோபநிஷத்தான திவ்யப்ரபந்தங்களை | மதுரகவி : | மதுரகவியாழ்வார் |
| உபகாந மாத்ர போக : | இசை பாடுவது ஒன்றையே பேரின்பமாகக் கொண்டவரும் | மம ஹ்ருதயே | என் நெஞ்சில் |
| | | ஆவிரஸ்து | ஆவிர்ப்பவிக்கக்கடவர். |

வேறொன்றும்நானறியேன் வேதந்தமிழ்செய்த
மாறன் சடகோபன்வண்குருகூர்—ஏறெங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியாரெம்மை
ஆள்வாரவரேயரண்.

| | | | |
|---|---|---|---|
| வேறு ஒன்றும் நான் அறியேன் | "(நம்மாழ்வார் தவிர) வேறொரு பொருளும் நான் அறியமாட்டேன் ; | சடகோபன் | நம்மாழ்வார் |
| | | எங்கள் வாழ்வு ஆம் என்று | எமக்கு உஜ்ஜீவனராவர்" என்று |
| வேதம் தமிழ் செய்த | வேதார்த்தங்களைத்தமிழாக அருளிச்செய்த | ஏத்தும் | தோத்திரஞ் செய்தருளின |
| | | மதுரகவியார் | மதுரகவியாழ்வார் |
| மாறன் | மாறனென்னும் திருநாமத்தையுடையவரும் | எம்மை ஆள்வார் | நம்மை ஆள்பவர் ; |
| | | அவரே | அந்த மதுரகவிகளே |
| வண்குருகூர் ஏறு | அழகிய திருக்குருகூர் நகர்க்குத் தலைவருமான | அரண் | (ப்ரபந்நகுலத்துக்கு) ரக்ஷகர். |

இக்கண்ணிநுண்சிறுத்தாம்பானது மற்றைப்பிரபந்தங்கள்போல எம்பெருமான்விஷயமன்று; நம்மாழ்வார் விஷயம் இது, ஆயினும் இதனையும் நம் முன்னோர் நாலாயிரப்பிரபந்தத்தினுள் சேர்த்தருளினரென்பதை " வாய்த்ததிருமந்திரத்தின் மத்திமமாம்பதம்போல், சீர்த்தமதுரகவிசெய்கலையை,ஆர்த்தபுகழாரியர்கள்தாங்கள் அருளிச்செயல்நடுவே,சேர்வித்தார்தாற்பரியந்தேர்ந்து" என்ற உபதேச ரத்தினமாலையாலறிக.

---

கண்ணிநுண்சிறுத்தாம்பினல் கட்டுண்ணப்
பண்ணியபெருமாயன் * என்னப்பனில் *
நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்கால் *
அண்ணிக்குமமுதூறும் என்னாவுக்கே. (1)

| | | | |
|---|---|---|---|
| சண்ணி | (உடம்பிலே உறுத்தும்படி பல)முடிகளையுடைத்தாய் | என் அப்பனில் | எனக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனை விட்டு, |
| நுண் | (உடம்பிலே அழுந்தும்படி) நுட்பமாய் | நண்ணி | (ஆழ்வாரைக்) கிட்டி ஆச்ரயித்து |
| சிறு | (எட்டம் போராதபடி) சிறிதாயிருக்கிற | தென் குருகூர் நம்பி என்றக்கால் | தெற்குத் திசையிலுள்ள (ஆழ்வார்திருநகரி யென்னும்) குருகூர்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரென்று (அவரது திருநாமத்தைச்) சொன்னால் |
| தாம்பினால் | கயிற்றினால் | | |
| கட்டுண்ண பண்ணிய | யசோதைப்பிராட்டி தன்னைக் கட்டும்படி பண்ணுவித்துக்கொண்ட | | |
| | | அண்ணிக்கும் | பரம போக்யமாயிருக்கும்; |
| பெரு மாயன் | விசேஷ ஆச்சரியசக்தியுக்தனாய் | என் நாவுக்கே | என்னொருவனுடைய நாவுக்கே |
| | | அமுது ஊறும் | அம்ருதம் ஊறுநிற்கும். |

நாவினால்நவிற்றி இன்பமெய்தினேன் *
மேவினேன் அவன்பொன்னடிமெய்ம்மையே *
தேவுமற்றறியேன் குருகூர்நம்பி *
பாவினின்னிசை பாடித்திரிவனே. (2)

| | | | |
|---|---|---|---|
| நாவினால் | நாக்கினால் | மற்றுதேவு அறியேன் | (ஆழ்வாரையொழிய) வேறொரு தெய்வத்தை அறியமாட்டேன்; |
| நவிற்றி | (ஆழ்வாரை) ஸ்தோத்திரம் பண்ணி | | |
| இன்பம் எய்தினேன் | ஆநந்தத்தைப் பெற்றேன்; | குருகூர் நம்பி | திருநகரிக்கு நிர்வாஹகரான அவ்வாழ்வாருடைய |
| அவன் | அவ்வாழ்வாருடைய | பாவின் | அருளிச்செயல்களின் |
| பொன் அடி | அழகிய திருவடிகளை | இன் இசை | இனிய இசையையே |
| மேவினேன் | ஆச்ரயிக்கப் பெற்றேன்; | பாடி | பாடிக்கொண்டு |
| மெய்ம்மையே | இது ஸத்தியமே; | திரிவன் | திரியக்கடவேன். |

திரிதந்தாகிலும் தேவபிரானுடை *
கரியகோலத் திருவுருக்காண்பன் நான் *
பெரியவண்குருகூர் நகர்நம்பிக்கா
ளுரியனாய் * அடியேன்பெற்றநன்மையே. (3)

| | | | |
|---|---|---|---|
| திரி தந்தாகிலும் | (பகவத் விஷயத்தோடு ஒட்டற்றுத்) திரிந்தேனாகிலும் | நான் காண்பன் | நான் ஸேவிப்பேன்; |
| தேவபிரானுடைய | நித்ய ஸூரிகளுக்குத்தலைவனான எம்பெருமானுடைய | பெரிய வண்குருகூர் நகர் நம்பிக்கு | பெருமையையும் ஔதார்யமுமுடைய ஆழ்வார்க்கு |
| | | உரிய ஆள் ஆய் | அநந்யார்ஹ சேஷபூதனாயிருந்து வைத்து |
| கரிய | (நீலமேகம்போல்) கறுத்ததாய் | | |
| கோலம் | அழகியதான | | |
| திரு உரு | பிராட்டியோடுகூடியதிவ்யரூபத்தையும் | அடியேன்பெற்ற நன்மை | அடியேன் பெற்ற பேறு இது காணீர். |

* * *—ஆழ்வாருடைய உகப்புக்காக எம்பெருமானையும் ஸேவிப்பேனென்றவாறு. 3.

நன்மையால்மிக்க நான்மறையாளர்கள் *
புன்மையாகக் கருதுவராதலில் *
அன்னையாயத்தனாய் என்னையாண்டிடும்
தன்மையான் * சடகோபனென்நம்பியே. (4)

| | | | |
|---|---|---|---|
| நன்மையால்மிக்க | நற்குணத்தால் மேன்மை பெற்றவர்களாய் | அன்னை ஆய் | மாதாவாயும் |
| நால் மறைஆளர்கள் | நான்கு வேதங்களிலும் வல்லவர்களான வைதிகர்கள் | அத்தன் ஆய் | பிதாவாயும் |
| (என்னை) | அடியேனை | என்னை ஆண்டிடும் தன்மையான் | அடியேனைக் கைக்கொண்டருளு மியல்வினரான |
| புன்மை ஆக கருதுவர் ஆதலில் | ஹேய குணங்களே ஒரு வடிவு கொண்டதென்றெண்ணி உபேக்ஷித்திருப்பரென்பதுவே ஹேதுவாக | சடகோபன் | நம்மாழ்வார் |
| | | என் நம்பி | எனக்குத் தலைவர். |

* * *—அருள் மிகுந்தவர்களும் கைவிடத்தக்க தம்மை ஆழ்வார் கைக்கொண்டாரென்க.

நம்பினேன் பிறர்நன்பொருள்தன்னையும் *
நம்பினேன் மடவாரையும்முன்னெலாம் *
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்கு
அன்பனாய் * அடியேன் சதிர்த்தேனின்றே. (5)

| | | | |
|---|---|---|---|
| அடியேன் | (இன்று 'அடியேன்' என்று சொல்லும்படி திருந்தின) நான் | (பிறர்) மடவாரையும் | பிறருடைய ஸ்த்ரீகளையும் |
| | | நம்பினேன் | விரும்பிப் போந்தேன்; |
| | | இன்று | இப்போதோ வென்றால் |
| முன் எலாம் | (ஆழ்வாருடைய விஷயீகாரம் பெறுவதற்கு) முன்பெல்லாம் | செம்பொன்மாடம் | செவ்வியபொன்னாற் சமைந்த மாடங்களையுடைய |
| பிறர் | அயலாருடைய | திரு குருகூர் நம்பிக்கு | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார்க்கு |
| நல் பொருள் தன்னையும் | நல்ல பொருள்களை | அன்பன் ஆய் | பக்தனாகப்பெற்று |
| நம்பினேன் | ஆசைப்பட்டுக் கிடந்தேன்; | சதிர்த்தேன் | சதிரை யுடையேனானேன் [சமத்தனாய் விட்டேன்.] |

இன்றுதொட்டும் எழுமையுமெம்பிரான் *
நின்றுதன்புக ழேத்தவருளினான் *
குன்றமாடத் திருக்குருகூர்நம்பி *
என்றுமென்னை யிகழ்விலன்காண்மினே. (6)

| | | | |
|---|---|---|---|
| இன்று தொட்டும் | இன்று முதலாக | குன்றம் மாடம் | மலைபோன்ற மாடங்களையுடைய |
| எழுமையும் | மேலுள்ள காலமெல்லாம் | திரு குருகூர் நம்பி | திருநகரிக்குத் தலைவரான அவ்வாழ்வார் |
| நின்று | (நான்) அத்யவஸாயம் நிலைக்கப்பெற்று | என்றும் | (இனி) எக்காலத்திலும் |
| தன் புகழ் | தம்முடைய (ஆழ்வாருடைய) திருப்புகழ்களை | என்னை | என் விஷயத்தில் |
| ஏத்த | துதிக்கும்படி | இகழ்வு இலன் | அநாதரமுடையவராக இருக்கமாட்டார்; |
| எம்பிரான் அருளினான் | எம் ஸ்வாமியான ஆழ்வார் க்ருபை பண்ணினார்; | காண்மின் | (இதனை அநுபவத்தில்) கண்டு கொள்ளுங்கள். |

கண்டுகொண்டென்னைக் காரிமாறப்பிரான் *
பண்டைவல்வினை பாற்றியருளினான் *
எண்டிசையும் அறியவியம்புகேன் *
ஒண்டமிழ்ச் சடகோபனருளையே. (7)

| | | | |
|---|---|---|---|
| பிரான் | பரமோபகாரகராய் | பாற்றி அருளினான் | உருமாய்ந்து போம்படிபறக் கடித்தருளினார்: (ஆதலால்) |
| காரி மாறன் | பொற்காரியார் திருக்குமாரரான நம்மாழ்வார் | ஒண் தமிழ் சடகோபன் அருளையே | அழகிய தமிழ்க் கவிகளுக்கு ஆகரமான அவ்வாழ்வாருடைய க்ருபையையே |
| என்னை | (தமது பெருமையை அறியாத) என்னை | | |
| கண்டு | கடாக்ஷித்து | எண் திசையும் | எட்டுத் திக்கிலுள்ளவர்களும் |
| கொண்டு | கைக்கொண்டு | அறிய | அறியும்படி |
| பண்டைவல்வினை | அநாதியாய்ப் பிரபலமாயிருந்த பாவங்களை | இயம்புகேன் | சொல்லக்கடவேன். |

அருள்கொண்டாடும் அடியவரின்புற *
அருளினான் அவ்வருமறையின்பொருள் *
அருள்கொண்டு ஆயிரமின்றமிழ்ப்பாடினான் *
அருள்கண்டீர் இவ்வுலகினில்மிக்கதே.

| | | | |
|---|---|---|---|
| அருள்கொண்டாடும் | பகவத் கிருபையைக் கொண்டாடுகின்ற | இன் தமிழ் | இனிய தமிழ்ப் பாஷையிலே அமைந்த |
| அடியவர் | பக்தர்கள் | ஆயிரம் | திருவாய்மொழி யாயிரத்தை |
| இன்புற | ஆநந்திக்கும்படி | பாடினான் | பாடினவருமான ஆழ்வாருடைய |
| அ அருமறையின் பொருள் | அந்த அருமையான வேதத்தின் உட்பொருள்களை | | |
| அருளினான் | அருளிச் செய்தவராயும் | அருள் கண்டீர் இ உலகினில் மிக்கது | க்ருபை ஒன்று மாத்திரமன்றோ இந்த லோகத்தில் அதிசயித்திருக்கிறது. |
| அருள் கொண்டு | பரமக்ருபையாலே | | |

மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் *
நிற்கப்பாடி யென்னெஞ்சுள்நிறுத்தினான் *
தக்கசீர்ச் சடகோபனென்நம்பிக்கு * ஆட்
புக்ககாதல் அடிமைப் பயனன்றே. (9)

| | | | |
|---|---|---|---|
| மிக்க வேதியர் வேதத்தின் | சிறந்த வைதிகர்களால் ஓதப்படுகின்றவேதத்தினுடைய | தக்க சீர் | தகுதியான குணங்களையுடையராய் |
| | | சடகோபன் | சடகோபனென்ற திருநாமத்தை யுடையரான |
| உள் பொருள் | உள்ளுறை பொருளானது | | |
| நிற்க | நிலை நிற்கும்படி | என் நம்பிக்கு ஆள் புக்க | (அந்த) ஆழ்வார் விஷயத்திலே அடிமை செய்வதற்கு உறுப்பான |
| பாடி | (திருவாய்மொழியைப்)பாடி | | |
| என் நெஞ்சுகள் | என்னுடையஹ்ருதயத்திலே | | |
| | | காதல் | ஆசையானது |
| நிறுத்தினான் | (அந்த வேதார்த்தங்களை அல்லது திருவாய்மொழியை) ஸுப்ரதிஷ்டிதமாக்கியருளினார் (ஆழ்வார்); | அன்றே | அந்த க்ஷணத்திலேயே |
| | | அடிமைப் பயன் | (ஆழ்வார் திருவடிகளில்) கைங்கரியம் செய்வதையே பயனாக வுடைத்தாய்த்து. |

பயனன்றாகிலும் பாங்கலராகிலும் *
செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான் *
குயில்நின்றால்பொழில்சூழ் குருகூர்நம்பி *
முயல்கின்றேன் உன்றன்மொய்கழற்கன்பையே. (10)

| | | | |
|---|---|---|---|
| பயன் அன்று ஆகிலும் | (பிறர் திருந்துவதால் (தமக்கொரு பயனில்லாமற் போனாலும் | குயில்நின்று ஆல் பொழில் சூழ் குருகூர் | குயில்களானவை நின்று ஆரவாரஞ் செய்யப் பெற்ற சோலைகளாலே சூழப்பட்ட திருநகரியிலே (எழுந்தருளியிருக்கிற) |
| பாங்கு அலர் ஆகிலும் | (அவர்கள் திருந்துகைக்குப் பாங்காக அமையாமற் போனாலும் | நம்பி! | ஆழ்வாரே! |
| செயல் | தமது அநுஷ்டானத்தாலே | உன் தன் | தேவரீருடைய |
| நன்றாக திருத்தி | நன்றாக சிக்ஷித்து | மொய் கழற்கு | சிறந்த திருவடிகளில் |
| | | அன்பையே | அன்புஉண்டாவதைக் |
| பணிகொள்வான் | (அவர்களை) ஆட்கொள்வதற்காக | முயல்கின்றேன் | குறித்தே முயற்சி செய்கிறேன். |

அன்பன்றன்னை அடைந்தவர்கட்கெல்லாம்
அன்பன் * தென்குருகூர் நகர்நம்பிக்கு *
அன்பனாய் மதுரகவி சொன்னசொல்
நம்புவார்பதி * வைகுந்தங்காண்மினே. (11)

| | | | |
|---|---|---|---|
| அன்பன் தன்னை | ஆச்ரித பக்ஷபாதியானஎம்பெருமானை | அன்பன் ஆய் | பக்தனாயிருந்து கொண்டு |
| அடைந்தவர் கட்குஎல்லாம் | ஆச்ரயித்தவர்களான ஸகல பாகவதர் பக்கலிலும் | மதுரகவி சொன்ன சொல் | மதுரகவி அருளிச்செய்த இத்திவ்வியப் பிரபந்தத்தை |
| அன்பன் | பக்தியையுடையரான | நம்புவார் | (தங்களுக்குத் தஞ்சமாக) விச்வஸித்திருப்பவர்களுக்கு |
| தென் குருகூர் நகர் நம்பிக்கு | நம்மாழ்வார் விஷயத்திலே | பதி | வாஸஸ்தானமாவது |
| | | வைகுந்தம் காண்மின் | —பரமபதமாம். |

மதுரகவியாழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## கோயில் திருவாய்மொழி

---

"அத்யயந ஜ்ஞாநாநுஷ்டாநங்களாலே ப்ராஹ்மண்யமாகிறாப்போலே சந்தங்களாயிரமும் அறியக் கற்று வல்லாரானால் வைஷ்ணவத்வஸி*த்தி" என்பது ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தி. நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழி ஆயிரத்தையும் அறியக் கற்று வல்லவர்களுக்கே ஸ்ரீவைஷ்ணவத்வம் ஸித்திக்குமென்றது. எந்த விஷயத்திலும் ப்ரதாநகல்பம், அநுகல்பம் [அதாவது - முக்யபக்ஷம், கௌணபக்ஷம்] என்று இரண்டு உண்டாதலால் திருவாய்மொழி யாயிரத்தையும் அதிகரிக்கமாட்டாதவர்களுக்காக அநுகல்பமாய் கோயில் திருவாய்மொழியைப் பரமகாருணிகர்களான நம் பூருவாசாரியர்கள் நிபந்தித்தருளினார்கள். நைமித்திக விசேஷங்களில் திருவாய்மொழி யாயிரத்தையும் ஸேவிக்க இயலாத போதைக்கு ஸௌகரியமாகவும் இத்தக் கோயில் திருவாய்மொழி அமைக்கப்பட்டது.

திருவாய்மொழி யாயிரத்தில் ஒவ்வொரு நூறிலும் ஸாரமான ஒவ்வொரு பதிகம் எடுத்து இது அமைக்கப்பட்டுள்ளது. முதற்பத்திலும் பத்தாம் பத்திலும் மாத்திரம் இரண்டிரண்டு பதிகங்கள்எடுத்துக் கொள்ளப்பட்டன. ஆக, பன்னிரண்டு பதிகங்கள் [நூற்றிருபது பாசுரங்கள்] கோயில் திருவாய்மொழி யென்றுணர்க.

அவற்றின் அடைவு வருமாறு:—

1. முதற்பத்தில் தொடக்கத்திலேயுள்ள *உயர்வற* *வீடுமின் என்கிற இரண்டு பதிகங்கள்.
2. இரண்டாம் பத்தில் திருமாலிருஞ்சோலைமலை விஷயமான *கிளரொளி என்கிற பத்தாம் பதிகம்.
3. மூன்றாம்பத்தில் திருவேங்கடமலை விஷயமான *ஒழிவில்காலமெல்லாம்* என்கிற மூன்றாம் பதிகம்.
4. நாலாம்பத்தில் திருக்குருகூர் விஷயமான *ஒன்றுந்தேவு முலகும்* என்கிற பத்தாம் பதிகம்.
5. ஐந்தாம்பத்தில் திருக்குடந்தை விஷயமான *ஆராவமுதே* என்கிற எட்டாம் பதிகம்
6. ஆறாம்பத்தில் திருவேங்கடமலை விஷயமான *உலகமுண்ட* என்கிற பத்தாம் பதிகம்.
7. ஏழாம்பத்தில் கோயில் விஷயமான *கங்குலும் பகலும்* என்கிறஇரண்டாம் பதிகம்.
8. எட்டாம்பத்தில் பாகவத சேஷத்வ ப்ரதிபாதகமான *நெடுமாற்கடிமை* என்கிற பத்தாம் பதிகம்.
9. ஒன்பதாம்பத்தில் திருக்கண்ணபுரம் விஷயமான*மாலை நண்ணி* என்கிற பத்தாம் பதிகம்.
10. பத்தாம்பத்தில் அர்ச்சிராதி கதியநுபவ விஷயமாயும் அவாவற்றுவீடுபெற்ற விஷயமாயும் முடிவிலுள்ள *சூழ்விசும் பணிமுகில்* முனியே நான்முகனே* என்கிற இரண்டு பதிகங்கள்.

ஆக இப்பன்னிரண்டு பதிகங்களுக்குக் கோயில் திருவாய்மொழியென்று தொன்று தொட்டு வழங்குந் திருநாமம். திருநாராயணபுர ப்ராந்தத்தில் *ஒருநாயகமாய்* (4—1.) என்கிற பதிகத்தையும் சேர்த்து வழங்குவர்.

---

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## திருவாய்மொழித் தனியன்கள்

---

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதகம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம்,
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்.

| | | | |
|---|---|---|---|
| பக்த அம்ருதம் | தொண்டர்கட்கு அமுதமாயிருப்பதும் | ஸ்ரீசடகோப வாங்மயம் | நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்திமயமான |
| விச்வ ஜந அநுமோதகம் | ஸகல ஜனங்களையும் ஆனந்திக்கச் செய்வதும் | த்ராவிட வேத ஸாகரம் | தமிழ் வேதக் கடலை |
| ஸர்வ அர்த்ததம் | ஸமஸ்த புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லதும் | | |
| ஸஹஸ்ர சாகா உபநிஷத் ஸமாகமம் | ஆயிரக்கணக்கான சாகைகளையுடைய உபநிஷத்துக்களின் திரட்சியாயிருப்பதும் | அஹம் | அடியேன் |
| | | நமாமி | ஸேவிக்கிறேன். |

* * *—திருவாய்மொழி ஒருகடலாக ரூபணம் செய்யப்படுகின்றது. கடலுக்குள்ள தன்மையடங்கலும் திருவாய்மொழிக்கும் உண்டெனன்று ஐந்து விசேஷணங்களினால் நிரூபிக்கப்படுகின்றது.

திருவழுதிநாடென்றுந் தென்குருகூரென்றும்
மருவினியவண்பொருநலென்றும்—அருமறைகள்
அந்தாதிசெய்தானடியிணையே யெப்பொழுதும்
சிந்தியாய்நெஞ்சேதெளிந்து.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே! | அரு மறைகள் | அருமையான வேதங்களை |
| திருவழுதி நாடு என்றும் | திருவழுதி நாடென்கிற தேசத்தை அநுஸந்தித்தும் | அந்தாதி செய்தான் | அந்தாதித் தொடையான திருவாய்மொழி முகத்தாலே பாடின ஆழ்வாருடைய |
| தென் குருகூர் என்றும் | அழகிய திருக்குருகூரென்கிற திவ்ய தேசத்தை அநுஸந்தித்தும் | | |
| மருவ இனிய வண் பொருநல் என்றும் | ஆசைப்படும்படி போக்யமாய் அழகியதான தாமிரபர்ணியாற்றை அநுஸந்தித்தும், | அடி இணையே | உபயபாதங்களையே |
| | | எப்பொழுதும் | இடைவிடாமல் |
| | | தெளிந்து | தெளிவுடனே |
| | | சிந்தியாய் | சிந்தை செய்யக்கடவை. |

* * *—ஆழ்வாருடைய திருவடிகளை அநுஸந்திக்கும்போது அவரது திருவவதாரஸ்தலமான திருநகரியையும், அது இருக்கும் நாடாகிய வழுதிவளநாட்டையும், அந்நாட்டுக்கு அலங்காரமாய் ஆழ்வார்க்குப் புராண நிரூபகமுமான தாமிரபரணீ திவ்யநதியையும் அநுஸந்தித்துப் பின்பு 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்னவேணுமென்கிறது. இதனால் உத்தேச்ய வஸ்துவின் ஸம்பந்தஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களும் உத்தேச்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியிடப்பட்டதாகும்.

மனத்தாலும்வாயாலும்வண்குருகூர்பேணும்
இனத்தாரையல்லாதிறைஞ்சேன் —தனத்தாலும்
ஏதுங்குறைவிலேன் எந்தைசடகோபன்
பாதங்கள் யாமுடையபற்று.

| | | | |
|---|---|---|---|
| மனத்தாலும் | நெஞ்சினாலும் | ஏதும் குறைவு இலேன் | எவ்விதமான குறையுமுடையேனல்லேன்; (எதனாலென்னில்) |
| வாயாலும் | வாக்கினாலும் | | |
| வண் குருகூர் பேணும் | திருநகரியை ஆதரிக்கின்ற | எந்தை சடகோபன் | அஸ்மத் ஸ்வாமியான நம்மாழ்வாருடைய |
| இனத்தாரை அல்லாது | கோஷ்டியில் சேர்ந்தவர்களைத்தவிர (மற்றையோர்களை) | பாதங்கள் | திருவடிகள் |
| இறைஞ்சேன் | வணங்கமாட்டேன்; | யாமுடைய | நம்முடைய |
| தனத்தாலும் | செல்வத்தினாலும் | பற்று | ஆதாரமாயிராநின்றது, |

* * *—ஆழ்வார் திருநகரியையே போற்றிக்கொண்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் அந்வயித்த மஹான்களைத் தவிர மற்று எவரையும்வணங்கமாட்டானென்றது, எப்போதும் அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகளையே வணங்குவேனென்றபடி.

முன்னடியில் இறைஞ்சேன் என்று ஒருமையாகச் சொல்லிப் பின்னடியில் யாமுடைய என்றுபன்மையாகச்சொன்னது, இயல்புபற்றியதனித்தன்மைப் பன்மை ஸ்வஸம்பந்திகளையுங் கூட்டிக் கொண்டு பேசுகிறாரென்னவுமாம். (*)

ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமானுசமுனிதன் [ருஞ்
வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றேன் —ஆய்ந்தபெ
சீரார்சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும்
பேராதவுள்ளம்பெற.

| | | | |
|---|---|---|---|
| ஆய்ந்த | குற்றங் கலசாத | உள்ளம் | நெஞ்சை |
| பெருசீர் | சிறந்ததிருக்குணங்களினால் | பெற | பெறும் பொருட்டு |
| ஆர் | பரிபூர்ணரான | ஏய்ந்த பெருகீர்த்தி இராமாநுசமுனிதன் | தகுதியான பெரும் புகழையுடைய எம்பெருமானாரது |
| சடகோபன் | நம்மாழ்வார் அருளிச்செய்த | | |
| செந்தமிழ் வேதம் | செவ்விய தமிழ் வேதத்தை | | |
| தரிக்கும் | தாங்கிக் கொள்ளவல்லதாய் | வாய்ந்த பாதம் மலர் | பொருத்தமான திருவடித் தாமரைகளை |
| பேராத | வேறொன்றில் செல்லமாட்டாததான | வணங்குகின்றேன் | தொழுகின்றேன். |

* * *—மேல் தனியனில் "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்னப்படுதலால் திருவாய்மொழியை வளர்த்தவரான எம்பெருமானாருடைய திருவருளின்றித் திருவாய்மொழியை மனப்பாடமாகத் தரிக்கவல்ல சக்தி வாய்க்க மாட்டாதாதலால், செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராதவுள்ளம் பெறுதற்காக இராமாநுசனது மலர்ப்பாதம் வணங்குகின்றேனென்கிறது இதில்.

"எங்கள் கதியே யிராமாநுசமுனியே, சங்கை கொடுத்தாண்ட தவராசா, பொங்குபுகழ் மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும், தங்குமனம் நீயெனக்குத் தா" என்ற பெரியதிருமொழித்தனியனையும் இங்கு ஸ்பரிப்பது.

வான்திகழுஞ்சோலை மதிளரங்கர்வண்புகழ்மேல்
ஆன்றதமிழ்மறைகளாயிரமும்—ஈன்ற
முதற்றாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த
இதத்தாயிராமாநுசன்.

| | | | |
|---|---|---|---|
| வான் திகழும் சோலை | ஆகாசத்தளவும் ஓங்கிவிளங்குகின்ற சோலைகளையும் | தமிழ் மறைகள் ஆயிரமும் | தமிழ் வேதமான ஆயிரம் பாசுரங்களையும் |
| மதிள் | ஸப்த ப்ராகாரங்களையும் உடைத்தான | ஈன்றமுதல்தாய் | பெற்ற முக்கியமான மாதா |
| | | சடகோபன் | நம்மாழ்வாராவர். |
| அரங்கர் | திருவரங்கத்தில் பள்ளி கொண்ட எம்பெருமானுடைய | மொய்ம்பால் | மிடுக்குடனே |
| | | வளர்த்த | அதனை வளர்த்த |
| | | இதம் தாய் | ஹிதமான மாதா |
| வண் புகழ் மேல் ஆன்ற | திருக்கல்யாண குண விஷயமாக அமைந்த | இராமாநுசன் | எம்பெருமானாராவர். |

* * *—கீழ்த் தனியனிலே "செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம்பெற—இராமாநுச முனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்" என்று பேசும்படி எம்பெருமானார்க்கும் திருவாய்மொழிக்குமுள்ள தொடர்பை வெளியிடுவது இப்பாசுரம். உலகத்தில் பிரஜைகளுக்குப்பெற்றதாய் என்றும்வளர்த்த தாய் என்றும் இரண்டுதாய்மார் ஏற்படுவதுபோல் திருவாய்மொழியாகிற ப்ரஜைக்கும் இரண்டு தாய்மாருண்டு; அவர்களாகிறார் நம்மாழ்வாரும் எம்பெருமானாரும். ஆழ்வார் பெற்றருளினர்; எம்பெருமானார் போஷித்தருளினார். கண்ணபிரானுக்கு தேவகிப் பிராட்டியும் யசோதைப்பிராட்டியும் போலே.

மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும்
தக்கநெறியுந் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும்வாழ்வினையு மோதுங்குருகையர்கோன்.
யாழினிசைவேதத்தியல்.

| | | | |
|---|---|---|---|
| குருகையர் கோன் | திருநகரியிலுள்ளார்க்குத் தலைவரான ஆழ்வார் (அருளிச்செய்த) | தக்க நெறியும் | ஸ்வரூபாநுரூபமான உபாயத்தின் ஸ்வரூபத்தையும் |
| யாழின் இசை வேதத்து இயல் | வீணாகானம்போன்ற திருவாய் மொழிப் பாசுரங்கள் | தடை ஆகி தொக்கு இயலும் ஊழ் வினையும் | (பகவத்ப்ராப்திக்குப்) பிரதிபந்தமாகிச் சேர்ந்து கிடக்கிற முன்னை வினைகளாகிற விரோதி ஸ்வரூபத்தையும் |
| மிக்க இறை நிலையும் | ஸர்வோத்க்ருஷ்டனான எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் | வாழ்வினையும் | வாழ்வாகிற பரம புருஷார்த்தஸ்வரூபத்தையும் |
| மெய்யாம் உயிர் நிலையும் | நித்யனான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும் | ஓதும் | கூறுவன. |

எம்பெருமானே ஸர்வஸ்மாத்பரன், ஜீவாத்மா அவ்வெம்பெருமான் பக்கலில் சேஷத்வத்தையே தனக்கு நிரூபகமாகவுடையவனாயிருப்பன், சரணாகதியே எம்பெருமானைப் பெறுதற்கு வழி, பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமாகிற விவையே பிரதி

பந்தகம், ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி விழுவிலா வடிமைசெய்வதே பரமபுருஷார்த்தம் என்கிற இவ்வைந்து அர்த்தங்களும் இத்திருவாய்மொழியில் பன்னிப்பன்னி யருளிச்செய்யப் படுகின்றன. ஆதலால் அர்த்த பஞ்சகமே திருவாய்மொழிக்கு ப்ரமேயமென்றது பொருந்தும்.

[தனியன் உரை முற்றிற்று.]

ஸ்ரீ.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# கோயில் திருவாய்மொழி

---

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

## திருவாய்மொழியில்—முதற்பத்து—முதல் திருவாய்மொழி

உயர்வறவுயர்நலம் உடையவன்யவனவன் *
மயர்வறமதிநலம் அருளினன்யவனவன் *
அயர்வறுமமரர்கள் அதிபதியவனவன் *
துயரறுசுடரடி தொழுதெழென்மனனே. 1

| | | | |
|---|---|---|---|
| என் மனனே | எனது மனமே! | அருளினன் | (அடியேனுக்குக்) கிருபை பண்ணினவன் |
| உயர்வு அற | (தன்னைப் பார்க்கிலும்) உயர்த்தி இல்லாதபடி. | யவனவன் | யாவனொருவனோ; |
| உயர் | உயர்ந்த | அயர்வு அறும் | மறப்பு இல்லாத |
| நலம் | (ஆனந்தம் முதலிய) கல்யாண குணங்களை | அமரர்கள் | நித்யஸூரிகளுக்கு |
| உடையவன் | (சுயமாக) உடைத்தானவன் | அதிபதி யவன் | ஸ்வாமி யாவனொருவனோ |
| யவனவன் | யாவனொருவனோ, | அவன் | அந்த எம்பெருமானுடைய |
| மயர்வு அற | அஜ்ஞானம் நசிக்கும்படி | துயர் அறு சுடர் அடி | துக்கங்களைப் போக்குகிற சோதிமயமான திருவடிகளை |
| மதி நலம் | ஞானத்தையும் பக்தியையும் | தொழுது | வணங்கி |
| | | எழு | நீ கடைத்தேறக்கடவை. |

* * *—இதில், மஹோபகாரங்களைத் தமக்குச் செய்தருளின எம்பெருமானுடைய திருவடிகளைத் தொழுது மேன்மை பெறும்படியாக ஆழ்வார் தமது திருவுள்ளத்திற்கு உபதேசிக்கிறார். புறமதத்தவருடைய கொள்கைப்படி எம்பெருமான் நிர்க்குணனல்லன், ஸமஸ்த கல்யாணகுணாத்மகன் என்கிற வேதாந்த ஸித்தாந்தத்தை முதலடியிலே வெளியிட்டருளுகிறார். இதனால், எம்பெருமான் தனது திருக்கல்யாண குணங்களைக் காட்டி இவ்வாழ்வாரை ஈடுபடுத்திக்கொண்டமை விளங்கும். .... .... .... 1

மனனகமலமற மலர்மிசையெழுதரும் *
மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன் *
இனனுணர்முழுநலம் எதிர்நிகழ்கழிவினும் *
இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே. 2

| | | | |
|---|---|---|---|
| மனனகம் | மனத்திலே யிருக்கிற | மிசை எழுதரும் | மேலே மேலே விருத்தி யடைகிற |
| மலம் அற | (காமம் கோபம் முதலிய தீக்குணங்கள் கழியக் கழிய (அதனால்) | மனன் உணர்வு | மானஸ ஜ்ஞான மென்கிற யோக வுணர்ச்சியால் |
| மலர் | மலர்ந்ததாகி | அளவிலன் | அளவிடப்படாதவனும் |

* * *—ஸாதநாநுஷ்டானம் என் பக்கலில் ஒன்றுமில்லையென்று சொல்லிக் கொண்டே ஆசைப்பட்டு நாக்கு நீட்டினால் கிடைக்குமோ! என்று எம்பெருமான் திருவுள்ளமாக, ஜ்ஞாந சக்திகளால் குறையற்றவர்களான நீலகண்ட சதுர்முக ஸஹஸ்ராக்ஷ ப்ரப்ருதிகளுங் கூடத் தங்களுடைய உபாய தாரித்ரியத்தைச் சொல்லிக் கொண்டன்றோ வந்து உன்னைக் காணப் பெறுகிறது என்கிறார். "நோலாதாற்றேனுன பாதங்காண" என்பது--நீலார் கண்டத்தம்மானும் நிறைநான்முகனு மிந்திரனும் சொல்லும் பாசுரமாயிற்று. 'பிரானே! உன் திருவடிகளைக் காண்கைக்கு ஸாதநாநுஷ்டானம் பண்ணாதே யிருந்து வைத்து உன்னையொழிய ஆற்ற மாட்டேன்' என்பதாம் அந்தத் தேவர்களின் வார்த்தை.

சேலேய்கண்ணார் பலர் சூழ விரும்பும்—கயல்போன்ற கண்களையுடையவர்களென்று ஸ்த்ரீகளைச் சொல்லுகிறது; ப்ரக்ருதத்தில் அவரவர்களுடைய பத்நிகளைச் சொல்லிற்றாகிறது; தேவர்கள் வந்து சரணம் புகும்போது தாங்கள் தனித்து வருகையன்றிக்கே மணாட்டிமார்களோடு கூடி வருவர்களாம்.

மாலாய் மயக்கி அடியேன்பால் வந்தாய்போலே வாராய்—மாலாய் மயக்கி வந்தாய்போலே அடியேன்பால் வாராய் என்று அந்வயிப்பது. மால் என்று கண்ணபிரானைச் சொல்லுகிறது. கண்ணபிரானாய்ப் பிறந்து வியாமோஹ சேஷ்டிதங்களைச் செய்து வஸுதேவாதிகள் முன்னே வந்து நின்றாப்போலே என்முன்னே வந்து நிற்கவேணுமென்று பிரார்த்தித்தபடி. 8

வந்தாய்போலேவாராதாய் வாராதாய் போல்வருவானே*
செந்தாமரைக்கண்செங்கனிவாய் நால்தோளமுதே! யெனதுயிரே!*
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே!*
அந்தோவடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே, 9

| | | | |
|---|---|---|---|
| வந்தாய் போலே வாராதாய் | கைக்கு எட்டினாற் போலே யிருந்து எட்டாதவனே! | எனது உயிரே | எனக்கு உயிரானவனே! |
| வாராதாய்போல் வருவானே | எட்டாதவன் போலிருந்து கிட்டி நிற்பவனே! | சிந்தா மணிகள் பகர் | சிறந்த ரத்னங்களின் ஒளியானது |
| செம் தாமரை கண் | செந்தாமரை போன்ற திருக்கண்களையும் | அல்லை பகல் செய் | இரவையும் பகலாக்கு மிடமான |
| செம் கனி வாய் | செங்கனி போன்ற திருப்பவளத்தையும் | திருவேங்கடத்தானே | திருமலையில் வாழ்பவனே! |
| நால் தோள் | நான்கு திருத்தோள்களையுமுடைய | அந்தோ | ஐயோ! |
| அமுதே | பரம போக்யனே! | உன பாதம் | உனது திருவடிகளை |
| | | அடியேன் | அருமைச் சுவடறிந்த நான் |
| | | இறையும் அகலகில்லேன் | ஒரு க்ஷணகாலமும் பிரிந்திருக்கவல்லேனல்லேன். |

* * *—தம்முடைய விச்லேஷ வ்யஸநத்தைக் கனக்க அருளிச் செய்கிறார். வந்தாய் போலே வாராதாய்—மாநஸாநுபவம் கரைபுரண்டு போகும்போது நோக்கினால் பாஹ்ய ஸம்ச்லேஷமும் பெற்றோம் என்றெண்ணி த்ருப்தி பிறக்கும்படியா யிருக்குமே; அத்தை மெய்யென்றெண்ணி அணைக்கைக்குக் கைநீட்டினால் கைக்கு எட்டாதபடியன்றோ இருப்பது; அதைச் சொல்லுகிறது இங்கு. வாராதாய் போல் வருவானே!—வந்து தோற்றுகைக்கு ப்ரஸக்தியில்லையென்று நிச்சயித்து ஆசையற்றுக் கிடக்குங்கால், கேட்பாரற்ற ஸ்வாதந்த்ரியத்தாலும் அப்ரதிஹத ஸங்கல்பத்தாலும் ஆகஸ்மிகமாக வந்து நிற்பது முண்டே பகவானிடத்தில்; அதைச் சொல்லுகிறது.

[சிந்தாமணிகள் இத்யாதி] நெஞ்சால் நினைத்தவாறே எதையும் அளிக்கவல்ல ரத்னத்திற்குச் சிந்தாமணி யென்று பெயர். அதுபோற் சிறந்த ரத்னங்களை இங்குச் சிந்தாமணிகளென்கிறது. திருமலையிலுள்ள ரத்னங்களைச் சொன்னதாகவுமாம்; திருவேங்கடமுடையானுடைய திருமேனியிலணிந்துள்ள ரத்னங்களைச் சொன்னதாகவுமாம். அவற்றினுடைய பகர்—ஒளியானது, அல்லைப்பகல் செய்யாநின்றதாம்; எப்போதும் பகலாகவே காண்கிறதாயிற்று. 9

அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா !*
நிகரில்புகழாயுலகம்மூன்றுடையாய்! என்னையாள்வானே !*
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே;*
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே. 10

| பதம் | பொருள் |
|---|---|
| அலர்மேல் மங்கை | பூவில் வாழ்மகளான பெரிய பிராட்டியார் |
| இறையும் அகலகில்லேன் என்று | ஒரு க்ஷணமும் பிரிந்திருக்க மாட்டேனென்று சொல்லிக் கொண்டு |
| உறை மார்பா | நித்யவாஸம் பண்ணப் பெற்ற திருமார்வை யுடையவனே! |
| நிகர் இல்புகழாய் | ஒப்பற்றதானபுகழை யுடையவனே ! |
| உலகம் மூன்று உடையாய் | சேதநாசேதநங்களுக்கெல்லாம் ஸ்வாமியே! |
| என்னை ஆள்வானே | நீசனை என்னையு மடிமை கொள்பவனே! |
| நிகர் இல் அமரர் | ஒப்பற்றவர்களான தேவர்களும் |
| முனி கணங்கள் | மஹர்ஷி ஸமூஹங்களும் |
| விரும்பும் | விரும்பிவந்து பணியுமிடமான |
| திருவேங்கடத்தானே | திருமலையில் வாழ்பவனே. |
| புகல் ஒன்று இல்லா அடியேன் | அநந்யகதியான நான் |
| உன் அடி கீழ் | உனது திருவடி வாரத்திலே |
| அமர்ந்து புகுந்தேன் | மிகப் பொருத்தமாக அந்வயித்து விட்டேன். |

* * *—[அகலகில்லேன்] கீழ் ஒன்பது பாட்டாலும் சரண்யனான ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபத்தையும் தம்முடைய ஆற்றாமையையும் சொன்னார்; இப்பாட்டில், தம்முடைய அபேக்ஷிதம் சடக்கென ஸித்திக்கைக்காகப் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும் அநந்யகதித்வத்தையும் தெரிவித்துக்கொண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம் புகுகிறார்.

எம்பெருமானுடைய திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகின்ற பெரிய பிராட்டியார் ‘இறையும் அகலகில்லேன், இறையும் அகலகில்லேன்’ [ஒரு கணப்பொழுதும் பிரிந்திருக்கமாட்டேன்] என்று இதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருக்கிறாளாம். ஒரு நிமிஷமும் பிரியாதே நித்ய ஸம்ச்லேஷத்துடனிருக்கும்போது அகலுகைக்கு ப்ரஸக்திதானுமில்லையாயிருக்க இந்த வார்த்தை எதற்காகச்சொல்லவேணுமென்னில், போக்யதையின் கனத்தைப் பார்த்தவாறே ஐயோ ! அகல நேர்ந்துவிடுமோ என்னவோவென்று அதிசங்கை யுண்டாகக்கூடியது; அவ்வதிசங்கை சொல்லுவிக்கச்சொல்லுகிறபடியென்ப.

உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேன்—ஆக இவ்வளவாலும் த்வயத்தில் பூர்வ கண்டம் அநுஸந்திக்கப்பட்டதாயிற்று. ப்ரபத்தியானது வாசிகமாகவும் காயிகமாகவும் மாநஸிகமாகவும் உண்டு. ‘என்னை நீ ரக்ஷிக்கவேணும்’ என்று வாயினால் பிரார்த்திக்கை வாசிகமாகும். *அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ * என்கிறபடியே பகவத் ப்ரஸாத ஹேதுபூதமான அஞ்ஜலியை ப்ரயோகித்தல், காகாசுரன் முதலானுரைப்போலே ரக்ஷகவஸ்து இருந்தவிடத்தே வருதல் செய்கை காயிகமாகும். திண்ணிய அத்யவஸாயங் கொள்ளுதல் மாநஸிகமாகும் * ஜ்ஞாநாந் மோக்ஷ மென்று சொல்லுகையாலே மாநஸிகமே சிறந்ததாகும். அதுவே இங்கு உற்றது. அஸ்மதாதிகளுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஆழ்வார் பாசுரமிட்டு அருளிச்செய்த வித்தனை ; இதனால் ஆழ்வாருடைய ப்ரபத்தி வாசிகமென்று கொள்ளக் கடவதன்று. .... 10

அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர்! வாழ்மினென்றென்றருள்கொடுக்கும் *
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும் *
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே. 11

| பதம் | பொருள் |
|---|---|
| அடியீர் | அடியவர்களே! |
| அடி கீழ் அமர்ந்து புகுந்து வாழ்மின் என்று என்று | 'நம்முடைய திருவடிகளின் கீழே புகுந்திருந்து உஜ்ஜீவித்துப் போருங்கள்' என்று அநவரதமும் காட்டிக் கொடுத்து. |
| அருள் கொடுக்கும் | க்ருபை பண்ணுகிறவனும் |
| படிகேழ் இல்லா பெருமானை | ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்தவனுமான ஸர்வேச்வரனைக் குறித்து |
| பழனம் குருகூர் சடகோபன் | நீர் நிலங்களையுடைய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் |
| முடிப்பான் சொன்ன | ஸம்ஸாரத்தை முடிப்பதற்காக அருளிச்செய்த |
| ஆயிரத்து | ஆயிரத்தினுள்ளும் |
| திருவேங்கடத்துக்கு இவை பத்தும் | திருவேங்கடமலை விஷயமான இத்திருவாய்மொழியை |
| பிடித்தார் பிடித்தார் | ஸாக்ஷாத்தாகவும் பரம்பரையாகவும் அவலம்பித்தவர்கள் |
| பெரிய வானுள் | பரமாகாச மென்கிற பரமபதத்திலே |
| வீற்றிருந்து நிலாவுவர் | நிலை நின்று வீற்றிருப்பர்கள். |

* * *—இத்திருவாய்மொழியைப் பற்றினவர்கள் திருநாட்டிலே நித்யாநுபவம் பண்ணப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றார். எம்பெருமானுடைய திருக்கையானது திருவடியை நோக்குமாபோலே யிருப்பதுண்டே; அதற்கொரு கருத்துக் காணலாம்; "அடியவர்களே! உங்களுக்கு இந்தத் திருவடியே தஞ்சம்; இதன்கீழே அமர்ந்து புகுந்து வாழ்ந்து போங்கள்" என்று தெரிவிப்பதாகக் கருத்துக்கொள்ளலாம்; அதனை இங்கு முதலடியில் காட்டியருளுகிறார். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * கிரீடம் ஸ்ரீரங்கே சயிது:* என்கிற ச்லோகத்தில், * நிஹீநாநாம் முக்யம் சரணமிதி பாஹுஸ்ததிதர: ஸ்புடம் ப்ரூதே பாதாம்புஜயுகளம் ஆஜாநு நிஹித:* என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம்.

முடிப்பான் சொன்னவாயிரம்—தம்முடைய மநோரதத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக அருளிச்செய்த ஆயிரமென்று உரைத்தார்கள் சில ஆசாரியர்கள்; "* பல நீ காட்டிப் படுப்பாயோ என்கிற ஸம்ஸார விரோதத்தை முடிக்கையிலே திருவுள்ளத்தாலே அருளிச்செய்த வாயிரம்" என்பர் நம்பிள்ளை.

திருவேங்கடத்துக்கு இவைபத்தும்—*வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் * என்ற திருவாய்மொழித் தனியன்படியே ஆயிரமும் ஸ்ரீரங்கநாதன் விஷயமாக ஸங்கல்பிக்கப்பட்டு அதில் இத்திருவாய்மொழி திருவேங்கடத்துக்குப் பகுத்துக் கொடுக்கப்பட்ட தென்பது நன்கு அறியக்கிடக்கின்றது.

'பிடித்தார் பிடித்தார்' என்ற இரட்டிப்புக்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர்; (1) சொல்லைப் பற்றினவர்கள். (2) பொருளைப் பற்றினவர்கள் என்று ஒரு நிர்வாஹம். பிடித்தாரைப் பிடித்தவர்கள் என்றபடியாய் ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகளைச்சொன்னதாக மற்றொரு நிர்வாஹம். ... ... ... ... 11

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

## திருவாய்மொழி ஏழாம்பத்து—இரண்டாந் திருவாய்மொழி—கங்குலும் பகலும்

அவதாரிகை :—நம்மாழ்வார் தாமான தன்மையிலேயிருந்து பேசுவதுதவிர, நாயகி பாசுரமாகவும் தோழிபாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் பேசுவதுமுண்டு சில திருவாய்மொழிகள். தாய்பாசுரமாகச் சொல்லுகிறதாயிற்று இத்திருவாய்மொழி. ஸ்ரீ ரங்கநாதன் திறத்திலே அதிமாத்ரமாக ஈடுபாடுகொண்ட ஆழ்வார் தமது நிலைமையைத் தம் வாயாலே பேசமாட்டாமல் தாய்வாயாலே பேசுகிறாராயிற்று.

கங்குலும்பகலும் கண்டுயிலறியாள் கண்ணநீர்கைகளாலிறைக்கும் *
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும் தாமரைக்கண்ணென்றேதளரும் *
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னும் இருநிலம்கைதுழாவிருக்கும் *
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்கின்றாயே. 1

செம் கயல் பாய் நீர் திரு அரங்கத்தாய் — அழகிய மீன்கள் துள்ளி விளையாடுமிடமான திருக்காவேரி சூழ்ந்த கோயிலில் சயனித்தருள்பவனே!

(இப் பெண்பிள்ளையானவள்)

கங்குலும் பகலும் — இரவும் பகலும்

கண் துயில் அறியாள் — கண்ணுறங்கப் பெறுகின்றிலள்;

கண்ண நீர் கைகளால் இறைக்கும் — கண்ணீரைக் கைகளாலே இறைக்க வேண்டும்படி தாரை தாரையாய்ப் பெருகவிடாநின்றாள்;

சங்கு சக்கரங்கள் — திருவாழி திருச்சங்குகள் இதோ ஸேவை ஸாதிக்கின்றன

என்று கை கூப்பும் — என்று சொல்லி அஞ்ஜலி பண்ணிநின்றாள்;

தாமரை கண் என்றே தளரும் — (என்னைக் கடாக்ஷித்த) தாமரைக் கண்களன்றோ இவை! என்று சொல்லித் தளர்கின்றாள்;

உன்னை விட்டு எங்ஙனே தரிக்கேன் என்னும் — '(பிரானே) உன்னைவிட்டுப் பிரிந்து தரிக்கவும் முடியுமோ?' என்கிறாள்;

இரு நிலம் — விஸ்தீர்ணமான பூதலத்தை

கை துழாவிருக்கும் — கைகளாலே துழாவா நின்றாள்; (ஸ்ரீ ரங்கநாதனே!)

இவள் திறத்து — இப்பெண்பிள்ளை விஷயத்தில்

என் செய்கின்றாய் — ஏது செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாய்?

* * *—ஸ்ரீரங்கநாதனே! இப் பராங்குசநாயகி உன்னைக் காணவாசைப்பட்டு அது பெறாமையாலே கண் துஞ்சாதே கண்ணீரைப் பெருக்கிக்கொண்டிரா நின்றாள்; பாவநாப்ரகர்ஷத்தாலே உன்னை நேரில் ஸேவிக்கப்பெற்றதாகக்கொண்டு சங்குசக்கரங்களை நோக்கிக் கைகூப்புகின்றாள்; 'இவையன்றோ என்னைக் கடாக்ஷித்தருளி இப்பாடுபடுத்தின தாமரைக்கண்கள்' என்று சொல்லி, இப்போது ஸாக்ஷாத்தாகக் காணப்பெறவில்லையே! என்று நொந்து தளர்கின்றாள்; உன்னைப் பிரிந்து தரிக்கமுடியவில்லையே! என்கிறாள்; தன்னுடைய ஸந்தாபத்தைப் பொறுக்கமாட்டாமே தரையெல்லாம் கையாலே துழாவா நின்றாள்; திருவரங்கநாதனே! இவள் திறத்து உமது ஸங்கல்பம் எத்தகைத்தோ தெரியவில்லையே! என்று தாய் அலமருகின்ற பாசுரமாயிருக்கிறபடி. ... ... ... ... 1

என்செய்கின்றாயென் தாமரைக்கண்ணாவென்னும் கண்ணீர்மல்கவிருக்கும் *
என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும் வெவ்வுயிர்த்துயிர்த்துருகும் *
முன்செய்தவினையேமுகப்படாயென்னும் முகில்வண்ணாதகுவதோவென்னும் *
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய் என்கொலோமுடிகின்றதிவட்கே. 2

(இப்பெண்பிள்ளையானவள்)

என் தாமரை கண்ணா — என்னை யீடுபடுத்திக் கொண்ட செந்தாமரைக் கண்ணனே!

என் செய்கின்றாய் என்னும் — என்னை என் செய்வதாகவிருக்கிறாய்? என்று சொல்லுகின்றாள்;

கண் நீர் மல்க இருக்கும் — கண்ணீர் ததும்பநின்று ஸ்தப்தையாயிருக்கின்றாள்;

எறி நீர் திரு அரங்கத்தாய் — அலையெறிகின்ற திருக்காவேரி சூழ்ந்த திருவரங்கத்தில் துயில்பவனே!

என் செய்கேன் என்னும் — (உன்னைப் பெறுதற்கு) என்ன செய்வேன்? என்கிறாள்;

வெவ்வுயிர்த்து உயிர்த்து உருகும் — வெப்பமாகப் பலகாலும் பெருமூச்சுவிட்டு கரைகின்றாள்;

முன்செய்த வினையே — முற்பிறவிகளிலே நான் பண்ணிவைத்த கருமமே!

முகப்படாய் என்னும் — என் கண்முன்னே வந்து நில் பார்ப்போம் என்கிறாள்;

முகில் வண்ணா — காளமேகவண்ணனான எம்பெருமானே!

இது தகவோ என்னும் — இதுதானோ உன்னுடைய க்ருபைக்கு லக்ஷணம்! என்கிறாள்;

இவ் உலகம் — இந்த ப்ரபஞ்சங்களையெல்லாம்

| | |
|---|---|
| முன் செய்து | முற்காலத்தில் ஸ்ருஷ்டித்து |
| உண்டு உமிழ்ந்து | (காலவிசேஷங்களிலே) உண்பதும் உமிழ்வதும் செய்து |
| அளந்தாய் | அளப்பதும் செய்து பல முகமாக ரக்ஷித்தருளும் பெருமானே! |
| இவட்கு | இங்ஙனே துடிக்கின்ற என் பெண் பிள்ளைக்கு |
| முடிகின்றது என் கொலோ | இந்தப் பரிதாபமெல்லாம்) என்னுய் முடியப்போகிறதோ? |

* * *—எம்பெருமான் என்னை இப்படி உபேக்ஷிக்கும்படி நான் என்ன பாவம் பண்ணிவிட்டேன்? அப்படி நான் செய்த பாவம் ஏதேனுமுண்டாகில் அது என்னெதிரே வந்து நிற்கட்டுமே யென்கிறுளென்பது "முன்செய்தவினையே முகப்படாயென்னும்" என்றதன் கருத்தாம். "தருவதோ" "தாவுஇதோ" என்பன பாடபேதங்கள். .... 2

வட்கிலளிறையும்மணிவண்ணாவென்னும் வானமேநோக்கும்மையாக்கும் *
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட ஒருவனேயென்னுமுள்ளுருகும் *
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய் காகுத்தாகண்ணனேயென்னும் *
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்திட்டாயே. 3

(இப் பெண்பிள்ளை)

| | |
|---|---|
| இறையும் வட்கு இலள் | சிறிதும் வெட்கமில்லாதவளாகி |
| மணி வண்ணா என்னும் | நீலமணி வண்ணனே! என்று கூப்பிடா நின்றுள்! |
| வானமே நோக்கும் | (யானைக்கு உதவ வந்தாப்போலே நமக்கும் உதவ வரக் கூடுமென்று) வானத்தையே நோக்குகின்றுள்; |
| மையாக்கும் | (எதிர்பார்த்தபடி வந்து தோன்றக்காணமையினுல்) மோஹமடைகின்றுள்; |
| உட்கு உடை அசுரர் | வலிமையுடையவர்களான அசுரர்களினுடைய |
| உயிர் எல்லாம் உண்ட | பிராணன்களை யெல்லாம் கவர்ந்த |
| ஒருவனே என்னும் | அத்விதீயனே! என்கிறுள்; |
| உள் உருகும் | உள்ளம் நீர்ப்பண்டமாய் உருகப் பெறுகின்றுள்; |
| கட்கு இலீ | கண்களுக்கு விஷயமாகமாட்டாதவனே! |
| காகுத்தா கண்ணனே! | ஸ்ரீ ராம க்ருஷ்ணவதாரங்கள் செய்து எல்லார் கண்ணுக்கும் விஷயமானவனே! |
| உன்னை காணும் ஆறு அருளாய் என்னும் | உன்னை நான் கண்ணாரக் காணும்விதம் அருளவேணு மென்கின்றுள்; |
| திண் கொடி மதிள் சூழ் திரு அரங்கத்தாய் | திடமான கொடிகள் விளங்கும்மதிள்களாலே சூழப்பட்ட திருவரங்கத்தில் துயிலும் பெருமானே! |
| இவள் திறத்து | இப் பெண்பிள்ளை விஷயமாக |
| என் செய்திட்டாய் | நீ செய்தது என்னே! |

இட்டகாலிட்டகையளாயிருக்கும் எழுந்துலாமயங்கும்கைகூப்பும் *
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்கும் கடல்வண்ணாகடியைகாணென்னும் *
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும் வந்திடாயென்றென்றேமயங்கும் *
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்சிந்தித்தாயே. 4

(இப் பெண்பிள்ளையானவள்)

| | |
|---|---|
| இட்ட கால் இட்ட கையள் ஆய் இருக்கும் | (சில சமயங்களிலே) கையும் காலும் இட்டது இட்டபடியேயிரா நின்றுள் |

(மற்றுஞ் சிலசமயங்களிலே)

| | |
|---|---|
| எழுந்து உலாம் | எழுந்து உலாவுகின்றுள் |
| மயங்கும் | மயங்கா நின்றுள்; |

கை கூப்பும் — (அப்படி மயங்கின தசையிலும்) கைகூப்புதல் தவிர்கின்றிலள் ;

காதல் கட்டமே என்று மூர்ச்சிக்கும் — (பகவத் விஷயத்திலே) காதலைத் தாங்குவது வெகு கஷ்டமென்று சொல்லி மூர்ச்சையடைகின்றாள்;

கடல்வண்ணா கடியை காண் என்னும் — கடல் வண்ணனே ! என் விஷயத்தில் நீ கடுமை கொண்டிருக்கிறாயே ! என்கிறாள் ;

வட்டம் வாய் நேமி வலம் கையா என்னும் — வட்டமான விளிம்பையுடைய திருவாழியை வலத்திருக்கையிலுடையவனே ! என்கின்றாள் ;

வந்திடாய் என்று என்றே மயங்கும் — வாராய் வாராய் என்று பலகாலும் அழைத்தும் வரக்காணாது மயங்குகின்றாள்;

சிட்டனே ! — பாமபவித்திரனே !

செழு நீர் திரு அரங்கத்தாய் — நீர்வளம் பொருந்திய கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே !

இவள் திறத்து என் சிந்தித்தாய் — இப்பெண்பிள்ளை விஷயமாக நீ சிந்தித்திருப்பது என்ன?

சிந்திக்கும்திசைக்கும்தேறும்கைகூப்பும் திருவரங்கத்துள்ளாயென்னும் *
வந்திக்கும் * ஆங்கேமழைக்கண்ணீர்மல்க வந்திடாயென்றென்றேமயங்கும் *
அந்திப்போதவுணனுடலிடந்தானே அலைகடல்கடைந்தவாரமுதே *
சந்தித்துன்சரணம்சார்வதேவலித்த தையலைமையல்செய்தானே. 5

அந்தி போது — மாலைப்பொழுதிலே

அவுணன் உடல் இடந்தானே — (நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி) இரணியனது உடலைப் பிளந்தவனே !

அலை கடல் கடைந்த ஆர் அமுதே — அலையெறிகின்றகடலை (த்தேவர்களுக்காக)க் கடைந்த ஆராவமுதமே

சந்தித்து உன் சரணமே சார்வது வலித்த தையலை மையல் செய்தானே — உன்னோடே கலந்து உன் திருவடிகளிலேயே லயிக்க வேணுமென்கிற திடமான அத்யவஸாயங்கொண்ட இப்பெண்பிள்ளையை மதி கெடுத்தவனே !

(இப் பெண்பிள்ளையானவள்)

சிந்திக்கும் — (ஏற்கனவே விதிவசமாக நேர்ந்திருந்த கலவியைப் பற்றிச்) சிந்தனை செய்கின்றாள் ;

திசைக்கும் — அறிவு அழியா நின்றாள்

தேறும் — (திடீரென்று) தெளிவு பெறுகின்றாள் ;

கைகூப்பும் — அஞ்சலி பண்ணுகின்றாள்;

திரு அரங்கத்து உள்ளாய் என்னும் — கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே ! என்கிறாள் ;

வந்திக்கும் — தலைவணங்கா நின்றாள் ;

ஆங்கே — அவ்வளவிலே

மழை கண் நீர் மல்க — கண்ணீர் தாரை தாரையாகப் பெருகநின்று

வந்திடாய் என்று என்றே மயங்கும் — (எம்பெருமானே!) வாராய் வாராய்என்றுபலகாலுஞ் சொல்லி வரக்காணாது) மோஹிக்கின்றாள்.

மையல்செய்தென்னைமனம்கவர்ந்தானேயென்னும் மாமாயனேயென்னும்
செய்யவாய்மணியேயென்னும் தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னும் *
வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும் *
பைகொள்பாம்பணையாயிவள்திறத்தருளாய் பாவியேன்செயற்பாலதுவே. 6

(இப் பெண்பிள்ளையானவள்,)

என்னை மையல் செய்து — என்னை வியாமோஹப்படுத்தி

மனம் கவர்ந்தானே என்னும் — மனதைக்கொள்ளை கொண்டவனே ! என்கிறாள் ;

| | |
|---|---|
| மா மாயனே என்னும் | மிகப்பெரிய மாயங்களையுடையவனே! என்கிறாள்; |
| செய்ய வாய் மணியே என்னும் | சிவந்த அதரசோபையை உடையாய்க்கொண்டு ! நீலமணி போன்றவனே என்கிறாள்; |
| தண் புனல் சூழ் திரு அரங்கத்து உள்ளாய் என்னும் | குளிர்ந்ததீர்த்தம் சூழ்ந்த கோயிலில் கண்வளர்ந்தருள்பவனே! என்கிறாள். |
| வெய்ய வாள் தண்டு சங்கு சக்கரம் வில் ஏந்தும் | (ஆச்ரித விரோதி விஷயத்தில்) வெப்பமே வடிவெடுத்த பஞ்சாயுதங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற |
| விண்ணோர் முதல் என்னும் | நித்யஸூரி நாதனே! என்கிறாள்; |
| பை கொள் பாம்பு அணையாய் | படமெடுத்த ஆதிசேஷன் மீது சயனித்தருள்பவனே! |
| இவள் திறத்து | இப் பெண்பிள்ளை விஷயமாக |
| பாவியேன் செயல்பாலது | பாவியேனான நான் செய்யக்கூடியது இருந்தால் அதை |
| அருளாய் | அருளிச்செய்யவேணும். |

* * *—இவள் விஷயத்தில் என்னால் செய்யத்தக்கது ஒன்றுமில்லையே! என்கிற கருத்தில் ஈற்றடி அமைந்தது. .... ... ... 6

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய் பற்றிலார்பற்றநின்றானே *
காலசக்கரத்தாய்கடலிடங்கொண்ட கடல்வண்ணா கண்ணனேயென்னும் *
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னும் என்தீர்த்தனேயென்னும் *
கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்கும் என்னுடைக்கோமளக்கொழுந்தே. 7

| | |
|---|---|
| என்னுடைய கோமளம் கொழுந்து | மிக மெல்லியலாளான என் மகள், |
| பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய் என்னும் | அவ்வவ்விடங்களுக்குத் தகுதியாக துன்பங்களையும் இன்பங்களையும் படைத்தவனே என்கிறாள். |
| பற்று இலார் பற்ற நின்றானே என்னும் | அசரண்ய சரண்யனே! என்கிறாள்; |
| கால சக்கரத்தாய் என்னும் | காலசக்ரத்திற்கு நிர்வாஹகனானவனே! என்கிறாள்; |
| கடல் இடம் கொண்ட கடல் வண்ணா என்னும் | திருப்பாற் கடலை இடமாகக் கொண்டகடல் வண்ணனே! என்கிறாள்; |
| கண்ணனே என்னும் | ஸ்ரீ கிருஷ்ணா என்கிறாள்; |
| சேல் கொள் தண் புனல் சூழ் திரு அரங்கத்தாய் என்னும் | மீன்கள் நிரம்பிய குளிர்ந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலில் வாழ்பவனே! என்கிறாள்; |
| என் தீர்த்தனே என்னும் | என்னைப் பவித்திரமாக ஆக்குமவனே! என்கிறாள்; |
| கோலம் மா மழை கண் பனி மல்க இருக்கும் | அழகு பொருந்திப் பெருத்துக்குளிர்ந்த கண்கள் நீர்பெருக நிற்கின்றாள். |

* * *—என்னும் என்கிற வினைமுற்று ஒவ்வொரு விளியோடும் அந்வயிக்கவுரியது. "பால துன்பங்களின்பங்கள் படைத்தாய்" என்றதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். எம்பெருமானே! நீ உலகில் இன்ப துன்பங்களைப் படைக்குமிடத்து அவ்வவ்விடங்களுக்குத் தகுதியாகவன்றோ படைப்பது; என்னால் தாங்கவொண்ணாத துன்பத்தைப் படைத்திருக்கின்றாயே! இஃது உனக்குத் தகுதியோ? என்பதான கருத்தை முக்கியமாகக் கொள்க. பால்—இடம்; பால—பாலவாக; இடங்களுக்கேற்ப என்றவாறு. ... ... 7

கொழுந்துவானவர்கட்கென்னும் குன்றேந்திக்கோ நிரைகாத்தவனென்னும் *
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்கும் அஞ்சனவண்ணனேயென்னும் *
எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும் எங்ஙனேநோக்குகேனென்னும் *
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாய் என்செய்கேனென்திருமகட்கே. 8

(இப்பெண்பிள்ளையானவள்)

வானவர்கட்கு கொழுந்து என்னும் — நித்ய ஸூரிகளுக்குத் தலையானவனே! என்கிறாள்;

குன்று ஏந்தி — கோவர்த்தன மலையைக் குடையாகவெடுத்து நின்று

கோ நிரை காத்தவன் என்னும் — பசுக்களின் கூட்டத்தைக்காத்தருளினவனே என்கிறாள்;

அழும் — கண்ணுங் கண்ணீருமாயிருக்கின்றாள்;

தொழும் — அஞ்ஜலி பண்ணுகின்றாள்;

ஆவி அனல வெவ்வுயிர்க்கும் — ஆத்மவஸ்து கொளுந்தும்படி வெப்பமாகப் பெருமூச்சுவிடா நின்றாள்;

அஞ்சனம் வண்ணனே என்னும் — அஞ்சனமேனியனே? என்கிறாள்;

(இக் கூக்குரலைக்கேட்டு எம்பெருமான் வரக்கூடுமென நினைத்து)

மேல் எழுந்து நோக்கி — மேலே தலையெடுத்துப் பார்த்து

இமைப்பு இலள் இருக்கும் — இமையாதகண்ணினளாய் இருக்கின்றாள்;

எங்ஙனே நோக்குகேன் என்னும் — எந்த ப்ரகாரத்தாலே உன்னைக்காண்பேன்? என்கிறாள்;

செழுதடம் புனல் சூழ் திரு அரங்கத்தாய் — மிகச் சிறந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே!

என் திரு மகட்கு — பிராட்டியோடொத்த என் பெண்மணிகள் விஷயத்தில்

என் செய்கேன் — எதைச் செய்வேன்? [லே

என்திருமகள்சேர்மார்பனேயென்னும் என்னுடையாவியேயென்னும் *
நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்ட நிலமகள் கேள்வனேயென்னும் *
அன்றுருவேழும்தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனேயென்னும் *
தென்திருவரங்கம்கோயில்கொண்டானே தெளிகிலேன்முடிவிவள்தனக்கே. 9

என் திரு மகள் சேர் மார்பனே என்னும் — எனக்குப் புருஷகார பூதையான பிராட்டி சேர்ந்த திரு மார்பை யுடையவனே! என்கிறாள்;

என்னுடை ஆவியே என்னும் — எனக்கு உயிராயிருப்பவனே! என்கிறாள்;

நின் திரு எயிற்றால் இடந்து நீ கொண்ட — உனது கோரப் பற்களாலே இடந்து எற்றுக் கொண்ட

நிலம் மகள் கேள்வனே என்னும் — பூமிப்பிராட்டிக்கு நாயகனே என்கிறாள்;

அன்று — முன் பொருகால்

உரு ஏழும் — இடிபோன்ற குரலையுடைய ரிஷபங்களேழையும்

தழுவி — மதமொழித்து

நீ கொண்ட — மணந்துகொண்ட

ஆய் மகள் அன்பனே என்னும் — நப்பின்னைப் பிராட்டிக்கு ப்ரியனே! என்கிறாள்;

தென் திரு அரங்கம் கோயில் கொண்டானே — ஸ்ரீரங்கநாதனே!

இவள் தனக்கு — இவளுக்கு

முடிவு தெளிகிலேன் — ஆர்த்தி முடியுமாறு அறிகின்றிலேன்.

முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும் மூவுலகாளியேயென்னும் *
கடிகமழ்கொன்றைச் சடையனேயென்னும் நான்முகக்கடவுளே◦யன்னும் *
வடிவுடைவானோர்தலைவனே யென்னும் வண்திருவரங்கனே யென்னும் *
அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே. 10

இவள் — இப் பெண்பிள்ளையானவள்

தனக்கு முடிவு ஒன்று அறிகிலேன் என்னும் — தனது ஆர்த்திக்கு முடிவு ஒன்றும் தெரியவில்லையே! என்கிறாள்;

மூ உலகு ஆளியே என்னும் — மூவுலகுக்கும் கடவுளான இந்திரனுக்கு அந்தர்யாமியே, என்கிறாள்;

கடி கமழ் கொன்றை சடையனே என்னும் — பரிமளம் மிக்க கொன்றை மாலையைச் சடையிலணிந்த சிவனுக்கு அந்தர்யாமியே! என்கிறாள்;

நான்முகக் கடவுளே என்னும் — பிரமதேவனுக்கு அந்தர்யாமியே! என்கிறாள்;

| | |
|---|---|
| வடிவு உடை வானோர் தலைவனே என்னும் | தன்னோடொத்த வடிவுடையரான நித்ய ஸூரிகளுக்கு நாதனே! என்கிறாள்; |
| வண் திரு அரங்கனே என்னும் | ஸ்ரீரங்கநாதனே! என்கிறாள்; |
| அடி அடையாதாள் போல் இவள் | திருவடிகளைக் கிட்டமாட்டாள் போலும் என்னும்படியிருந்தவிவள் |
| முகில் வண்ணன் அடி | மேகவண்ணனான அவனது திருவடிகளை |
| அணுகி அடைந்தனள் | கிட்டியடையப் பெற்றாள். |

முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன் மொய்புனற்பொருநல் *
துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன் *
முகில்வண்ணனடிமேல்சொன்னசொல்மாலை ஆயிரத்திப்பத்தும்வல்லார் *
முகில்வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே. 11

| | |
|---|---|
| முகில் வண்ணன் அடியை அடைந்து | மேகவண்ணனான எம்பெருமானுடைய திருவடிகளை யடைந்து |
| அருள் சூடி உய்ந்தவன் | அவனுடைய திருவருளைத் தலைக்கொண்டு உஜ்ஜீவித்தவரும். |
| மொய் புனல் பொருநல் | உத்தமதீர்த்தமான தாமிரபர்ணியினுடைய |
| துகில் வண்ணம் தூ நீர் சேர்ப்பன் | துகிலின் நிறம்போலே பரிசுத்தமான ஜலத்தின் கரையிலே சேர்ந்திருப்பவரும் |
| வண் பொழில் சூழ் வண்குருகூர் | வளம்மிக்க சோலைகள் சூழ்ந்த திருநகரிக்குத் தலைவருமான |
| சடகோபன் | ஆழ்வார் |
| முகில் வண்ணன் அடி மேல் சொன்ன | மேகவண்ணனான எம்பெருமானது திருவடிகளை நோக்கியருளிச் செய்த |
| சொல் மாலை ஆயிரத்து இப்பத்தும் வல்லார் | சொல் தொடையான ஆயிரத்தினுள் இப்பதிகத்தை ஓதவல்லவர்கள் |
| முகில் வண்ணம் வானத்து | முகில் வண்ணனுடைய நிழலீட்டாலே முகில் வண்ணமாயிருக்கின்ற பரமபதத்திலே |
| இமையவர் சூழ | நித்தியஸூரிகள் புடைசூழ |
| பேர் இன்பம் வெள்ளத்தே | ப்ரஹ்மானந்த ப்ரவாஹத்தில் |
| இருப்பர் | மூழ்கியிருக்கப் பெறுவார்கள். |

—

## திருவாய்மொழி—எட்டாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—நெடுமாற்கடிமை

பாகவத சேஷத்வமே பரமபுருஷார்த்த மென்று அறுதியிடுகிறார் இத்திருவாய் மொழியில்

நெடுமாற்கடிமைசெய்வேன்போல் அவனைக்கருதவஞ்சித்து *
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும்தவிர்ந்த சதிர்நினைந்தால் *
கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால் *
விடுமாறென்பதென்னந்தோ வியன்மூவுலகுபெறினுமே. 1

| | |
|---|---|
| நெடுமாற்கு | ஸர்வேச்வரனுக்கு |
| அடிமை செய்வேன் போல் | அடிமை செய்பவன் போலவிருந்து |
| அவனை கருத | அப்பெருமானை நினைத்தவளவிலே |
| தீ கதிகள் முற்றும் | (என்னிடத்திலிருந்த) தீவினைகளெல்லாம் |
| வஞ்சித்து | வஞ்சனைசெய்து[என்னோடு சொல்லாமலே] |
| தடுமாற்று அற்ற | நிச்சயமாக |
| தவிர்ந்த சதிர் நினைந்தால் | என்னை விட்டு நீங்கிப் போனபடியை ஆராய்ந்து பார்த்தால் |
| வியன் மூ உலகு பெறினும் | விஸ்தாரமான மூவுலகையும் பேறாகப் பெற நேர்ந்தாலுங் கூட (அதை உபேக்ஷித்து) |

| | |
|---|---|
| அவன் அடியார் அடியே கூடும் இது அல்லால் | பாகவதர்களின் திருவடிகளையே அடைவது தவிர |
| கொடு மா வினையேன் | பெரும் பாவியான நான் |
| விடும் ஆறு என்பது | (அந்த பாகவத சேஷத்வத்தை) விடுவதென்று ஒன்று உண்டோ? |
| அந்தோ | இதை நான் சொல்லவும் வேணுமோ? |

வியன்மூவுலகுபெறினும்போய்த் தானேதானேயானாலும்*
புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ்*
சயமேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி * இம்மையே
பயனேயின்பம்யான்பெற்றது உறுமோபாவியேனுக்கே. 2

| | |
|---|---|
| வியன் மூ உலகு பெறினும் | த்ரிலோக ஸாம்ராஜ்யத்தைப் பெற்றாலும், |
| போய் | அதற்கும் மேலாக |
| தானே தானே ஆனாலும் | தன்னைத் தானே யநுபவிக்கையாகிற கைவல்ய மோக்ஷம் பெற்றாலும் |
| புயல் மேகம் போல் திரு மேனி அம்மான் | மழைகாலத்து மேகம் போன்ற திருமேனி வாய்ந்த எம்பெருமானுடைய |
| புனை பூ கழல் அடி கீழ் | சாத்தின புஷ்பங்களையும் வீரக்கழலையு முடைத்தான திருவடி வாரத்திலே |
| சயமே | ஸ்வயம் ப்ரயோஜநமாக |
| அடிமை தலை நின்றார் | கைங்கரியத்தின் மேலெல்லையிலே நிலை நின்றவர்களுடைய |
| திரு தாள் வணங்கி | திருவடிகளைத் தொழுது |
| இம்மையே | இஹலோகத்திலேயே |
| யான் பெற்றது | நான் அடைந்தது |
| பயனே இன்பம் | புருஷார்த்தமான சுகமே; |
| பாவியேனுக்கு | பாவியான வெனக்கு |
| உறுமோ | (கீழ்ச்சொன்ன ஐச்வர்ய கைவல்யங்கள்) இப்பேற்றுக்கு ஒக்குமோ? |

உறுமோபாவியேனுக்கு இவ்வுலகுமூன்றுமுடன்நிறைய*
சிறுமாமேனிநிமிர்த்த என்செந்தாமரைக்கண்திருக்குறளன்*
நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார்*
சிறுமாமனிசராயென்னையாண்டார் இங்கேதிரியவே. 3

| | |
|---|---|
| சிறு மா மனிசர் ஆய் | வடிவில் சிறுத்து அறிவில் பெருத்தவர்களாயிருந்து கொண்டு |
| என்னை ஆண்டார் | என்னையீடுபடுத்திக்கொண்டவர்களான |
| அவன் அடியார் | பாகவதர்கள் |
| இங்கே திரிய | இந்நிலவுலகில் இருக்க, |
| அன்றி | அன்னவர்களுக்கு அடிமை பூண்டிருப்பது தவிர, |
| இவ் உலகம் மூன்றும் உடன் நிறைய சிறு மா மேனி நிமிர்த்த | இம்மூவுலகங்களும் ஏககாலத்தில் இடமடையும்படி தனது சிறிய பெரிய திருமேனியை வளரச் செய்த |
| செம் தாமரை கண் என் திரு குறளன் | புண்டரீகாக்ஷனும் எனக்கினியனுமான ஸ்ரீவாமநனுடைய |
| நறு மா விரை நாள் மலர் அடி கீழ் புகுதல் பாவியேனுக்கு உறுமோ | மிக்கபரிமளம் வாய்ந்த திருவடித் தாமரைகளிலே சென்று சேர்தல் எனக்குத் தகுமோ? |

இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென் இருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த*
செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கண்ணென்னம்மான்*
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப் புலன்கொள்வடிவென்மனத்ததாய்*
அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடவருளிலே. 4

முன் — முன்பொரு காலத்திலே
இரு மா நிலம் உண்டு உமிழ்ந்த — மிகப்பெரிய பூமியை யெல்லாம் தனது திரு வயிற்றிலே வைத்து நோக்கிப் பிறகு வெளிப்படுத்தின
கோலத்த — அழகு வாய்ந்த
செம் பவளம் வாய் — சிவந்த பவழம் போன்ற அதரத்தையுடைய
செம் தாமரை கண் என் அம்மான் — புண்டரீகாக்ஷனை எம்பெருமான்,
பொங்கு ஏழ் புகழ்கள் — பொங்கிக்கிளர்கின்ற தனது திருக்குணங்களானவை
வாய ஆய் — என் வாக்குக்கு விஷயமாகவும்
புலன் கொள் வடிவு — மனோஹரமான தனது வடிவு
என் மனத்தது ஆய் — என்மனத்திலுள்ளதாகவும்
அங்கு ஏய் மலர்கள் — அத்தலைக்கு ஏற்ற புஷ்பங்கள்
கைய ஆய் — என்கையிலுள்ளனவாகவும் பெற்று
வழிபட்டு ஓட அருளில் — பாகவதர்கள் செய்யும் கைங்கரிய மார்க்கத்திலே நானும் உடன்பட்டு நடக்கும்படியாக அருளுமாகில்
இங்கே திரிந்தேற்கு — (திருநாடு செல்ல விரும்பாதே) இந்த விபூதியிலேயே இப்படி திரிவேனான எனக்கு
இழுக்குற்றுஎன் — என்ன தாழ்வு?

வழிபட்டோடவருள்பெற்று மாயன்கோலமலரடிக்கீழ்*
சுழிபட்டோடும்சுடர்ச்சோதிவெள்ளத்து இன்புற்றிருந்தாலும்*
இழிபட்டோடுமுடலினிற்பிறந்து தன்சீர்யான்கற்று*
மொழிபட்டோடும்கவியமுதம் நுகர்ச்சியுறுமோமுழுதுமே. 5

வழிபட்டு ஓட அருள்பெற்று — நித்ய கைங்கரியம் பண்ணும் படியாக அவனது திருவருளைப் பெற்று
மாயன் — ஆச்சர்ய விபூதி யுக்தனை அந்த ஸர்வேச்வரனுடைய
கோலம் மலர் அடி கீழ் — அழகிய திருவடித் தாமரைகளின் கீழ்
சுழிபட்டு ஓடும் சுடர் சோதி வெள்ளத்து — சுழித்து ஓடுகிற சுடர்ச் சோதி வெள்ள மென்னும்படியான பரமபதத்திலே
இன்புற்று இருந்தாலும் — ஆனந்த வாழ்ச்சியாக இருக்கப் பெற்றாலும்
முழுதும் — கீழ்ச் சொன்ன ஐச்வர்ய கைவல்யாதிகள் எல்லாம் கூடினாலும்
இழிபட்டு ஓடும் உடலினில் பிறந்து — தாழ்ச்சியின் மிக எல்லையில் நிற்பதான சரீரத்திலே பிறந்து
தன் சீர் யான் கற்று — தன்னுடைய குணங்களை நான் அப்யஸித்து
மொழிபட்டு ஓடும் கவி அமுதம் — அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதி சொல்லாய் ப்ரவஹிக்கிற கவியாகிற அம்ருதத்தை
நுகர்ச்சி உறுமோ — பாகவதர்களோடு கூடி யநுபவித்து ரஸிக்கைக்கு ஒக்குமோ? (ஒவ்வாது.)

நுகர்ச்சியுறுமோமூவுலகின் வீடுபேறுதன்கேழில்*
புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கையென்னம்மான்*
நிகர்ச்செம்பங்கியெரிவிழிகள் நீண்டவசுரருயிரெல்லாம்*
தகர்த்துண்டுழலும்புட்பாகன் பெரியதனிமாப்புகழே. 6

தன் கேழ் இல் — தனக்கு ஒப்பின்றியே யிருப்பதாய்
புகர் — புகரை யுடைத்தாய்
செம் முகத்த — சீற்றத்தாலே சிவந்த முகத்தையுடைத்தான
களிறு — (குவலயாபீட மென்கிற) யானையை

| சொல் | பொருள் |
|---|---|
| அட்ட | கொன்று முடித்தவனும் |
| பொன் ஆழி கை | அழகிய திருவாழி மோதிர மணிந்த திருக்கையை யுடையவனும் |
| என் அம்மான் | எனக்கு ஸ்வாமியும் |
| நீகர் செம் பங்கி | தங்கள் ஜாதிக்குத் தகுதியாகச் சிவந்த [செம்பட்ட] மயிர்களையும் |
| எரி விழிகள் | அக்நிசக்கரம் போன்ற கண்களையுமுடையராய் |
| நீண்ட | பருத்த வடிவு படைத்தவர்களான |
| அசுரர் | அசுரர்களினுடைய |
| உயிர் எல்லாம் | பிராணன்களை யெல்லாம் |
| தகர்த்து உண்டு | பீடித்து வாங்கி |
| உழலும் | இதுவே தொழிலாக ஸஞ்சரிக்கிற |
| புள் | கருடனுக்கு |
| பாகன் | நியாமகனுமான எம்பெருமானுடைய |
| பெரிய தனி மா புகழ் நுகர்ச்சி உறுமோ மூ உலகின் வீடு பேறு | பெரிய ஒப்பற்ற கல்யாண குண ராசியை அநுபவிக்கையோடு ஒக்குமோ ஸர்வேச்வரத்வம்? |

தனிமாப்புகழேயெஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த்தான்தோன்றி *
முனிமாப்பிரமமுதல்வித்தாய் உலகமூன்றும்முளைப்பித்த*
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார்*
நனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கே. 7

| சொல் | பொருள் |
|---|---|
| தனி மா புகழே | ஒப்பில்லாத சிறந்த புகழே |
| எஞ்ஞான்றும் நிற்கும்படி ஆய் | காலமுள்ளதனையும் வேதாந்த ப்ரஸித்தமாய் நிற்கும் படியாக |
| தான் தோன்றி | தானே (படைப்புக் கடவுளாக) ஆவிர்ப்பவித்து |
| முனி | (ஸ்ருஷ்டிக்காக) ஸங்கல்பிக்கிற |
| மா பிரமம் | பரப்ரஹ்மமாகிற |
| முதல்வித்து ஆய் | பரமகாரணமாய் |
| உலகம் மூன்றும் | லோகங்களை யெல்லாம் |
| முளைப்பித்த | உண்டாக்கின |
| தனி மா தெய்வம் | ஒப்பற்ற பரதேவதையினுடைய |
| தளிர் அடி கீழ் | தளிர்போன்ற திருவடியின் கீழே |
| புகுதல் அன்றி | புகுகையைத் தவிர்ந்து |
| அவன் அடியார் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| நனி மா கலவி இன்பமே | மிகச் சிறந்ததான ஸம்ச்லேஷ ஸுகமே |
| நங்கட்கு நாளும் வாய்க்க | நமக்கு எப்போதும் வாய்க்கவேணும். |

நாளும்வாய்க்கநங்கட்கு நளிர்நீர்க்கடலைப்படைத்து* தன்
தாளும்தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி*
நீளும்படர்பூம்கற்பகக்காவும் நிறைபன்நாயிற்றின்*
கோளுமுடையமணிமலைபோல் கிடந்தான்தமர்கள்கூட்டமே. 8

| சொல் | பொருள் |
|---|---|
| நளிர் நீர் கடலை படைத்து | குளிர்ந்த நீரையுடைய கடலை யுண்டாக்கி |
| சமன் இலாத | ஒப்பில்லாத |
| தன் பல தாளும் தோளும்முடிகளும் | தன்னுடைய பல திருவடிகளையும் திருத் தோள்களையும் திரு முடிகளையும் |
| பரப்பி | பரப்பிக்கொண்டு |
| நீளும்படர் பூகற்பகக் காவும் | உயர்ந்து மிகவும் தழையா நின்றுள்ள அழகிய கற்பகச் சோலையையும் |
| நிறை பல் நாயிற்றின் கோளும் உடைய | நிறைந்த பல ஆதித்ய தேஜஸ்ஸையு முடைத்தான |
| மணி மலைபோல் | மாணிக்கமலை போலே |
| கிடந்தான் | கண்வளர்ந் தருளின பெருமானுடைய |
| தமர்கள் கூட்டம் | பக்தர்களோடுண்டான சேர்த்தியானது |
| நங்கட்கு நாளும் வாய்க்க | எமக்கு எப்போதும் உண்டாகவேணும். |

தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும்சதிர்மூர்த்தி*
அமர்கொளாழிசங்குவாள் வில்தாண்டாதிபல்படையன்*
குமரன்கோலவைங்கணைவேள்தாதை கோதிலடியார்தம்*
தமர்கள்தமர்கள்தமர்களாம் சதிரேவாய்க்கதமியேற்கே. 9

| | |
|---|---|
| தமர்கள்கூட்டம் | பக்த வர்க்கங்களுக்கு வருகின்ற |
| வல் வினையை | வலிய விரோதிகளை |
| நாசம் செய்யும் சதிர் | போக்கும்படியான திறமையுடைய |
| மூர்த்தி | ஸ்வாமியாய், |
| அமர் கொள் | போர் செய்யக் கிளர்கின்ற |
| ஆழி சங்கு வாள் வில் தண்டு ஆதி | பஞ்சாயுதங்கள் முதலிய |
| பல் படையன் | திவ்யாயுத வர்க்கத்தையுடையனாய் |
| குமரன் | நித்யயுவாவாய் |
| கோலம் ஐங்கணை வேள் தாதை | அழகிற் சிறந்த பஞ்சபாணனான மன்மதனுக்கும் தலைவனான எம்பெருமானுடைய |
| கோது இல் அடியார் தம் | கோதற்ற அடியார்க்கு |
| தமர்கள் தமர்கள் தமர்கள் ஆம் சதிர் | அடிமையில் முடிந்த நிலமான வாய்ப்பே |
| தமியேற்கு வாய்க்க | துணையற்ற அடியேனுக்கு வாய்க்கவேணும். |

வாய்க்கதமியேற்கூழிதோறூழியூழி * மாகாயாம்
பூக்கொள்மேனிநான்குதோள் பொன்னாழிக்கையென்னம்மான்*
நீக்கமில்லாவடியார்தம் அடியாரடியாரடியாரெங்
கோக்கள்* அவர்க்கேகுடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே. 10

| | |
|---|---|
| மா காயா பூ கொள் மேனி | அழகியகாயாம்பூநிறத்தைக் கொண்ட திரு மேனியையும் |
| நான்கு தோள் | நான்கு திருத்தோள்களையும் |
| பொன் ஆழி கை | அழகிய திருவாழியேந்திய கையையும் உடைய |
| என் அம்மான் | எம்பெருமானுடைய |
| நீக்கம் இல்லா | பிரிவு இல்லாத |
| அடியார் தம் | அடியார்களுக்கு |
| அடியார் அடியார் அடியார் | சரமாவதிதாஸ பூதர்கள் |
| எம் கோக்கள் | எமக்கு ஸ்வாமிகள்; |
| அவர்க்கே | அன்னவர்களுக்கே |
| குடிகள் ஆய் செல்லும் | சேஷவ்ருத்தி பண்ணுங் குலமாய்ச் செல்லும்படியான |
| நல்ல கோட்பாடு | திடமான அத்யவஸாயமானது |
| ஊழி ஊழி ஊழி தோறு | எஞ்ஞான்றும் |
| தமியேற்கு வாய்க்க | அடியேனுக்கு உண்டாகவேணும். |

நல்லகோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும்தான்நிறைந்த*
அல்லிக்கமலக்கண்ணனை அந்தண்குருகூர்ச்சடகோபன்*
சொல்லப்பட்டவாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள்*
நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே. 11

| | |
|---|---|
| நல்ல கோட்பாடு | நல்ல கட்டளைப்பாடுடைய |
| உலகங்கள் மூன்றின் உள்ளும் | மூவுலகங்களினுள்ளும் |
| தான் நிறைந்த | வியாபித்த |
| அல்லி கமலம் கண்ணனை | விகஸித்த தாமரைப் பூப்போன்ற கண்களையுடைய பெருமான் விஷயமாக |
| அம் தண் குருகூர் சடகோபன் சொல்லப்பட்ட ஆயிரத்துள் | ஆழ்வாரா லருளிச்செய்யப்பட்ட ஆயிரத்தினுள் |
| இவையும் பத்தும் வல்லார்கள் | இவை பத்தையும் ஓதவல்லவர்கள் |
| கொண்ட பெண்டிர் மக்களே | ஸகுடும்பமாக |
| நல்ல பதத்தால் | பாகவத சேஷத்வ பர்யந்தமான சிறப்புடனே |
| மனை வாழ்வர் | க்ருஹஸ்தர்களாக வாழப் பெறுவர்கள். |

## திருவாய்மொழி — ஒன்பதாம் பத்து — பத்தாந் திருவாய்மொழி — மாலைநண்ணித்தொழுதெழுமினோ

அவதாரிகை: — திருக்கண்ணபுரத்திலே ஈடுபடுமாறு உபதேசித்தருளும் பதிகமிது.

மாலைநண்ணித் தொழுதெழுமினோவினைகெட*
காலைமாலை கமலமலரிட்டுநீர்*
வேலைமோதும்மதிள்சூழ் திருக்கண்ணபுரத்து*
ஆலின்மேலாலமர்ந்தான் அடியிணைகளே. 1

| | | | |
|---|---|---|---|
| வேலை மோதும் மதிள் சூழ் | கடலலை மோதப்பெற்ற மதிளாலே சூழப்பட்ட | நண்ணி | கிட்டி |
| திரு கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருப்பவனும் | அடி இணைகள் | அவனது உபயபாதங்களையும் |
| ஆலின் மேல் | ஜலத்தின் மீது | காலை மாலை | இரவும் பகலும் |
| ஆல் அமர்ந்தான் | ஆலிலையில் கண்வளர்ந்தவனுமான | கமலம் மலர் இட்டு | தாமரைப்பூக்களை ஸமர்ப்பித்து |
| மாலை | ஸர்வேச்வரனை | நீர் | (அன்பர்களே!) நீங்கள் |
| | | வினை கெட | (உங்களுடைய) பாவம் தொலையும்படி |
| | | தொழுது எழுமின் | வணங்கி உஜ்ஜீவியுங்கள். |

கள்ளவிழும்மலரிட்டு நீரிறைஞ்சுமின்*
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை*
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுர
முள்ளி* நாளுந்தொழுதெழுமினோதொண்டரே. 2

| | | | |
|---|---|---|---|
| தொண்டரே! | எம்பெருமானிடத்து ஆசையுள்ளவர்களே! | வயல்சூழ் கிடங்கின் புடை | அகழ்களைப் பக்கங்களிலேயுடையதும் |
| நீர் | நீங்கள் | வெள்ளி ஏய்ந்த மதிள் சூழ் | சுக்கிரனைத் தொட்டுக்கொண்டிருக்கிற மதிள்களாலே சூழப்பட்டதுமான |
| கள் அவிழும் மலர் இட்டு | தேனொழுகுகின்ற புஷ்பங்களைப் பணிமாறி | திருகண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| இறைஞ்சுமின் | வணங்குங்கள்; | உள்ளி | சிந்தனை செய்துகொண்டு |
| நள்ளி சேரும் | பெண் நண்டுகள் களித்து வாழப்பெற்ற கழனிகள் சூழ்ந்த | நாளும்தொழுது எழுமின் | நாடோறும் வணங்கி உஜ்ஜீவியுங்கள். |

தொண்டர்நுந்தம் துயர்போகநீரேகமாய்*
விண்டுவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்*
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்
தண்டவாணன்* அமரர்பெருமானையே. 3

| | | | |
|---|---|---|---|
| தொண்டர் | தொண்டர்களே! | நும் தம் துயர் போக | உங்களுடைய துக்கம் தொலையும்படி |
| வண்டு பாடும் பொழில் சூழ் | வண்டுகள் பாடுமிடமான சோலைகளாலே சூழப்பட்ட | நீர் ஏகம் ஆய் | நீங்கள் அநந்ய ப்ரயோஜனர்களாய் |
| திரு கண்ணபுரத்து | திருக் கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கிற | விண்டு வாடா மலர் இட்டு | மலர்ந்து வாடாத [அப்போதலர்ந்த] பூக்களைப் பணிமாறி |
| அண்டம் வாணன் அமரர் பெருமானை | அகிலாண்டகோடி ப்ரஹ்மாண்ட நாயகனான எம்பெருமானை | நீர் இறைஞ்சுமின் | நீங்களே தொழுங்கள். |

மானைநோக்கி மடப்பின்னை தன்கேள்வனை*
தேனைவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்*
வானையுந்துமதிள்சூழ் திருக்கண்ணபுரம்*
தானயந்தபெருமான் சரணாகுமே* 4

| | |
|---|---|
| மானை நோக்கி மட பின்னை தன் கேள்வனை | மானை யொத்த கண்பார்வையையுடையளான நப்பின்னைப் பிராட்டிக்கு நாதனும் |
| தேனை | தேன்போல் இனியனுமான எம்பெருமானை |
| வாடா மலர் இட்டு நீர் இறைஞ்சுமின் | அப்போதலர்ந்த செவ்விப் பூக்களையிட்டு நீங்கள் தொழுங்கள்; |
| வானை உந்தும் மதிள் சூழ் | ஆகாசத்தை யளாவியிருக்கின்ற மதிளாலே சூழப்பட்ட |
| திரு கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| நயந்த பெருமான் தான் | விரும்பியிருக்கின்ற சௌரிப் பெருமாளே |
| சரண் ஆகும் | ரக்ஷகராவர் |

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்*
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன்* தனதன்பர்க்கன்பாகுமே. 5

| | |
|---|---|
| தன தாள் அடைந்தார்க்கு | தனது திருவடிகளை யடைந்தவர்களுக்கு |
| சரணம் எல்லாம் ஆகும் | ஸகலவிதரக்ஷகனுமாய் |
| மரணம் ஆனால் | இந்த தேஹம் விட்டு நீங்கினவுடனே |
| வைகுந்தம் கொடுக்கும் பிரான் | பரமபதமளிக்கும் பெருமானுமாய் |
| அரண் அமைந்த மதிள் சூழ் | காப்பாக அமைந்த மதிளாலே சூழப்பட்ட |
| திருகண்ணபுரம் தரணி | திருக்கண்ணபுரமாகிற க்ஷேத்திரத்தை |
| ஆளன் | ஆள்பவனுமான எம்பெருமான் |
| தனது அன்பர்க்கு | தன்னிடத்தில் அன்பு வாய்ந்தவர்களுக்கு |
| அன்பு ஆகும் | அன்புதானே வடிவெடுத்தவனாயிருப்பன். |

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
செம்பொனாகத்து அவுணனுடல்கீண்டவன்*
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தன்பன்* நாளும்தனமெய்யர்க்குமெய்யனே. 6

| | |
|---|---|
| தன தாள் அடைந்தார்க்கு எல்லாம் | தனது திருவடிகளைப் பற்றின எல்லாருக்கும் |
| அன்பன் ஆகும் | அன்பு செய்பவனாய் |
| செம்பொன் ஆகத்து அவுணன் உடல் கீண்டவன் | சிவந்த பொன் போன்ற வுடம்பையுடைய இரணியாசுரனது உடலைக் கீண்டவனாய் |
| நன் பொன் ஏய்ந்த மதிள் சூழ் | நல்ல பொன்னாலே யமைத்த மதிளாலே சூழப்பட்ட |
| திரு கண்ணபுரத்து அன்பன் | திருக்கண்ணபுரத்திலே விருப்பமுடையவனான எம்பெருமான் |
| தன மெய்யர்க்கு | தன் திறந்திலே உண்மையாக ஸ்நேஹிக்குமவர்களுக்கு |
| நாளும் மெய்யன் | எப்போதும் உண்மையான ஸ்நேஹமுடையவன். |

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம்*
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம்*
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்
தையன்* ஆகத்தணைப்பார்கட்கணியனே. 7

| | |
|---|---|
| விரும்பி தொழுவார்க்கு எல்லாம் | தன்னையே புருஷார்த்தமாக ஆசைப்பட்டுத் தொழுமவர்களெல்லார்க்கும் |
| மெய்யன் ஆகும் | மெய்யன்பனாய், |
| புறமே தொழுவார்க்கு எல்லாம் | பிரயோஜநாந்தரங்களுக்காக மேலெழத் தொழுமவர்களுக்கெல்லாம் |
| பொய்யன் ஆகும் | தன்னை உள்ளபடி காட்டமாட்டாதவனாய், |
| செய்யில் வாளை உகளும் திருகண்ணபுரத்து ஐயன் | கழனிகளில் வாளை மீன்கள் துள்ளி விளையாடப் பெற்ற திருக்கண்ணபுரத்திலே யெழுந்தருளியிருப்பவனான எம்பெருமான் |
| ஆகத்து அணைப்பார்கட்கு | தங்கள் மனத்தில் ஊன்ற வைத்துக் கொள்பவர்களுக்கு |
| அணியன் | ஸமீபத்திலுள்ளவன். |

அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
பிணியும்சாரா பிறவிகெடுத்தாளும்*
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின் * நாளும்பரமேட்டிதன்பாதமே. 8

| | |
|---|---|
| தன தாள் அடைந்தார்க்கு எல்லாம் | தன் திருவடிகளைப் பணிந்தவர்களெல்லார்க்கும் |
| அணியன் ஆகும் | அந்தரங்கனாயிருப்பன்; |
| பிணியும் சாரா | வியாதிமுதலானவைகளும் அணுகமாட்டா; |
| பிறவி கெடுத்து ஆளும் | ஸம்ஸார ஸங்கத்தை யறுத்து அடிமை கொள்வன்; |
| மணி பொன் ஏய்ந்த மதிள் சூழ் | ரத்னங்களும் பொன்களும் பொருந்தின மதிளாலே சூழப்பட்ட |
| திருகண்ணபுரம் | திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருக்கிற |
| பரமேட்டி தன் பாதம் | பரம புருஷனுடைய திருவடிகளை |
| நாளும் பணிமின் | எப்போதும் ஆச்ரயிப்பீர்களாக. |

பாதநாளும்பணியத் தணியும்பிணி*
ஏதம்சாரா எனக்கேலினியென்குறை*
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்
தாதியானை * அடைந்தார்க்கல்லலில்லையே. 9

| | |
|---|---|
| வேதம் நாவர் விரும்பும் | வைதிகர்கள் விரும்பி வர்த்திக்குமிடமான |
| திரு கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருக்கிற |
| ஆதியானை | முழுமுதற்கடவுளான எம்பெருமானை |
| அடைந்தார்க்கு | ஆச்ரயித்தவர்களுக்கு |
| அல்லல் இல்லை | துக்கமொன்றுமில்லையாகும்; |
| நாளும் பாதம் பணிய | (அப்பெருமானுடைய) திருவடிகளை எப்போதும் ஸேவிக்குமளவில் |
| பிணி தணியும் | நோய்கள் அறும்; |
| ஏதம் சாரா | பாவங்கள் சேரமாட்டா; |
| இனி | இப்படியானபின்பு |
| எனக்கு | இப்பெருமானிடத்து ஈடுபட்டிருக்குமெனக்கு |
| என் குறை | என்ன குறையுண்டு? (ஒரு குறையுமில்லை.) |

இல்லையல்லல் எனக்கேலினி யென்குறை *
அல்லிமாதரமரும் திருமார்பினன் *
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல * நாளும்துயர் பாடுசாராவே. 10

| | | | |
|---|---|---|---|
| அல்லல் இல்லை | துக்கங்கள் தொலையும்; எனக்கு இனி என் குறை—; | கல்லில் ஏய்ந்த மதிள் சூழ் | கற்பணிமிக்க மதிளாலே சூழப்பட்ட |
| அல்லி மாதர் அமரும் திரு மார்பினன் | தாமரையாளான பெரிய பிராட்டியாருறையும்திரு மார்பையுடைய பெருமான் வர்த்திக்கிற, | திரு கண்ணபுரம் சொல்ல | திருக்கண்ணபுரம் என்று சொன்ன வளவிலே |
| | | நாளும் | ஒருநாளும் |
| | | துயர் பாடு சாரா | துக்கம் அணுகாது. |

‡‡பாடுசாராவினை பற்றறவேண்டுவீர்*
மாடநீடு குருகூர்ச்சடகோபன்* சொல்
பாடலானதமிழ் ஆயிரத்துளிப்பத்தும்
பாடியாடி* பணிமினவன் தாள்களே. 11

| | | | |
|---|---|---|---|
| வினை பற்று | துக்க ஸம்பந்தம் | சொல் | அருளிச்செய்த |
| பாடு சாரா | அருகில் கிட்டாதபடி | தமிழ்பாடல் ஆன ஆயிரத்துள் இப்பத்தும்—; | |
| அற வேண்டுவீர் | அது தொலைய வேணுமென்றிருப்பவர்களே! | பாடி | வாயாரப்பாடி |
| மாடம் நீடு குருகூர் | மாடமாளிகைகள் உயர்ந்த திரு நகரியிலே அவதரித்த | ஆடி | அதற்குச் சேர நர்த்தனம் பண்ணி |
| சடகோபன் | ஆழ்வார் | அவன் தாள்களை பணிமின் | அப்பெருமானுடைய திருவடிகளையே தொழுங்கள். |

---

## திருவாய்மொழி பத்தாம் பத்து—ஒன்பதாந் திருவாய்மொழி—சூழ்விசும் பணிமுகில்

ஆழ்வார் தாம் திருநாடேற எழுந்தருளும்படியையும் தாமெழுந்தருளும்போது ஸர்வ லோகங்களும் தம்மைக்கொண்டாடும்படியையும் திருவுள்ளத்தாலே ப்ரத்யக்ஷித்துப் பேசுகிற பதிகம்.

‡‡சூழ்விசும்பணிமுகில் தூரியம்முழக்கின*
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின*
ஏழ்பொழிலும் வளமேந்தியவென்னப்பன்*
வாழ்புகழ்நாரணன் தமரைக்கண்டுகந்தே. 1

| | | | |
|---|---|---|---|
| என் அப்பன் | அஸ்மத் ஸ்வாமியாய் | ஆழ் கடல் | ஆழமான கடல்கள் |
| வாழ் புகழ் | நித்ய கீர்த்தியுக்தனை | அலை திரை | அலைந்து வருகிற திரைகளை |
| நாரணன் | ஸ்ரீமந் நாராயணனுடைய | கை எடுத்து | கையாகக் கொண்டு |
| தமரை | அடியார்களை | ஆடின | கூத்தாடின; |
| கண்டு உகந்து | வரக்கண்டுகளித்து | ஏழ் பொழிலும் | ஸப்த த்வீபங்களும் |
| சூழ் விசும்பு | எங்கும் பரந்த ஆகாசத்திலே | வளம் ஏந்திய | உபஹாரங்களைக் கை யேந்தின. |
| அணி முகில் | அழகிய மேகங்கள் | | |
| தூரியம் முழக்கின | வாத்ய கோஷம் செய்தன போன்றிருந்தன; | | |

நாரணன்தமரைக்கண்டுகந்து நன்னீர்முகில்*
பூரணபொற்குடம் பூரித்ததுயர்விண்ணில்*
நீரணிகடல்கள் நின்றார்த்தன *நெடுவரைத்
தோரணம்நிரைத்து எங்கும்தொழுதனருலகே. 2

| | |
|---|---|
| காரணன் தமரை கண்டு | பாகவதர்களைக் கண்டு |
| நல் நீர் முகில் | நல்ல தீர்த்தம் நிறைந்த மேகமானது |
| உகந்து | மகிழ்ந்து |
| உயர் விண்ணில் | உயர்ந்த ஆகாசத்திலே |
| பூரணம் பொன் குடம் பூரித்தது | பூர்ண கும்பம் நிறைத்து வைத்தாற் போன்றிருந்தது; |
| நீர் அணி கடல்கள் | நீரை வஹிக்கிற கடல்களானவை |
| நின்று ஆர்த்தன | நிலை நின்று கோஷித்தன; |
| உலகு | அந்தந்த லோகங்களிலுள்ளார் |
| நெடுவரை தோரணம் நிரைத்து | பெரிய மலைகளைத் தோரணங்களாக* ஒழுங்குபடுத்தி |
| எங்கும் தொழுதனர். | எங்கும் தொழுதுகொண்டிருந்தார்கள். |

தொழுதனருலகர்கள் தூபநன்மலர்மழை
பொழிவனர்* பூமியன்றளந்தவன்தமர்முன்னே*
எழுமினென்றிருமருங்கிசைத்தனர் முனிவர்கள்*
வழியிதுவைகுந்தர்க்கென்று வந்தெதிரே. 3

| | |
|---|---|
| அன்று | முன்பொருகால் |
| பூமி அளந்தவன் தமர் முன்னே | பூமியை யளந்துகொண்ட பகவானது அடியார்களின் ஸன்னிதியிலே |
| தூபம் | தூபம் ஸமர்ப்பிப்பதோடு |
| நல் மலர் மழை | நன்றான புஷ்பவர்ஷத்தை |
| பொழிவனர் | பொழிகின்றவர்களாய்க் கொண்டு |
| உலகர்கள் | அந்தந்த லோகங்களிலுள்ளவர்கள் |
| தொழுதனர் | தொழுதார்கள் |
| முனிவர்கள் | ஆங்காங்குள்ள முனிவர்கள் (தாங்கள் மௌனமாயிருக்கும்விரதத்தைத் தவிர்ந்து) |
| வைகுந்தர்க்கு | "ஸ்ரீவைகுண்டத்தை நோக்கிப் போமவர்களுக்கு |
| வழி இது என்று | இதுதான் வழி" என்று சொல்லி |
| எதிரே வந்து | அபிமுகர்களாக வந்து |
| எழுமின் என்று | எழுந்தருளவேணும் எழுந்தருளவேணுமென்று எச்சரிக்கை யிட்டு |
| இரு மருங்கு இசைத்தனர் | இருபக்கங்களிலும் சொன்னார்கள். |

எதிரெதிரிமையவர் இருப்பிடம்வகுத்தனர்*
கதிரவரவரவர் கைநிரைகாட்டினர்*
அதிர்குரல்முரசங்கள் அலைகடல்முழக்கொத்த*
மதுவிரிதுழாய்முடி மாதவன் தமர்க்கே. 4

| | |
|---|---|
| மது விரி துழாய் முடி | தேன் பெருகுகின்ற திருத்துழாயைத் திருமுடியிலேயுடைய |
| மாதவன் | திருமாலினது |
| தமர்க்கு | அடியாரான பாகவதர்களுக்கு |
| இமையவர் | தேவர்கள் |
| எதிர் எதிர் | இவர்கள் போகிற வழிக்கு முன்னே |
| இருப்பு இடம் வகுத்தனர் | தங்குமிடங்களைச் சமைத்தார்கள்; |
| கதிரவர் | த்வாதசாதித்யர்களும் |
| அவர் அவர் | மற்றுமுள்ளவர்களும் [ஆதிவாஹிக கணங்களெல்லாம்] |
| கை நிரை காட்டினர் | பார்த்தருளீர்! பார்த்தருளீர்! என்று கைகாட்டிக்கொண்டே சென்றார்கள்; |
| அதிர் குரல் | அதிருகிற முழக்கத்தையுடைய |
| முரசங்கள் | பேரிகளானவை |
| அலைகடல் முழக்கு ஒத்த | அலையெறிகின்றஸமுத்ரகர்ஜனை போன்றிருந்தன. |

மாதவன்தமரென்று வாசலில்வானவர்*
போதுமினெமதிடம் புகுதுகவென்றலும்*
கீதங்கள்பாடினர் கின்னரர்கெருடர்கள்*
வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே. 5

| | |
|---|---|
| வானவர் | வருணன் இந்திரன் பிரஜாபதி ஆகிய தேவர்கள் |
| வாசலில் | தம்தம் ஸ்தானங்களின் வாசல்களிலே வந்து |
| மாதவன் தமர் என்று | 'இவர்கள் பரமபாகவதர்கள்' என்றுசொல்லி ஆதரித்து |
| போதுமின் | "இங்ஙனே எழுந்தருளுங்கள்; |
| எமது இடம் புகுதுக | எங்களது அதிகார ஸ்தலங்களிலே பிரவேசியுங்கள்" |
| என்றலும் | என்று சொன்னவாறே |
| வேதம் நல் வாயவர் | (மேலுலகங்களிலே) வைதிகராயுள்ளவர்கள் |
| வேள்வி உள் மடுத்து | தாங்கள் செய்த தேவபூஜைகளின் பலன்களை ஸமர்ப்பிக்க |
| கின்னரர் கெருடர்கள் | கின்னரர்களும் கருடர்களும் |
| கீதங்கள் பாடினர் | கீதங்களைப் பாடினார்கள். |

வேள்வியுள்மடுத்தலும் விரைகமழ்நறும்புகை*
காளங்கள்வலம்புரி கலந்தெங்குமிசைத்தனர்*
ஆண்மின்கள்வானகம் ஆழியான்தமரென்று*
வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்தே. 6

| | |
|---|---|
| வேள்வி உள் மடுத்தலும் | (வைதிகர்கள்) தம்தம் தேவபூஜாபலன்களை ஸமர்பித்தவளவிலே |
| விரை கமழ் | பரிமளம் மிக்க |
| நறு புகை | ஸுகந்த தூபங்களானவை |
| எங்கும் கலந்து | எங்கும் வியாபிக்க |
| காளங்கள் வலம்புரி | திருச்சின்னங்களையும் சங்குகளையும் |
| இசைத்தனர் | ஊதினார்கள்; |
| வாள் ஒண் கண் மடந்தையர் | ஒளிமிக்க கண்களையுடைய தேவஸ்திரீகள் |
| ஆழியான் தமர் | "திருவாழியை யேந்திய எம்பெருமானுக்கு அடிமைப் பட்டவர்களே |
| வானகம் ஆண்மின்கள் என்று | இந்த ஸ்வர்க்காதிபதங்களை ஆளுங்கோள்" என்று சொல்லி |
| மகிழ்ந்து வாழ்த்தினர் | ப்ரீதியுடன் வாழ்த்தினார்கள். |

மடந்தையர்வாழ்த்தலும் மருதரும்வசுக்களும்*
தொடர்ந்தெங்கும் தோத்திரஞ்சொல்லினர்* தொடுக
கிடந்தவெங்கேசவன் கிளரொளிமணிமுடி* [டல்
குடந்தையன்கோவலன் குடியடியார்க்கே. 7

| | |
|---|---|
| தொடுகடல் கிடந்த | அகாதமான கடலிலே திருக்கண் வளர்ந்தருளின |
| எம் கேசவன் | எம்பெருமானும் |
| கிளர் ஒளி மணி முடி | கிளர்ந்த வொளியையுடைய ரத்ன கிரீடத்தை யணிந்தவனுய்க் கொண்டு |
| குடந்தையன் | திருக்குடந்தையிலே கண் வளர்ந்தருளுகிற |
| கோவலன் | கோபாலனுக்கு |
| குடி அடியார்க்கு | குலங்குலமாக அடிமைப் பட்டவர்கள் விஷயத்திலே |
| மடந்தையர் வாழ்த்தலும் | அப்ஸரஸ்ஸுக்கள் பல்லாண்டு பாடினவளவிலே |
| மருதரும் வசுக்களும் | மருத்துக்களும் அஷ்டவஸுக்களும் |
| எங்கும் தொடர்ந்து | போமிடமெங்கும் தொடர்ந்து வந்து |
| தோத்திரம் சொல்லினர் | பல்லாண்டு பாடினார்கள். |

குடியடியாரிவர் கோவிந்தன்றனக்கென்று*
முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள*
கொடியணிநெடுமதிள் கோபுரம்குறுகினர்*
வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே. 8

| | | | |
|---|---|---|---|
| இவர் கோவிந்தன் தனக்கு குடி அடியார் என்று | இவர்கள் பகவானுக்குக் குலங் குலமாக அடியவர்கள் என்று சொல்லி | வடிவு உடை மாதவன் வைகுந்தம் புக | அழகிய வடிவு படைத்த எம்பெருமானுடைய ஸ்ரீ வைகுண்டத்திலே பிரவேசிக்கைக் குறுப்பாக |
| முடி உடை வானவர் | சேஷத்வத்துக்குச் சூடின முடியையுடைய நித்ய ஸூரிகள் | கொடி அணி நெடு மதிள் | அலங்காரமாக வெடுத்துக் கட்டின கொடிகளையுடைய உயர்ந்த மதிளையுடைத்தான |
| முறை முறை | கிரமம் தப்பாமல் | | |
| எதிர் கொள்ள | 'ஸ்வாகதம்' என்று சொல்லியெதிர் கொண்டழைக்க | கோபுரம் குறுகினர் | தலைவாசலில் புதுந்தார்கள். |

வைகுந்தம்புகுதலும் வாசலில்வானவர்*
வைகுந்தன்தமர் எமரெமதிடம்புகுதென்று*
வைகுந்தத்தமரரும் முனிவரும்வியந்தனர்*
வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே. 9

| | | | |
|---|---|---|---|
| வைகுந்தம் புகுதலும் | ஸ்ரீ வைகுண்டத்திலே சென்று புகுந்தவளவிலே | வியந்தனர் | உகந்தார்கள்; |
| வாசலில் வானவர் | திருவாசல் காக்கும் முதலிகளானவர்கள் | வைகுந்தத்து | அவ்விடத்திலே |
| வைகுந்தன் தமர் எமர் | "ஸ்ரீவைகுண்டநாதனுடையார்கள் எங்களுடைய ஸ்வாமிகள்(ஆகையாலே) | அமரரும்முனிவரும் | கைங்கர்ய நிஷ்டராயும் குணாநுபவநிஷ்டராயுமுள்ளவர்கள் |
| எமது இடம் புகுது என்று | எங்களதிகாரத்திலே புகவேணும்'' என்று சொல்லி | மண்ணவர் வைகுந்தம் புகுவது விதியே-(என்று) வியந்னர் | "லீலாவிபூதியிலிருந்தவர்கள் நித்யவிபூதியேற வருவது மஹா பாக்யமே!" என்று சொல்லி உகந்தார்கள். |

விதிவகைபுகுந்தனரென்று நல்வேதியர்*
பதியினிற்பாங்கினில் பாதங்கள்கழுவினர்*
நிதியுநற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும்*
மதிமுகமடந்தையர் ஏந்தினர்வந்தே. 10

| | | | |
|---|---|---|---|
| விதி வகை புகுந்தனர் என்று | "நம்முடைய பாக்யாநுகுணமாக இவர்கள் இவ்விடம் வந்து சேர்ந்தார்கள்" என்று சொல்லி | நிதியும் | ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நிதியான திருவடி நிலைகளையும் |
| நல் வேதியர் | நல்வேதங்களாலே பிரதிபாதிக்கப்பட்ட நித்ய ஸூரிகள் | நல் சுண்ணமும் | ஸ்ரீ சூர்ணத்தையும் |
| | | நிறை குடம் | பூரணகும்பங்களையும் |
| | | விளக்கமும் | மங்கள தீபங்களையும் |
| பதியினில் | தம்தம் திவ்ய ஸ்தானங்களிலே | மதி முகம் மடந்தையர் | பூர்ண சந்திரன் போன்ற முகத்தை யுடையவர்களான பரிசாரிகைகள் |
| பாங்கினில் | உபசாரங்களுடனே | | |
| பாதங்கள் கழுவினர் | அவர்களது திருவடிகளை விளக்கினார்கள்; | வந்து ஏந்தினர் | ஏந்திக்கொண்டு எதிரே வந்தார்கள். |

‡‡ வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து*
அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை*
கொந்தலர்பொழில் குருகூர்ச்சடகோபன்* சொல்
சந்தங்களாயிரத்து இவைவல்லார்முனிவரே. 11

| | | | |
|---|---|---|---|
| அவர் வந்து எதிர்கொள்ள | அந்த பெருமாளும் பிராட்டியும்வந்துஎதிர்கொள்ள | சொல் | அருளிச் செய்த |
| மா மணி மண்டபத்து | திருமாமணி மண்டபத்தில் | சந்தங்கள் ஆயிரத்து | வேதரூபமான ஆயிரம் பாசுரங்களில் |
| அந்தம் இல் பேர் இன்பத்து | முடிவில்லாத மஹானந்தத்தையுடைய | இவை | இப்பத்துப் பாசுரங்களை |
| அடியரோடு இருந்தமை | பரமபாகவதர்களோடேகூடி இருந்தபடியை | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| கொந்து அலர் பொழில் குருகூர் சடகோபன் | பூங்கொத்து அலருகிற சோலைகளை யுடைத்தான திருநகரிக்குத்தலைவரான ஆழ்வார் | முனிவர் | பகவத் குணங்களைமனனம் பண்ணும் முனிவராவர். |

—

திருவாய்மொழி—பத்தாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—முனியே நான்முகனே.
அவதாரிகை :—இத் திருவாய்மொழியில் ஆழ்வார் அவாவற்று வீடு பெற்றுத் தலைக்கட்டுகிறார்.

‡‡ முனியேநான்முகனே முக்கண்ணப்பா* என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண்கருமாணிக்கமேயென்கள்வா*
தனியேனாருயிரே யென்தலைமிசையாய்வந்திட்டு*
இனிநான்போகலொட்டேன் ஒன்றும்மாயம்செய்யேலென்னையே. 1

| | | | |
|---|---|---|---|
| முனியே | படைக்கும் வகையை மனனம் பண்ணுமவனே ! | என் கள்வா | என்னை வஞ்சித்து ஈடுபடுத்திக் கொண்டவனே ! |
| நான்முகனே | நான்முகனுக்கு அந்தர்யாமியாயிருக்குமவனே! | தனியேன் ஆர் உயிரே | என்னொருவனுக்குப் பரிபூர்ண ப்ராணனானவனே |
| முக்கண் அப்பா | ஸம்ஹாரக் கடவுளான ருத்ரனுக்கு அந்தர்யாமியானவனே ! | என் தலைமிசை ஆய் வந்திட்டு | என் தலைமேலே வந்து சேர்ந்தாயான பின்பு |
| கனிவாய் தாமரை கண் | கனிந்த அதரத்தையும் தாமரை போன்ற திருக்கண்களையுமுடைய | இனி நான் போகல் ஒட்டேன் | இனி யொருகாலும் உன்னை அகன்றுபோக இசையமாட்டேன் ; |
| என் பொல்லா கருமாணிக்கமே | துளையாத கருமாணிக்கம் போன்ற திருவுருவத்தை எனக்கு அநுபவிப்பித்தவனே ! | என்னை | ஆர்த்தி மிகுந்த என்னை |
| | | ஒன்றும் மாயம் செய்யேல் | ஒரு படியாலும் வஞ்சிக்கலாகாது. |

மாயம்செய்யேலென்னை உன்திருமார்வத்துமாலை நங்கை*
வாசஞ்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணைகண்டாய்*
நேசஞ்செய்துன்னோடென்னை உயிர்வேறன்றியொன்றாகவே*
கூசஞ்செய்யாதுகொண்டாய் எனைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ. 2

என்னை மாயம் செய்யேல் — என்திறத்தில் வஞ்சனை பண்ணுதொழியவேணும்;
உன் திரு மார்வத்து மாலை — உன்னுடைய திருமார்விலே சாத்திய மாலை போன்றவளாய்
நங்கை — ஸகல குணபரிபூர்ணையாய்
வாசம் செய் பூ குழலாள் — பரிமளம் மிக்க கூந்தலையுடையவளான
திரு ஆணை — பெரிய பிராட்டியாணை;
நின் ஆணை — உன் ஆணை; கண்டாய்
நேசம் செய்து — தானாகவே ஸ்நேஹித்து
உன்னோடு — உன்னோடே
என்னை — நீசனான என்னை
உயிர் வேறு அன்றி — ஆத்மபேதமில்லாமல்
ஒன்று ஆகவே — ஏகவஸ்துவாகவே
கூசம் செய்யாது — எனது தன்மையைப் பார்த்துக் கூசாமல்
கொண்டாய் — அடியே பிடித்து அங்கீகரித்தருளினாய்;
(ஆனபின்பு)
என்னை வந்து கூவி கொள்ளாய் — இனி உபேக்ஷியாதே என்னைத் திருவடி சேர்த்துக் கொள்ளவேணும்.

கூவிக்கொள்ளாய்வந்தந்தோ என்பொல்லாக்கருமாணிக்கமே*
ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்நான்*
மேவித்தொழும்பிரமன்சிவன் இந்திரனாதிக்கெல்லாம்*
நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பரந்ததுவே. 3

என் பொல்லாக் கருமாணிக்கமே
மேவி தொழும் — விரும்பித் தொழுகின்ற
பிரமன் சிவன் இந்திரன் ஆதிக்கு எல்லாம் — பிரமன் சிவன் இந்திரன் முதலானர்க்கும்
முதல் நாவி கமலம் கிழங்கே — மூலகாரணமான திருநாபிக் கமலத்திற்கு இருப்பிடமானவனே!
உம்பர் அந்ததுவே — அவர்களினும் மேற்பட்ட நித்ய ஸூரிகளுக்கும் பரம ப்ராப்யனானவனே!
ஆவிக்கு — ஆத்மாவுக்கு
ஓர் பற்றுகொம்பு — ஓர் கொள்கொம்பு
நின் அலால் — உன்னைத் தவிர
நான் அறிகின்றிலேன் — நான் காண்கின்றிலேன்; (ஆதலால்)
அந்தோ! வந்து கூவிக் கொள்ளாய் —.

உம்பரந்தண்பாழேயோ அதனுள்மிசைநீயேயோ
அம்பரநற்சோதி அதனுள்பிரமனரன்நீ*
உம்பரும்யாதவரும்படைத்த முனிவனவன்நீ*
எம்பரம்சாதிக்கலுற்று என்னைப்போரவிட்டிட்டாயே. 4

உம்பர் அம் தண் பாழேயோ — மூல பிரக்ருதிக்கு நிர்வாஹகனானவனே!
அதனுள் மிசை நீயேயோ — அந்த ப்ரக்ருதிக்குள்ளே நிற்கிற ஆத்ம தத்வத்துக்கு நிர்வாஹகனானவனே!
அம்பரம் நல் சோதி அதனுள் பிரமன் அரன் நீ — ஆகாசம் முதலானவற்றுக்கும் அண்டத்துக்குள்ளே யிருக்கிற பிரமன் சிவன் முதலானவர்களுக்கும் நிர்வாஹகன் நீ;
உம்பரும் — மேலான தேவர்களையும்
யாதவரும் — மனுஷ்யாதி ஸகல சேதநரையும்
படைத்த முனிவன் அவன் நீ — அவரவர்களது கருமங்களை மனனம் பண்ணி ஸ்ருஷ்டித்தவன் நீ;
(இப்படியாயிருக்க)
எம் பரம் சாதிக்கல் உற்று — என் காரியம் நீயே செய்வதாக ஏறிட்டுக் கொண்டு
(இவ்வளவும் வரநிறுத்தி)
என்னை போரவிட்டிட்டாயே — என்னை இங்கேயே பொகட்டு வைத்தாயே.

போரவிட்டிட்டென்னை நீபுறம்போக்கலுற்றால்* பின்னையான்
ஆரைக்கொண்டெத்தையந்தோ எனதென்பதென்யானென்பதென்*
தீரவிரும்புண்டநீரதுபோல என்னாருயிரை
ஆரப்பருக* எனக்காராவமுதானாயே. 5

| | |
|---|---|
| இரும்பு | காய்ச்சின இரும்பானது |
| தீர உண்ட | தன் காய்ச்சல் தீரும்படி உண்ட |
| நீர் அது போல | நீர்போலே |
| என் ஆர் உயிரை ஆர பருக | என் ஆத்மாவின் விடாயெல்லாம் தீரப் பருகுகைக்கு |
| எனக்கு ஆரா அமுது ஆனாயே | எனக்குஆராவமுதமாயிருக்கின்றாயே; |
| | (இப்படியிருக்க) |
| நீ என்னை போர விட்டிட்டு | நீ என்னை அநாதரித்து |
| புறம் போக்கல் உற்றால் | உபேக்ஷித்துப் பொகட்டால் |
| பின்னை | ஸர்வ சக்தியான நீயுமிப்படி கைவிட்ட பின்பு |
| யான் | அசக்தனான நான் |
| யாரை கொண்டு | எந்த உபாயத்தைக் கொண்டு |
| எத்தை | எந்த புருஷார்த்தத்தை (ஸாதிப்பேன் !) |
| அந்தோ | ஐயோ ! |
| எனது என்பது என் | என்னுடைய தென்கைக்கு என்ன இருக்கிறது ? |
| யான் என்பது என் | நான் என்கைக்கு ஒரு ஸ்வதந்த்ர கர்த்தா வுண்டோ? |

எனக்காரவமுதாய் எனதாவியையின்னுயிரை*
மனக்காராமைமன்னியுண்டிட்டா யினியுண்டொழியாய்*
புனக்காயாநிறத்த புண்டரீகக்கண்செங்கனிவாய்*
உனக்கேற்குங்கோலமலர்ப்பாவைக்கன்பா என்னன்பேயோ. 6

| | |
|---|---|
| புனம் காயா நிறத்த | தன்னிலத்தில் அலர்ந்த காயாம் பூப்போன்ற நிறத்தையுடையையாய் |
| புண்டரீகம் கண் செம் கனிவாய் | தாமரை போன்ற திருக்கண்ணையும் சிவந்த திருப்பவளத்தையு முடையையான |
| உனக்கு | உனக்கு |
| ஏற்கும் | ஏற்றிருக்கின்ற |
| கோலம் | வடிவு படைத்தவளான |
| மலர் பாவைக்கு அன்பா | பெரிய பிராட்டிக்கு அன்பனே ! |
| என் அன்பே | என் விஷயத்தில் அன்பு தானே வடிவெடுத்தாற் போன்றிருப்பவனே ! |
| எனக்கு ஆரா அமுது ஆய் | எனக்குப்பரம போக்யனாய் |
| எனது ஆவியை இன் உயிரை | என்னுடைய ஹேயமான ப்ரக்ருதியையும் விலக்ஷணனான ஆத்மாவையும் |
| மனக்கு ஆராமை மன்னி உண்டிட்டாய் | ஹ்ருதயத்துக்கு த்ருப்தி பிறவாதபடி விரும்பி நிரந்தரமாக புஜித்தாய்; |
| இனி உண்டொழியாய் | குறையும் புஜித்தேயாக வேணும். |

* * * 'மனக்கு' என்றது 'மனத்துக்கு' என்றபடி; அத்துச்சாரியை பெறுதுவந்த பிரயோகம். "மாடக்குச் சித்திரமும்" என்றாற் போன்றது.

‡‡கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ *
நீலவரையிரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப *
கோலவராகமொன்றாய் நிலம்கோட்டிடைக்கொண்டவெந்தாய் *
நீலக்கடல்கடைந்தாய் உன்னைப் பெற்றினிப்போக்குவனே. 7

| | |
|---|---|
| கோலம் மலர் பாவைக்கு அன்பு ஆகிய என் அன்பேயோ | பெரிய பிராட்டியார்க்கு உகப்பான வத்தாலே அவள் பரிக்ரஹமான என் பக்கலிலே அன்பு செய்யு மவனே ! |
| நீலம் வரை | நீலமணி மலை யொன்று |
| இரண்டு பிறை கவ்வி | இரண்டு பிறையைக் கவ்விக் கொண்டு |
| நிமிர்ந்தது ஒப்ப | எழுந்திருந்தாப் போலே |
| கோலம் வாராகம் ஒன்று ஆய் | விலக்ஷணமான அத்விதீய மஹா வாராஹமாய் |

| | |
|---|---|
| நிலம் | பூமியை |
| கோட்டிடை கொண்ட | எயிற்றிலே கொண்டெடுத்த |
| எந்தாய் | எம்பெருமானே ! |
| நீலம் கடல் | உனது திருமேனி நிழலீட்டாலே நீலமான கடலை |
| கடைந்தாய் | கடைந்து அமுதமளித்தவனே ! |
| உன்னை பெற்று | உன்னைப் புகலாகப் பெற்று வைத்து |
| இனிபோக்குவனோ | கைபுகுந்த பின்பு நழுவ விடுவேனோ ! |

பெற்றினிப்போக்குவனோ உன்னையென்தனிப்பேருயிரை *
உற்றவிருவினையாய் உயிராய்ப்பயனாயவையாய் *
முற்றவிம்மூவுலகும் பெருந்தூறாய்த்தூற்றிற்புக்கு*
முற்றக்கரந்தொளித்தாய் என்முதல்தனிவித்தேயோ. 8

| | |
|---|---|
| உற்ற இரு வினை ஆய் | ஆத்மாவைப் பற்றின புண்யபாப ரூப கருமங்களுக்கு நிர்வாஹகனாய் |
| உயிர் ஆய் | கர்ம வச்யனான ஆத்மாவுக்கு நியந்தாவாய் |
| பயன் அவை ஆய் | கரும பலனான ஸுக துக்கங்களைக் கொடுப்பவனாய்க் கொண்டு |
| இம் மூ உலகும் முற்ற பெரு தூறு ஆய் | இந்த மூவுலகமெல்லாமாகிற பெரிய தூற்றை யுண்டாக்கினவனாய் |
| தூற்றில் புக்கு | இந்தத் தூறு தன்னுள்ளே புகுந்து |
| முற்ற கரந்து ஒளித்தாய் | ஒரு படியாலு மறியவொண்ணாதபடி மறைந்து நிற்குமவனாய் |
| என் முதல் தனி வித்தே ஓ | எனக்கு உன்னைக் கிட்டுகைக்கு மூல ஸுக்ருதமாயிருப்பவனே ! |
| உன்னை பெற்று இனி போக்குவனோ | இவ்வளவாக உன்னைப் பெற்று வைத்து இனி விடுவேனோ ? |

முதல்தனிவித்தேயோ முழுமூவுலகாதிக்கெல்லாம் *
முதல்தனியுன்னையுன்னை யெனைநாள்வந்து கூடுவன்நான் *
முதல் தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய் *
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலீயோ. 9

| | |
|---|---|
| முழு மூ உலகு ஆதிக்கு எல்லாம் | மூவுலகு தொடக்கமான எல்லாவற்றுக்கும் |
| முதல் தனி வித்தே ஓ | மூவகைக் காரணமுமானவனே ! |
| அங்கும் இங்கும் முழு முற்று உறு | எங்கும் ஸமஸ்த பதார்த்தங்களையும் வியாபித்திருப்பதாய் |
| முதல் தனி | அத்விதீய காரணமாய் |
| வாழ் | போகமோக்ஷங்களாகிற வாழ்ச்சிக்கு |
| பாழ் ஆய் | விளை நிலமான மூல ப்ரக்ருதிக்கு நியாமகனாய் |
| முதல் தனி சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவு இலீ ஓ | ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக்கு நியாமகமாய் ஒப்பற்றதாய் தர்ம பூதஜ்ஞானத்தாலே எங்கும் வியாபித்ததாய் நித்யமான ஆத்மவர்க்கத்துக்கு நியாமகனானவனே ! |
| முதல் தனி உன்னை | முதல்வனாயும் அத்விதீயனாயுமிருக்கிற உன்னை |
| உன்னை | அஸாதாரணனான வுன்னை |
| நான் எனை நாள் வந்துகூடுவன் | நான் எந்நாள் வந்து கூடக்கடவேன் ? |

‡‡சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ *
சூழ்ந்ததனிற்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ *
சூழ்ந்ததனிற்பெரிய சுடர்ஞானவின்பமேயோ *
சூழ்ந்ததனிற்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே. 10

| | |
|---|---|
| சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த | பத்து திக்கிலும் வ்யாப்தமாய் |
| முடிவு இல் | நித்யமா யிருக்கிற |
| பெரு பாழே ஓ | ப்ரக்ருதி தத்வத்துக்குநியாமகனாய் நிற்கிறவனே ! |
| சூழ்ந்து | (தர்ம பூத ஜ்ஞானத்தாலே) அதையும் வியாபித்து |
| அதனில் பெரிய | அதிற் காட்டிலும் பெரிதாய் |
| பரம் | மேற்பட்டதாய் |
| நல் மலர் சோதி ஓ | விகஸ்வர தேஜோரூபமான ஆத்ம வஸ்துவுக்கும் ஆத்மாவானவனே ! |
| சூழ்ந்து | கீழ்ச் சொன்ன இரண்டு தத்வங்களையும் வியாபித்து |
| அதனில் பெரிய | அவற்றுக்கும் நிர்வாஹகமாய் |
| சுடர் ஞானம் இன்பமே ஓ | ஸங்கல்ப ரூபமாய் ஸுகரூபமான ஞானத்தை யுடையவனே! |
| சூழ்ந்து | அந்த தத்வத்ரயத்தையும் வளைத்துக் கொண்டு |
| அதனில் பெரிய என் அவா அற சூழ்ந்தாயே | அதிலும் மிகப் பெரிதான என் அபிநிவேசமானது தீரும்படியாக வந்து ஸம்ச்லேஷித்தாயே! |

‡‡ அவாவறச்சூழ் அரியையயனையரனையலற்றி *
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன*
அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும் * முடிந்த
அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே. 11

| | |
|---|---|
| அவா அற | (அடியார்களின்) அபிநிவேசம் தீரும்படி |
| சூழ் | ஸம்ச்லேஷிப்பவனாய் |
| அரியை | இப்படி தாபத்தை ஹரிப்பவனாகையாலே ஹரி யென்று திருநாமம் பெற்றவனாய் |
| அயனை | பிரமனுக்கு அந்தர்யாமியாய் |
| அரனை | ருத்ரனுக்கு அந்தர்யாமியாயிருக்கிற எம்பெருமானை |
| அலற்றி | கூப்பிட்டு |
| அவா அற்று வீடு பெற்ற | ஆசை தீர்ந்து வீடு பெற்றவரான |
| குருகூர் சடகோபன் | நம்மாழ்வார் |
| சொன்ன | அருளிச் செய்ததாய் |
| அவாவில் | பக்தியினாலுண்டானதான |
| அந்தாதிகளால் | அந்தாதித் தொடையான பாசுரங்களால் நிறைந்த |
| இவை ஆயிரமும் | இவ் வாயிரத்தினுள்ளே |
| முடிந்த அவாவில் | பரம பக்தியாலே (பிறந்ததான) |
| அந்தாதி | அந்தாதியான |
| இப்பத்து | இப் பதிகத்தை |
| அறிந்தார் | அறியக் கற்குமவர்கள் |
| பிறந்தே உயர்ந்தார் | ஸம்ஸாரத்தில்பிறந்திருக்கச் செய்தேயும் உயர்ந்தவர்களாவர். |

* * * உயர்வற வுயர்நல மென்கிற முதல் திருவாய்மொழி தொடங்கி *சூழ் விசும் பணிமுகிலுக்கு முன் திருவாய்மொழி வரையில் பரஜ்ஞானத்தையுள்ளே கொண்டிருக்கிற பர பக்தியினால் சென்றதென்றும், * சூழ்விசும்பணி முகிலில் *அந்தமில் பேரின்பத் தடியரோடிருந்தமை * என்று, அர்ச்சிராதிகதியாலே தேச விஷயத்திலே போய், பரிபூர்ணாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகள் திரளிலே கூடியிருந்ததாகக் கண்டு பேசுகையாலே அந்தத் திருவாய்மொழி பூர்ண பரஜ்ஞானத்தினால் சென்றதென்றும், அங்ஙனம் கண்டது மாநஸாநுபவமாய் பாஹ்யாநுபவயோக்ய மல்லாமையாலே பெருவிடாய் பிறந்து கூப்பிட்டுத் தரிக்கமாட்டாமல் திருவாணையிட்டுத் தடுத்துப் பேற்றோடே தலைக்கட்டின * முனியே நான்முகனென்கிற இத் திருவாய்மொழி பக்தியினுடைய சரமாவதியான பரமபக்தியாலே சென்றதென்றும் பூருவாசாரியர்களின் நிர்வாஹமென்பது இங்கு உணரத்தக்கது. இப் பாட்டில் 'முடிந்தவவா'' என்றது பரம பக்தியையே யாம்.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.
எம்பெருமானார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய கோயில் திருவாய்மொழி உரை முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.

# இராமானுச நூற்றந்தாதி.

---

நூறு வெண்பாவினாலேனும் நூறு கட்டளைக் கலித்துறையினாலேனும் அந்தாதித் தொடையாற் கூறுவது நூற்றந்தாதியாம். இத்திவ்யப்பிரபந்தம் நூறு பாசுரங்களுக்குமேல் அதிகமாக எட்டுப் பாசுரங்கள் கொண்டதாயினும் நூற்றந்தாதி யென்னத் தட்டில்லை; நூறு, ஆயிரம் முதலிய பெரிய எண்களுக்குப் பத்தெட்டு குறையினும் மேற்படினும் அவை நூறு ஆயிரம் என்னத் தகுந்தவையேயாம்.

இப்பிரபந்தத்தில் நூற்றெட்டுப் பாசுரங்கள் அமைந்ததற்கும், பாட்டுத்தோறும்இராமானுசத் திருநாமம் தட்டாமல் அநுஸந்திக்கப்பட்டிருப்பதற்கும் பெரியார் ஒரு காரணங் கூறுவர்,—எம்பெருமானார் திருவடிகளில் மிக்க அன்புபூண்டவர்கட்கு இப்பிரபந்தம் ஸாவித்ரிபோலே நித்யாநுஸந்தேயமாகவேணுமென்று பாட்டுத்தோறும் திருநாமத்தை வைத்து நூற்றெட்டுப் பாட்டாக அருளிச்செய்தார்—என்று. ப்ரபந்ந ஸாவித்ரி என்றும் ப்ரபந்ந காயத்ரி என்றும் இதனை நம்மவர் கூறிப் போருவர்கள்.

இப்பிரபந்தம் எம்பெருமானார் காலத்திலே அவதரித்ததாயினும், பெரியபெருமாள் அமுதனார்க்கு அருளப்பாடிட்டு எம்பெருமானாரால் திருச்செவி சாத்தப்பட்டதாதலால் இது ஆழ்வார்களருளிச் செயல்களோடு சேர்த்து அநுஸந்திக்கலாயிற்று. திருக்கார்த்திகைக்குப் பின் ஆழ்வார் திவ்ய ப்ரபந்தங்கட்கு ஏற்பட்டுள்ள அநத்யயநம் இதற்கும் ஒக்கும்.

முதலாயிரம், பெரிய திருமொழி, திருவாய்மொழி, இயற்பா என்ற நான்கு ஆயிரங்களுள் நான்காவதான இயற்பாவில் சரமப் பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கும் இந்த நூற்றந்தாதி. ப்ரணவார்த்தமான முதலாயிரத்தோடு நம்மாழ்வார் விஷயமான பாகவதசேஷத்வத்தை ப்ரதிபாதிக்கும் கண்ணிநுண்சிறுத்தாம்பைச் சேர்த்தாற்போல, கைங்கரியத்தில் களையறுப்பதான இயற்பாவுடனே இதனைச் சேர்த்து அநுஸந்திக்கை பொருத்தமுடைத்தேயாம்.

(திருவரங்கத்தமுதனார் வரலாறு.)

இவ்வமுதனார், ஒரு பங்குனித்திங்களில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் மூங்கிற்குடியில் திருவவதரித்து, திருவரங்கம் பெரிய கோயிலில் இருந்ததுவே காரணமாகப் பெரியகோயில் நம்பி என்று ப்ரஸித்தராய் வாழ்ந்துவந்தார்.

[அஷ்டப்பிரபந்தம் செய்தருளினவரும் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவருமான “பிள்ளைப்பெருமாளையங்கார்” என்பவர்க்கு இவர் திருத்தகப்பனார் என்று சிலரும், பாட்டனார் என்று சிலரும் சொல்லுவர்.]

இவர் ஸகல சாஸ்த்ரங்களையும் அதிகரித்து மஹா நிபுணராய், தமக்குக் குலக்ரமமாகக் கிடைத்த ஸந்நிதி புரோஹித வ்ருத்தியையும் புராணபடந கைங்கர்யத்தையும் பெற்று மிகவும் ராஜஸராய்ச் செருக்குடன் வாழ்ந்துவரும் நாளிலே, உலகங்களை வாழ்விக்கத் திருவனந்தாழ்வானது திருவவதாரமாய்த் திருவவதரித்த எம்பெருமானார் தமது இயற்கையின்னருளாலே இவரைத் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம்பற்றிக் கூரத்தாழ்வானுக்கு நியமிக்க, ஆழ்வானும் இவரை அநுவர்த்தித்து ஞானச்சுடர் கொளுத்தி எம்பெருமானார் திருவடிக்கீழ்க் கொணர்ந்து சேர்க்க, எம்பெருமானாரும் அவரைக் குளிரக் கடாக்ஷித்தருளி ஆழ்வான் பக்கல் ஆச்ரயிக்கும்படி நியமிக்க, அப்படியே அவரும் ஆழ்வானை ஆச்ரயித்துத் தத்வஹித புருஷார்த்தங்களை ஐயந்திரிபறத் தெளிந்து ஆத்மஆத்மீயங்களை அந்த ஆசார்யன் திருவடிகளிலே ஸமர்ப்பித்துப் பரம ப்ரவணராயிருந்தார். இப்படியிருக்கையில் ஸ்வாசார்யருடைய உகப்புக்கு உறுப்பாகத் தமக்கு ப்ராசார்யரான எம்பெருமானார் விஷயமாக ஒன்றிரண்டு பிரபந்தங்களைச் செய்து அவற்றை எம்பெருமானார் ஸந்நிதியிற் கொணர்ந்துவைக்க, எம்பெருமானாரும் அவற்றை

அவிழ்த்துக் கடாக்ஷிக்க, அவை தமது திருவுள்ளத்துக்கு இசைந்திராமையாலே அவற்றைக் கிழித்தெறிந்துவிட்டு அவரை நோக்கி, 'நம்மைப்பற்றிப் பிரபந்தம் பாடவிருப்பம் உமக்கிருக்கு மாகில், ஆழ்வார்களிடத்தும் உகந்தருளின நிலங்களினிடத்தும் நமது ப்ராவண்யம் தோற்றுமாறு ஒரு பிரபந்தம் செய்யும்' என்று நியமித்தருள, இவரும் அப்படியே செய்கிறேனென்று அந்த நியமநத்தை சிரஸாவஹித்து எம்பெருமானார்க்கு ஆழ்வார்களிடத்திலும் திவ்ய தேசங்களிடத் திலுமுள்ள அன்பை நன்கு விளங்கவைத்து இந்தப் பிரபந்தத்தை அருளிச் செய்து எம்பெரு மானார் ஸந்நிதியிலேவந்து வணங்கி 'இதைக் கேட்டருளவேணும்' என்று பிரார்த்தித்து அநுமதி பெற்றுக் கூரத்தாழ்வான் முதலானோர் பேரோலக்கமாக இருக்கிற அங்குத்தானே இந்த பிரபந் தத்தை விண்ணப்பம் செய்ய, எம்பெருமானார் மற்றை முதலிகளோடும் திருச்செவி சாத்தித் தலை துலுக்கிப் போரவுகந்தருளி, தம்திருவடிகளில் ஸம்பந்தமுடையார்க்கெல்லாம் அந்த பிரபந் தத்தை அன்று தொடங்கி என்றும் நித்யாநுஸந்தேயமாம்படி கற்பித்தருளியதுந் தவிர, அவரது வாக்கு அமுதவாக்கா யிருந்தமையால் அவர்க்கு அமுதன் என்ற திருநாமத்தையும் பிரஸாதித் தருளி மிகவும் கடாக்ஷித்தருளினர். ஆகையால் அதுமுதல் 'பெரியகோயில் நம்பி' என்ற திரு நாமம் மாறித் திருவரங்கத்தமுதனார் என்ற திருநாமம் வழங்கத் தொடங்கிற்று. இப்பிரபந்தத் திற்கு ப்ரபந்ந காயத்ரி என்ற திருநாமமும் அன்றேதொடங்கி நிகழலாயிற்று.

இந்த விருத்தாந்தம் சிறிது மாறுபாடாகவும் சொல்லப்படுவதுண்டு; எங்ஙனே யெனின்;— அமுதனார் எம்பெருமானருடைய நியமனம் பெற்று இப்பிரபந்தம் இட்டருள்வதாக அடைய வளைந்தான் திருமதிலுக்கு இவ்வருகேயிருந்த ஒரு தென்னஞ்சோலைத் திருமண்டபத்தில் வீற்றி ருந்து பட்டோலை கொண்டிருக்கும்போது, அவ்வளவில் எம்பெருமானார் அழகியமணவாளனது நியமநத்தினால் ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலிய அந்தரங்கசிஷ்யர்களோடு அவ்விடத்தே யெழுந்தருள அப்போது "செழுந்திரைப்பாற்கடல்" என்ற நூற்றைந்தாம்பாசுரம் தலைக்கட்டி, இருப்பிடம் வைகுந்தமென்ற பாசுரம் எழுத வேண்டிய தருணமாயிருந்ததென்றும், அது முத லான மூன்று பாசுரங்களும் எம்பெருமானார் திருமுன்பே தொடுக்கப்பட்டன வென்றும், பிறகு அரங்கேற்றியானபின் 'இந்த விசேஷத்துக்கு ஸ்மாரகமாக இப்பிரபந்தத்திற்கு மாத்திரம் சாற் றுப் பாசுரங்கள் மூன்றாயிருக்கவேணும்' என்று ஆழ்வான் நியமித்தருளினனென்றும் ஆனது பற்றியே மற்றைப் பிரபந்தங்கட்கு இரண்டு பாசுரம் சாற்றாயிருப்பது போலல்லாமல் இதற்கு மூன்று பாசுரம் சாற்றாக ஸம்ப்ரதாயம் நிகழ்கின்றதென்றும்.

———

தனியன்கள் —(வேதப்பிரான் பட்டர் அருளிச்செய்தவை.)

முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன்
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும்—என்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன் தென்புலத்தார்க்கு
என்னுக்கடவுடையேன் யான்.

| | | | |
|---|---|---|---|
| முன்னை வினை | முன்னே செய்த பாபங்களெல்லாம் | அணி ஆக | ஆபரணமாக |
| அகல | ஒழிவதற்காக, | சேர்த்தினேன் | பொருந்தவைத்துக் கொண்டேன்; |
| மூங்கில் குடி அமுதன் | 'மூங்கிற்குடி' என்னுங் குலத்திலே தோன்றிய திருவரங்கத்தமுதனுடைய | யான் | இப்படி அமுதனுடைய திருவடிகளைச் சூடப்பெற்ற அடியேன் |
| பொன் அம் கழல் கமலப்போது இரண்டும் | பொன்போல் அழகிய பாதாரவிந்தங்களிரண்டையும் | தென் புலத்தார்க்கு | தெற்குத்திக்கிலுள்ளாரான யமகிங்கரர்கட்கு |
| என்னுடைய சென்னிக்கு | எனது தலைக்கு | என்னுக்கு | ஏதுக்காக |
| | | கடவு உடையேன் | ப்ராப்தி யுடையேன்? |

*** :—மூங்கிற்குடியென்ற மஹாகுலத்திலே தோன்றிய திருவரங்கத்தமுதனாருடைய திருவடித் தாமரைகளை நான் சிரோபூஷணமாக அணிந்துகொண்டேன்; அதனால் எனது ஸகல கருமங்களும் தீயினில் தூசாயொழிந்தன. இனி யமனுக்காவது யமபடர்களுக்காவது என்னருகே வருவதற்கு யாதொரு ப்ரஸக்தியுமில்லை: என்றாராயிற்று.

“முன்னை வினையகலச் சேர்த்தினேன்” என இயையும். [மூங்கிற்குடி] வேயர்குலம் ஆஸூரிகுலம், கூரகுலம் என்பனபோல மூங்கிற்குடி யென்று ஒரு குலமுண்டாம். கமலப் போது=தாமரைப்பூ. அணி=ஆபரணம். சேர்த்தினேன்=சேர்த்தேன் என்றபடி: இன்—சாரியை.

என்னுக்கு+கடவுடையேன்=என்னுக்கடவுடையேன்; (கடைக்குறை) கெடுதல் விகாரப் புணர்ச்சி. என்னுக்கு—எதுக்காக என்கை; “என்னுக்கவளை விட்டிங்குவந்தாய்” என்றார் குலசேகரப் பெருமாளும். [கடவுடையேன்] கடவு—ப்ராப்தி; அதாவது-உரிமை.

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்றுநண்ணினர்பால்
சயந்தருகீர்த்திபிராமாநுசமுனி தாளிணைமேல்
உயர்ந்தகுணத்துத் திருவரங்கத்த மூதோங்குமன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதி யோதவிசைநெஞ்சமே.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | மனமே!, | தாள் இணைமேல் | இரண்டு திருவடிகள் விஷயமாக |
| நயம் தரு | விஷயங்களால் தரப்படுகிற | உயர்ந்த குணத்து திரு அரங்கத்து அமுது | சிறந்த குணசாலியான திருவரங்கத் தமுதனார் |
| பேர் இன்பம் எல்லாம் | சிற்றின்பங்கள் யாவும் | ஓங்கும் அன்பால் | கொழுந்து விட்டோங்கிய பக்தியினாலே |
| பழுது என்று | வ்யர்த்தங்களென்று (அவற்றை விட்டொழிந்து) | இயம்பும் | அருளிச்செய்த |
| நண்ணினர் பால் | தம்மை ஆச்ரயித்தவர்கள் விஷயத்தில் | கலித்துறை அந்தாதி | கட்டளைக் கலித்துறையினாலமைந்த நூற்றந்தாதியை |
| சயம் தரு கீர்த்தி | ஸம்ஸார ஜயத்தைப் பண்ணிக்கொடுக்கும் புகழுடையரான | ஓத | அத்யயநம் செய்ய |
| இராமாநுசமுனி | எம்பெருமானாருடைய | இசை | ஸம்மதித்திருக்கக் கடவை. |

***:— விஷயாந்தரங்களின் அநுபவத்தினாலுண்டாகும் சிற்றின்பங்கள் யாவும் அற்பங்களென்றும் ஹேயங்களென்றும் கருதி அருவருத்து அவற்றில் நசையற்றுத் தம்மைவந்து அடி பணிகின்ற மஹாநுபாவர்களுக்கு ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத்தருளி மோக்ஷத்தைத் தந்தருள்பவராய் இப்பெரும்புகழ் பரவப் பெற்றவரான எம்பெருமானார் விஷயமாக, பகவத்-பாகவத பக்தி முதலிய மஹாகுணங்கள் நிறைந்த திருவரங்கத்தமுதனார் பரம பக்தி தலையெடுத்துச் சொன்ன நூற்றந்தாதி யென்னும் திவ்ய ப்ரபந்தத்தை ஓதுவதற்கு நெஞ்சே! நீ இசைந்திடாய் என்றார்.

நயம்—விஷயாந்தரங்கள். “நாணாமை நள்ளேன் நயம்” (முதல் திருவந்தாதி) என்ற விடத்து, நயம் என்பதற்கு விஷயாந்தரங்களென்று பொருள் அருளிச்செய்யப்பட்டிருத்தல் காண்க. பேரின்பம்—சிற்றின்ப மென்னவேண்டுமிடத்துப் பேரின்பமென்றது விபரீதலக்ஷணை.

சொல்லின் தொகைகொண்டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும்
நல்லன்பரேத்துமுன்நாமமெல்லா மென்றன்நாவினுள்ளே
அல்லும்பகலுமமரும்படிநல்கறுசமயம்
வெல்லும்பரம விராமாநுச விதென்விண்ணப்பமே.

| | | | |
|---|---|---|---|
| அறு சமயம் | அப்ராமாணிகங்களான ஆறுமதங்களையும் | ஏத்தும் | துதிக்கிற |
| வெல்லும் | கண்டித்தருளின | உன் நாமம் எல்லாம் | தேவரீருடைய திருநாமங்களெல்லாம் |
| பரம | ஆரியரான | என் தன் நாவினுள்ளே | எனது நாவிலே |
| இராமாநுச | எம்பெருமானாரே! | அல்லும் பகலும் | அஹோராத்ரமும் |
| உனது அடிபோதுக்கு | தேவரீருடைய பாதாரவிந்தங்களிலே | அமரும்படி | பொருந்தியிருக்கும்படி |
| தொண்டு செய்யும் | வாசிக கைங்கரியம் பண்ணுகிற | நல்கு | க்ருபைசெய்தருளவேணும்; |
| நல் அன்பர் | பரமபக்தர்கள் | இதுவே என் விண்ணப்பம் | இவ்வளவே அடியேன் செய்யும் விஜ்ஞாபனம். |
| சொல்லின் தொகை கொண்டு | சப்த ராசிகளைக் கொண்டு | | |

[இம்மூன்று தனியன்களே ஸகல திவ்ய தேசங்களிலும் வழங்குமவை; மற்றொரு தனியன் மேனாட்டில் அநுஸந்திக்கப் படுகிறதாம்; அதாவது.]

இனியென்குறைநமக் கெம்பெருமானார்திருநாமத்தால்
முனிதந்தநூற்றெட்டுச் சாவித்திரியென் னுநுண்பொருளைக்
கனிதந்த செஞ்சொற்கலித்துறையந்தாதி பாடித்தந்தான்
புனிதன்திருவரங்கத்தமுதாகிய புண்ணியனே.

(இதன் கருத்து:—)ஸர்வேச்வரன் ஆதியிலே ஸங்கல்பபூர்வகமாக உலகத்தைப் படைத்து முதலிலே சதுர்முகப்ரஹ்மாவுக்கு ஸாவித்ரியை உபதேசித்தான். இவ்வமுதனார் அந்த ஸாவித்ரியின் ஸாரார்த்தத்தை யெடுத்து இராமாநுசன் என்னுந் திருநாமத்தோடிணக்கிக் கட்டளைக் கலித்துறையிலே வைத்துத் தாம் அநுபவித்த அநுபவத்தின் பரீவாஹரூபமாக இந்நூற்றந்தாதியைப் பாடிப் பின்புள்ளாரான நமக்கும் உபகரித்தருளினார். இனி நமக்கு ஐஹிகாமுஷ்மிகங்களில் ஒரு குறையுமில்லை என்பதாம். "திருநாமத்தால்" என்ற விடத்து, திருப்பெயரால் என்று பாடமிருப்பின் வெண்டளைக்குச் சேரும்.

தனியன் உரை முற்றிற்று.

---

## இராமாநுச நூற்றந்தாதி உரையின் அவதாரிகை.

ஸகல சாஸ்த்ரங்களுக்கும் ஸங்க்ரஹம் திருவஷ்டாக்ஷரம். அதனுடைய பரம தாத்பர்யமாயும், ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களின் ஸாரார்த்தமாயும், ஸ்ரீ மதுரகவிகளுடைய உக்தியாலும் அநுஷ்டானத்தாலும் ப்ரகாசிதமாயும், நம் பூருவாசார்யர்களின் உபதேச பரம்பரையாலே ப்ராப்தமாயும், சேதநர்களனைவர்க்கும் இன்றியமையாத ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களின் நிஷ்க்ருஷ்ட வேஷமாயும், பரம ரஹஸ்யார்த்தமாயு மிருப்பது சரமபர்வ நிஷ்டை. அஃதிருக்கும்படியைத் திருவரங்கத்தமுதனார்க்கு எம்பெருமானார் தமது நிர்ஹேதுகக்ருபையினாலே கூரத்தாழ்வான் திருவடிகளிலே இவரை ஆச்ரயிப்பித்தருளி இவர் முகமாக உபதேசித்தருளினார். அங்ஙனம் உபதேச ப்ராப்தமான அந்தச் சீரிய பொருளை இவ்வமுதனார் தாம் அநவரத பாவனை பண்ணி எம்பெருமானார் திருவடிகளை இடைவிடாது ஸேவித்துக் கொண்டு போந்தாராய அவருடைய திருக்கல்யாண குணங்களைத் தமது பத்திப் பெருங்காதலுக்குப் போக்குவீடாகப் பேசி அநுபவித்தே தீரவேண்டும்படியான நிலைமை தமக்கு உண்டானமையாலும், சரமபர்வநிஷ்டையே சீரியதென்கிற பரமார்த்தத்தைச் சேதநர்கட்கு எளிதில் உணர்த்தவேணுமென்கிற க்ருபா மூலகமான கருத்தினாலும் தாம் எம்பெருமானாருடைய திவ்யகுண சேஷ்

டிதாதிகளை ப்ரேமத்துக்குத் தகுதியாகப் பேசுகிற பாசுரங்களாலே அவருடைய வைபவங்களை அனைவர்க்கும் வெளியிடா நின்றுகொண்டு முன்பு ஆழ்வார் திருவடிகளுக்கே அற்றுத்தீர்ந்த மதுரகவிகள் தமது நிஷ்டையைக் கூறும் முகத்தாலும் பிறர்க்கு உபதேசிக்கும் முகத்தாலும் உஜ்ஜீவநத்துக்கு உபயுக்தமான அர்த்தத்தை லோகத்திலே வெளியிட்டருளினதுபோல, இவர் தாமும் அவ்வகைகளாலே ஆசார்யாபிமாநநிஷ்டர்க்கு அறிந்துகொள்ளத்தக்க அர்த்தங்களை யெல்லாம் மிக்க சுருக்கமும் மிக்க விரிவுமின்றி நூற்றெட்டுப் பாசுரங்கள் கொண்ட இத்திவ்ய ப்ரபந்த முகத்தால் அருளிச்செய்கிறார். ... .... .... *

‡‡பூமன்னுமாதுபொருந்திய மார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன் * பல்கலையோர்
தாம்மன்னவந்தவிராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ* நெஞ்சேசொல்லுவோமவன்நாமங்களே. 1

| | |
|---|---|
| நெஞ்சே! | ஓ மனமே! |
| பூ மன்னு மாது | தாமரைப்பூவில் பொருத்த முடையளா யிருந்த பிராட்டி |
| பொருந்திய மார்பன் | (அப்பூவை விட்டு வந்து) பொருந்துகைக்குறுப்பான போக்யதையை யுடைய திருமார்பை யுடையனான பெருமானுடைய |
| புகழ் மலிந்த பா | திருக்கல்யாண குணங்கள் நிறைந்த தமிழ்ப் பாசுரங்களிலே |
| மன்னு மாறன் | ஊற்ற முடையவரான நம்மாழ்வாருடைய |
| அடி | திருவடிகளை |
| பணிந்து | ஆச்ரயித்து |
| உய்ந்தவன் | உஜ்ஜீவித்தவரும் |
| பல் கலையோர் தாம் மன்ன வந்த | பலபல சாஸ்த்ரங்களை ஓதின மஹான்கள் நிலைபெறும்படி (இவ்வுலகில்) வந்தவதரித்தவருமான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| சரண அரவிந்தம் | திருவடித் தாமரைகளை |
| நாம் மன்னி வாழ | நாம் ஆச்ரயித்து வாழ்வதற்குறுப்பாக |
| அவன் நாமங்களே | அவ்வெம்பெருமானாரது திருநாமங்களையே |
| சொல்லுவோம் | ஸங்கீர்த்தநம் பண்ணுவோம் |

***:—தாமரைமலரிற் பிறந்த பெரிய பிராட்டியார் அப்பூவை விட்டு "அகலகில்லேன் இறையும்" என்று வந்து மிக்க விருப்பத்துடன் வஸிக்கப்பெற்ற திருமார்பை யுடையனான திருமாலினது திவ்ய குணசேஷ்டிதங்களை நிறைத்துக்கொண்டிருக்கிற திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்த நம்மாழ்வாருடைய திருவடிகளைத்தொழுது ஸத்தை பெற்றவராயும், பலபல சாஸ்தரங்களைக்கற்றும் உஜ்ஜீவநோபாயத்தில் த்ருடாத்யவஸாயமின்றியே ஸம்சய விபர்யயங்கள் கொண்டு தடுமாறுகின்றவர்களை ஒரு நிச்சயஜ்ஞானத்திலே நிலைநிறுத்தி வாழ்விக்க வந்தவதரித்தவராயுமிருக்கிற எம்பெருமானாருடைய திருவடிகளை நாம் ஆச்ரயித்து உஜ்ஜீவிக்குமாறு அவருடைய திருநாமங்களை வாயாரப் பேசுவோமென்று தமது திருவுள்ளத்தை நோக்கிச் சொல்லுகிறாராயிற்று.

பல்கலையோர் தாம்மன்ன=நாநா சாஸ்த்ரங்களைக்கற்று வல்லவர்களான ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலிய மஹான்கள் ப்ரதிஷ்டிதராகைக்காக என்றுமாம். எம்பெருமானாருடைய சரணாரவிந்த ப்ராப்திக்கு ஸாதநம்=அவருடைய திருநாமஸங்கீர்த்தநமேயாம் என்பது இப்பாசுரத்தில் வெளியாயிற்று. .... .... ... 1

‡‡கள்ளார்பொழில்தென்னரங்கன் * கமலப்பதங்கள்நெஞ்சில்
கொள்ளாமனிசரைநீங்கி* குறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பனிராமாநுசன் மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு* ஒன்றறியேனெனக்குற்றபேரியல்வே 2

| பதம் | பொருள் |
|---|---|
| கள் ஆர்பொழில் தென் அரங்கன் | தேன் நிறைந்த சோலைகளையுடைய தென் திருவரங்கத்திலேபள்ளிகொள்ளும் பெருமானுடைய |
| கமலம் பதங்கள் | தாமரைபோன்ற திருவடிகளை |
| நெஞ்சில் கொள்ளா | தமது நெஞ்சிலேவையாத |
| மனிசரை நீங்கி | மனிதர்களைவிட்டொழித்து |
| குறையல்பிரான் அடிக் கீழ்விள்ளாத அன்பன் | திருமங்கை மன்னனுடைய திருவடிகளிலே என்றும் விட்டு நீங்காத பக்தியையுடையரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| மிக்க சீலம் அல்லால் | சிறந்த சீலகுணத்தைத் தவிர |
| ஒன்று | வேறொன்றையும் |
| என் நெஞ்சு உள்ளாது | எனது நெஞ்சானது நினைக்க மாட்டாது; |
| | (இவ்வாறாக) |
| எனக்கு உற்ற பேர் இயல்வு | எனக்குவாய்த்திருக்கும் சிறந்த ஸ்வபாவத்திற்கு |
| ஒன்று அறியேன் | ஒரு காரணத்தையும் அறிகின்றிலேன். |

* * *—.ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளை நெஞ்சாலும் நினையாத பாவிகளோடு நெடுங்காலம் பழகிக்கிடந்த என்நெஞ்சானது இன்று அப்பாவிகளோடு உறவையொழித்துவிட்டு, திருமங்கையாழ்வாருடைய திருவடிகளையே அநவரதம் இறைஞ்சுமவரான எம்பெருமானாருடைய சிறந்த சீலகுண மொன்றையே சிந்தியாநின்றது; இப்படிப்பட்டதொரு பெருந்தன்மை எனக்கு நேர்ந்ததற்குக் காரணம் அவ்வெம்பெருமானாருடைய நிர்ஹேதுக க்ருபாகடாக்ஷமேயொழிய வேறொன்றுண்டாக நானறிகின்றிலேன் என்றவாறு. ... ... 2

பேரியல்நெஞ்சே அடிபணிந்தேனுன்னை* பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ளசுற்றம்புலர்த்தி*பொருவருஞ்சீர்
ஆரியன்செம்மையிராமாநுசமுனிக்கன்புசெய்யும்
சீரியபேறுடையார்*அடிக்கீழென்னைச்சேர்த்ததற்கே. 3

| பதம் | பொருள் |
|---|---|
| பேர் இயல் நெஞ்சே! | மிகவும் கம்பீரமான மனமே! |
| உன்னை அடி பணிந்தேன் | உன்னை வணங்குகின்றேன்; (என்னை வணங்குவது எதற்காக என்னில்;) |
| பேய் பிறவி | ஆஸுரப் பிறப்பையுடையவர்களான |
| பூரியரோடு உள்ள | நீசர்களோடு (எனக்கு) இருந்த |
| சுற்றம் | உறவை |
| புலர்த்தி | போக்கடித்து |
| பொருவு அரு சீர் | ஒப்பற்றகுணங்களையுடையவரும் |
| ஆரியன் | சிறந்த அநுஷ்டாந முடையவரும் |
| செம்மை | (ஆச்ரிதரோடு) ருஜுவாகப் பரிமாறுந்தன்மை வாய்ந்தவருமான |
| இராமாநுச முனிக்கு | எம்பெருமானார் திறத்தில் |
| அன்பு செய்யும் சீரிய பேறு உடையார் | பக்தி பண்ணுவதையே பரம புருஷார்த்தமாகவுடையவர்களானகூரத்தாழ்வான் போல்வாருடைய |
| அடிக்கீழ் | திருவடிகளின் கீழே |
| என்னை | (பரமநீசனாயிருந்த)என்னை |
| சேர்த்ததற்கே | கொண்டு சேர்த்த மஹோபகாரத்திற்காகவே (உன்னை அடி பணிந்தேன்.) |

பரம நீசர்களோடு எனக்கிருந்த ஸம்ஸர்க்கத்தைப் போக்கடித்து, ஒப்பற்ற குணசாலியான எம்பெருமானாருடைய திருவடிகளில் ப்ராவண்யமாகிற பரமபுருஷார்த்தத்தைப் பெற்றுள்ள ஆழ்வான் போல்வாருடைய திருவடிகளின் கீழே என்னைக் கொண்டு சேர்த்த நெஞ்சே! இப்பெரு நன்றிபுரிந்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்?

"தலையல்லால் கைம்மாறிலேனே" என்றாற்போல உன்னைத் தலையால் வணங்குவது தவிர வேறொரு கைம்மாறு நான்செய்யகில்லேன் என்றாராயிற்று. பூரியர்=இழிபிறப்பாளர். புலர்த்துதல்—உலரச் செய்தல்; அதாவது போக்கடித்தல். பொருவு—ஒப்பு

"இராமாநுசனடிக் கன்புசெய்யுஞ் சீரிய பேறுடையார்" என்றவிடத்து ஸ்ரீராமாநுஜ பக்தர்களெல்லாரையும் விவக்ஷிக்கிறார் என்றலும், கூரத்தாழ்வானை விசேஷித்துக் கருதுகின்றா ரென்றலும் ஒக்கும். .... ... ... ... 3

என்னைப்புவியிலொருபொருளாக்கி*மருள்சுரந்த
முன்னைப்பழைவினைவேரறுத்து* ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்த விராமாநுசன் பரன்பாதமுமென்
சென்னித்தரிக்க வைத்தான்*எனக்கேதுஞ்சிதைவில்லையே. 4

| | | | |
|---|---|---|---|
| ஊழி முதல் வனையே | காலம் முதலியஸகல பதார்த்தங்களுக்கும் காரணபூதனான எம்பெருமானையே | மருள் சுரந்த முன்னைபழை வினை வேர் அறுத்து | அஜ்ஞான மூலகங்களாய் மிகவும் அநாதிகளான (எனது) பாவங்களை வேரறநீக்கி |
| பன்ன | (எல்லாரும் விவேகித்து) அநுஸந்திக்கும்படி | பாதமும் | தமது திருவடிகளையும் |
| | | என் சென்னி | எனது தலையிலே |
| பணித்த | (ஸ்ரீ பாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த | தரிக்க வைத்தான் | நான் உகந்து தரிக்கும் படியாக வைத்தருளினார்; (இவ்வளவு மஹாப்ரஸாதம் பெற்றேனான பின்பு) |
| பரன் இராமாநுசன் | ஸர்வோத்க்ருஷ்டரான எம்பெருமானார் | | |
| புவியில் | இந்தப்பூமியிலே | எனக்கு | அடியேனுக்கு |
| என்னை ஒரு பொருள் ஆக்கி | (அபதார்த்தமாய்க் கிடந்த) என்னை ஒரு பதார்த்தமாக்கி | ஏதும் சிதைவு இல்லை | எவ்விதமான ஹாநியும் இனி உண்டாக வழியில்லை. |

* * *:—எம்பெருமானாருடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு ஆளான நான் இனி ஒரு நாளும் எவ்விதமான ஹாநியையும் அடையமாட்டேன் என்கிறார்,-பதார்த்தகோடியில் சேராமல் துச்சனாயிருந்த எனது கருமங்களையெல்லாம் வேரற நீக்கி, தமது பாதாரவிந்தங்களையும் என் தலைமேலே வைத்தருளினார் எம்பெருமானார்; இப்பேறு பெற்ற எனக்கு இனி ஒரு குறையுமில்லை என்றாராயிற்று.

மருள் சுரந்த—அஜ்ஞானத்தாலே செய்யப்பட்ட என்கை; மருளாலே சுரக்கப்பட்ட என்றவாறு [ஊழிமுதல்வனையே பன்னப்பணித்த] ஊழிமுதல்வனான எம்பெருமானையே பரவும்படி அமுதனாரகிய தம்மைச் செய்தருளின—என்று அர்த்தமல்ல; பகவத்விமுகரா யிருந்தவர்களை யெல்லாம் உபதேசாதி முகத்தாலே பகவத் ப்ரவணராம்படி செய்தருளினவர் என்று பொதுப் படையாகச் சொன்னபடி. ஊழிமுதல்வன்—பிரளயகாலத்தில் முழுமுதற் கடவுளாயிருந்த வன் என்றுமாம். ... ... .... 4

எனக்குற்றசெல்வமிராமாநுசனென்று* இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ்*அவன்மன்னியசீர்
தனக்குற்றவன்பரவன் திருநாமங்கள்சாற்றும், என்பா
வினக்குற்றங்காணகில்லார்*பத்தியேய்ந்தவியல்விதென்றே. 5

| | |
|---|---|
| எனக்கு உற்ற செல்வம் இராமாநுசன் என்று | ‘நமக்கு ப்ராப்தமான ஸம்பத்து எம்பெருமானாரே’ என்று |
| இசைய கில்லா | அத்யவஸாயங் கொண்டிருக்க மாட்டாத |
| மனக்குற்றம் மாந்தர் | துஷ்ட ஹ்ருதயர்களான மனிசர் |
| பழிக்கில் | (இந்நூலைப்) பழிப்பர்களாகில் |
| புகழ் | (அன்னவர்களுடைய பழிப்பே இதற்குப்) புகழாய்விடும்; |
| அவன் | அவ்வெம்பெருமானாருடைய |
| மன்னிய சீர் தனக்கு | நித்யஸித்தமான கல்யாண குணங்களுக்கு |
| உற்ற | தகுதியான |
| அன்பர் | அன்பையுடையவர்களான மஹான்கள் |
| பத்தி ஏய்ந்த இயல்வித்து என்று | இந்நூலானது பக்தியோடு கூடின ப்ரவ்ருத்தியையுடையதென்று (திருவுள்ளம்பற்றி) |
| அவன் திருநாமங்கள் சாற்றும் என் பா இனம் குற்றம் காணகில்லார் | அவ்விராமாநுசனுடைய திருநாமங்களைச் சொல்லுகின்ற என்னுடைய (இந்தப்) பாசுரமாலைகளிலுள்ள குற்றங்களைக் காணமாட்டார்கள். |

* * *;—உலகத்தில் ஒரு பிரபந்தம் பிறந்தால் அதனைத் தூஷிப்பார் பலரும், பூஷிப்பார் சிலரும் ஏற்படுவது வழக்கம். உண்மையில் தோஷங்கள் இல்லாதிருந்தாலும் எதையாவது சொல்லித் தூஷித்தே தீருவர்கள்; குற்றங் குறைகள் இருந்துவிட்டால் தூஷகர்களின் உத்ஸாஹம் கேட்கவே வேண்டியதில்லை. அறிவிலியான நான் இயற்றும் இந்நூலில் தோஷங்கள்தான் மிகையாக இருக்கக்கூடும்; அவற்றைக்கண்டு சிலர் நிந்திப்பர்களாகில், அன்னவருடைய தூஷணம் நமக்கு பூஷணமேயா மித்தனை என்கிறார்.

‘பிறருடைய பழிப்பு நமக்கு அப்ரயோஜகம்’ என்று சொல்லவேண்டியிருக்க, அவர்களுடைய பழிப்புத்தானே நமக்குப் புகழாம் என்கைக்குக் கருத்தென்? அவர்களது பழிப்பு இவர்க்கு எப்படி புகழாய் விடும்? என்று சிலர் சங்கிக்கக்கூடும். அவர்கள் தெளியுமாறு சொல்லுகிறோம்;—அமுதனாரம் ஒருவர்; அவர் இராமாநுச நூற்றந்தாதி என்றொரு பிரபந்தம் பாடினாராம்; அதில் ஒவ்வொருபாட்டிலும் இராமாநுசன் என்று சொன்னதையே சொல்லிக்கொண்டு கிடக்கிறார் தவிரவும், சாஸ்திரங்களில் புருஷார்த்தமாகச் சொல்லப்பட்டுள்ள ஐச்வர்யம் முதலானவற்றை இகழ்ந்துரைக்கிறார்; ஸகல புருஷார்த்தங்களும் நமக்கு ‘உடையவர்’ தானும்; எம்பெருமானைக்கூட அவர் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டாராம். என்றிவைபோல்வன சில வார்த்தைகளைச் சொல்லிப் பழிப்பர்கள். வாஸ்தவத்தில் இவையெல்லாம் குணமேயாதலால் குணகீர்த்தநத்தில் சேர்ந்து புகழ்ச்சியேயாய்முடியக் குறையில்லையென்க. எம்பெருமானைப் பழித்த சிசுபாலாதிகளும் பர்யாயேண குணகீர்த்தநம் பண்ணினர்களாகவன்றோ உய்ந்து போனது. .... .... .... 5

இயலும்பொருளு மிசையத் தொடுத்து* ஈன் கவிளன்பால்
மயல்கொண்டு வாழ்த்துமிராமாநுசனை* மதியின்மையால்
பயிலும்கவிகளில் பத்தியில்லாதவென்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன்* அவன்றன்பெருங்கீர்த்தி மொழிந்திடவே. 6

| | |
|---|---|
| ஈன் கவிகள் | லக்ஷணரான கவிகள் |
| அன்பால் | ப்ரீதியினாலே |
| இயலும் பொருளும் | சப்தமும் அர்த்தமும் |
| இசைய | நன்கு பொருந்தும்படியாக |
| தொடுத்து | கவனம்பண்ணி |
| மயல் கொண்டு | வ்யாமோஹம்தலையெடுத்து |
| வாழ்த்தும் | துதிக்கும்படி நின்ற |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| பயிலும் | வருணிக்கின்ற |
| கவிகளில் | பாடல்களிலே |
| பத்தி இல்லாத | பக்தியற்றதான |
| என் பாவி நெஞ்சால் | என்னுடைய பாபிஷ்டமான நெஞ்சினாலே |
| அவன் தன் | அவ்வெம்பெருமானாருடைய |
| பெரு கீர்த்தி | அளவற்ற கீர்த்திகளை |
| மொழிந்திட | பேசுவதாக |
| மதிஇன்மையால் முயல்கின்றனன் | புத்தியில்லாமையினாலே ப்ரவர்த்திக்கின்றேன். |

* * *:—"பத்தியேய்ந்த வியல்விதென்றே" என்று கீழ்ப்பாட்டிற் சொன்னவிவர், அப்படிப்பட்ட பக்தி தமக்கு உண்டோவென்று பார்த்தார்; 'அந்தோ! நாமோ அவ்வெம்பெருமானைத் துதிக்க இழிந்தது!' என்று தம்மைத்தாமே வெறுத்துக் கொள்ளுகிறார் இதில்.—இன்கவி பாடும் பரமகவிகளான சில மஹான்கள் சொல்லின்பமும் பொருளின்பமும் நன்கு பொருந்துமாறு கவி பண்ணி ஆந்தரமான அன்பினாலே வ்யாமோஹித்து இராமாநுசனை வாழ்த்தா நிற்பர்கள்; அன்னவர்களுடைய பக்திபரீவாஹ ரூபமான கவிகளில் ஆதரமற்ற எனது பாவி நெஞ்சால் அவ்விராமாநுசனுடைய பெருப்பெருத்த புகழ்களையெல்லாம் பேசுவதாக நான் முயல்கின்றேனே! இஃது என்ன புத்திகெட்ட தன்மை! என்று வெறுத்துக் கொள்ளுகிறார். .... .... ... .... 6

‡‡ மொழியைக்கடக்கும்பெரும்புகழான் *வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நம்கூரத்தாழ்வான் சரண்கூடியபின்*
பழியைக்கடத்துமிராமாநுசன் புகழ்பாடி அல்லா
வழியைக்கடத்தல்* எனக்கினியாதும் வருத்தமன்றே. 7

| | | | |
|---|---|---|---|
| மொழியைக் கடக்கும் | வாய்கொண்டு வருணிக்க முடியாதபடி வாசாமகோசரமான | கூடியபின் | நான் ஆச்ரயித்த பின்பு |
| பெரு புகழான் | பெரிய புகழை யுடையவரும் | பழியை கடத்தும் | ஸர்வபாப நிவர்த்தகரான |
| முக்குறும்பு ஆம் வஞ்சக் குழியை கடக்கும் | கல்விச்செருக்கு, செல்வச் செருக்கு, குலச்செருக்கு என்னும் மூவகைக் குறும்புகளாகிற படுகுழியைக் கடந்திருப்பவரும் | இராமாநுசன் புகழ் பாடி | எம்பெருமானாருடைய நற்குணங்களைப்பாடி |
| நம் | நமக்கு நாதருமான | அல்லாவழியை கடத்தல் | ஸ்வரூபத்திற்குச் சேராத தீயவழிகளைத் தப்பிப் பிழைக்கையானது |
| கூரத்து ஆழ்வான் | கூரத்தாழ்வானுடைய | எனக்கு | அடியேனுக்கு |
| சரண் | திருவடிகளை | இனி | இனிமேலுள்ள காலமெல்லாம் |
| | | யாதும் வருத்தம் அன்று | ஈஷத்தும் ப்ரயாஸ ஸாத்யமன்று; [எளிதேயாம்] |

* * *:—எம்பெருமானாரைத் துதிப்பதற்குத் தாம் யோக்யதையற்றவர் என்று பின்வாங்கப்பார்த்த அமுதனார், தமக்குள்ள ஆழ்வான் திருவடி ஸம்பந்தத்தை நினைத்து இஃது இருக்கும்போது எனக்கு அஸாத்யமானது ஒன்றுமில்லையென்று துணிவு கொள்ளுகிறார் இதில். வாய்கொண்டு வருணிக்கமுடியாத பெரும் புகழ் படைத்தவரும், கல்வி, செல்வம், குலம் என்ற மூன்றுவகை ஸம்பத்தும் புஷ்கலமாயிருந்தும் அவற்றால் இறையும் அஹங்கார மடையாதவருமான கூரத்தாழ்வானுடைய சரணாரவிந்தங்களை ஆச்ரயித்து க்ருதக்ருத்யனானவெனக்கு எம்பெருமானாருடைய திருக்குணங்களைப் பாடுதலும் அதுவே காரணமாக அர்ச்சிராதிகதியொழிந்த மற்ற கதிகளிற் போகாதபடி அவ்வழியே போதலும் மிகவுமெளிதேயாம் என்றாராயிற்று. ... ... ... .... 5

நம் பூருவாசாரியர்கள் எல்லாருமே சிறந்த புகழுடையராயினும் ஆழ்வானுடைய புகழ் அத்யந்த விலக்ஷணமென்பது ப்ரஸித்தமான விஷயம். நம் தர்சநத்துக்கு மஹாத்ரோஹியான நாலூரானுக்குக் கொடிய நரகங்களைக் கொடுக்க வேணுமென்று பகவத்ஸந்நிதியிலே ப்ரார்த்திக்கவேண்டியிருக்க, பேரருளாளன் திருமுன்பே வரதராஜஸ்தவத்தை விண்ணப்பம் செய்து கண்தெரியும்படி வரம் வேண்டிக்கொள்ளீர் என்ற ஸ்வாசார்ய நியமநத்தையும் அதிக்ரமித்து "நான் பெற்றபேறு நாலூரானும் பெறவேணும்" என்று வரம் வேண்டிக்கொள்ளும்படி விசாலமான திருவுள்ளம்பெற்ற ஆழ்வானுடைய புகழை நாம் என்சொல்வோம்! "மொழியைக் கடக்கும் பெரும்புகழான்" என்று சொல்வது தவிர வேறு வாசகமில்லைகாணும்.

[வஞ்சமுக்குறும்பாமித்யாதி.] கல்விச்செருக்கு, செல்வச்செருக்கு, குலச் செருக்கு என்ற இம்மூன்று அஹங்காரங்கள் மிகக்கொடியவை; இவற்றைக் கடத்தல் ஆர்க்கும்

அரிது ; இவற்றைக் கடந்தவர் என்னும் ஏற்றம் ஆழ்வானொருவர்க்கே அஸாதாரணமென்பதாக எம்பெருமானார் காலத்திலேயே ப்ரஸித்தமாயிற்று. திருவாய்மொழியில் "பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பன்" என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரத்தில் ஆழ்வான் விஷயமாக அருளிச் செய்யப்பட்டதொரு ஐதிஹ்யம் குறிக்கொள்ளத்தகும். மற்றும்பல இதிஹாஸங்களும் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். .... .... .... 7

வருத்தும் புறவிருள்மாற்ற* எம்பொய்கைப்பிரான்மறையின்
குருத்தின்பொருளையும்செந்தமிழ்தன்னையுங்கூட்டி*ஒன்றத்
திரித்தன்றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
யிருத்தும் பரமன்* இராமாநுசனெம்மிறையவனே. 8

| | |
|---|---|
| வருத்தும் | வருத்தத்தை யுண்டுபண்ணக்கூடிய |
| புறம் இருள் | பாஹ்ய விஷயங்களைப்பற்றின அஜ்ஞானமாகிறஇருளை |
| மாற்ற | போக்குவதற்காக |
| எம் பொய்கைப் பிரான் | நமது குலத் தலைவரான பொய்கையாழ்வார் |
| அன்று | முற்காலத்தில் |
| மறையின் குருத்தின் பொருளையுஞ் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றதிரித்து | வேதாந்தங்களிற் பதிந்து கிடக்கும் பொருள்களையும் செந்தமிழ்ச் சொற்களையுங் கூட்டி இரண்டையும் ஒன்றுசேர ஒரு திரியாக்கி |
| எரித்த திரு விளக்கை | ஜ்வலிக்கச்செய்த (முதல் திருவந்தாதியாகிற) திருவிளக்கை |
| தன் திரு உள்ளத்தே | தமது திருவுள்ளத்திலே |
| இருத்தும் | வைத்துக்கொண்டிராநின்ற |
| பரமன் இராமாநுசன் | மஹாவைபவசாலியான எம்பெருமானார் |
| எம் இறையவன் | நமக்கு ஸ்வாமி. |

* * *:—பகவத்பாகவத விஷயம் அந்தரங்க விஷயமென்றும், சப்தாதி விஷயங்கள் பாஹ்ய விஷயம் (அதாவது-புறவிஷயம்) என்றும் சொல்லப்படும். அந்த பாஹ்ய விஷயங்களைப்பற்றின அஜ்ஞாநாந்தகாரமானது புறவிருள் எனப்படும் ; [புறம்பான விஷயங்களைப்பற்றின இருள் புறவிருள்] அவ்விருளானது முதலிலே ஸுகரூபம்போல் தோற்றினாலும் பிறகு மிக்கவருத்தத்தை விளைக்கக்கூடியது ; அப்படிப்பட்ட கொடிய இருளை அகற்றுவதற்காகப் பொய்கையாழ்வார் "வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்யகதிரோன் விளக்காக" என்று தொடங்கித் திருவந்தாதி திவ்ய ப்ரபந்தமென்னும் ஒரு விளக்கை ஏற்றியருளினர். அவ்விளக்குக்கு எதைத் திரியாக்கினர் என்றால், வேதாந்தங்களில் திரண்டு கிடக்கும் ஸாரப் பொருள்களையும் இனிய தமிழ்ச்சொற்களையும் ஒன்று சேர்த்துத் திரித்தார். அப்படிப்பட்ட திருவிளக்கை எம்பெருமானார் தமது திருவுள்ளத்தினுள்ளே எப்போதும் அணையாதபடி ஸ்தாபித்தருளினர் ; அவரே அடியேனுக்கு ஸ்வாமி என்றாராயிற்று. .... 8

இறைவனைக்காணு மிதயத் திருள்கெட* ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடி தாள்கள்* நெஞ்சத்
துறையவைத்தாளு மிராமாநுசன் புகழோதும் நல்லோர்
மறையினைக்காத்து* இந்தமண்ணகத்தே மன்னவைப்பவரே. 9

| | |
|---|---|
| இறைவனை | ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானை |
| காணும் | ஸாக்ஷாத் கரிப்பதற்கு உபகரணமான |
| இதயத்து | ஹ்ருதயத்திலுள்ள |
| இருள் | அஜ்ஞானமாகிற அந்தகாரமானது |
| கெட | நசிக்கும்படியாக |

| | |
|---|---|
| ஞானம் என்னும் நிறை விளக்கு ஏற்றிய | ஞானமாகிற பூர்ண தீபத்தை ப்ரகாசிப்பித்தருளி இரண்டாந் திருவந்தாதியை அருளிச்செய்த |
| பூதத் திருவடி தாள்கள் | பூதத்தாழ்வாருடைய திருவடிகளை |
| நெஞ்சத்து | தமது திருவுள்ளத்திலே |
| உறைய வைத்து | சாச்வதமாக ஸ்தாபித்து |
| ஆளும் | (அவற்றையே) அநுபவிக்கின்ற |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| புகழ் | திவ்ய குணங்களை |
| ஓதும் | இடைவிடாது அநுஸந்திக்கின்ற |
| நல்லோர் | விலக்ஷண புருஷர்கள் தாம் |
| இந்த மண் அகத்தே | இப் பூமண்டலத்திலே |
| மறையினை | வேதங்களை |
| காத்து | ரக்ஷித்து |
| மன்ன வைப்பவர் | என்றைக்கும் அழிவில்லாதபடி ப்ரதிஷ்டாபனம் பண்ண வல்லவர்கள். |

* * *:—'ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்' என்னும் விருது இராமாநுசனுடையார்க்கே ஏற்குமென்கிறார்.—ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்கு எல்லார்க்கும் உபகரணமாயிராநின்ற ஹ்ருதயமானது அஜ்ஞாநாந்தகாரத்தாலே இருண்டு கெட்டுப் போகாதபடி பரஜ்ஞாநமாகிற பூர்ணதீபத்தை ஏற்றினவரான பூதத்தாழ்வாருடைய திருவடிகளைத் தமது திருவுள்ளத்திலே இடைவிடாது வைத்துக்கொண்டு அவற்றையே அனுபவிக்கும் எம்பெருமானாருடைய குணகீர்த்தனமே போது போக்காக இருக்கும் விலக்ஷணர் யாரோ அவர்கள் தான் வேதத்தை நன்றாக ரக்ஷித்து இந்நிலவுலகத்தில் நிலைநிறுத்தவல்ல மஹான்கள் என்றாராயிற்று. பூதத்தாழ்வார் ஏற்றிய ஞானமென்னும் நிறைவிளக்காவது—இரண்டாந் திருவந்தாதியாகிற அவருடைய அருளிச்செயல். பூதத்திருவடி - திருவடியென்று இங்கே ஸ்வாமிக்கு வாசகம்; பூதத்தாரென்னும் ஸ்வாமி என்றபடி.

[மறையினைக்காத்து மன்னவைப்பவர்] எம்பெருமானார் ஸம்பந்தம் பெறாத மற்றையோர்கள் "வேதம் ப்ரமாணமேயல்ல" என்று சொல்லுவாரும், அதனைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டும் அபார்த்தங்கள் பண்ணுவாருமாய் இருப்பதால் அவர்கள் யாவரும் வேதமார்க்க வித்வம்ஸிகள்; இராமாநுசனுடையார் தாம் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்கள் என்றபடி. 9

.... .... ....

மன்னியபேரிருள் மாண்டபின்* கோவலுள்மாமலராள்
தன்னொடுமாயனைக் கண்டமைகாட்டும்.* தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்றுமிராமாநுசற்கன்பு பூண்டவர்தாள்
சென்னியிற்சூடும்* திருவுடையாரென்றுஞ்சீரியரே. 10

| | |
|---|---|
| மன்னிய | ஒருவராலும் பேர்க்கமுடியாதபடி நிலைத்துநின்ற |
| பேர் இருள் | (அஜ்ஞாநமாகிற பெருத்த இருளானது |
| மாண்ட பின் | முற்பட்ட ஆழ்வார்களிருவரும்ஏற்றின திருவிளக்காலே) நன்றாக நீங்கின பின்பு, |
| கோவலுள் ஆயனை | திருக் கோவலூரில் ஆயனரை |
| மா மலராள் தன்னொடு | பிராட்டியோடு கூட |
| கண்டமை | தாம் ஸேவித்த படியை |
| காட்டும் | ("திருக்கண்டேன்" இத்யாதி ப்ரபந்த முகத்தாலே) வெளியிட்டருளின |
| தமிழ் தலைவன் | தமிழ்க்குத் தலைவரான பேயாழ்வாருடைய |
| பொன் அடி | அழகிய திருவடிகளை |
| போற்றும் | புகழுமவரான |
| இராமாநுசற்கு | எம்பெருமானார் திறத்தில் |
| அன்புபூண்டவர் | பக்தியையுடையவர்களினது |
| தாள் | திருவடிகளை |
| சென்னியில் சூடும் திரு உடையார் | சிரோ பூஷணமாகக்கொள்ளுஞ் செல்வமுடையோர் தாம் |
| என்றும் சீரியர் | என்றைக்கும் ஸ்ரீமான்கள். |

* * *:—பொய்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் ஏற்றின இரண்டு திருவிளக்குகளாலும் இருள் நீங்கவே, “திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்” என்று திருக்கோவலூராயனைப் பிராட்டியோடுகூட ஸேவிக்கப்பெற்றார் பேயாழ்வார். தாம் அப்படி ஸேவித்ததாக மூன்றாந்திருவந்தாதி முகத்தால் வெளியிட்டருளின அவ்வாழ்வாருடைய திருவடிகளைத் துதிக்குமவரான எம்பெருமானார் திறத்தில் பக்தியையுடையவர்கள் யாரோ, அவர்களுடைய திருவடிகளைச் சிரோபூஷணமாகக் கொள்வதையே அழியாச் செல்வமாக நினைத்து ஸ்ரீராமாநுஜ பக்தர்களுடைய திருவடியைச் சிரமேற்கொள்ளுமவர்கள் தாம் நித்திய ஸ்ரீமான்கள் என்றாராயிற்று.

இப்பாட்டில் பேயாழ்வார் “தமிழ்த்தலைவன்” என்று சிறப்பித்துக் கூறப்பட்டார். 10

சீரியநான்மறைச் செம்பொருள் * செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப் பாண்பெருமாள் * சரணாம்பதுமத்
தாரியல்சென்னி யிராமாநுசன்தன்னைச் சார்ந்தவர்தம்
காரியவண்மை * என்னால்சொல்லொணாதிக்கடலிடத்தே. 11

| | |
|---|---|
| சீரிய நால் மறை செம்பொருள் | சிறந்த நால் வேதங்களிலுள்ள செவ்விய பொருள்களை |
| செம் தமிழால் | அழகிய தமிழ்ப் பாசுரங்களினால் |
| அளித்த | அருளிச்செய்தவரும் |
| பார் இயலும் புகழ் | பூமியெங்கும் பொருந்தின புகழை யுடையவருமான |
| பாண் பெருமாள் | திருப்பாணாழ்வாருடைய |
| சரண் ஆம் பதுமம் தார் இயல் சென்னி | திருவடிகளாகிற தாமரைப் பூவாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியை யுடையரான |
| இராமாநுசன் தன்னை | எம்பெருமானாரை |
| சார்ந்தவர் தம் | ஆச்ரயமாகப் பற்றினவர்களுடைய |
| காரியம் வண்மை | அநுஷ்டானவை லக்ஷண்யமானது |
| இக்கடல் இடத்து | கடல்சூழ்ந்த இப்பூமியில் |
| என்னால் சொல்லொணாது | (இப்படிப்பட்ட வைபவமுடையதென்று) என்னால் சொல்லித் தலைக்கட்ட முடியாதது. |

* * *:—எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளையெல்லாம் விசதமாகப் பேசுகையாலே சிறந்தவையான நால்வேதங்களில் பொதிந்து கிடக்கும் நற்பொருள்களை “அமலனாதிபிரான்” என்னும் திவ்ய ப்ரபந்தத்தில் சுருக்கி அருளிச் செய்தவராய் நாடெங்கும் பரவின புகழையுடையரான திருப்பாணாழ்வாருடைய சரணாரவிந்தங்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியை யுடையவரான எம்பெருமானாரை அடிபணிந்தவருடைய ஆசாரவைலக்ஷண்யமானது என் வாய்கொண்டு வருணிக்க முடியாதபடி மிகவும் சிறந்தது என்றாராயிற்று. 11

இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன் * இணையடிப்போ
தடங்குமிதயத் திராமாநுசன் * அம்பொற்பாத மென்றுங்
கடங்கொண் டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக் காதல் செய்யாத்
திடங்கொண்ட ஞானியர்க்கே * அடியேனன்புசெய்வதுவே. 12

| | |
|---|---|
| இடம் கொண்ட கீர்த்தி | பூமியெங்கும் வியாபித்த கீர்த்தியை யுடையரான |
| மழிசைக்கு இறைவன் | திருமழிசைப் பிரானுடைய |
| இணை அடி போது | உபயபாதாரவிந்தங்கள் |
| அடங்கும் இதயத்து | குடிகொண்டிருக்கப்பெற்ற திருவுள்ளத்தை யுடையரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| அம் பொன் பாதம் | மிகவும் அழகிய திருவடிகளை |

| | | | |
|---|---|---|---|
| என்றும் | எக்காலத்திலும் | காதல் செய்யா | அன்பு பூண்டிராத |
| கடம் கொண்டு இறைஞ்சும் திரு | இதுவே நமக்கு ஸ்வரூப மென்கிற புத்தியோடே ஆச்ரயிக்கையாகிற செல்வத்தை யுடையரான | திடம் கொண்ட ஞானியர்க்கே | மிக்க உறுதியை யுடையரான ஞானிகளுக்குத் தான் |
| முனிவர்க்கு அன்றி | மஹான்களுக்குத் தவிர மற்றவர்களுக்கு | அடியேன் அன்புசெய்வது | அடியேன் பக்தனாயிருப்பேன். |

* * *:—உலகமெங்கும் பரவின புகழையுடையரான திருமழிசைப்பிரானுடைய பாதாரவிந்தங்கள் அடங்கியிருக்கப்பெற்ற திருவுள்ளத்தை யுடையரான எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகளை ஸ்வரூப ப்ராப்தத்வ புத்தியோடே அநவரதம் ஆச்ரயிக்கின்ற மஹாபாகவதர்கட்குத் தவிர வேறொருவர்க்கும் விதேயப்படாத மாஞானிகளுக்கே அடியேன் அன்பனாயிருப்பன் என்கிறார். இப்பாட்டால், 'ஸ்ரீராமாநுஜ பக்த பக்த பக்தன் அடியேன்' என்றாராயிற்று.

கடங்கொண்டு—கடமையாகக்கொண்டு. .... .... 12

> செய்யும்பசுந்துளவத்தொழின்மாலையும் * செந்தமிழிற்
> பெய்யும் மறைத்தமிழ்மாலையும் * பேராதசீரரங்கத்
> தையன்கழற்கணியும் பரன்தாளன்றி ஆதரியா
> மெய்யன் * இராமாநுசன்சரணேகதி வேறெனக்கே. 13

| | | | |
|---|---|---|---|
| செய்யும் | தொண்டரடிப் பொடியாழ்வாராகிற தம்மாலே செய்யப்பட்டதாய் | பேராத சீர் அரங்கத்து ஐயன் கழற்கு அணியும் | நித்யஸித்தமான கல்யாண குணங்களையுடையரான ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளிலே சாத்தினவரான |
| பசும் துளவம் | பசுமைதங்கிய திருத்துழாய் மயமாய் | பரன் | தொண்டரடிப் பொடியாழ்வாராகிற பெரியவருடைய |
| தொழில் | வேலைப்பாடுகளை யுடைத்தான | | |
| மாலையும் | பூமாலைகளையும் | தாள் அன்றி ஆதரியா | திருவடிகளைத் தவிர மற்றொன்றையும் விரும்பாத |
| செம் தமிழில் | அழகிய தமிழ்ப் பாஷையிலே | மெய்யன் | ஸத்யசீலரான |
| பெய்யும் | உண்டாக்கப் பட்டதாய் | இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| மறை | வேதஸத்ருசமான | சரணே | திருவடிகளே |
| தமிழ் மாலையும் | திருமாலை திருப்பள்ளியெழுச்சி யென்கிற திவ்ய ப்ரபந்தங்களாகிற சொல் மாலைகளையும் | எனக்கு | அடியேனுக்கு |
| | | வேறு கதி | விலக்ஷணமான ப்ராப்ய வஸ்துவாம். |

* * *:—தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளை யன்றி மற்றொன்றில் ஆதரம் அற்றிருக்கிற எம்பெருமானார் திருவடிகளே நமக்குச் சரணமென்கிறார் இதில்.

தொண்டரடிப்பொடியாழ்வார் ஸ்ரீ ரங்கநாதன் திருவடிகளில் இரண்டு மாலைகளைச்செய்து ஸமர்ப்பித்தனரென்று சாடுக்தியாகச் சொல்லுகிறார் அமுதனார். "துளபத்தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி" என்றும், "தொடைபொத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி" என்றும் தாமே அருளிச்செய்தபடிக்குப் பொருந்தத் திருத்துழாய் மாலைகளையும், திருமாலை திருப்பள்ளியெழுச்சி யென்கிற திவ்ய ப்ரபந்தங்களாகிற சொல்மாலைகளையும் அரங்கத்தையன் கழல்களிலே ஸமர்ப்பித்தவரிறே தொண்டரடிப்பொடியாழ்வார்.

"துளபத்தெழில் மாலையும்" என்றும் சிலர் பாடங்கூறுவர்; துளபத்து—துளஸியினாலாகிய, எழில் மாலை—அழகிய மாலை என்றபடி. இப்பாடம் அழகியதேயாயினும் வியாக்கியானத்தில் ஆதரிக்கப்பட்ட பாடமன்றாதலால் உபேக்ஷிக்கத் தக்கதென்க.

கதிக்குப்பதறி *வெங்கானமுங் கல்லுங் கடலுமெல்லாம்
கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கையற்றேன் *கொல்லி காவலன்சொல்
பதிக்குங்கலைக் கவிபாடும்பெரியவர் பாதங்களே
துதிக்கும்பரமன் *இராமாநுச னென்னைச் சோர்விலனே. 14

| | |
|---|---|
| கொல்லி காவலன் | குலசேகரப் பெருமாளாலே அருளிச் செய்யப்பட்டதாய் |
| கலை சொல் பதிக்கும் | சாஸ்திரச் சொற்கள். அமையப் பெற்றதான |
| கவி | பெருமாள் திருமொழிப் பாசுரங்களை |
| பாடும் பெரியவர் | பாடுகின்ற பெரியோர்களது |
| பாதங்களே | திருவடிகளையே |
| துதிக்கும் | ஸ்தோத்ரம் செய்பவராய் |
| பரமன் | உத்க்ருஷ்டரான |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என்னை சோர்விலன் | என்னைவிட்டு நீங்குகிறாரில்லை; (ஆதலால்) |
| கதிக்கு பதறி | ப்ராப்ய லாபத்துக்காக விரைந்து |
| வெம் கானமும் கல்லும் | அத்யுஷ்ணமான காடுகளிலும் மலைகளிலும் |
| கடலும் | கடல்களிலும் (நின்று கொண்டு) |
| எல்லாம் கொதிக்க | எல்லா அவயவங்களும் கொதிக்கும்படியாக |
| தவம் செய்யும் கொள்கை | தபஸ்ஸு பண்ணும் ஸ்வபாவத்தை |
| அற்றேன் | விட்டொழித்தேன். |

* * *:—ஸகல சாஸ்த்ரங்களின் ஸாரப்பொருள்களையும் திரட்டி ஸ்ரீ குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த பெருமாள் திருமொழி யென்னுந் திவ்யப்ரபந்தத்தை அநுஸந்திக்கின்ற பெரியவர்களது திருவடிகளையே போற்று மியல்வினரான எம்பெருமானார் வந்து தாமே என்னை ஸ்வீகரித்தாராதலால் இனி ஒருநாளும் அவர் அடியேனைக் கைவிடமாட்டார்; ஆனபின்பு நமக்கு ப்ராப்யம் வேறு ஒன்றுமில்லாமையாலே, வநபர்வத ஸமுத்ர தீரங்களில் நின்று க்ரூரமாகச் செய்யும் தவங்களில் இனி எனக்கு அந்வயமில்லை யென்றாராயிற்று.

"எல்லாங் கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கை" என்றதற்கு—இவனுடைய தவத்தின் கொடுமையைக் கண்டு கானமும் கல்லும் கடலும் பரிதபிக்கும்படியாக அந்தந்த ஸ்தலங்களிலே நின்று தபஸ்ஸு பண்ணும் ஸ்வபாவம் என்று பொருள் கூறுவாருமுளர்.

சோர்வு இலன்—பிரிவிலன் என்றபடி. ... .... 14

சோராதகாதல் பெருஞ்சுழிப்பால் *தொல்லைமாலை யொன்றும்
பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும் *பான்மையன்தாள்
பேராத வுள்ளத் திராமாநுசன்றன் பிறங்கியசீர்
சாராமனிசரைச் சேரேன் *எனக்கென்ன தாழ்வினியே?. 15

| | |
|---|---|
| சோராத காதல் பெருசுழிப்பால் | ஒருநாளும் குறைவு படாத ப்ரேமத்தில் பெருஞ்சுழிப் படுகையாலே |
| தொல்லை மாலை ஒன்றும் பாராது | நித்யனான எம்பெருமான் படியைச் சிறிதும் நிரூபியாமல் |
| அவனை | அவ்வெம்பெருமானை நோக்கி |
| பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன் | பல்லாண்டு பல்லாண்டென்று மங்களாசாஸநம் பண்ணுகையையே நித்ய ஸ்வபாவமாகவுடையரான பெரியாழ்வாருடைய |
| தாள் பேராத உள்ளத்து | திருவடிகள் விட்டகலாத திருவுள்ளத்தை யுடையரான |
| இராமாநுசன் தன் | எம்பெருமானாருடைய |
| பிறங்கிய சீர் | மிக்க திருக்குணங்களை |
| சாரா | தங்களுக்கு அநுபாவ்யமாகக் கொள்ளாத |
| மனிசரை | மநுஷ்யர்களை |
| சேரேன் | பற்றமாட்டேன் |
| இனி | இப்படிப்பட்ட உறுதி பிறந்தபின்பு |
| எனக்கு என்ன தாழ்வு | அடியேனுக்கு என்ன குறை?. |

* * *:—பாண்டியராஜனுடைய பண்டித சபையில் எழுந்தருளி "எம்பெருமானே பரதத்துவம்" என்று ஸ்தாபநம் செய்து கிழியறுத்துவிட்ட காலத்து, அப்பாண்டியன் தம்மை யானைமேலேற்றி ஊர்வலம் வருவிக்கையில் தம் வைபவத்தைக் காணவந்து ஆகாசத்திலே கருடாரூடனாய் நின்ற திருமாலைச் சேவித்து அப்பெருமானிடத்துள்ள பெருங்காதலாலே ரக்ஷ்யபூதரான தம்மையும் ரக்ஷகனான அவனையும் மறந்து, தம்மை ரக்ஷகராகவும் அவனை ரக்ஷ்யனாகவு மெண்ணி அவனுக்குப் "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்" டென்று தொடங்கி மங்களாசாஸநம் செய்தருளின பெரியாழ்வாருடைய திருவடிகளையே அநவரதம் தியானித்தருளும் எம்பெருமானாருடைய குணங்களைச் சிந்திக்கயில்லாத மனிசரோடு நான்ஸஹவாஸம் செய்ய மாட்டேன்; இந்நிலைவு பிறந்தபின் இனி எனக்கு ஒரு குறையுமில்லை—என்றாராயிற்று.

முன்னிரண்டடிகளிற் குறிக்கப்பட்டுள்ள சரிதையின் விரிவு பெரியாழ்வார் வைபவத்திற் காணத்தக்கது. 15

‡‡ தாழ்வொன்றில்லா மறைதாழ்ந்து* தலமுழுதுங்கலியே
ஆள்கின்றநாள் வந்தளித்தவன்காண்மின்* அரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல்* இராமநுசனென்னும் மாமுனியே. 16

அரங்கர்மௌலி சூழ்கின்ற மாலையை — ஸ்ரீ ரங்கநாதனுடைய திருமுடியிலே சாத்தக்கடவதான பூமாலையை
சூடி கொடுத்தவள் — தனது திருக் குழலிலே அணிந்து வாஸித மாக்கிக்கொடுத்தவளான ஆண்டாளுடைய
தொல் அருளால் வாழ்கின்ற வள்ளல் — அவ்யாஜமான அருளாலே வாழ்பவரும் உதாருமான
இராமாநுசன் என்னும் மாமுனி — ஸ்ரீ ராமாநுஜ முனியானவர் (எப்படிப்பட்டவ ரென்றால்)
தாழ்வு ஒன்று இல்லா மறை — ஒரு குறையு மில்லாதிருந்த வேதமானது
தாழ்ந்து — (குத்ருஷ்டிகளாலே) இழிவுபெற
தலம் முழுதும் — பூமியெங்கும்
கலியே ஆள்கின்ற நாள் — கலியே ஸாம்ராஜ்யம் பண்ணுகிற காலத்திலே
வந்து — இங்கே வந்தவதரித்து
அளித்தவன் காண்மின் — (அந்தவேதத்தை உத்தரிப்பித்து உலகத்தை) ரக்ஷித்தருளினவர்.

* * *—ப்ரமாணங்களிற் சிறந்து உத்துங்கமாயிருந்த வேதமானது பாஹ்யகுத்ருஷ்டிகளால் தாழ்வுபெற்றுக் கலிபுருஷனே செங்கோல் செலுத்திக் கிடந்த காலத்திலே வந்து திருவவதரித்தருளி அக்கலியைக் கெடுத்து வேதத்தை நிலைநிறுத்தின மஹாநுபவர் காண்மின் எம்பெருமானார்.

அரங்கர்மௌலி சூழ்கின்ற மாலையைச்சூடிகொடுத்த வரலாறு ஆண்டாள் வைபவத்திற் காணத்தக்கது. சூடிக்கொடுத்த நாச்சியாருடைய பரமக்ருபைக்குப் பாத்ரபூதர் எம்பெருமானார் என்றதாயிற்றுப் பின்னடிகளால். .... .... .... ... 16

முனியார்துயரங்கள் முந்திலும்* இன்பங்கள் மொய்த்திடினுங்
கனியார்மனம் கண்ணமங்கைநின்றானை* கலைபரவும்
தனியானையைத் தண்டமிழ்செய்த நீலன்றனக் குலகி
லினியானை* எங்களிராமாநுசனை வந்தெய்தினரே. 17

| பதம் | பொருள் |
|---|---|
| கலை பரவும் தனி ஆனையை | ஸகல சாஸ்த்ரங்களாலும் துதிக்கப் பெற்ற அத்விதீயமான மத்த கஜம் போன்ற |
| கண்ண மங்கை நின்றானை | திருக்கண்ண மங்கையிலே நிற்கும் பத்தராவிப் பெருமாளைக் குறித்து |
| உலகில் | இவ்வுலகில் |
| தண் தமிழ் செய்த | ஸம்ஸார தாபஹாரமான திவ்ய ப்ரபந்தத்தைச் செய்தருளின |
| நீலன் தனக்கு | திருமங்கையாழ்வார் பக்கல் |
| இனியானை | ப்ரேம முடையவராய் |
| எங்கள் | எங்களுக்குத் தலைவரான |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| வந்து எய்தினர் | வந்து பணிந்த மஹான்கள் |
| துயரங்கள் முந்திலும் முனியார் | தாபத்ரயம் செறிந்தாலும் வருத்தப்பட மாட்டார்கள்; |
| இன்பங்கள் மொய்த்திடினும் மனம் கனியார் | ஸுகங்கள் செறிந்தாலும் களிப்படைய மாட்டார்கள். |

* * *:—ஸகல சாஸ்த்ரப்ரதிபாத்யனை எம்பெருமானைத் தம்முடைய திவ்யப்ரபந்தங்களிலே அமைத்துப் பாடின திருமங்கையாழ்வார்க்கு அந்தரங்க பக்தரான எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் ஸுகதுக்கங்கள் மேலிடுங்காலத்தில் மற்ற ஸம்ஸாரிகளைப்போல் ஹர்ஷ சோகங்களை யடையாமல் எவ்வித விகாரமும் அற்றிருப்பர்கள்; நீங்களும் ஹர்ஷ சோகங்களில் கலங்கவேண்டா என்றபடி.

கண்ணமங்கை நின்றானை = திருக்கண்ண மங்கையைச் சொன்னது மற்றுள்ள எல்லாத் திருப்பதிகட்கும் உபலக்ஷணம்; பல திருப்பதிகளிலும் புக்குக் கவிபாடின கலியன் என்றபடி. நீலன் = திருமங்கையாழ்வாருடைய திருநாமங்களில் ஒன்று. .... .... 17

எய்தற்கரியமறைகளை * ஆயிரமின்தமிழால்
செய்தற்குலகில்வருஞ் சடகோபனை * சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும்பெரியவர்சீரை யுயிர்களெல்லாம்
உய்தற்குதவும் * இராமாநுசனெம்முறுதுணையே. 18

| பதம் | பொருள் |
|---|---|
| எய்தற்கு அரிய மறைகளை | அதிகரிக்க முடியாத (அளவற்ற) வேதங்களை |
| இன் தமிழ் ஆயிரத்தால் | இனிய தமிழாலாகிய ஆயிரம் பாசுரங்களினால் |
| செய்தற்கு | அருளிச் செய்வதற்காக |
| உலகில் வரும் | இவ்வுலகில் வந்துதித்த |
| சடகோபனை | நம்மாழ்வாரை |
| சிந்தை உள்ளே | தமதுஹ்ருதயத்தினுள்ளே |
| பெய்தற்கு இசையும் | த்யானிப்பதற்குஇணங்கின |
| பெரியவர் | ஸ்ரீ மதுரகவிகளுடைய |
| சீரை | ஜ்ஞாநாதி குணங்களை |
| உயிர்கள் எல்லாம் உய்தற்கு உதவும் | ஸகலாத்மாக்களும் உஜ்ஜீவிக்குமாறு உபகரித்தருளாநிற்கிற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| எம் உறு துணை | எமக்கு உற்றதுணை. |

வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபனையே வாழ்த்தும் ஸ்ரீ மதுரகவிகளின் பக்தரான எம்பெருமானார் நமக்கு உற்றதுணை யென்றாராயிற்று. இப்பாட்டில் ஸ்ரீ மதுரகவிகள் பேரியவர் என்று சிறப்பித்துக் கூறப்பட்டமை நோக்கத்தக்கது. "புவியு மிருவிசும்பும் நின்னகத்த, நீ யென் செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய் அவிவின்றி, யான் பெரியன் நீ பெரியை யென்பதனை யாரறிவார், ஊன்பருகு நேமியாயுள்ளு" [பெரிய திருவந்தாதி] என்று பெரிதான பராஹ்மத்தை உள்ளடக்கின பெரியவரையும் [—நம்மாழ்வாரையும்] உள்ளடக்கின பெரியவரிறே மதுரகவிகள். .... .... .... 18

உறுபெருஞ்செல்வமுந் தந்தையுந்தாயும்* உயர்குருவும்
வெறிதருபூமகள்நாதனும்* மாறன்விளங்கியசீர்
நெறிதருஞ்செந்தமிழாரணமே யென்றிந் நீணிலத்தோர்
அறிதரநின்ற*, இராமநுசனெனக்காரமுதே. 19

| | |
|---|---|
| உறு பெரு செல்வமும் | சிறந்த பெரிய ஸம்பத்தும் |
| தந்தையும் தாயும் | மாதா பிதாக்களும் |
| உயர் குருவும் | ஸதாசார்யனும் |
| வெறி தரு பூமகள் நாதனும் | மணம் மிக்க பூவைப் பிறப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியாருக்குக் கொழுநனை ஸர்வேச்வரனும் (ஆகிய எல்லாம்) |

| | |
|---|---|
| மாறன் விளங்கிய சீர் நெறி தரும் செம் தமிழ் ஆரணமே என்று | நம்மாழ்வார் (தமக்கு) ப்ரகாசித்த பகவத் குணங்களின் அடைவே அருளிச் செய்த செந் தமிழ் வேதமேயென்று |
| இ நீள் நிலத்தோர் அறிதர நின்ற | இப்பெரிய வுலகிலுள்ளார் யாவரும் அறியும்படி நின்ற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| எனக்கு | அடியேனுக்கு |
| ஆர் அமுது | பரம போக்யர். |

***:—'நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிதான் நமக்கு ஸர்வஸ்வம்' என்கிற அத்யவஸாய முடைய உடையவர் திறத்து அடியேன் அநந்ய போக்யத்வ புத்தியை யுடையேன் என்றாராயிற்று.

மாறன் விளங்கிய சீர்நெறிதரும் செந்தமிழாரணம் = திருவாய் மொழியில் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திவ்யகுணத்தை வெளியிட்டிருக்கிறார்; அது வெளியிட்டவாறு என்னென்னில், எம்பெருமான் ஆழ்வார்க்கு எந்த க்ரமமாகக் குணங்களை அநுபவிப்பித்தானோ அந்த க்ரமமாகவே இவர் வெளியிட்டாரென்க. .... 19

ஆரப்பொழில் தென்குருகைப்பிரான்* அமுதத்திருவாய்
ஈரத்தமிழி னிசையுணர்ந்தோர்கட்கு* இனியவர் தஞ்
சீரைப்பயின்றுய்யுஞ்சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும்* இராமாநுசனென்றன் மாநிதியே. 20

| | |
|---|---|
| ஆரம் பொழில் | சந்தனச்சோலைகளையுடைய |
| தென் குருகை | அழகிய திருக்குருகூரிலே (அவதரித்த) |
| பிரான் | மஹோபகாரகரான ஆழ்வாருடைய |
| அமுதம் திரு வாய் | பரமபோக்யமான திருப்பவளத்தில் பிறந்த |
| ஈரம் தமிழின் இசை | ஈரச்சொல்லாகிய திருவாய்மொழியின் இசையை |
| உணர்ந்தோர்கட்கு | அறிந்தவர்களுக்கு |

| | |
|---|---|
| இனியவர் தம் | இஷ்டரா யிருப்பவர்களுடைய |
| சீரை | குணங்களை |
| பயின்று | அப்யஸித்து |
| உய்யும் சீலம் கொள் | ஸத்தை பெறும் சீலத்தை யுடையரான |
| நாதமுனியை | நாதமுனிகளை |
| நெஞ்சால் | தம் திருவுள்ளத்தாலே |
| வாரி பருகும் | அபிநிவேசத்தோடு அநுபவிக்கின்ற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என் தன் மா நிதி | எனக்கு அக்ஷயமான நிதி. |

நிதியைப்பொழியும் முகிலென்று* நீசர்தம்வாசல்பற்றித்
துதிகற்றுலகிற் றுவள்கின்றிலேனினி* தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத்துறைவ னிணையடியாம்
கதிபெற்றுடைய* இராமாநுச னென்னைக்காத்தனனே. 21

| | |
|---|---|
| தூய் நெறி சேர் எதிகட்கு | பரிசுத்தமான அநுஷ்டானமுடைய யதிகளுக்கு |
| இறைவன் | தலைவரான |
| யமுனைத் துறைவன் | ஆளவந்தாருடைய |
| இணை அடி ஆம் கதி | உபய பாதங்களாகிற ப்ராப்யத்தை |

| | |
|---|---|
| பெற்று | பெற்று (அதனாலே) |
| உடைய | உலகத்தார்க்கெல்லாம் ஸ்வாமியாயிருக்கிற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என்னை காத்தனன் | என்னை ரக்ஷித் தருளினார்; (ஆன பின்பு) |
| இனி | இனிமேல்,— |

| | |
|---|---|
| நிதியை பொழியும் முகில் என்று | "நிதிகளை வர்ஷிக்கிற மேகமே." என்று |
| துதி கற்று | ஸ்தோத்ரங்களைப் பண்ணிக் கொண்டு |

| | |
|---|---|
| உலகில் | இவ்வுலகத்தில் |
| நீசர் தம் | நீசராயிருப்பவருடைய |
| வாசல் பற்றி | வாசலைப்பற்றிநின்று |
| துவள்கின்றிலேன் | வருந்தமாட்டேன். |

***:—நேற்றுவரையிலும் நான் கண்டபேர்களுடைய வாசற் கடைகளிலும் போய் நின்று வாயைக்காட்டி வயிற்றைக்காட்டி "மஹாநிதிகளைப் பொழிகின்ற மேகமே!" என்று பொய்யான நரஸ்துதிகளைச் செய்து துவண்டேன்; இன்று முதல் எந்நாளும் இனி நான் அவ்வாறு துவள மாட்டேன்; ஒரு நீசனுடைய வாசலையும் பற்றமாட்டேன். இன்று நான் எம்பெருமானாருடைய ஸம்ரக்ஷணைக்கு ஆளாய்விட்டேன்; அவரோ, எதிகளுக்குத் தலைவரான ஆளவந்தாருடைய ஸம்ரக்ஷணையைப் பெற்று உய்ந்தவர். அன்னவராலே ஸம்ரக்ஷிக்கப் பெற்றேனானபின்பு இனி நான் ஏதுக்காக ஒரு நீசன் வாசலைப் பற்றித்துவளவேண்டும்!; துவள்கின்றிலேனினி. 21

கார்த்திகையானுங் கரிமுகத்தானும்* கனலும்முக்கண்
மூர்த்தியும் மோடியும்வெப்பும்முதுகிட்டு*மூவுலகும்
பூத்தவனேயென்று போற்றிட வாணன்பிழைபொறுத்த
தீர்த்தனையேத்தும்*இராமாநுசனென்றன்சேமவைப்பே. 22

| | |
|---|---|
| கார்த்திகையானும் | ஸுப்ரஹ்மண்யனும் |
| கரிமுகத்தானும் | கணபதியும் |
| கனலும் | (அவர்களுக்குத் துணையாய் வந்த) அக்நியும் |
| முக்கண் மூர்த்தியும் | சிவனும் |
| மோடியும் | துர்க்கையும் |
| வெப்பும் | ஜ்வரதேவதையும் |
| முதுகு இட்டு | முதுகுகாட்டி ஓடிப்போன பின்பு (அநந்யகதியான பாணாஸுரனானவன்) |

| | |
|---|---|
| மூ உலகும் பூத்தவனே என்று போற்றிட | "மூன்று உலகங்களையும் திருநாபிக்கமலத்திலேஉண்டாக்கின பெருமானே!" (என்னைக் காத்தருள்) என்று போற்ற |
| வாணன் பிழை பொறுத்த | (அந்த) பாணாஸுரனுடைய அபராதத்தை க்ஷமித்தருளின |
| தீர்த்தனை | பாவநனான ஸர்வேச்வரனை |
| ஏத்தும் | நித்யம் துதிக்கின்ற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என் தன் சேம வைப்பு | எனக்கு ஆபத்தநம். |

***:—[ஐச்வர்யம் சங்கராதிச்சேத்; ஆரோக்யம் பாஸ்கராத் ததா; சிவன்பக்கல் செல்வம்பெற விரும்பவேண்டும்; ஸூர்யன் பக்கல் ஆரோக்யம் பெற விரும்பவேண்டும்] என்று ஸாமாந்யமாகச் சிலர் சொல்லுவதுண்டே; அதனைக்கொண்டு ஒருவன் அமுதனாரை நோக்கி 'ஓய்! நீர் எம்பெருமானாரைப்பற்றினால் உம்முடைய தாரித்ரியம் நீங்குமோ? சிவனைப் பற்றினாலன்றோ செல்வம் மிகும்' என்று கூற; அந்தச் சிவன்பட்ட பரிபவங்களை விளக்கும் ஒரு இதிஹாஸத்தைப் பரக்கப்பேசிக் கொண்டு, 'எம்பெருமானார்தாம் தமக்கு ஆபத்தனம்' என்கிற திண்ணிய அத்யவஸாயத்தை உறுத்திக் கூறுகின்றார் இதில். .... 22

வைப்பாய வான்பொருளென்று* நல்லனபர்மனத்தகத்தே
எப்போதும் வைக்குமிராமாநுசனை* இருநிலத்தில்
ஒப்பாரிலாத வுறுவினையேன் வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவன்* என்னாமிதுவவன் மொய்புகழ்க்கே? 23

| | |
|---|---|
| நல் அன்பர் | விலக்ஷண பக்தியுடையவர்கள் |
| வைப்பு ஆய வான் பொருள் என்று | "எம்பெருமானர் தாம் நமக்கு ஆப்த ரக்ஷகமான அக்ஷய தநம்" என்று கொண்டு |
| மனத்தகத்தே | தங்கள் ஹ்ருதயத்திலே |
| எப்போதும் வைக்கும் | எப்போதும் த்யாநிப்பதற்கு விஷயமான |
| இராமாநுசனை | எம்பெருமானரை |
| இரு நிலத்தில் | இந்தப்பெரிய வுலகத்திலே |
| ஒப்பார் இலாத உறு வினையேன் | ஒப்பற்ற மஹாபாபியான அடியேன் |
| வஞ்சம் நெஞ்சில் வைத்து | என்னுடைய க்ருத்ரிமமான நெஞ்சிலே வைத்து |
| முப்போதும் வாழ்த்துவன் | ஸர்வகாலமும் ஏத்தா நின்றேன்; |
| இது | மிகப்பெரிய அவரை நீசனுகிய நான் வாழ்த்துகையாகிற இது |
| அவன் | அவ்வெம்பெருமானருடைய |
| மொய் புகழ்க்கு | சிறந்த கீர்த்திக்கு |
| என் ஆம் | என்னுகுமோ? [அவத்யமாமே?.] |

* * *:—"வளவேழுலகின் முதலாய" என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ணினதுபோல, இப்பாட்டில் இவ்வமுதனுரும் நைச்யாநுஸந்தானம் பண்ணுகிறுர். 23

.... .... .... ....

மொய்த்தவெந்திவினையால் பல்லுடல்தொறும்மூத்து* அதனல்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம்* இன்று கண்டுயர்ந்தேன்
பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள் நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து *இராமாநுசனென்னும் கார்தன்னையே. 24

| | |
|---|---|
| முன நாள்கள் எல்லாம் | கீழ்க்கழிந்த அநாதிகாலமெல்லாம் |
| பல் உடல் தொறும் | பலபல சரீரங்கள் தோறும் |
| மொய்த்த வெம் தீவினையால் மூத்து | ஆத்மாவை மொய்த்துக் கொண்டிருக்கிற அதிக்ரூரமான கர்மத்தாலே கிழத்தனம் வருமளவும் வாஸஞ் செய்து |
| அதனல் | அத்தாலே |
| எய்த்து ஒழிந்தேன் | மிக்க பரிதாபமடைந்தேன்; |
| பொய் தவம் போற்றும் புலைச் சமயங்கள் | கபடமான அநுஷ்டாநங்களை நடத்திப் போருகிற நீச மதஸ்தர்கள் |
| நிலத்து அவிய | இந்நில வுலகத்திலே வேரற்றொழியும்படி |
| கைத்த | நிரஸித்தருளின |
| மெய் ஞானத்து | உண்மை ஞானமுடையரான |
| இராமாநுசன் என்னும் கார் தன்னை | எம்பெருமானராகிற காளமேகத்தை |
| இன்று கண்டு | இன்று அடியேன் ஸேவிக்கப்பெற்று |
| உயர்ந்தேன் | சிறந்தவனுனேன். |

* * *.—நெடுநாளாக ஸம்ஸாரத்திலிருந்து பலபல கருமங்களைப்பண்ணி, அக்கருமங்களின் பலனைப் பலபல பிறவிகளிற் பிறந்து படாதனபட்டு இப்படியாகவே அநேக பர்யாயம் அவஸந்நனய்க் கிடந்தேன் நான்; இப்பொழுது, பரம உதாரரான எம்பெருமானர் இப்பூமியிலவதரித்துப் பல துர்மதங்களை வேரறுத்தொழித்ததுபோல எனது கருமங்களையும் வேரறுத்தொழித்துத் தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே தம்மைக்காட்டியருளக் கண்டு க்ருதார்த்தனுனேனென்கிறுர்.

பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள்—ராவண ஸம்ந்யாஸம், காலநேமிஜபம் முதலியவைபோலே மதாந்தரஸ்தர்கள் க்ருத்ரிமமான ஆசாரங்களை அனுட்டிப்பார்களென்க. மெய்ஞ்ஞானத்திராமாநுசன்—"யதார்த்தம் ஸர்வவிஜ்ஞாநம்" என்று ஸ்தாபித்தருளினவர் எம்பெருமானர். 24

.... .... .... ....

காரேய்கருணை யிராமாநுச* இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் நின்னருளின்தன்மை * அல்லலுக்கு
நேரேயுறைவிடம் நான்வந்துநீயென்னை யுற்றபின்உன்
சீரே யுயிர்க்குயிராய் * அடியேற்கின்று தித்திக்குமே. 25

| பதம் | பொருள் |
|---|---|
| கார் ஏய் கருணை இராமாநுச! | மேகத்தையொத்த கருணையையுடைய எம்பெருமானாரே! |
| நான் | அடியேன் |
| அல்லலுக்கு நேரே உறைவு இடம் | துக்கங்களுக்கு நேரே வாஸஸ்தானமாயிருப்பவன்; |
| என்னை | இப்படிப்பட்ட அடியேனை |
| நீ வந்து உற்ற பின் | தேவரீர் தாமாகவே ஸ்வீகரித்தருளின பின்பு |
| உன் சீரே | தேவரீருடைய கல்யாண குணங்களே |
| உயிர்க்கு உயிர் ஆய் | ஆத்மாவுக்கு தாரகமாய் |
| அடியேற்கு | அடியேனுக்கு |
| இன்று தித்திக்கும் | இன்று ரஸியா நின்றது; |
| நின் அருளின் தன்மை | தேவரீருடைய க்ருபையின் ஸ்வபாவத்தை |
| இ கடல் இடத்தில் | கடல்சூழ்ந்த இப் பூமண்டலத்தில் |
| ஆரே அறிபவர் | அறியக்கூடியவர்கள் ஆருமில்லை. |

* * * .—ஜலஸ்தலவிபாகம் பாராமல் ஸர்வத்ர ஸமமாக வர்ஷிக்கின்ற மேகம்போலே, தாழ்ந்தோர் உயர்ந்தோர் என்னும் வாசிபாராமல் எல்லார்திறத்தும் அருள் புரிகின்ற எம்பெருமானாரே! மிகக்கொடிய துக்கங்களுக்கெல்லாம் இருப்பிடமான என்னை தேவரீர் தாமே வந்து விஷயீகரித்தபின்பு தேவரீருடைய திருக்கல்யாண குணங்களே எனக்குப் பரமபோக்யமாய் ஆத்ம தாரகமுமாய்விட்டது. தேவரீர் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்னுமிடத்தை இவ்வுலகில் உள்ளபடியே ஒருவருமறியார்கள். .... .... 25

திக்குற்றகீர்த்தி யிராமாநுசனை * என் செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கிய மேகத்தை * மேவும்நல்லோர்
எக்குற்றவாளரெதுபிறப் பேதியல்வாக நின்றோர்
அக்குற்றமப்பிறப்பு * அவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே. 26

| பதம் | பொருள் |
|---|---|
| என் செய்வினை ஆம் | என்னாலே செய்யப்பட்ட வினையாகிற |
| மெய் குற்றம் நீக்கி | நிலைநின்ற தோஷங்களைப் போக்கி |
| விளங்கிய | (இவனுடைய தோஷங்களைப் போக்கப்பெற்றோமென்னும் மகிழ்ச்சியாலே) உஜ்ஜ்வலரான |
| மேகத்தை | பரம உதாரராய் |
| திக்கு உற்ற கீர்த்தி | திசைகள்தோறும் விரிந்த புகழுடையரான |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| மேவும் | பொருந்தியிருக்கின்ற |
| நல்லோர் | விலக்ஷணர்கள் |
| எக் குற்றவாளர் | யாதொரு குற்றத்தை யுடையராகவும் |
| எது பிறப்பு | யாதொரு ஜன்மத்தை யுடையராகவும் |
| எது இயல்வு ஆக | யாதொரு சரிதையை யுடையராகவும் |
| நின்றோர் | முன்பு நின்றார்களோ, |
| அக்குற்றம் | அந்தக் குற்றமும் |
| அப் பிறப்பு | அந்த ஜன்மமும் |
| அ இயல்வே | அந்த சரிதையுமே |
| நம்மை | நம்மை |
| ஆள் கொள்ளும் | அடிமைப்படுத்திக் கொள்ளவற்று. |

* * * :—ஸ்ரீராமாநுஜ பக்தர்களுடைய ஜாதி முதலியவை ஏதாயினும் அவர்களெல்லாரும் அப்படியே நமக்கு உத்தேச்யர்கள் என்று காட்டியவாறு. .... 26

கொள்ளக் குறைவற்றிலங்கி * கொழுந்துவிட் டோங்கியவுன்
வள்ளற்றனத்தினால் வல்வினையேன்மனம்நீபுகுந்தாய் *
வெள்ளைச் சுடர்விடுமுன்பெருமேன்மைக் கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும் * இராமாநுசவென்தனி நெஞ்சமே. 27

| | |
|---|---|
| இராமாநுச | எம்பெருமானாரே !, |
| கொள்ள குறை அற்று இலங்கி | கொள்ளக்கொள்ளக் குறையாமல் தானே விளங்கி |
| கொழுந்துவிட்டு ஓங்கிய | மேன்மேலும் இளகிப் பதித்து வளர்ந்திருப்ப தான |
| உன் வள்ளல் தனத்தினால் | தேவரீருடைய ஔதார்ய குணத்தாலே |
| வல்வினையேன் மனம் | மஹாபாபியான எனது நெஞ்சிலே |
| நீ புகுந்தாய் | (தேவரீருடைய பெருமை பாராதே) வந்து புகுந்தருளிற்று ; |
| இது | (வஸிஷ்டன் சண்டாள க்ருஹத்தில் புகுந்தாற் போலே) புகுந்தவிது, |
| வெள்ளை சுடர் விடும் | பரிசுத்தமாய் விளங்கா நின்றுள்ள |
| உன் பெரு மேன்மைக்கு | தேவரீருடைய ப்ரபாவத்திற்கு |
| இழுக்கு என்று | அவத்யாவஹம் என்று |
| என் தனி நெஞ்சம் | எனது துணையற்ற நெஞ்சானது |
| தள்ளுற்று இரங்கும் | தளர்ந்து ஈடுபடா நின்றது. |

* * *:—ஸ்வாமிந்! தேவரீருடைய பெருமையையும் அடியேனுடைய சிறுமையையும் சிறிதும் பாராமல் "இவன் நம் அடியார் விஷயத்திலே சபலனாயிருப்பானொருவன்" என்கிற இவ்வளவையேகொண்டு பாபிஷ்டமான என் ஹ்ருதயத்திலே தேவரீர் புகுந்தருளிற்று: வஸிஷ்டன் சண்டாளர் மனையிற் புகுந்தாற்போல் தேவரீர் என் நெஞ்சில் புகுந்த விது, தேவரீருடைய பரிசுத்தமாய் விளங்கும் மஹிமைக்கு என்ன அவத்யத்தை விளைத்திடுமோவென்று அஞ்சாநின்றேன். .... .... .... ... 27

நெஞ்சில்கறைகொண்ட கஞ்சனைக் காய்ந்தநிமலன்* நங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன்காதலன் * பாதம்நண்ணா
வஞ்சர்க்கரிய விராமாநுசன்புகழன்றி யென்வாய்
கொஞ்சிப்பரவகில்லாது* என்னவாழ்வின்றுகூடியதே. 28

| | |
|---|---|
| நெஞ்சில் கறை கொண்ட கஞ்சனை | நெஞ்சிலே கல்மஷத்தை யுடையனாயிருந்த கம்ஸனை |
| காய்ந்த | முடித்த |
| நிமலன் | ஹேயப்ரத்யநீகனாய், |
| நங்கள் பஞ்சி திருவடி | ஆச்ரிதர் பக்கல் அபிமாந முடையளாய் பஞ்சு போல் மெல்லிய திரு வடிகளை யுடையளான |
| பின்னை தன் காதலன் | நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனான கண்ணபிரா னுடைய |
| பாதம் நண்ணா | திருவடிகளை ஆச்ரயியாத |
| வஞ்சர்க்கு | ஆத்மாபஹாரக் கள்வர் களுக்கு |
| அரிய | துர்லபரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| புகழ் அன்றி | குணங்களை யொழிய (மற்றொன்றை) |
| என்வாய் | என் வாக்கானது |
| கொஞ்சி பரவ கில்லாது | குலாவி ஏத்தமாட்டாது. |
| இன்று கூடியது வாழ்வு | இன்று (எனக்கு) நேர்ந்த வாழ்ச்சியானது |
| என்ன | ஆச்சரியமானது |

* * *:—நேற்றுவரை அபதார்த்தமாய்க் கிடந்த அடியேன் இன்று ஸத்தை பெற்று வாழ்ந்த அதிசயம் சொல்லி முடியுமோ? இன்று உமக்குவந்த அதிசயம் என்னவென்று கேட்கிறீர்களோ? எம்பெருமானாருடைய குண கீர்த்தநத்தில் நேற்றுவரை உதாஸீநமாய்க்

கிடந்த என் வாயானது இன்று அவருடைய திவ்ய கீர்த்திகளையன்றி வேறொன்றையும் அநுசந்திக்கமாட்டேனென்று அதுதன்னிலே ஊன்றிக் கிடக்கிறதே, இதைவிட அதிசய முண்டோ? என்கிறார். .... .... .... 28

கூட்டும் விதியென்று கூடுங்கொலோ ?*தென்குருகைப்பிரான்
பாட்டென்னும்வேதப்பசுந்தமிழ்தன்னைத்*தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்த விராமாநுசன்புகழ் மெய்யுணர்ந்தோ
ரீட்டங்கள்தன்னை* என்னாட்டங்கள் கண்டின்பமெய்திடவே. 29

| | |
|---|---|
| தென் குருகை பிரான் | நம்மாழ்வாருடைய |
| பாட்டு என்னும் | பாசுரங்கள் என்று ப்ரஸித்தமாய் |
| வேதம் | வேதரூபமாய் |
| பசும் தமிழ் தன்னை | செந்தமிழாயிருக்கிற திருவாய்மொழியை |
| தன் பத்தி என்னும் வீட்டின் கண் வைத்த | தம்முடைய பக்தியாகிற மாளிகையிலே ஸ்தாபித்தருளிய |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| புகழ் | கல்யாண குணங்களை |
| மெய் உணர்ந்தோர் | உள்ளபடி அறிந்திருக்குமவர்களுடைய |
| ஈட்டங்கள் தன்னை | கோஷ்டிகளை |
| என் நாட்டங்கள் கண்டு | என் கண்களானவை ஸேவித்து |
| இன்பம் எய்திட | ஸுகிக்கும்படியாக |
| கூட்டும் விதி | அமைக்கவல்ல (அவருடைய) க்ருபையானது. |
| என்று கூடுங்கொல் | என்றைக்கு வாய்க்குமோ? |

* * *: — நம்மாழ்வாரருளிச்செய்த தமிழ் வேதத்தைப் பக்தியுடன் பரவும் எம்பெருமானாருடைய திருக்கல்யாண குணங்களை உள்ளபடி உணர்ந்து ஈடுபட்டிருக்கும் மஹான்களுடைய கோஷ்டிகளை அடியேன் ஸேவித்து ஆநந்திக்கும்படியான பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ என்கிறார்.

தன் பத்தி யென்னும் வீட்டின்கண் வைத்த—விலையுயர்ந்த மாணிக்கத்தைச் செப்பிலே வைத்துக்கொண்டிருப்பாரைப்போலே அநர்க்கமான அருளிச்செயலைத் தம்முடைய பக்தியாகிற உயர்ந்த மாளிகையிலே வைத்துப் பேணிக்கொண்டிராநின்ற உடையவர் என்றபடி. நாட்டம்—கண். .... .... .... .... .... 29

இன்பந்தருபெரு வீடுவந்தெய்திலென்?* எண்ணிறந்த
துன்பந்தருநிரயம்பல சூழிலென்?*தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறையவன் மாயனெனமொழிந்த
அன்பனனகன் * இராமாநுசனென்னையாண்டனனே. 30

| | |
|---|---|
| தொல் உலகில் | 'அநாதியான இவ்வுலகத்தில் |
| மன் பல் உயிர் கட்கு இறையவன் மாயன் | நித்யரான எல்லா ஆத்மாக்களுக்கும் சேஷியாவான் விஷ்ணுவே' |
| என மொழிந்த | என்று (ஸ்ரீபாஷ்ய முகத்தாலே) அருளிச் செய்த |
| அன்பன் | பரமகாருணிகராய் |
| அநகன் | நிர்த்தோஷரான |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என்னை ஆண்டனன் | என்னை அடிமை கொண்டருளினார். (ஆனபின்பு) |
| இன்பம் தரு பெரு வீடு வந்து எய்தில் என் | ஆநந்தவஹமான மோக்ஷம் வந்துஸித்தித்தாலென்ன |
| எண் இறந்த துன்பம் தரு பல நிரயம் சூழில் என் | அளவற்ற துக்கங்களைத்தருகிற பல நரகங்கள் வந்து சூழ்ந்து கொண்டால்தான் என்ன? |

எம்பெருமானார் என்னை அடிமைகொண்டருளப்பெற்றபின்பு எனக்கு மோக்ஷம் கிடைத்தாலென்ன? பலபல நரகங்கள் தான் நேர்ந்தாலென்ன? எனக்கு எது பரம ப்ராப்யமோ அது கிடைத்துவிட்டது! என்று சரக்கறப் பேசுகிறார்.

நிரயம்—வடசொல். அனகன்—வடசொல் விகாரம்: ஹேயப்ரதிபடர் என்றபடி. 30

‡ ஆண்டுகள்நாள் திங்களாய் * நிகழ்காலமெல்லாம்மனமே!
ஈண்டுபல்யோனிகள்தோறுழல்வோம் * இன்றோரெண்ணின்றியே
காண்டகு தோளண்ணல் தென்னத்தியூரர்கழலிணைக்கீழ்ப்
பூண்டவன்பாளன்* இராமாநுசனைப் பொருந்தினமே. 31

| | |
|---|---|
| மனமே | நெஞ்சே!, |
| நாள் ஆய் | நாள்களாகவும் |
| திங்கள் ஆய் | மாதங்களாகவும் |
| ஆண்டுகள் ஆய் | வருஷங்களாகவும் |
| | (இப்படி) |
| நிகழ்காலம் எல்லாம் | நடந்துசெல்லுகிற ஸர்வ காலங்களிலும் |
| ஈண்டு பல்யோனிகள் தோறு | திரண்டு பலவகைப்பட்ட யோனிகள்தோறும் |
| உழல்வோம் | தட்டித்திரிந்த நாம் |
| இன்று ஓர் எண் இன்றியே | இன்று ஒரு நினைவுமில்லாதிருக்கச்செய்தே (அகஸ்மாத்தாக) |
| காண்தகுதோள் அண்ணல் தென் அத்தியூரர் கழல் இணைக்கீழ் பூண்டஅன்பு ஆளன் இராமாநுசனை பொருந்தினம் | கண்ணாரக் காணத்தக்க தோள்களையுடைய ஸ்வாமியான பேரருளாளனுடைய திருவடிகளில் அன்பு பூண்ட எம்பெருமானாரைச் சேரப்பெற்றோம்: (என்ன பாக்கியம்!. |

* * *:—நெஞ்சே! இன்றளவும் நமக்குக் கழிந்த காலங்கள் கணக்கிடமுடியா: வருஷக் கணக்காகவும் மாதக்கணக்காகவும் நாட்கணக்காகவும் கழிந்து செல்லுகின்ற காலமெல்லாம் மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்து நடுமாறித் திரிந்த நாம் இன்று ஒரு நினைவின்றியே அகஸ்மாத்தாக எம்பெருமானாரை அடிபணியப் பெற்றோமே! நம்முடைய அத்ருஷ்டம் எப்படிப்பட்டது! கண்டாயே! என்று தம் திருவுள்ளத்தோடே உசாவுகின்றார். .... 32

பொருந்தியதேசும் பொறையுந்திறலும் புகழும்*நல்ல
திருந்தியஞானமுஞ் செல்வமுஞ்சேரும்*செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன்*எங்களிராமாநுசனை யடைபவர்க்கே. 32

| | |
|---|---|
| செறு கலியால் | (தரும நெறியைத் திரஸ்கரிக்கின்ற கலியினாலே |
| வருந்திய | துக்கப்பட்ட |
| ஞாலத்தை | பூமியை |
| வண்மையினால் வந்து எடுத்து அளித்த | தமது நிர்ஹேதுக க்ருபையாலே வந்து உத்தரித்து ரக்ஷித்தவரும் |
| அரும் தவன் | சரணாகதியென்கிற அரிய தபஸ்ஸை அநுஷ்டித்தவரும் |
| எங்கள் | எமக்கு ஸ்வாமியுமான |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| அடைபவர்க்கு | ஆச்ரயிக்குமவர்களுக்கு |
| பொருந்திய தேசும் | ஸ்வரூபாநுரூபமான தேஜஸ்ஸும் |
| பொறையும் | க்ஷமாகுணமும் |
| திறலும் | ஜிதேந்த்ரியத்வமாகிற பலமும் |
| புகழும் | கீர்த்தியும் |
| நல்ல திருந்திய ஞானமும் | பரமவிலக்ஷணமான அறிவும் |
| செல்வமும் | பக்தியாகிற ஸம்பத்தும் |
| சேரும் | தானே வந்துசேரும் |

அடையார்கமலத்தலர்மகள்கேள்வன்*கையாழியென்னும்
படையோடு நாந்தகமும் படர்தண்டும்*ஒண்சார்ங்கவில்லும்
புடையார் புரிசங்கமுமிந்தப்பூதலம் காப்பதற்கென்று*
இடையே யிராமாநுசமுனியாயினவிந்நிலத்தே. 33

| | |
|---|---|
| அடை. ஆர் கமலத்து அலர் மகள் கேள்வன் | தளங்கள் நெருங்கிய தாமரைப்பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார்க்கு வல்லபனான எம்பெருமானுடைய |
| கை | திருக்கையிலே (விளங்கா நின்ற |
| ஆழி என்னும் படையோடு | திருவாழியென்கிற திவ்யாயுதத்தோடே |
| நாந்தகமும் | நந்தகவாளும் |
| படர் தண்டும் | ரக்ஷணத்தொழிலிலே பாந்திராநின்ற கதையும் |
| ஒண் சார்ங்கம் வில்லும் | அழகிய ஸ்ரீ சார்ங்கமென்கிற வில்லும் |
| புடை ஆர் புரி சங்கமும் | ஒரு பக்கத்துக்குத்தானே ஆபரணமாகப் போரும்படியான அழகிய ஸ்ரீ பாஞ்சஜந்யமும் (ஆக இப் பஞ்சாயுதாழ்வார்கள்) |
| இந்தபூதலம் காப்பதற்குஎன்று | இந்தப் பூமியை ரக்ஷிக்கைக்காக |
| இந்நிலத்து | இப்பூமண்டலத்திலே |
| இராமாநுசமுனி இடையேஆயின | எம்பெருமானர் பக்கலிலே ஆயினர். |

ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களும் லோகரக்ஷணார்த்தமாக எம்பெருமானர் பக்கலிலேவந்துகுடி கொண்டனர் என்கிருர் இப்பாட்டில்.

“அடையார் ÷ புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்தே இராமாநுச முனியிடையே ஆயின” என்று அந்வயித்தவாறு. ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்கள் இவர்பக்கலிலே ஆகையாவது—இவருடைய நினைவைக் கடாக்ஷித்துநின்று இவர் அதிகரித்த காரியத்திற்குத் துணைசெய்கையாம். அம்பரீஷனுக்குத் திருவாழியாழ்வான் ஸஹகரித்ததுபோல.

இப்பாட்டை மற்றொரு வகையாகவும் அந்வயிக்க இடமுண்டு:—“அடையார் + புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்திடையே இராமாநுசமுனியாயின” என்று. இப்பக்ஷத்தில் ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களே இந்நிலவுலகைக் காக்க எம்பெருமானராக வந்து திருவவதரித்தார்களென்றதாகிறது.

இப்பாட்டினுல், எம்பெருமானர் பஞ்சாயுதாழ்வார்களுடைய திருவவதாரமென்று விளங்காநின்றமையால் திருவனந்தாழ்வானுடைய அவதாரமென்று சொல்வது எங்ஙனே? என்று சங்கிக்குமவர்கள் நமது சேஷாவதாரச் சிறப்புநூல் காண்க. .... 33

நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பெலத்தைச் செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினைதென்
புலத்தில் பொறித்த வப்புத்தகச்சும்மை பொறுக்கியபின்
நலத்தைப் பொறுத்தது * இராமாநுசன்தன் நயப்புகழே 34

| | |
|---|---|
| இராமாநுசன் தன் | எம்பெருமானருடைய |
| நயம் புகழ் | கல்யாணகுணங்களானவை |
| நிலத்தை செறுத்து உண்ணும் நீசம் கலியை | பூலோகத்தை ஹிம்ஸித்துத் தின்கிற நீசனான கலிபுருஷனுடைய |
| நினைப்பு அரிய பெலத்தை செறுத்தும் | இவ்வளவென்று நினைக்க முடியாதபடி அளவற்றதான பராக்ரமத்தைத் தொலைத்தவளவிலும் |
| பிறங்கியது இல்லை | பிரகாசிக்கவில்லை; |
| (பின்னை எப்போது பிரகாசித்தன? என்னில்) | |
| என் பெய் வினை | என்னாலே செய்யப்பட்ட பாவங்களை |
| தென் புலத்தில் | யமலோகத்தில் |
| பொறித்த | எழுதிவைத்த |
| அப் புத்தகம் சும்மை | அந்த புஸ்தகக் கட்டுகளை |
| பொறுக்கியபின் | கொளுத்திவிட்டபின்பு |
| நலத்தைபொறுத்தது | விளக்கம் பெற்றன. |

* * * :—எம்பெருமானருடைய ஞானம், சக்தி முதலிய திருக்கல்யாண குணங்கள் எப்போது பிரகாசித்தனவென்றால், இந்நிலவுலகத்தில் கலிபுருஷன் செங்கோல் செலுத்த முடியாதபடி அவனுடைய வலிமையைத் தொலைத்துக் கிருதயுக தர்மமே எங்கும் நடைபெறும்

படி செய்தருளினவாறே "இவர் மஹா புருஷர்; அரிய பெரிய ஞான சக்திகளை யுடையவர்" என்று உலகத்தாரனைவரும் போற்ற நேர்ந்ததனால் கலியின் கொடுமையைக் கெடுத்தது காரணமாகவே இவருடைய திருக்கல்யாண குணங்கள் நன்றாக விளங்கின—என்பர் சிலர்; அது தகுதியல்ல; கலிதோஷத்தைப் போக்கினவளவிலும் எம்பெருமானாருடைய திருக்குணங்கள் பொலிவு பெறவில்லை. பின்னை எப்போது பொலிவு பெற்றனவென்றால், எனது அளவற்ற பாவங்களையெல்லாம் சித்திரகுப்தன் எழுதிவைத்திருந்த பெரிய புத்தகச் சுமையைக் கொளுத்திவிட்டு என்னை நிஷ்கல்மஷனாக்கி அடிமைகொண்டாரென்கிற விஷயம் வெளிவந்த பிறகுதான் அவருடைய திருக்குணங்கள் ஆச்சரியமாக விளங்கின என்கிறார். இதனால், தம்முடைய பாவங்கள் ஸர்வசக்தனாலும் போக்க முடியாதவை என்பதும், கலியின் கொடுமையிற் காட்டிலும் தமது கொடுமை வலிதாயிருந்ததென்பதும், இப்படி மஹா பாபிஷ்டராயிருந்த தம்மை க்ஷமித்தருளி உஜ்ஜீவிக்கச் செய்தமையைக்கண்டு உலகத்தாரனைவரும் ஆச்சரியப்பட்டார்களென்பதும் தெரிவிக்கப்பட்டன. .... .... ... 34

நயவே னொருதெய்வம் நானிலத்தே*சிலமானிடத்தைப்
புயலே யெனக்கவி போற்றிசெய்யேன்*பொன்னரங்கமென்னில்
மயலேபெருகு மிராமாநுசன் மன்னுமாமலர்த்தா
ளயரேன்*அருவினையென்னை யெவ்வாறின்றடர்ப்பதுவே? 35

| | | | |
|---|---|---|---|
| ஒரு தெய்வம் நயவேன் | வேறொரு தெய்வத்தை விரும்பமாட்டேன்; | மயல் பெருகும் | அளவற்ற வ்யாமோஹத்தை யடைகின்ற |
| நால்நிலத்தே | இவ்வுலகில் | இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| சிலமானிடத்தை | சில நீசமனிதர்களைக் குறித்து | மன்னு மா தாள் மலர் | பொருந்திய சிறந்த திருவடித் தாமரைகளை |
| புயலே என | ‘மேகம்போலே வர்ஷிக்கிற உதாரனே!’ என்று அதிவாதமாகச்) சொல்லி | அயரேன் | மறக்கமாட்டேன்; (ஆனபின்பு) |
| கவிபோற்றிசெய்யேன் | கவிகள் கட்டிஸ்தோத்ரம் செய்யமாட்டேன்; | அரு வினை என்னை | கொடிய பாவங்கள் என்னை |
| பொன் அரங்கம் என்னில் | ‘திருவரங்கம்’ என்று சொன்னவாறே | இன்று | இன்று முதலாக |
| | | எவ்வாறு அடர்ப்பது | எப்படி ஆக்ரமிக்கக் கூடும்? |

அடல்கொண்டநேமிய னாருயிர்நாதன்*அன்றாரணச்சொற்
கடல்கொண்டவொண்பொருள் கண்டளிப்ப*பின்னுங்காசினியோர்
இடரின்கண் வீழ்ந்திடத்தானு மவ்வொண்பொருள்கொண்டவர்பின்
படருங்குணன்* எம்மிராமாநுசன் தன்படியிதுவே. 36

| | | | |
|---|---|---|---|
| அடல் கொண்ட நேமியன் | (ஆச்ரித விரோதிகளை அழிக்கவல்ல) மிடுக்கையுடைய திருவாழியை ஏந்தினவனாய் | காசினியோர் | பூமியிலுள்ளவர்கள் |
| ஆர் உயிர் நாதன் | ஸகல ஆத்மாக்களுக்கும் சேஷியான எம்பெருமான் | இடரின் கண் வீழ்ந்திட | ஸம்ஸார துக்கத்தில் அழுந்திக் கிடக்க, |
| அன்று | அர்ஜுநனுக்கு ஸாரதியாயிருந்த வக்காலத்தில் | தானும் | (எம்பெருமானாராகிற) தாமும் |
| ஆரணச்சொல் கடல்கொண்ட ஒண் பொருள் கண்டு அளிப்ப | வேதங்களாகிற கடலில் மறைந்து கிடந்த நல்ல அர்த்தங்களை ஆராய்ந்து (கீதாமூலமாக) உபதேசிக்க | அ ஒண் பொருள் கொண்டு | (முன்பு ஸர்வேச்வரனருளிச் செய்த) அந்தச் சிறந்த அர்த்தங்களைக் கொண்டு |
| பின்னும் | அதற்குப் பின்பும் | அவர் பின் படரும் குணன் | அந்த ஸம்ஸாரிகளைப் பின் தொடரும் சீலமுடையர்; |
| | | எம் இராமாநுசன் தன் படி இது | அஸ்மத் ஸ்வாமியான எம்பெருமானாருடைய ஸ்வபாவம் இது. |

முன்பு பகவான் பல சிறந்த அர்த்தங்களை ஸ்ரீ பகவத்கீதாமுகத்தாலே வெளிப்படுத்தின வளவிலும் பாழும் ஸம்ஸாரிகள் அவ்வர்த்தங்களைத் தெரிந்துகொண்டு உஜ்ஜீவிக்கமாட்டாமல் மேன்மேலும் ஸம்ஸாரத்தையே பெருக்கிக்கொண்டு அதோகதியை யடைந்துவிடவே, "ஐயோ! இப்படி நித்யஸம்ஸாரிகளாய்க் கெட்டுப்போகிறார்களே!" என்று அனுதாபங்கொண்ட எம்பெருமானார் அந்த கீதாசாஸ்த்ரத்திலுள்ள பொருள்களையே விளங்க உரைத்துக்கொண்டு, இது கேட்டுத் திருந்துவார் ஆரேனுமுண்டோ? என்று ஸம்ஸாரிகளைப் பின்தொடர்ந்து செல்லுகிறார்; நம்மை பெறுதற்கு அவர் தாமே முயற்சி செய்துகொண்டு*ஆள்பார்த்து உழிதருகின்றார்; இந்தத் திருக்குணம் உங்களுக்குத் தெரியவில்லையா? என்கிறார்.

தானும் அவ்வொண் பொருள் கொண்டு = கீதா பாஷ்யம் அருளி செய்து என்று கருத்து. திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே சரமச்லோகார்த்தத்தை ஏகாந்தமாகக் கேட்டு அதனை யெல்லாரு மறிந்து உஜ்ஜீவிக்குமாறு கோபுரத்தின் மேலேறி விளம்பரப்படுத்தின திருக்குணத்தை இப்பாட்டில் பேசுகின்றாரென்னவுமாம். .... 36

படிகொண்ட கீர்த்தி யிராமாயணமென்னும் பத்திவெள்ளம்*
குடிகொண்ட கோயி லிராமாநுசன்குணங்கூறும்*அன்பர்
கடிகொண்ட மாமலர்த்தாள் கலந்துள்ளங்கனியும்நல்லோ
ரடிகண்டு கொண்டுகந்து*என்னையுமாளவர்க்காக்கினரே. 37

| | | | |
|---|---|---|---|
| படிகொண்ட கீர்த்தி | உலக மெங்கும் பரந்த புகழை யுடைத்தான | உள்ளம் கலந்து | நெஞ்சு பொருந்தி |
| இராமாயணம் என்னும் | ஸ்ரீராமாயண மென்கிற | கனியும் | ஸ்நேஹித்திருக்கிற |
| பத்திவெள்ளம் | பக்தி ஸமுத்ரம் | நல்லோர் | மஹாநுபாவர்கள் |
| குடிகொண்ட கோயில் | நித்யவாஸம் பண்ணுகிற திவ்ய ஸ்தானமா யிருக்கிற | அடிகண்டு கொண்டு | (இவ்வாத்ம வஸ்துவானது உடையவர்க்கு சேஷப்பட்டதென்கிற)மூலப்பொருளைத் தெரிந்து கொண்டு |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய | உகந்து | ஆதரித்து |
| குணம் கூறும் அன்பர் | திருக்குணங்களைப் பேசுகின்ற பக்திமான்களுடைய | என்னையும் | அடியேனையும் |
| கடிகொண்ட மா தாள் மலர் | மணம்மிக்குச் சிறந்த பாதாரவிந்தங்களில் | அவர்க்கு | அவ்வெம்பெருமானார்க்கு |
| | | ஆள் ஆக்கினர் | ஆட்படுத்தினார்கள். |

* * * :—இப்படிப்பட்ட எம்பெருமானாரை நீரே சென்று பற்றினீரோ? அன்றி அவர் தாமே ஸ்வீகரித்தருளினரோ? என்று அமுதனாரைச் சிலர் கேட்க, நானும் பற்றவில்லை, அவரும் ஸ்வீகரிக்கவில்லை; அவருடைய ஸம்பந்த ஸம்பந்திகள் என்னைக் கொண்டு சேர்த்தார்கள் என்கிறார்.

அடி கண்டு கொண்டு = அடியாவது மூலம்; எம்பெருமானார்க்கு உரித்தாயிருக்கையாகிற மூலத்தைத் தெரிந்துகொண்டு சேர்த்தார்களென்கை. மருமமறிந்து காரியஞ் செய்தார்களென்றவாறு. ... .... .... 37

ஆக்கியடிமை நிலைப்பித்தனையென்னையின்று*அவமே
போக்கிப் புறத்திட்டதென்பெருளாமுன்பு?*புண்ணியர்தம்
வாக்கிற்பிரியா விராமாநுச நின்னருளின்வண்ணம்
நோக்கிற்றெரிவரிதால்*உரையாயிந்தநுண்பொருளே. 38

| பதம் | பொருள் |
|---|---|
| என்னை | (ஸ்வாமிந்!) (நெடுநாளாக அஹங்காரியாய்க்கிடந்த) என்னை |
| இன்று | இன்றைத் தினத்தில் |
| ஆக்கி | ஒரு பொருளாக்கி |
| அடிமை | சேஷத்வத்தில் |
| நிலைப்பித்தனை | நிலை நிறுத்தினீர்; (இன்று இப்படி செய்தருளின தேவரீர்) |
| முன்பு | முற்காலமெல்லாம் |
| அவமே போக்கி | வீணாகப் போக்கி |
| புறத்துஇட்டது | வெளி விஷயங்களிலே தள்ளி விட்டு வைத்தது |
| என் பொருளா | என்ன நிமித்தமாக? |
| புண்ணியர் தம் | (தேவரீரை இடை விடாது அநுபவிக்கும்) பாக்யசாலிகளுடைய |
| வாக்கில் பிரியா | வாக்கை விட்டுப் பிரியாத |
| இராமாநுச | எம்பெருமானாரே! |
| நின் அருளின் வண்ணம் | தேவரீருடைய திருவருளிருக்கும் பரிசு |
| நோக்கில் | நோக்குமளவில் |
| தெரிவு அரிது | அறிய முடியாததாயிரா நின்றது; |
| இந்த நுண் பொருள் | இந்த ஸூக்ஷ்மமான விஷயத்தை |
| உரையாய் | தேவரீரே அருளிச் செய்ய வேணும். |

* * * :—கூரத்தாழ்வானைக் கொண்டு அடியேனை இன்று திருத்திப் பணிகொண்ட தேவரீர் இதற்கு முற்கால மெல்லாம் இந்த சேஷத்வரஸத்தை அடியேனுக்கு ஊட்டாமல் வீணாக விஷயாந்தரங்களிலே அகலவைத்திருந்ததற்கு என்ன காரணம்? இன்று இங்ஙனே திருவுள்ளம் பற்றும்படியாக என்னிடத்தில் என்னஸுக்ருத முண்டாயிற்று? ஒன்றுமில்லை; அப்படியிருக்கச் செய்தேயும் தேவரீர் தம்முடைய நிர்ஹேதுக க்ருபையைக் கொண்டேயன்றோ இன்று ஆட்படுத்திக் கொண்டது. ஹா ஹா இப்படியும் ஒரு க்ருபையுண்டோ? இவ்வருளின் திறத்தை அறிவாரார்! அறிந்த தேவரீரே அருளிச் செய்யவேணும் என்றாராயிற்று

நிலைப்பித்தனை=முன்னிலை யொருமை வினைமுற்று. அவம்—வீண். "இன்று என்னை ஆக்கி அடிமை நிலைப்பித்தனை முன்பு அவமே போக்கிப் புறத்திட்டது என் பொருளா!"= இன்று ஸ்வீகரித்ததற்கும் இத்தனை நாள் ஒதுக்கிவைத்ததற்கும் என்ன காரணம்? 38

பொருளும்புதல்வரும்பூமியும் *பூங்குழலாருமென்றே
மருள்கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சே! *மற்றுளார்தரமோ?
இருள்கொண்ட வெந்துயர்மாற்றித் தன்னீறில் பெரும்புகழே
தெருளுந்தெருள்தந்து *இராமாநுசன் செய்யும்சேமங்களே. 39

| பதம் | பொருள் |
|---|---|
| பொருள் என்றும் | த்ரவ்யம் என்று சொல்லிக் கொண்டும் |
| புதல்வர்என்றும் | புத்திரர்கள் என்று சொல்லிக்கொண்டும் |
| பூமி என்றும் | க்ஷேத்ரமென்று சொல்லிக் கொண்டும் |
| பூ குழலார் என்றுமே | அழகிய குழலையுடைய ஸ்திரீகள் என்று சொல்லிக் கொண்டும் (அர்த்த புத்திராதிகளையே விரும்பி) |
| மருள் கொண்டு | அறிவு கெட்டு |
| இளைக்கும் நமக்கு | வருந்திக் கொண்டு கிடக்கிற நமக்கு |
| இருள் கொண்ட வெம் துயர் | அஜ்ஞாநத்தோடு கூடிய க்ரூரமான துக்கங்களை |
| மாற்றி | போக்கடித்து |
| தன் ஈறு இல் பெரு புகழே தெருளும் தெருள் | தம்முடைய முடிவில்லாத சிறந்தகல்யாண குணங்களையேசிந்திக்கக் கடவதான ஞானத்தை |
| தந்து | அளித்தருளி |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| செய்யும் சேமங்கள் | செய்கிற க்ஷேமங்களானவை |
| நெஞ்சே | ஓ மனமே! |
| மற்று உளார் தரமோ | மற்ற பேர்களுக்குச் செய்கிற மாதிரியோ? [அல்ல விலக்ஷணம் என்றபடி.] |

* * *:—எம்பெருமானாருடைய திருவருளாலே தாம் பெற்ற நன்மைகளை நினைத்து நினைத்து ஆநந்தமுள்ளடங்காமல் அவ்வாநந்தத்தை நெஞ்சோடே கூடி உசாவுகிறார். நெஞ்சே!

* அன்னை அத்தன் என் புத்திரர் பூமி வாசவார்குழலாள் என்று மயங்கிப் புத்ரதாரக்ருஹ க்ஷேத்ரங்களுக்கு மேற்பட வொன்றுமறியாமல் உடலுக்கே கரைந்து நைந்துகிடந்த நமக்கு அஜ்ஞானங்களையும் அது காரணமாகவரும் பாவங்களையும் தொலைத்தருளித் தமது திவ்ய கீர்த்திகளையே அநவரதம் பேசும்படியான நிலைமையிலே நம்மைக் கொண்டு நிறுத்தினார் எம்பெருமானார்; இப்படியாக அவர் நமக்குச் செய்தருளும் க்ஷேமங்கள் இவ்வுலகில் வேறு யார்க்காவது கிடைக்கக்கூடியதோ? நம்முடைய பாக்கியமே பாக்கியமன்றோ என்றதாயிற்று.

மற்றுளார் தரமோ? என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம்; இப்படிப்பட்ட க்ஷேமங்களை நமக்கு எம்பெருமானார் தவிர வேறு யாரேனும் அளிக்கக்கூடுமோ? என்றும், இப்படிப்பட்ட க்ஷேமங்கள் நமக்குத் தவிர வேறு ஆர்க்கேனும் கிடைக்கத் தகுமோ? என்றும். இன்று பதில் கடிதம் எதிர்பார்த்தும் கிடைக்கவில்லை. .... 39

சேமநல்வீடும் பொருளுந்தருமமும் *சீரியநற்
காமமுமென்றிவை நான்கென்பர் *நான்கினுங்கண்ணனுக்கே
ஆமதுகாம மறம்பொருள்வீடிதற் கென்றுரைத்தான்
வாமனன்சீலன் *இராமாநுசனிந்தமண்மிசையே. 40

| | |
|---|---|
| சேமம் நல் வீடும் | (அனைவர்க்கும், க்ஷேமரூபமான சிறந்தமோக்ஷமும் |
| பொருளும் | அர்த்தமும் |
| தருமமும் | தர்மமும் |
| சீரிய நல் காமமும் என்று இவை | மிகவுஞ் சிறந்த காமமும்— ஆக இப்படி சொல்லப் பட்டுள்ள இவை |
| நான்கு என்பர் | நான்கு புருஷார்த்தங்கள் என்று (வைதிகர் கூறுவர்கள்; |
| நான்கினும் | இந்த நான்கு புருஷார்த்தங்களுள் |
| காமம் | காமமாவது |
| கண்ணனுக்கே ஆமது | எம்பெருமான் விஷயத்திலேயே உண்டாமது |
| அறம் பொருள் வீடு | தர்ம அர்த்த மோக்ஷங்கள் மூன்றும் |
| இதற்கு என்று | இந்தக் காம புருஷார்த்தத்திற்கு சேஷபூதங்கள் என்று |
| வாமநன் சீலன் இராமாநுசன் | வாமநாவதாரம் செய்த பெருமானோடொத்தசீலத்தையுடையரான எம்பெருமானார் |
| இந்த மண்மிசை உரைத்தான் | இவ்வுலகத்தில் அருளிச் செய்தார். |

* * *:—எம்பெருமானார் இவ்வுலகத்தார்க்கு உபதேசித்தருளின அர்த்தங்களில் ஒரு அர்த்த விசேஷத்தை இப்பாட்டில் எடுத்துரைக்கின்றார்:—ஸகல சாஸ்த்ரங்களாலும் பிரதிபாதிக்கப்படுமவை தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என நான்கு புருஷார்த்தங்களாம்; அந்த நான்கினுள் காமமென்பது பகவத்விஷய காமம்; விஷயாந்தரங்களைப்பற்றின காமம் சிற்றின்பமாதலால் அது புருஷார்த்தமன்று; பேரின்பமாகிய பகவத் காமமே காமம். அதுவே புருஷார்த்தம். மற்ற மூன்று புருஷார்த்தங்கள் மேற்சொன்ன காமபுருஷார்த்தத்திற்கு சேஷப்பட்டவைகள்; காமமே ப்ரதாநசேஷியான புருஷார்த்தம் என்று உலகத்தாரெல்லார்க்கும் உபதேசித்தருளினர் எம்பெருமானார் என்றதாயிற்று.

சேம நல்வீடு மென்று தொடங்கி அறம் பொருள் வீடிதற்கு என்னுமளவும் எம்பெருமானாருடைய உபதேச வடிவம்.

கண்ணனுக்கேயாமது காமம்=காமக்ரோதங்களைக் கெட்டகுணமாகக் கூறியிருப்பது தகாத விஷயங்களில் காமம் கூடாதென்பதுபற்றி. பகவத்விஷயத்தில் காமம் சாஸ்த்ரவிஹிதம். ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் இக்காமமே பொலியும்.

வாமநன் சீலன்=வாமநாவதாரம் செய்த எம்பெருமானுடைய சீலம்போன்ற சீலத்தையுடையவர் என்கை ஒருவரும் அபேக்ஷியாதிருக்கத் தன்பேறாக எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்துத் திரிவிக்கிரமனானதுபோல், ரஸ்யமாயும் ரஹஸ்யமாயுமுள்ள அர்த்த விசேஷங்களைத் தமது ஸ்நேஹாதிசயகக்ருபையாலே வெளியிடுபவர் எம்பெருமானார் என்கிறது. 40

மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து *எங்கள் மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா *உலகோர்க ளெல்லாம்
அண்ண லிராமாநுசன் வந்துதோன்றிய வப்பொழுதே
நண்ணரு ஞானந் தலைக்கொண்டு *நாரணற்காயினரே. 41

| பதம் | பொருள் |
|---|---|
| எங்கள் மாதவனே | நமக்கு நாதனான திருமால் தானே |
| மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து | (இப்பூமியிலுள்ள மநுஷ்யாதி) யோனிகள் தோறும் அவதரித்து |
| கண்உற நிற்கிலும் காணகில்லா உலகோர்கள் எல்லாம் | எல்லாருடைய கண்ணுக்கும் தன்னை இலக்காக்கிக் கொண்டு நின்ற விடத்திலும்(அவனை நம்முடைய நாதனென்று) காண மாட்டாதிருந்த இவ்வுலகத்தாரெல்லாரும் |
| அண்ணல் இராமாநுசன் வந்து தோன்றிய அப்பொழுதே | ஸர்வஸ்வாமியான எம்பெருமானார் இங்கேவந்தவதரித்தவுடனே |
| நண்ண அரு ஞானம் தலைக்கொண்டு | பெறுதற்கரிதான ஞானம் அதிகரிக்கப்பெற்று |
| நாரணற்கு ஆயினர் | ஸ்ரீமந் நாராயணனுக்கு சேஷப்பட்டனர். |

***:—எம்பெருமானுடைய அவதாரத்திற்காட்டிலும் எம்பெருமானாருடைய அவதார
மே சிறப்புற்றதென்கிறார் எம்பெருமான் பலபலயோனிகளிற் பலவகைப்பிறவி பிறந்து கண்
காண வந்துநின்று உபதேசங்களாலே ஸ்வஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்த விடத்திலும்
யாரும் அவனை லக்ஷியம் பண்ணவில்லை; "அவஜாநந்தி மாம் மூடா:" [என்னை மூடர்கள் அவமா
னப்படுத்துகிறார்கள்] என்று அவன்றானே சொல்லிக்கொண்டு வருத்தப்படவேண்டிற்றாயிற்று.
ஆகையாலே பகவானுடைய அவதாரம் ஸம்ஸாரிகளுடைய தெள்ளறிவுக்கு உறுப்பாகவில்லை.
எம்பெருமானாருடைய அவதாரமோ வென்னில்; பயன்பெற்றது. இவர்தாம் திருவவதரித்த
வுடனே எல்லாவுலகத்தாரும் ஆச்சரியமான ஞானத்தைப்பெற்று உஜ்ஜீவித்தார்கள்—என்றாரா
யிற்று. .... ... .... 41

ஆயிழையார் கொங்கை தங்கும் *அக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியை வந்தெடுத்தா னின்று *மாமலராள்
நாயக னெல்லாவுயிர்கட்கும் நாத னரங்கனென்னுந்
தூயவன் *தீதிலிராமாநுசன் தொல்லருள் சுரந்தே. 42

| பதம் | பொருள் |
|---|---|
| மா மலராள் நாயகன் | லக்ஷ்மீபதியான |
| அரங்கன் | பெரியபெருமாள் |
| எல்லா உயிர்கட்கும் நாதன் என்னும் | ஸகலஆத்மாக்களுக்கும் சேஷி என்று உபதேசிப்பவரும் |
| தூயவன் | பரமபரிசுத்தரும் |
| தீது இல் | எவ்வகை குற்றமுமில்லாத வருமான |
| இராமாநுசன் | எம்பெருமானார்;—(என்னசெய்தாரென்றால்) |
| ஆய் இழையார் கொங்கை தங்கும் அக்காதல் அளறு அழுந்திமாயும் என் ஆவியை | அழகிய ஆபரணங்களணிந்த ஸ்த்ரீகளுடைய கொங்கைத் தடத்தில் தங்கும் ஆசையாகிற சேற்றிலே அழுந்தி) நசித்துப் போகிற என் ஆத்மாவை |
| தொல் அருள் சுரந்து வந்து இன்றுஎடுத்தான் | இன்று நிர்ஹேதுக க்ருபை பண்ணிவந்து உத்தரித்தருளினார். |

***:—பகவானுடைய அவதாரகாலங்களில் திருந்தாத ஸம்ஸாரிகளும் எம்பெருமா
னார் காலத்தில் திருந்திவிட்டார்களென்று கீழ்ப்பாட்டில் கூறியதற்கு வேறு த்ருஷ்டாந்தம்
காட்ட வேணுமோ? என்னைத் திருத்திப் பணிகொண்ட விஷயமொன்றே போராதோ வென்
பார்போலத் தம்மைத் திருத்தினதைச் சொல்லி ஆநந்தப்படுகிறார். .... 42

சுரக்குந் திருவுமுணர்வும் *சொலப்புகில் வாயமுதம்
பரக்கு மிருவினை பற்றற வோடும் *படியிலுள்ளீர்!
உரைக்கின்றன னுமக்கியானறஞ்சீறு முறுகலியைத்
துரக்கும் பெருமை *இராமாநுசனென்று சொல்லுமினே. 43

| | |
|---|---|
| படியில் உள்ளீர் | இப்பூமியிலுள்ளவர்களே! |
| யான் உமக்கு உரைக்கின்றனன் | நான் உங்களுக்கு (ஒரு ஹிதம்) சொல்லுகிறேன்; (என்னவென்றால்) |
| அறம் சீறும் உறுகலியை துரக்கும் பெருமை இராமாநுசன் சொல்லுமின் | தர்மமார்க்கத்தில் சீற்றமுடைத்தாய் ப்ரபலமான கலியை ஓட்டிவிடும் எம்பெருமானாருடைய திருநாமத்தைச் சொல்லுங்கள்; (அப்படி சொன்னால் |
| திருவும் | பக்திப் பெருஞ்செல்வமும் |
| உணர்வும் | ஞானமும் |
| சுரக்கும் | மேன் மேலும் பெருகும் |
| சொல் புகில் | அந்தத் திருநாமத்தைச் சொல்லத் தொடங்கும் போதே |
| வாய் அமுதம் பரக்கும் | வாக்கிலே அம்ருதரஸம் வியாபிக்கும்; |
| இருவினை | மஹாபாவங்கள் |
| பற்று அற ஓடும் | அடியோடே போய் விடும். |

* * *—உலகத்தாரை நோக்கி நீங்களெல்லாரும் ஸ்ரீராமாநுஜ திவ்ய நாமத்தை வாயாரச் சொல்லுங்கள், உங்களுக்கு எல்லாவிதமான நன்மைகளும் உண்டாகுமென்கிறார்: ஓ ஜனங்களே! உங்களுக்கு ஓர் அருமையான அர்த்தத்தை உபதேசிக்கிறேன், கேளுங்கள்; எம்பெருமானாருடைய ஸம்பந்தமுள்ள தேசத்தில் தருமத்திற்கு மாறான கலிபுருஷன் நிற்கப்பெறமாட்டான்; அன்னவரது திருநாமங்களை நீங்கள் அநுஸந்தாநம் பண்ணுங்கள்; உங்களுக்கும் ஜ்ஞாந பக்திகள் தலையெடுக்கும். பாவங்களும் தொலையும். அத்திருநாமங்கள் நாவுக்கும் இனிதாயிருக்கும். சொல்லிப்பாருங்கள்.

உமக்கு+யான், உமக்கியான். "யவ்வரின் இய்யாம்" என்பது நன்னூல்.

"நேர்பதினாறே நிரைபதினேழென் றோதினர் கலித்துறையோரடிக் கெழுத்தே" என்ற இலக்கணத்திற்கு மாறாக இப்பாட்டின் மூன்றாமடியில் (ஒற்றொழித்துப்) பதினெட்டெழுத்து வந்தது என்னெனில்; உமக்கியான் என்ற விடத்தில் ககரத்தின் மேலேறின இகரம் குற்றியலிகரமாகையாலே வண்ணங்கெடாமைக்குக் கழித்து உடலெழுத்தான ககரத்தைக் கீழோடே ஒன்றுவித்துப் பதினேழெழுத்தாகவே எண்ணத்தக்கது. கம்பர் இயற்றிய சடகோபரந்தாதியில் "என் முடியா தேனக்கியாதே யரிய திரா வணன்றன்" என்ற இருபத்தொன்பதாம்பாட்டிலும் இப்படியே பிரயோகம் வந்தமை காண்க. இந்த நூற்றந்தாதியிலும் மேல் ஐம்பத்து மூன்றாம் பாட்டில் "பற்பல்லுயிர்களும் பல்லுலகியாவும் பரனதென்னும்" என்ற விடத்திலும் இங்ஙனமே கொள்க. ... .... ... .... 43

சொல்லார் தமிழொருமூன்றும் * சுருதிகள் நான்குமெல்லை
யில்லா வறநெறியாவுந் தெரிந்தவன் * எண்ணருஞ்சீர்
நல்லார்பரவு மிராமாநுசன் திருநாமம் நம்பிக்
கல்லாரகலிடத்தோர் * எதுபேறென்று காமிப்பரே. 44

| | |
|---|---|
| அகல் இடத்தோர் | விசாலமான இப்பூமியிலுள்ளவர்கள், |
| சொல் ஆர் தமிழ் ஒரு மூன்றும் | சொல் நிரம்பிய இயல் இசை நாடகம் என்கிற ஒப்பற்ற முத்தமிழையும் |
| சுருதிகள் நான்கும் | நான்கு வேதங்களையும் |
| எல்லை இல்லா அறம் நெறி யாவும் | கணக்கில்லாத தருமசாஸ்திரங்களையும் மற்றும் எல்லாக் கலைகளையும் |
| தெரிந்தவன் | அறிந்தவராயும் |
| எண் அரு சீர் | எண்ண முடியாத குணங்களையுடையவராயும் |

நல்லார் பரவும் — ஸத்துக்களால் துதிக்கப் படுபவராயுமிருக்கிற
இராமாநுசன் திருநாமம் — எம்பெருமானாருடைய திருநாமத்தை
நம்பி கல்லார் — (என் வார்த்தையை) நம்பிக் கற்கின்றார்களில்லை;

(ஸ்ரீராமாநுஜ நாமஸங்கீர்த்தநமே புருஷார்த்தமென்று அறியாதவர்களாய்)
எது பேறு என்று காமிப்பரே! — நமக்குப் புருஷார்த்தம் எது? என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் ஐயோ!

சோல் ஆர் தமிழொரு மூன்றும்=இயல் இசை நாடகம் என மூவகைப்படும் தமிழ்:—“எழுத்துப் பதின்மூன்று, இரண்டசை சீர்முப்பதேழ்தளை ஐந்து, இழுக்கிலடிதொடை நாற்பதின் மூன்று ஐந்துபா இனம் மூன்று, ஒழுக்கிய வண்ணங்கள் நூறு ஒன்பது ஒண்பொருள் கோள் இருமூ, வழுக்கில்விகாரம் வனப்பெட்டுயாப்புள் வகுத்தனவே” என்று தொகுத்து உணர்த்தப்படும் இயற்றமிழின் இலக்கணங்கள். குறிஞ்சி, செருந்தி, இந்தளம், கொல்லி, காமரம், தக்கேசி, பஞ்சமம், கைசிகம், காந்தாரம், பாலையாழ் முதலிய பண்களைக் கொண்டுள்ள தமிழ் இசைத்தமிழாம். இயலுக்கும் இசைக்கும் பொதுவானது நாடகத் தமிழாம். திராவிட சாஸ்த்ரங்களெல்லாவற்றையும் அறிந்தவர் எம்பெருமானார் என்கிறது.

சுருதிகள் நான்கும்—ருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என வேதங்கள் நான்காம். எல்லையில்லா அறநெறி—தர்மசாஸ்த்ரங்கட்கு அளவேயில்லை. யாவும்—கீழ்ச் சொன்னவற்றையும் மற்றுமுள்ள கலைகளையும். .... .... .... 44

பேறொன்றுமற்றில்லை நின்சரணன்றி * அப்பேறளித்தற்
காறொன்றுமில்லை மற்றச்சரணன்றி * என்றிப்பொருளைத்
தேறுமவர்க்குமெனக்குமுனைத்தந்த செம்மை சொல்லால்
கூறும்பரமன்று * இராமாநுச! மெய்ம்மை கூறிடிலே. 45

இராமாநுச — எம்பெருமானாரே
நின் சரண் அன்றி — தேவரீருடைய திருவடிகளைத்தவிர
மற்று பேறு ஒன்றும் இல்லை — உபேயம் வேறொன்றுமில்லை:
அப்பேறு அளித்தற்கு — தேவரீர் திருவடிகளாகிற அந்த உபேயத்தைத்தருவதற்கு
அச்சரண் அன்றி — அத்திருவடிகள் தவிர
மற்று ஆறு ஒன்றும் இல்லை — வேறு உபாயம் ஒன்றுமில்லை
என்று இப்பொருளை — என்கிற இவ்வுண்மைப் பொருளை

தேறுமவர்க்கும் — தெளிவாகத் தெரிந்து கொண்டிருக்கிறமஹான்களுக்கும்
எனக்கும் — (இந்தத் தெளிவு சிறிதுமில்லாத) எனக்கும்
உனைதந்த செம்மை — (வாசி பாராமல் ஸமமாகவே) தேவரீரைக் காட்டிக் கொடுத்த செம்மைக் குணமானது
மெய்ம்மை கூறிடில் — உண்மை சொல்லில்
சொல்லால் கூறும் பரம் அன்று — வாய்கொண்டு சொல்லத்தரமன்று [அநுபவித்து உருகுமித்தனை].

‘உபாயமும் உபேயமும் எம்பெருமானார் திருவடிகளே’ என்றிருக்கும் மஹான்களுக்கு தேவரீர் எவ்வாறு அருள் புரிகின்றதோ அவ்வாறாகவே சிறிதும் வாசிவையாமல் பாவியேனுக்கும் அருள் புரிகின்றதே! இஃது என்ன பெருங்குணம்!! த்ருடவிச்வாஸமுடைய ஆழ்வான் ஆண்டான் போல்வாரை அடிமை கொள்வது போலவே அவிச்வாஸியான என்னையும் அடிமை கொள்வதே! இச்செம்மைக் குணத்தின் பெருமையைப் பாசுரமிட்டுச் சொல்ல எனக்கு சக்தியில்லையே யென்று தடுமாறுகின்றார். .... .... 45

கூறுஞ்சமயங்களாறுங்குலைய* குவலயத்தே
மாறன்பணித்த மறையுணர்ந்தோனை * மதியிலியேன்
தேறும்படியென் மனம்புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறுங்குணனை * இராமாநுசனை யிறைஞ்சினமே. 46

| பதம் | பொருள் |
|---|---|
| கூறும் சமயங்கள் ஆறும் குலைய | மனம்போனபடி சொல்லிக் கொண்டிருக்கிற ஆறு பாஹ்யமதங்களும் தலை மடங்கும்படி. |
| குவலயத்தே | இப்பூமண்டலத்திலே |
| மாறன் பணித்த மறை | நம்மாழ்வார் அருளிச் செய்த தமிழ் வேதத்தை |
| உணர்ந்தோனை | கற்று அறிந்தவராயும் |
| மதியிலியேன் தேறும்படி | ஜ்ஞானஹீநனான நானும் தெளியும்படியாக |
| என் மனம் புகுந்தானை | என் ஹ்ருதயத்திலே வந்து புகுந்தவராயும் |
| திசை அனைத்தும் ஏறும் குணனை | எல்லாத் திக்குகளிலும் பரவிய திருக்குணங்களையுடையவராயுமிருக்கிற |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| இறைஞ்சினம் | வணங்கினோம். |

* * *—எம்பெருமானார் செய்தருளின அரியபெரிய உபகாரங்கள் நெஞ்சில் ஊற ஊற, பரவசராய்த் திருவடிகளிலே வணங்குகிறார்:—உலகத்தில் பிரமாணமில்லாமலும் யுக்தியில்லாமலும் மனம்போனபடி சொல்லிக்கொண்டு திரிகிற மதாந்தரஸ்தர்களையெல்லாம் பங்கப்படுத்துவதற்காக நம்மாழ்வார் அருளிச் செய்த தமிழ்வேதமான திருவாய்மொழியை ஓதியுணர்ந்தவரும், அவிவேகியான நரன்கூடத் தேறுதலடையும்படி என் நெஞ்சினுள்ளே புகுந்து என் ஸத்தையை நோக்குபவரும், திசைகளெங்கும் பரவிய புகழையுடையருமான எம்பெருமானாரை வணங்கினோமென்றாராயிற்று.

சமயங்கள் ஆறும்=தேஹாத்மவாதி, தேஹபரிணாமாத்மவாதி, விஜ்ஞாநாத்மவாதி, சூந்யவாதி, அத்வைதவாதி, சிவபரத்வவாதி – என்றிப்படி ஆறு மதஸ்தர்களுண்டு. வேறு வகைகளும் உண்டு. எல்லா மதங்களும் திருவாய் மொழியில் நெற் செய்யப் புல்தேயுங்கணக்கிலே தொலைக்கப்பட்டனவென்க. குவலயம்—வடசொல். தேறும்படி—'ஒரு வழியாலும் நாம் உஜ்ஜீவிக்க வகையில்லையே! என்செய்வோம்' என்று தடுமாறிக்கிடந்த நானும் 'இனி நமக்கொரு குறையுமில்லை' என்று தேறி மார்விலே கைவைத்துறங்கும்படியாக என்கை. ... 46

இறைஞ்சப்படும் பரனீச னரங்கனென்று* இவ்வுலகத்
தறம் செப்புமண்ண லிராமாநுசன்* என்னருவினையின்
திறஞ்செற்றிரவும் பகலும் விடா தென்றன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான்* எனக்காரும் நிகரில்லையே. 47

| பதம் | பொருள் |
|---|---|
| இறைஞ்சப்படும் பரன் ஈசன் அரங்கன் என்று | 'எல்லாராலும் வணங்கத் தக்க பரதெய்வம் (எதுவென்றால்) ஈசனாகிய ஸ்ரீரங்கநாதனே யாம்' என்று |
| இ உலகத்து | இப்பூமண்டலத்திலே |
| அறம் செப்பும் | ஸாக்ஷாத் தர்மத்தை அருளிச் செய்யுமவராய் |
| அண்ணல் | ஸர்வஸ்வாமியான |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என் அருவினையின் திறம் செற்று | என்னுடைய போக்க முடியாத கர்மஸமூஹத்தைப் போக்கி |
| பகலும் இரவும் விடாது | ஸர்வ காலத்திலும் |
| என் தன் சிந்தை உள்ளே | (என் ஹ்ருதயத்தினுள்ளே |
| நிறைந்து | பரிபூர்ணராகி |
| ஒப்பு அற இருந்தான் | இவ்விருப்புக்கு)ஒப்பில்லாதபடி எழுந்தருளியிருக்கிறார்; |
| எனக்கு | இப்படிப்பட்ட அருளைப் பெற்ற எனக்கு |
| ஆரும் நிகர் இல்லை | ஒப்பாவார் ஆருமில்லை. |

***—ஸ்ரீ ரங்கநாதனே எல்லாரும் வணங்கத்தக்க பரதெய்வமென்னும் உண்மையை உலகத்தார்க்கு உபதேசித்து எல்லாரையும் பகவத் ஸமாச்ரயணத்தில் ருசியுடையவர்களாக்கிப் போருகின்ற எம்பெருமானார் என்னுடைய தீவினைகளை வேரோடே களைந்தொழித்து அநவரதமும் எனது ஹ்ருதயத்தினுள்ளே பரிபூர்ணராயெழுந்தருளியிராநின்றார்; இப்படிப்பட்ட பரமபாக்கியம் பெற்றவன் இவ்வுலகில் நானொருவனேயாகையால் * இல்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரே. .... .... .... 47

நிகரின்றிநின்றவென் நீசதைக்கு* நின்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை யருட்குமஃதேபுகல்* புன்மையிலோர்
பகரும்பெருமை யிராமாநுசவினி நாம்பழுதே
அகலும் பொருளென்* பயனிருவோமுக்கு மானபின்னே. 48

| | |
|---|---|
| புன்மையிலோர் பகரும் பெருமை இராமாநுச | மஹான்கள் பேச வேண்டும்படியான பெருமையையுடைய எம்பெருமானரே! |
| நிகர் இன்றி நின்ற என் நீசதைக்கு | என்னுடைய ஒப்பற்ற தாழ்மைக்கு |
| நின் அருளின் கண் அன்றி | தேவரீருடைய க்ருபையினிடத்தில் தவிர |
| புகல் ஒன்றும் இல்லை | வேறு எவ்விடத்திலும் ஒதுங்க இடமில்லை; |
| அருட்கும் | தேவரீருடைய அந்த க்ருபைக்கும் |
| அஃதே புகல் | (என் போல்வாருடைய) அந்தத்தாழ்மையே சரணம், (ஆக இவ்வகையாலே) |
| இருவோமுக்கும் பயன் ஆனபின் | அடியேனால் தேவரீருக்குப்பயன், தேவரீரால் அடியேனுக்குப் பயன் என்று ஸித்தமான பின்பு |
| இனி நாம் | இனி மேலும் நாம் |
| பழுதே | வியர்த்தமாக |
| அகலும் பொருள் என் | பிரிந்திருக்கைக்குக் காரணம் என்ன? |

* * *:—எனக்காரும் நிகரில்லையே" என்று களித்துக்கூறின அமுதனாரை நோக்கி எம்பெருமானார் " இக்களிப்பு உமக்கு எத்தனை நாளைக்கு நிற்கும்? நான் உம்மை விட்டுவிடவுங் கூடும்; நீர் என்னை விட்டுவிடவுங்கூடும். இரண்டத்தொன்று நேர்ந்தால் இக்களிப்பு மாறக் கூடியது தானே" என்ன—: இனி நாம் வீணாக விட்டுப் பிரிவதற்குக் காரணமேயில்லை யென்கிறார்.

["ததஹம் த்வத்ருதே ந நாதவாந் மத்ருதே த்வம் தயநீயவாந் நச, விதிநிர்மிதமேததந்வயம் பகவந் பாலய மாஸ்மஜீஹப:" என்ற ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்ந ச்லோகமும் இப்பொருள் கொண்டதே.

நீசதை—'நீசதா' என்ற வடசொல் ஐயீறாயிற்று. நீசஸ்யபாவ: நீசதா—நீசனாயிருக்குந் தன்மை. அருட்குமஃதேபுகல்—நீசர்கள் விஷயத்தில் க்ருபை பண்ணினாலன்றோ அருள் விளங்குவதும் பயன் பெறுவதும். .... .... .... 48

ஆனதுசெம்மையறநெறி* பொய்ம்மையறுசமயம்
போனதுபொன்றி இறந்தது வெங்கலி* பூங்கமலத்
தேனதிபாய்வயல் தென்னரங்கன் கழல் சென்னிவைத்துத்
தானதில்மன்னும்* இராமாநுச னித்தலத்துதித்தே. 49

| | |
|---|---|
| பூ கமலம் தேன் | தாமரைப் பூக்களிலுண்டான மகரந்தமானது |
| நதி பாய் | ஆறாகப் பெருகப் பெற்ற |
| வயல் | கழனிகளையுடைய |
| தென் அரங்கன் | ஸ்ரீரங்கத்திலே எழுந்தருளியிருக்கிற பெரிய பெருமாளுடைய |
| கழல் | திருவடிகளை |
| சென்னி வைத்து | சிரஸாவஹித்துக் கொண்டு |
| தான் அதில் மன்னும் | தாம் அத்திருவடிகளிலேயே ப்ரவணராயிருக்கிற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| இ தலத்து உதித்து | இப்பூமியிலே திருவவதரித்ததனால் |
| செம்மை அறம் நெறி | ருஜுவான தர்மமார்க்கமானது |
| ஆனது | ஸத்தை பெற்றது; |
| பொய்ம்மை அறு சமயம் | பொய்யே நிறைந்து கிடக்கிற அறுசமயங்களும் |
| பொன்றிபோனது | நாசமடைந்தன; |
| வெம் கலி இறந்தது | கொடிய கலியுகமும் மாண்டது. |

* * *:—எம்பெருமானார் திருவவதரித்ததனாலே இவ்வுலகத்துக்கு உண்டான நன்மைகளை அருளிச் செய்கிறார் இதில். முன்பு குத்ருஷ்டிகளினால் அழிந்துகிடந்த தர்மமார்க்கம்

மீண்டு நிலைபெற்றது; சாஸ்த்ரவிருத்தமான புறமதங்களெல்லாம் தலைசாய்ந்தன; கலிதோஷமும் கெட்டுப்போயிற்று .... .... .... 49

உதிப்பனவுத்தமர் சிந்தையுள்* ஒன்னலர் நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன* கொள்ளைவன் குற்றமெல்லாம்
பதித்தவென் புன்கவிப் பாவினம் பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன்* இராமாநுசன்றன் னிணையடியே. 50

| | |
|---|---|
| பாவு தொல் சீர் | உலகமெங்கும் பரவின நித்யகல்யாண குணங்களையுடையவரும் |
| எதி தலை நாதன் | யதிகளுக்குத் தலையான நாயகருமான |
| இராமாநுசன் தன் | எம்பெருமானாருடைய |
| இணை அடி | திருவடியிணைகள் |
| | (எப்படிப்பட்டவை யென்றால்) |
| உத்தமர் சிந்தையுள் உதிப்பன | உத்தமாதிகாரிகளுடைய திருவுள்ளங்களிலே ப்ரகாசிப்பனவ; |

| | |
|---|---|
| ஒன்னலர் நெஞ்சம் | பிரதிபக்ஷிகளுடைய நெஞ்சானது |
| அஞ்சி கொதித்திட | பயப்பட்டுப் பரிதவிக்கும்படி |
| மாறி நடப்பன | மாறிமாறியிட்டு நடக்குந்தன்மையுடையன; |
| கொள்ளை வன் குற்றம் எல்லாம் பதித்த | அபாரமான வலிய தோஷங்கள் யாவும் அழுந்திக்கிடக்கிற |
| என் புன் கவி | என்னுடைய க்ஷுத்ரமான கவனமாகிய |
| பா இனம் பூண்டன | பாசுரங்களை (ஸ்தோத்ரமாகப்) பெற்றுக் கொண்டவை. |

* * * :—தமக்குப் பரமப்ராப்யமான எம்பெருமானார் திருவடிகளை வருணிக்கிறார் இதில். வடுகநம்பி போல்வாரான உத்தமாதிகாரிகளாலே இடைவிடாது சிந்திக்கப்படுவன; பிரதிபக்ஷிகளுடைய நெஞ்சிலே பரிதாபத்தை உண்டுபண்ணுவன; பல்வகைக் குற்றங்கள் நிறைந்த எனது கவிகளையும் ஏற்றுக்கொள்வன—அத்திருவடிகள், என்றாராயிற்று.

ஒன்னலர் நெஞ்ச மஞ்சிக் கொதித்திட மாறி நடப்பன—பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸிப்பதற்காகப் பலவிடங்களிலும் ஸஞ்சரித்தருளினமை அறிக. மாறிநடத்தல்—ஒரு அழகான நடை. நம்பெருமாள் நடைபோல. .... .... .... 50

அடியைத்தொடர்ந்தெழு மைவர்கட்காய்* அன்றுபாரதப்போர்
முடியப் பரிநெடுந் தேர்விடுங்கோனை* முழுதுணர்ந்த
அடியர்க்கமுத மிராமாநுசனென்னை யாளவந்திப்
படியிற்பிறந்தது* மற்றில்லைகாரணம் பார்த்திடிலே. 51

| | |
|---|---|
| அன்று | முற்காலத்தில் |
| அடியை தொடர்ந்து | திருவடிகளை அவலம்பித்து |
| எழும் | செருக்கிக்கிளர்ந்த |
| ஐவர்கட்கு ஆய் | பஞ்ச பாண்டவர்களுக்காக [பக்ஷபாதம் பூண்டு] |
| பாரதப் போர் | பாரதயுத்தத்திலே |
| முடிய | (துரியோதநாதிகள்) மாளும்படியாக |
| பரி நெடு தேர் | குதிரைபூண்ட பெரிய தேரை |
| விடும் | நடத்தின |
| கோனை | ஸர்வேச்வரனை |

| | |
|---|---|
| முழுது உணர்ந்த | (ஸ்வரூப ஸ்வபாவங்களில் ஒன்றுங் குறையாதபடி) பூர்த்தியாகத் தெரிந்துகொண்ட) |
| அடியர்க்கு | பாகவதர்களுக்கு |
| அமுதம் | பரமபோக்யரான |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| இப்படியில் | இப்பூமண்டலத்தில் |
| வந்து பிறந்தது | வந்து அவதரித்தது (எதற்காக வெனில்) |
| என்னை ஆள | அடியேனை ஆட்கொள்ளுகைக்காகவேயாம்; |
| பார்த்திடில் | ஆராய்ந்து பார்க்குமளவில் |
| மற்று காரணம் இல்லை | இது தவிர வேறொரு காரணமில்லை. |

பார்த்தானறுசமயங்கள் பதைப்ப* இப்பார்முழுதும்
போர்த்தான் புகழ்கொண்டு புன்மையினேனிடைத் தான்புகுந்து*
தீர்த்தானிருவினை தீர்த்தரங்கன் செய்ய தாளிணையோ
டார்த்தான்* இவை யெம்மிராமாநுசன் செய்யு மற்புதமே. 52

(எம்பெருமானாரானவர்)

அறு சமயங்கள் பதைப்ப — (வேதபாஹ்யங்களான) ஆறு தர்சநங்களும் துடிக்கும்படியாக
பார்த்தான் — திருக்கண் செலுத்தினார்
இப்பார் முழுதும் — இப்பூமண்டலம் முழுவதையும்
புகழ் கொண்டு போர்த்தான் — (தமது கீர்த்தியினாலே மூடிவிட்டார்;
புன்மையினேனிடை — நீசனான அடியேன் பக்கலிலே
தான் புகுந்து — தாமாகவே (நிர்ஹேதுகக்ருபையினால்) வந்து புகுந்து
இருவினை தீர்த்தான் — பெரிய பாவங்களை போக்கியருளினார்;
தீர்த்து — பாவங்களைப் போக்கினதுமன்றியில்
அரங்கன் — ஸ்ரீரங்கநாதனுடைய
செய்ய தாள் இணையோடு ஆர்த்தான் — அழகிய திருவடிகளோடே (என்னை) அந்வயிப்பித்தார்:
இவை — ஆகிய இக்காரியங்களெல்லாம்
எம்இராமநுசன் செய்யும் அற்புதம் — எமக்கு ஸ்வாமியான எம்பெருமானார் செய்தருளின ஆச்சரியச்செயல்களாம்.

* * * :—எம்பெருமானாருடைய ஆச்சரியமான சில செயல்களை எடுத்துக்கூறுகின்றார்:—சாக்யர் உலூக்யர் பௌத்தர் சார்வாகர் பாசுபதர் காணாதர் என்றிப்படி சொல்லப்படுகிற புறமதத்தவர்களையெல்லாம் நடுங்கச்செய்தார்; இப்பூமண்டலமெங்கும் தமது திருப்புகழே பரவும்படிசெய்தார்; ஆத்மகுண மொன்றில்லாத என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து என் பாவங்களைப் போக்கி அழகிய மணவாளனுடைய ஸ்ரீ பாதங்களிலே என்னை ஆச்ரயிக்கச் செய்தார்; இப்படியாக எம்பெருமானார் செய்தருளுமவையெல்லாம் மிக அற்புதமானவை. 52

அற்புதன்செம்மை யிராமாநுசன்* என்னையாளவந்த
கற்பகங் கற்றவர்காமுறுசீலன்* கருதரிய
பற்பல்லுயிர்களும் பல்லுலகியாவும் பரனதென்னும்
நற்பொருள்தன்னை* இந்நானிலத்தேவந்து நாட்டினனே. 53

என்னை ஆள வந்த — என்னை ஆட்கொள்வதற்காக அவதரித்த
கற்பகம் — உதாரரும்
கற்றவர் காமுறு சீலன் — ஞானிகள் ஆசைப்படும்படியான சீலகுணத்தையுடையவரும்
அற்புதன் — ஆச்சரிய சேஷ்டிதங்களையுடையவரும்
செம்மை — ருஜுவாயிருக்குந் தன்மை பொருந்தியவருமான
இராமாநுசன் — எம்பெருமானார்,—
கருத அரிய பல் பல் உயிர்களும் — நினைக்கவும் முடியாதபடி எண்ணிறந்திருக்கிற ஆத்மவர்க்கங்களும்
பல் உலகு யாவும் — (அவ்வாத்மாக்களுக்கு இருப்பிடமான) அளவிறந்த எல்லாவுலகங்களும்
பரனது என்னும் நல் பொருள் தன்னை — எம்பெருமானுடைய ஸொத்துக்களாம் என்கிற ஸாரார்த்தத்தை
இ நானிலத்தே — இவ்வுலகத்திலே
வந்து — வந்தவதரித்து
நாட்டினன் — ஸ்தாபித்தருளினார்.

* * * :—எம்பெருமானார் மதாந்தரங்களைக் கண்டித்து நிலைநாட்டியவிஸித்தாந்தம் இன்னதென்கிறார்—சிறந்த ஞானிகளனைவரும் கொண்டாடுதற்குரிய திருக்குணங்களையும் அதிமா

நுஷவ்யாபாரங்களையும் உடையரான எம்பெருமானர் இவ்வுலகில் திருவவதரித்து "ஸகல ப்ராணிகளும் அந்தப்ராணிகளுக்கு இருப்பிடமாயுள்ள ஸகல லோகங்களும் ஸ்ரீமந்நாராயண னுக்கே உரிமைப் பட்டவை" என்கிற பரமார்த்தத்தை நிலைநாட்டியருளினர் என்கை.

உலகு=யாவும்' உலகியாவும்; "யவ்வரினிய்யாம்" என்பது நன்னூல்விதி. 53

நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன* நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது* தென்குருகைவள்ளல்
வாட்டமிலா வண்டமிழ்மறை வாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து* இராமாநுசன் தன்னியல்வுகண்டே. 54

| | | | |
|---|---|---|---|
| மண் உலகில் ஈட்டிய சீலத்து இராமாநுசன் தன் | இப்பூலோகத்தில் மேன்மேலும் திரட்டிக் கொண்ட சீல குணத்தை யுடையரான எம்பெருமானருடைய | வேதம் | வேதங்களானவை |
| இயல்வு கண்டு | ஸ்வபாவத்தை பார்த்து, | களிப்பு உற்றது | (நமக்கு இனி ஒரு குறையுமில்லை யென்று,) செருக்கடைந்தன; |
| நாட்டிய நீச சமயங்கள் மாண்டன | (துஷ்டயுக்திகளாலே) நிலைநிறுத்தப்பட்டிருந்த க்ஷுத்ர மதங்களெல்லாம் ஒழிந்தன; | தென் குருகை வள்ளல் | அழகிய திருக்குருகூரில் அவதரித்த உதாரரான ஆழ்வார் (அருளிச் செய்த) |
| நாரணனை காட்டிய | ஸ்ரீமந்நாராயணனைப் பிரதிபாதித்த | வாட்டம் இலா | ஒரு குறையுமற்ற |
| | | வண் தமிழ் மறை | சிறந்த தமிழ் வேதமான திருவாய்மொழி |
| | | வாழ்ந்தது | வாழ்வு பெற்றது. |

* * * :—சிங்கத்தைக் கனவில் கண்டாலும் ஸாமான்யமிருகங்கள் நசித்தொழியும்; அவற்றைக் கொல்லுவதற்காகச் சிங்கம் ஒரு முயற்சியும் செய்யவேண்டா. அதுபோல, இவ்வுலகில் கிளர்ந்து கிடந்த பாஹ்யகுத்ருஷ்டி மதங்களைத் தொலைப்பதற்காக எம்பெருமானர் ஒரு பிரயத்நமும் எடுத்துக் கொள்ளவில்லை; அவருடைய இயல்வைக் கண்ட காட்சியில்தானே மதாந்தரங்கள் யாவும் மாண்டுபோயின; அவை மாளவே ஸ்ரீமந்நாராயணபரங்களான வேதங்களும் அந்தவேதங்களின் ஸாரமாகிய அருளிச்செயல்களும் பொலிவு பெற்று ஓங்கின—என்றாயிற்று. .... ... .... 54

கண்டவர் சிந்தைகவரும் கடிபொழில் தென்னரங்கன்*
தொண்டர்குலாவு மிராமாநுசனை* தொகையிறந்த
பண்டருவேதங்கள் பார்மேல் நிலவிடப் பார்த்தருளும்
கொண்டலை மேவித்தொழும்* குடியாமெங்கள் கோக்குலமே 55

| | | | |
|---|---|---|---|
| தொகை இறந்த | கணக்கில்லாத | தென் அரங்கன் | தென்னரங்கத்திற்குத் தலைவரான பெரிய பெருமாளுக்கு |
| பண் தரு வேதங்கள் | ஸ்வரப்ரதாநங்களான வேதங்கள் | தொண்டர் | அடிமைப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களால் |
| பார்மேல் | இப்பூமியிலே | குலாவும் | கொண்டாடப்படுபவருமான |
| நிலவிட | ஓங்கி வளரும்படி | இராமாநுசனை | எம்பெருமானரை |
| பார்த்தருளும் | செய்தருளினவரும் | மேவி தொழும் குடி | பொருந்தி ஆச்ரயிக்கிற குலம் |
| கொண்டலை | பரம உதாரரும், | எங்கள் கோக்குலம் ஆம் | எங்களுக்கு ஸ்வாமியாகக் கூடிய குலமாம். |
| கண்டவர் சிந்தை கவரும் | கண்டவர்களின் நெஞ்சைக் கவர்கின்ற | | |
| கடி பொழில் | மணமிக்க சோலைகள் சூழ்ந்த | | |

எம்பெருமானாரை அடிபணிந்து உஜ்ஜீவிக்கும் மஹான்கள் தாம் அடியேனை ஆள் வதற்கு உரியவர்கள் என்றாயிற்று. ஸ்ரீராமாநுஜ பக்தர்களுக்கு அடியேன் தாஸனாயிருப்பேன் என்றவாறு.

இராமாநுசனை மேவித் தொழுங்குடி எங்கள் கோக்குலமாம் —எம்பெருமானாரன்று எமக்கு ஸ்வாமி; அவரை ஆச்ரயிப்பவர்களே எமக்கு ஸ்வாமிகள்.

கோ என்பதற்கு மேன்மையென்றும் பொருள் உண்டாதலால்; எங்கள் கோக்குலம்—எங் களுடைய மேன்மையான குலம் (எப்படிப்பட்டதென்றால்), இராமாநுசனை மேவித் தொழுங் குடியாம்—, என்பதாகவும் உரைக்கலாம். "எங்கள்கோக் குடியே" என்றும் பாடமுண்டு பொருள் ஒன்றே. .... .... .... 55

கோக்குலமன்னரை மூவெழுகால் *ஒரு கூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும் புனிதன்* புவனமெங்கு
மாக்கியகீர்த்தி யிராமாநுசனை யடைந்தபின், என்
வாக்குரையாது* என்மனம் நினையாதினி மற்றொன்றையே. 56

| | | | |
|---|---|---|---|
| கோக்குலம் மன்னரை | க்ஷத்திரிய குலத்து அரசர்களை | புவனம் எங்கும் ஆக்கிய கீர்த்தி | உலகமெங்கும் பரவின புகழை யுடையவருமான |
| மூ ஏழு கால் | இருபத்தொரு தலைமுறையளவும் | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| ஒரு கூர் மழுவால் | கூர்மை பொருந்திய ஒரு மழுவாலே | அடைந்தபின் | ஆச்ரயித்த பின்பு |
| போக்கிய | (பரசுராமாவதாரத்தில்) தொலைத்தருளின | இனி | மேலுள்ள காலமெல்லாம் |
| தேவனை | எம்பெருமானை | மற்று ஒன்றை | வேறு எந்த விஷயத்தையும் |
| போற்றும் | துதிக்கின்ற | என் வாக்கு | எனது வாக்கானது |
| புனிதன் | பரமபரிசுத்தரும், | உரையாது | சொல்லமாட்டாது; |
| | | என் மனம் | எனது மனமும் |
| | | நினையாது | நினைக்கமாட்டாது |

"அடைந்ததற்பின் வாக்குரையாது என்மனம் நினையாது" என்றும் பாடமுண்டாம். 56

மற்றொரு பேறு மதியாது* அரங்கன்மலரடிக்கா
ளுற்றவரேதனக் குற்றவராக் கொள்ளுமுத்தமனை*
நற்றவர் போற்று மிராமாநுசனை இந்நாளிலத்தே
பெற்றனன்* பெற்றபின்மற்றறியேனொருபேதைமையே. 57

| | | | |
|---|---|---|---|
| மற்று ஒருபேறு மதியாது | ப்ரயோஜநாந்தரங்களை கணிசியாமல் | நல் தவர் போற்றும் | ப்ரபந்நர்களாலே புகழப் பட்டவராயு மிருக்கிற |
| அசங்கன் மலர் அடிக்கு | அழகிய மணவாளனுடைய திருவடித் தாமரைகளுக்கு | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| ஆள் உற்றவரே | அடிமைப்பட்டவர்களையே | இ நாளிலத்தே பெற்றனன் | இந்த லோகத்திலே அடியேன் ஆச்ரயிக்கப் பெற்றேன்; |
| தனக்கு உற்றவர் ஆ | தமக்கு ஆத்ம பந்துக்களாக | பெற்றபின் | ஆச்ரயித்த பின்பு |
| கொள்ளும் | திருவுள்ளம்பற்றுகிற | மற்று ஒரு பேதைமை அறியேன் | (வேறு விஷயங்களை விரும்புகை முதலிய) எவ்வித அஜ்ஞாந காரியமும் அறியமாட்டேன். |
| உத்தமனை | உத்தம புருஷராயும் | | |

* * *—"இனி என்வாக்குரையாது, என்மனம் நினையாது மற்றொன்றை" என்று எப் படி நீர் சொல்லக்கூடும்? இருள் தருமா ஞாலத்தில் இருக்கிறீராகையாலே அவிவேகம் வந்து

மூடிக் கொள்ள எத்தனை நாழிகை செல்லும்? என்று சிலர் கூற, எம்பெருமானாரை இந்த லோகத்திலே நான் ஆச்ரயித்தேனான பின்பு இனி யொரு நாளும் அவிவேகியாக ஆகமாட்டேனென்கிறார்.

நல்தவர் போற்றும்—ப்ரபத்தியாகிற நல்ல தபஸ்ஸைக் கைப்பற்றினவர்களாலே போற்றப் படுபவர். 57

பேதையர்வேதப் பொருளிதென் றுன்னி* பிரமநன்றென்
றோதிமற்றெல்லா வுயிருமஃதென் று* உயிர்கள்மெய்விட்
டாதிப்பரனோ டொன்றாமென்று சொல்லுமவ் வல்லலெல்லாம்
வாதில்வென்றான் * எம்மிராமாநுசன் மெய்ம்மதிக்கடலே. 58

| | |
|---|---|
| பேதையர் | (வேதத்தைப் ப்ரமாணமாகக் கொள்ளாத) அவிவேகிகள் |
| இது வேதப் பொருள் என்று உன்னி | 'நாங்கள் சொல்லுகிற இது தான் வேதத்தின் அர்த்தம்' என்று நிரூபித்துக் கொண்டு |
| பிரமம நன்று என்று ஓதி | பரப்ரஹ்மமானது எல்லாவற்றினும் விலக்ஷணம்' என்று சொல்லி |
| மற்று எல்லா உயிரும் அஃது என்று | 'அந்த ப்ரஹ்மந்தவிர மற்ற எல்லா ஜீவராசிகளும் அந்த ப்ரஹ்மமே' என்று சொல்லி |
| உயிர்கள் மெய் விட்டு | ஜீவாத்மாக்கள் தேஹத்தை விட்ட பின்பு' |
| ஆதி பரனோடு ஒன்று ஆம் என்று சொல்லும் அவ் அல்லல் எல்லாம் | ஸர்வகாரண பூதனான பரம புருஷனோடே ஐக்கியத்தை 'படைகின்றன' என்று சொல்லுகிற அந்த கோலாஹலங்களை யெல்லாம் |
| மெய் மதி கடல் | தத்வஜ்ஞானக் கடலாகிய |
| எம்இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| வாதில் வென்றான் | வாதத்தில் நிரஸித்து வெற்றி பெற்றார். |

* * *—எம்பெருமானார் குத்ருஷ்டிகளின் குத்ஸிதமான வாதங்களைக் கண்டித்த படிகளில் ஒருபடியைச் சொல்லி ஈடுபடுகிறார். சில மூர்க்கர்கள் தாங்கள் சொல்லுவதேவேதங்களின் உண்மையான பொருள் என்று கொக்கரித்துக் கொண்டு அபார்த்தங்களைப் பிதற்றுவர்கள். பரப்ரஹ்மம் ஸர்வவிலக்ஷணம்; ஜீவாத்மாக்களெல்லாம் பரப்ரஹ்மத்தில் ஓர் பகுதி ; இப்போது உபாதியினால் வெவ்வேறாகத் தோன்றுகின்றன; அவ்வுபாதி கழிந்தபின் ஜீவர்களெல்லாம் பரப்ரஹ்மத்தோடு ஒற்றுமையை அடைந்து விடுகின்றன—என்று மூர்க்கர் பிதற்றும் பிதற்றல்களை யெல்லாம் தத்வஜ்ஞான நிதியான எம்பெருமானார் வாதத்தில் கண்டித்து உண்மைப் பொருளை ஸ்தாபித்து வெற்றி பெற்றாரென்கிறது.

பிரமம்—ப்ரஹ்மம் என்ற வடசொல்விகாரம். உயிர்கள் மெய்விட்டு ஆதிப்பரனோடு ஒன்றும்—ஜீவாத்மாக்கள்; பரப்ரஹ்மத்தோடு ஐக்கியப்படுவது தான் மோக்ஷம் என்று குத்ருஷ்டிகள் உபபாதிப்பர்கள்; "தத் த்வமஸி" என்றும் "ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி" என்றுமுள்ள வேதவாக்யங்களுக்கு இப்படி அபார்த்தம் பண்ணுவர்கள்.

வென்றான் என்பதை வினைமுற்றாகக் கொள்ளாமல் வினையாலணையும் பெயராகக்கொண்டு வாதில் வென்றவராகிய எம்பெருமானார், மெய்ம்மதிக்கடல்-ஸத்யஜ்ஞாந ஸமுத்ரமாயிருப்பவர் என்று முடிப்பதாக உரைத்தலுமாம். .... .... .... 58

கடலளவாய திசையெட்டினுள்ளும்* கலியிருளே
மிடைதரு காலத்திராமாநுசன்* மிக்கநான்மறையின்
சுடரொளியால் அவ்விருளைத்துரந்திலனேல்* உயிரை
யுடையவன் காரணனென்றறிவாரில்லை யுற்றுணர்ந்தே. 59

| | | | |
|---|---|---|---|
| கடல் அளவு ஆய | நான்கு ஸமுத்ரங்களை எல்லையாகவுடைய | அவ்விருளை தரந்திலன் எல் | அந்த கலிதோஷத்தைப் போக்கியிராமற் போனல் |
| திசைஎட்டினுள்ளும் | எல்லாவிடங்களிலும் | உயிரை உடையவன் நாரணன் என்று | எல்லா ஆத்மாக்களுக்கும் சேஷி ஸ்ரீமந்நாராயணனே என்று |
| கலி இருளே மிடைதரு காலத்து | கலிபுருஷனுகிற அந்தகாரமே நெருங்கிக் கிடந்த காலத்தில் | உற்று உணர்ந்து அறிவார் இல்லை | யாரும் தெரிந்துகொண்டிருக்கமாட்டார்கள். |
| இராமாநுசன் | எம்பெருமானுர் (திருவவதரித்து) | | |
| நால் மறையின் மிக்க சுடர் ஒளியால் | நான்கு வேதங்களின் அளவற்ற தேஜஸ்ஸைக் கொண்டு | | |

* * *—என்னப்பனிராமாநுசன் திருவவதரித்து வேதார்த்தங்களை விளங்கக் காட்டியருளாவிடில் இவ்வுலகமனைத்தும் அஜ்ஞாநமயமாகவே கிடக்கும்; தைவரதீகமாக என்னப்பன் திருவவதரித்து எங்கும் வியாபித்துக்கிடந்த கலிபுருஷனுடைய தோஷங்களைத் தொலைத்து வேதச்சுடர் விளக்கேற்றி அஜ்ஞாநாந்தகாரங்களைப் போக்கடிக்கவே எல்லாரும் ஸ்ரீமந் நாராயணனே ஸர்வசேஷி யென்கிற பரமார்த்தத்தைத் தெரிந்து உய்வு பெறலாயிற்று என்கிறர். 59

மிடைதருதல்—நெருங்கியிருத்தல் ; இடைவிடாது எங்கும் பரவியிருத்தல்.

உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும்* திருவாய்மொழியின்
மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும்* மாமலராள்
புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும்பதிதொறும் புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல்* இராமாநுசனெங் குலக்கொழுந்தே. 60

| | | | |
|---|---|---|---|
| குணம் திகழ் | ஆத்ம குணங்களால் விளங்குபவரும் | திருவாய்மொழியின் மணம் தரு இன் இசை மன்னும் இடம் தொறும் | திருவாய் மொழியினுடைய பரிமளப் மிக்க இனிய இசையுள்ள இடங்களெங்கும் |
| கொண்டல் | (ஔதார்யத்தில்) காள மேகத்தை ஒத்தவரும் | மா மலராள் புணர்ந்த | பிராட்டி நித்யவாஸம் பண்ணுகிற அழகிய மார்பை |
| எம் குலம் கொழுந்து | எங்கள் குலத்துக்குத் தலைவருமான | பொன் மார்பன் பொருந்தும் பதி தொறும்புக்கு நிற்கும் | யுடைய திருமால் எழுந்தருளி யிருக்கிற திவ்ய தேசங்களெங்கும் எழுந்தருளியிருப்பர். |
| இராமாநுசன | எம்பெருமானர் | | |
| (எங்கே எழுந்தருளியிருப்பரென்றல்) | | | |
| உணர்ந்த மெய் ஞானியர் யோகம் தொறும் | கற்றுணர்ந்த தத்வஜ் ஞானிகளுடைய கோஷ்டிகளெங்கும், | | |

* * *—ஞானம் தலையெடுத்த மஹான்களுடைய திரள் எங்கெங்கு இருக்கின்றதோ அங்கெல்லாம் எழுந்தருளியிருப்பவரும், திருவாய்மொழியின்பரமபோக்யமான இசை எங்கெங்கு திகழ்கின்றதோ அங்கெல்லாம் ஸேவைஸாதிப்பவரும், ச்ரிய:பதியான ஸர்வேச்வரன் எங்கெங்கு ஸந்நிதாநம் பண்ணுகிறனே அந்தத் திருப்பதிகளெங்கும் புகுந்து நிற்பவருமான எம்பெருமானர் அஸ்மத்குல கூடஸ்தர் என்றாராயிற்று. ... ... ... 60

கொழுந்துவிட்டோடிப் படரும்வெங்கோள் வினையால்*நிரயத்
தழுந்தியிட்டேனை வந்தாட்கொண்டபின்னும் * அருமுனிவர்
தொழுந்தவத்தோனெம்மிராமாநுசன் தொல்புகழ் சுடர்மிக்
கெழுந்தது* அத்தால்நல்லதிசயங்கண்ட திருநிலமே. 61

| பதம் | பொருள் |
|---|---|
| அரு முனிவர் தொழும் | அருமையான நிஷ்டையை யுடைய மஹான்களாலே ஸேவிக்கப் பெற்றவரா யும் |
| தவத்தோன் | ப்ரபத்தியாகிற தபஸ்ஸை யுடையவராயுமிருக்கிற |
| எம் இராமா நுசன் | ஸ்வாமி எம்பெருமானு ருடைய |
| தொல் புகழ் | நித்யமான கல்யாண குணங் கள், |
| கொழுந்து விட்டு ஓடி படரும் வெம் கோள் வினை யால் | மேன்மேலும் அதிகமாகப் பெருகுகின்ற க்ரூரமாய் ப்ரபலமான துஷ்கர்மத் தாலே |
| நிரயத்து அழு ந்தியிட் டேனை | ஸம்ஸாரமாகிற நரகத்திலே அழுந்திக் கிடந்த என்னை |
| வந்து ஆள் கொண்ட பின்னும் சுடர் மிக்கு எழுந்தது | வந்து ஆட்படுத்திக் கொண்ட பின்பும் ஒளி குன்றாதே முன்னிலும் விசேஷமாக விளங்கா நின்றன; |
| அத்தால் | அதைக் கண்டு |
| இரு நிலம் | விசாலமான இப்பூமண் டலம் |
| நல் அதிசயம் கண்டது. | மிக்க ஆச்சரியங் கொண் டது. |

***எம்பெருமானாருடைய குணங்கள் மஹாபாபியான என்னை ஆட்படுத்திக்கொண்டவளவோடு த்ருப்திபெற்று விடாமல் 'இப்படிப்பட்ட பாபிகள் இன்னும் யாரேனும் கிடைப்பாருண்டோ? கிடைப்பாருண்டோ?' என்று இன்னமும் நாக்கு நீட்டிக்கிளர்ந்து செல்லுகின்றன என்றும் கருத்தாகும்.

.... ... .... 61

இருந்தேனிருவினைப் பாசங்கழற்றி * இன்றுயானிறையும்
வருந்தேனினியெம்மிராமாநுசன்*மன்னுமாமலர்த்தாள்
பொருந்தா நிலையுடைப் புன்மையினோர்க்கொன்றும் நன்மை செய்யா
பெருந்தேவரைப்பரவும்*பெரியோர்தம் கழல்பிடித்தே. 62

| பதம் | பொருள் |
|---|---|
| எம் இராமா நுசன் | ஸ்வாமி எம்பெருமானு ருடைய |
| மன்னு மா தாள் மலர் பொருந் தா நிலை உடை புன்மையி னோர்க்கு | சிறந்த திருவடித்தாமரை களில் சேராத ஸ்வபா வத்தை யுடையவர்களான நீசர்களுக்கு |
| ஒன்றும் நன்மை செய்யா | ஒருவிதமான உபகாரமும் செய்யாத |
| பெரு தேவரை பரவும் | பெரிய பெருமாளை போற்றுகின்ற |
| பெரியோர் தம் | ஆழ்வானுகிற மஹானு டைய |
| கழல் இன்று பிடித்து | திருவடிகளை இன்று ஆச்ரயித்தேனுன பின்பு |
| இருவினை பாசம் கழற்றி இருந் தேன் | புண்ணியம் பாவமென்று இரண்டு வகையான கருமபாசங்களினின்று விடுபட்டவனானேன்; |
| யான் | இப்படி நிர்மலனுகப் பெற்ற அடியேன் |
| இனி இறையும் வருந்தேன் | இனிமேல் கொஞ்சங் கூட வருத்தப்பட மாட்டேன். |

***ஸ்ரீராமாநுஜ பக்தர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே ஸர்வஸ்வதாநம்பண்ணவல்ல பெரிய பெருமாளைப் போற்றுகின்ற கூரத்தாழ்வானை அடைந்து உஜ்ஜீவித்த அடியேனுக்கு இனி ஒரு வருத்தமும் விளையக் காரணமில்லையென்று தம்முடைய க்ருதக்ருத்யத்வத்தைக் கூறினாராயிற்று.

இருவினைப் பாசங்கழற்றி - பாவம்போலே புண்ணியமும் பரகதிக்குப் பிரதிபந்தகம் என்பதை உணர்க. பாவம் இரும்பு விலங்கென்றும்,புண்ணியம் பொன் விலங்கென்றும் சாஸ்திரங்கள் கூறும்.

.... .... ... 62

பிடியைத்தொடரும் களிறென்ன*யானுன்பிறங்கியசீர்
அடியைத் தொடரும்படி நல்கவேண்டும்*அறுசமயச்
செடியைத் தொடரும் மருள்செறிந்தோர் சிதைந்தோட வந்திப்
படியைத்தொடரும்*இராமாநுச மிக்க பண்டிதனே. 63

| | |
|---|---|
| அறு சமயம் செடியை தொடரும் மருள் செறிந்தோர் | பாஹ்யமான ஆறு மதங்களாகிற தூறுகளிலே படிவதற்குக் காரணமான அவிவேகம் நிறைந்த மூடர்கள் |
| சிதைந்து ஓட | பங்கமடைந்து வெருவி ஓடும்படியாக |
| வந்து இப்படியை தொடரும் | இப்பூமியிலே வந்து அவதரித்து (நம்போல்வாரை விஷயீகரிப்பதற்குப்) பின் தொடர்கின்ற |
| மிக்க பண்டிதன் | மஹாபண்டிதரான |
| இராமாநுச | எம்பெருமானாரே', |
| பிடியை தொடரும் களிறு என்ன | யானைப் பேடையைப் பின் பற்றித் திரிகின்ற ஆண் யானைபோல |
| யான் | அடியேன் |
| சீர்பிறங்கியஉன் அடியை தொடரும் படி நல்க வேண்டும் | ஸௌந்தரியம் முதலிய குணங்கள் விளங்குகின்ற தேவரீரது திருவடிகளைப் பின்பற்றும்படி கிருபை செய்தருள வேணும். |

* * * —ஸ்வாமி! யானையானது தன் பேடையினிடத்துப் பெருங்காதல்கொண்டு அதனையே பின்பற்றித் திரிவதுபோல் அடியேன் தேவரீருடைய அழகிய திருவடிகளையே அளவற்ற அபிநிவேசத்தோடு அநுவர்த்தித்துச் செல்லும்படியாக அருள்புரியவேணுமென்று வேண்டினாராயிற்று. 63

.... .... ...

பண்டருமாறன் பசுந்தமிழ்* ஆனந்தம் பாய்மதமாய்
விண்டிடவெங்க ளிராமாநுசமுனிவேழம்* மெய்ம்மை
கொண்டநல்வேதக் கொழுந்தண்டமேந்திக் குவலயத்தே
மண்டிவந்தேன்றது* வாதியர்காளுங்கள் வாழ்வற்றதே. 64

| | |
|---|---|
| எங்கள் இராமாநுச முனி வேழம் | எங்களுக்கு விதேயமான ஸ்ரீராமாநுச முனியாகிற மத்தகஜமானது, |
| மாறன் | நம்மாழ்வார் |
| பண் | இசைகளாலே |
| தரு | அருளிச்செய்த |
| பசுந்தமிழ் ஆநந்தம் | செந்தமிழான திருவாய்மொழியில் விளைந்த ஸந்தோஷம் |
| பாய்மதம் ஆய் விண்டிட | பெருகுமதநீராக ஒழுகப்பெற்று |
| மெய்ம்மை கொண்ட நல் | ஸத்யவாதியான நல்ல வேத |
| வேதம் கொழு தண்டம் ஏந்தி | மாகிற பெரிய தடியைத் தூக்கிக் கொண்டு |
| குவலயத்தே | இப்பூமண்டலத்திலே |
| மண்டி வந்து ஏன்றது | உங்களை நெருக்கிக் கொண்டு வந்து மேலிடாநின்றது; |
| வாதியர்காள் | துர்வாதிகளே! |
| உங்கள் வாழ்வு அற்றது | உங்களுடைய பிழைப்பு போயிற்று. |

* * * :—குத்ஸிதவாதங்கள் பண்ணுகிற துர்வாதிகளே! இனி நீங்கள் பிழைக்க வழியில்லையென்று நிச்சயித்துக் கொள்ளுங்கள்; ஏன்? என்கிறீர்களோ; எம்பெருமானாரென்னும் ஒரு மதயானையானது உங்களைப் புடைப்பதாகப் பெரிய தடியையெடுத்துக்கொண்டு எதிரிட்டு வாரா நின்றது; இதற்குத் தப்பிப்பிழைக்க உங்களாலாகாது -என்கிறார்.

யானைக்கு மதநீர் பெருகுமே; இந்த ஸ்ரீராமாநுஜ கஜராஜனுக்கு எது மதநீர் என்ன; முதலடியிற் கூறுகின்றார். திருவாய்மொழியின் அநுபவத்தாலுண்டான ஆநந்தரஸமே இந்த கஜராஜனுக்கு மதநீர்ப் பெருக்காம். இதனால், எம்பெருமானார் எப்போதும் திருவாய்மொழியை அநுபவித்துக் களிப்புறுவர் என்றதாகிறது. 64

.... ....

வாழ்வற்றது தொல்லைவாதியர்க்கு* என்றும்மறையவர்தம்
தாழ்வற்றது தவம்தாரணிபெற்றது* தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்த குணத்தினர்க்கந்
நாழற்றது* நம்மிராமாநுசன் தந்தஞானத்திலே. 65

| | |
|---|---|
| நம்இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| தந்த ஞானத்தில் | அருளின ஞானத்தினால் |
| தொல்லை வாதியர்க்கு | நெடுநாளாக இருந்த துர்வாதிகளுக்கு |
| வாழ்வு அற்றது | வாழ்ச்சி அற்றுப் போயிற்று; |
| மறையவர் தம் தாழ்வு | வைதிகர்களுடைய குறை |
| என்றும் அற்றது | இனி ஒருநாளும் இல்லாத படியாயிற்று. |
| தாரணி | பூமண்டலமானது |
| தவம் பெற்றது | பாக்கியம் பெற்றது; |
| தத்துவம் நூல் | தத்வபரமானசாஸ்திரங்கள் |
| கூழ் அற்றது | ஸந்தேஹமற நிச்சயமான பொருளைத் தெரிவிப்பவையாயின; |
| குற்றம் எல்லாம் பதித்த குணத்தினர்க்கு | பல்வகைக் குற்றங்களும் நிறைந்த ஸ்வபாவத்தையுடைய ஜனங்களுக்கு |
| அ நாழ் அற்றது | அந்தக் குற்றங்கள் தீர்ந்தன. |

* * *—எம்பெருமானார் இவ்வுலகில் அவதரித்து உபதேசாதி முகத்தாலே உண்டாக்கின தத்துவஞானத்தால் பலித்த அம்சங்கள் எவையென்றால்: துர்வாதிகளுடைய வாழ்வு மாண்டது; வைதிகர்களுக்கு இருந்த ஸங்கடங்கள் அற்றுப்போயின: பூமண்டலம் மஹாபாக்யம் பெற்றது; தத்வ சாஸ்த்ரங்களில் எவ்விதமான ஸந்தேஹமும் உண்டாகாதபடி நிச்சயஞானமே உண்டாயிற்று; பாவிகளின் பாவங்களெல்லாம் தொலைந்துபோயின; ஆகிய இவை எம்பெருமானாரளித்த தத்துவஞானத்தின் பயனாகத் தேறினவை—என்றாராயிற்று.

தொல்லைவாதியர் = வைதிகர்கள் தாம் அநாதியாகவுள்ளவர்; துர்வாதிகளும் அநாதியாக உண்டோவெனில்; பயிருள்ளபோதே தொடங்கிக் களையுமுண்டாவதுபோல, பாஹ்யர் குத்ருஷ்டிகள் என்கிற வாதிகளும் பழையராகவே யுண்டென்க.

தரணி என்ற வடசொல் தாரணியென நீட்டல் விகாரம் பெற்றது. கூழ்-ஸந்தேஹம். நாழ்-குற்றம். .... .... .... 65

ஞானம்கனிந்த நலங்கொண்டு*நாடொறும் நைபவர்க்கு
வானங்கொடுப்பது மாதவன் *வல்வினையேன்மனத்தில்
ஈனங்கடிந்த விராமாநுசன் தன்னையெய்தினர்க்கு அத்
தானங்கொடுப்பது*தன்தகவென்னும் சரண்கொடுத்தே. 66

| | |
|---|---|
| மாதவன் | திருமால் |
| வானம் கொடுப்பது | மோக்ஷம் அளிப்பது |
| (எப்படிப்பட்டவர்களுக்கென்றால்) | |
| ஞானம் கனிந்த நலம்கொண்டு நாள்தொறும் நைபவர்க்கு | ஞானம் பக்திரூபமாகப் பரிபக்வமாகி அந்த பக்தியினால் நித்யம் உருகுகிறவர்களுக்கேயாம்; |
| வல் வினையேன் மனத்தில் ஈனம் கடிந்த இராமாநுசன் | மஹாபாபியான எனது ஹ்ருதயத்திலிருந்த கல்மஷங்களைப் போக்கடித்த எம்பெருமானார் |
| தன்னை எய்தினர்க்கு | தம்மைப் பற்றினவர்களுக்கு |
| அத்தானம் கொடுப்பது | அந்த மோக்ஷ ஸ்தானத்தை அளிப்பது |
| (எவ்விதமாகவென்றால், | |
| தன் தகவு என்னும் சரண் கொடுத்து | தம்முடைய க்ருபையாகிற ஸாதனத்தை (அவர்களுக்குக் கைம்முதலாகக்) கொடுத்து. [தமது திவ்ய க்ருபையாலே.] |

* * *:—அடியார்களுக்கு மோக்ஷமளிக்கிற அதிகாரம் எம்பெருமானுக்குமுண்டு, எம்பெருமானார்க்குமுண்டு. எம்பெருமான் அளிப்பது மிகவும் ச்ரமப்படுத்தியே; எம்பெருமானார் அளிப்பது கேவலம் தம்முடைய திருவருளாலே என்கிறார் இதில்.

ஞானமானது நன்றாகக் கனிந்து அது பக்தி, பரபக்தி, பரமபக்தி என்னும்படியான அவஸ்தைகளையடைந்து, அதனால் இந்த ஸம்ஸாரத்தில் க்ஷணகால மிருப்பதும் அஸஹ்யமாய் ஆழ்வார்களைப்போல "ஒரு பகலாயிரமூழியாலோ'' என்று துடிப்பவர்களுக்குத்தான் எம்பெரு

மான் முக்தியளிப்பது; எம்பெருமானாரோ வென்னில் *க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யாராகையாலே அடியார்களிடத்தில் எவ்விதமான க்லேசத்தையும் எதிர்பாராமல் தமது திருவருளைக்கொண்டே அவர்களைக் கரையேற்றுவர் என்றதாயிற்று.

வல்வினையேன் மனத்திலீனங்கடிந்த என்பதற்கு—மாதவனை அடிபணிந்து வருந்துகையாகிற ஈனத்தை எனக்குத் தவிர்த்த எம்பெருமானார் என்று உரைக்கவுமாம். 66

சரணமடைந்த தருமனுக்கா*பண்டுநூற்றுவரை
மரணமடைவித்தமாயவன்*தன்னை வணங்கவைத்த
கரணமிவையுமக்கன்றென் றிராமாநுச னுயிர்கட்கு
அரணங்கமைத்திலனேல்*அரணார்மற்றிவ் வாருயிர்க்கே. 67

| | |
|---|---|
| சரணம் அடைந்ததருமனுக்குஆ | தன்னைச் சரணம் பற்றின தர்ம புத்ரருக்காக |
| பண்டு | முற்காலத்திலே |
| நூற்றுவரை | துரியோதனன் முதலிய நூறு பேர்களை |
| மரணம் அடைவித்த மாயவன் | சாகும்படி செய்த எம்பெருமான் |
| தன்னை வணங்க வைத்த கரணம் இவை | தன்னை வழிபடுவதற்காகவே ஏற்படுத்தி வைத்த இந்திரியங்களாம் இவை; |
| உமக்கு அன்று | உங்களுக்கு உரிமைப பட்டவையல்ல; |
| என்று | என்று இவ்வாறாக உபதேசித்து |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| உயிர்கட்கு | ஆத்மாக்களுக்கு |
| அரண் அமைத்திலன் எல் | ரக்ஷையைக் கற்பித்திலராகில் |
| இ ஆர் உயிர்க்கு | இந்த அருமை ஆத்மாக்களுக்கு |
| மற்றுஅரண் ஆர் | வேறு ரக்ஷகராவார் ஆர்? (ஆருமில்லை.) |

ஆரெனக்கின்று நிகர்சொல்லில்*மாயனன்றைவர்தெய்வத்
தேரினில்செப்பிய கீதையின்செம்மை*பொருள்தெரியப்
பாரினில்சொன்ன விராமாநுசனைப் பணியும்நல்லோர்
சீரினில்சென்றுபணிந்தது*என்னாவியும் சிந்தையுமே. 68

| | |
|---|---|
| மாயன் | ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடைய எம்பெருமான் |
| அன்று | முற்காலத்தில் |
| ஐவர் | பஞ்சபாண்டவர்களுடைய |
| தெய்வம் தேரினில் | தெய்வத்தன்மை பொருந்திய தேரின்மீது (இருந்துகொண்டு) |
| செப்பிய | அருளிச் செய்த |
| கீதையின் | பகவத் கீதையினுடைய |
| செம்மை பொருள் | ஸ்வரஸமான அர்த்தத்தை |
| தெரிய | (அனைவரும் எளிதாகத்) தெரிந்து கொள்ளும்படி |
| பாரினில் | இப்பூமியிலே |
| சொன்ன | (கீதா பாஷ்ய முகத்தாலே) அருளிச் செய்த |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| பணியும் | ஆச்ரயித்திருக்கிற |
| நல்லோர் | விலக்ஷண புருஷர்களுடைய |
| சீரினில் | கல்யாண குணங்களிலே |
| என் ஆவியும் சிந்தையும் | எனது ஆத்மாவும் மநஸ்ஸும் |
| சென்று பணிந்தது | சென்று சேர்ந்துவிட்டன. |
| சொல்லில் | சொல்லுமளவில் |
| இன்று | இக்காலத்தில் |
| எனக்குஆர் நிகர் | எனக்கு ஆர் ஒப்பாவார்? |

சிந்தையினோடு கரணங்கள்யாவும் சிதைந்து*முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண்டு*அவையென்றனக் கன்றருளால்
தந்தவரங்கனும் தன்சரண்தந்திலன் தானதுதந்து*
எந்தையிராமாநுசன் வந்தெடுத்தனனின்றென்னையே. 69

| | |
|---|---|
| முன் நாள் | ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் |
| சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து | சிந்தையும் இந்திரியங்களுமெல்லாம் அழிந்து |
| அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு | உபஸம்ஹாரத்தை யடைந்து அசேதநப்ராயமாயிருப்பதைப் பார்த்து |
| என் தனக்கு | (அப்படி அசேதந ப்ராயராய்க் கிடந்தவர்களில் ஒருவனான) எனக்கு |
| அவை | அந்த கரண களேபரங்களை |
| அன்று | அக்காலத்தில் |
| அருளால் தந்த அரங்கனும் | க்ருபையாலே உண்டாக்கின எம்பெருமானும் |
| தன் சரண் தந்திலன் | தனது திருவடிகளைக் காட்டிக் கொடுத்து உஜ்ஜீவிப்பிக்கவில்லை. |
| | (அக்குறை நீங்க) |
| எந்தை இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| தான் வந்து | தாமாகவே வந்து |
| அது தந்து | அந்தத் திருவடிகளைத் தந்தருளி |
| இன்று என்னை எடுத்தனன் | இன்று என்னை ஸம்ஸாரத்தில் நின்றும் உத்தரிப்பித்தார். |

என்னையும் பார்த்தென்னியல்வையும்பார்த்து*எண்ணில் பல்குணத்த
உன்னையும்பார்க்கில் அருள்செய்வதேநலம்*அன்றியென்பால்
பின்னையும் பார்க்கில் நலமுளதேயுன் பெருங்கருணை
தன்னையென்பார்ப்பர்* இராமாநுசா உன்னைச் சார்ந்தவரே. 70

| | |
|---|---|
| இராமாநுசன் | எம்பெருமானாரே! |
| என்னையும் பார்த்து | (ஒரு குணமுமில்லாமல் குற்றமே நிறைந்திருக்கிற) என்னையும் நோக்கி |
| என் இயல்வையும் பார்த்து | (இனி மேலும் எவ்வித நன்மையும் ஸம்பாதித்துக் கொள்ள முடியாமலிருக்கிற) என்னுடைய தன்மையையும் நோக்கி |
| எண் இல் பல் குணத்த உன்னையும்பார்க்கில் | எண்ணிறந்த பல திருக்குணங்களை யுடைய தேவரீரையும் நோக்குமளவில |
| அருள்செய்வதே நலம் | (இப்போது போல எப்போதும்) அருள்செய்திருப்பதே நல்லது; |
| அன்றி | இது வொழிய |
| பின்னையும்பார்க்கில் | மேலும் ஆராயுமளவில் |
| என் பால் நலம் உளதே | என்னிடத்தில் ஏதாவது நன்மையுண்டோ? (சிறிதும் இல்லை) |
| | (நன்மையொன்றுமில்லாவிடில் நாம் அருள் செய்யலாகாதென்று திருவுள்ளம் பற்றினால்) |
| உன்னைசார்ந்தவர் | தேவரீரை ஆச்ரயித்தவர்கள |
| உன்பெருகருணை தன்னை என் பார்ப்பர் | தேவரீருடைய கிருபையைப்பற்றி என்ன நினைப்பர்கள்?) இளப்பமாக நினையார்களோ.) |

சார்ந்ததென் சிந்தையுன் தாளிணைக்கீழ்* அன்புதான் மிகவும்
கூர்ந்ததத் தாமரைத்தாள்களுக்கு*உன்தன் குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினை நீ செய்வினையதனால்
பேர்ந்தது*வண்மை யிராமாநுசா! எம்பெருந்தகையே. 71

| | |
|---|---|
| வண்மை | ஔதார்யமுடையரும் |
| எம் | எமக்கு ஸ்வாமியும் |
| பெரு தகை | பெருந்தன்மை யுடையருமான |
| இராமாநுசா | எம்பெருமானாரே! |
| என் சிந்தை | எனது நெஞ்சு |
| உன் தாள் இணை கீழ் சார்ந்தது | தேவரீருடைய உபயபாதங்களின் கீழ் அமர்ந்து விட்டது; |
| அன்புதான் | பக்தியும் |
| அத் தாமரை தாள்களுக்கு | அந்தத் திருவடித் தாமரைகள் விஷயத்திலேயே |

| | |
|---|---|
| மிகவும் கூர்ந்தது | மிகவும் அதிகரித்தது. |
| என் செய்கை | எனது செயலும் |
| உன் தன் குணங்களுக்கே தீர்ந்தது | தேவரீருடைய திருக்குணங்களுக்கே அற்றுத் தீர்ந்தது ; |
| முன் செய் வினை | முன்னே செய்த பாவங்களெல்லாம் |
| நீ செய் வினை அதனால் பேர்ந்தது | தேவரீர் செய்தருளின (கடாக்ஷமாகிற) காரியத்தாலே தொலைந்து போயின. |

கைத்தனன்தீய சமயக்கலகரை* காசினிக்கே
உய்த்தனன்தூய மறைநெறிதன்னை* என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போ டிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை* இராமாநுசன்மிக்க வண்மைசெய்தே. 72

| | |
|---|---|
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| மிக்க வண்மை செய்து | தமது ஔதார்ய குணத்தை அதிகமாகக் காட்டி, |
| தீய சமயம் கலகரை | தீய மதங்களி லிருந்து கொண்டு கலஹஞ் செய்கிறவர்களை |
| கைத்தனன் | ஒழித்துவிட்டார் ; |
| தூய | பரிசுத்தமான |
| மறை நெறி தன்னை | வேதமார்க்கத்தை |
| காசினிக்கு உய்த்தனன் | பூமியிலே ஸ்தாபித்தருளினார் ; |
| என்று உன்னி | என்று அநுஸந்தித்து |
| உள்ளம் நெய்த்து | நெஞ்சு கனிந்து |
| அவ்வன்போடு இருந்து | அந்த ப்ரீதியோடே கூடியிருந்து |
| ஏத்தும் | (அவரை) ஸ்தோத்ரம் பண்ணுகிற |
| நிறை புகழோருடனே | புகழ் நிறைந்த மஹான்களோடே |
| என்னை வைத்தனன் | (என்னையும் ஒருவனாக எண்ணும்படி) என்னை வைத்தருளினார். |

நிறைபுகழோருடனே வைத்தனன் :—அஸத்துக்களோடே பழகிக்கிடந்த என்னை ஸத்துக்களோடே கூட்டி வைத்தார் என்னவுமாம். .... ... 72

வண்மையினாலும் தன்மாதகவாலும்* மதிபுரையும்
தண்மையினாலு மித்தாரணியோர்கட்கு* தான்சரணாய்
உண்மைநன்ஞான முரைத்தவிராமாநுசனையுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை* மற்றோர்நிலை தேர்ந்திடிலே. 73

| | |
|---|---|
| தன் வண்மையினாலும் | தம்முடைய ஔதார்ய குணத்தாலும் |
| மா தகவாலும் | பரம க்ருபையாலும் |
| மதி புரையும் தண்மையினாலும் | சந்திரனையொத்த திருவுள்ளக் குளிர்ச்சியாலும் |
| இத்தாரணியோர்கட்கு | இப்பூமியிலுள்ளவர்களுக்கு |
| தான் சரண் ஆய் | தாமே ரக்ஷகராய்க் கொண்டு |
| உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை | யதார்த்தமாய் விலக்ஷணமான ஞானத்தை உபதேசிக்கிற எம்பெருமானாரை |
| உன்னும் திண்மை அல்லால் | சிந்திப்பதாகிற அத்யவஸாய மொன்று தவிர |
| தேர்ந்திடில் | ஆராயுமளவில் |
| எனக்கு மற்று ஓர் நிலை இல்லை | அடியேனுக்கு வேறொரு அத்யவஸாய மில்லை. |

தேரார்மறையின் திறமென்று* மாயவன் தீயவரைக்
கூராழிகொண்டு குறைப்பது* கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம் மிராமாநுசனவ்வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது* அப்போதொரு சிந்தைசெய்தே. 74

| மறையின் திறம் தேறார் என்று | (இப்பாவிகள்) வேதஞ் சொல்லுகிற வழியை நிரூபித்தறிகிறதில்லையென்று |
|---|---|
| தீயவரை | பாவிகளை |
| மாயவன் | எம்பெருமான் |
| குறைப்பது | தண்டிப்பது |
| கூர் ஆழி கொண்டு | கூர்மையான தனது திருவாழியாலே ; |
| கொண்டல் அனைய வண்மை | மேகம்போன்ற ஔதார்ய குண முடையவரும் |
| ஏர் ஆர் குணத்து | (மற்றும்) பல நல்லகுணங்களுடையவருமான |
| எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானுர் |
| அ எழில் மறையில் சேராதவரை சிதைப்பது | அந்த சிறந்த வேதத்தில் அந்வயியாதவர்களை பங்கப்படுத்துவது (எப்படியென்ருல்) |
| அப்போது ஒரு சிந்தை செய்து | அப்போதப்போது ஒவ்வொரு யுக்தியைக் கொண்டாம். |

* * *:—எம்பெருமான் தனது ஆஜ்ஞாரூபமான வேதங்களின் கட்டளைப்படி நடவாத கொடியவர்களைத் தனது திருவாழியைக் கொண்டு த்வம்ஸம் பண்ணிவிடுவன்; எம்பெருமானுரோவென்னில் அவ்வளவு ஆயாஸம் எடுத்துக்கொள்வதில்லை; வேதங்களை அடியோடு ஒப்புக்கொள்ளாத பாஹ்யர்களையும், வேதங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டு அவற்றில் அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளையும் வாதப்போரில் அப்போதப்போது திருவுள்ளத்தில் ஸ்புரிக்கின்ற நல்லயுக்திகளைக்கொண்டு கண்டித்து விடுவர் என்கை. .... 74

செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும்* திருவரங்கர்
கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி* நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னை விடேனென்றிருக்கிலும் நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து* இராமாநுசாவென்னை முற்றுநின்றே. 75

| செய் தலை | வயல்களில் |
|---|---|
| சங்கம் | சங்குகளானவை |
| செழு முத்தம் | அழகிய முத்துக்களை |
| ஈனும் திரு அரங்கர் | உண்டாக்குமிடமான திருவரங்கமா நகரில் எழுந்தருளியிருக்கும் பெருமாள் |
| கை தலத்து | தமது திருக்கையிலே |
| ஆழியும் சங்கமும் ஏந்தி | திருவாழி திருச்சங்குகளைத் தரித்துக்கொண்டு |
| நம்கண்முகப்பே | நமது கண்ணெதிரில் |
| மொய்த்து | வந்து நெருங்கி |
| அலைத்து | புத்தியைக் கெடுத்து |
| உன்னை விடேன் என்று இருக்கிலும் | உன்னை விடமாட்டேன் என்று இருந்தாலும். |
| இராமாநுசா | எம்பெருமானுரே ! |
| நின் புகழே | தேவரீருடைய திவ்ய குணங்களே |
| என்னை வந்து முற்றும் மொய்த்து நின்று | என் பக்கல் வந்து சூழ்ந்து கொண்டு |
| அலைக்கும் | ஆகர்ஷிக்கின்றன. |

* * *:—எம்பெருமான் தனது விலக்ஷணமான அழகைக் காட்டிக் கொண்டுவந்து என் கண்ணெதிரே நின்ருலும், என்னை விடாதே வலியப்பற்றினுலும் அவனது அழகில் நான் மோஹிக்கப் பெறுவதில்லை ; தேவரீருடைய திருக்குணங்களே என்னை ஈடுபடுத்துகின்றன. பகவத் குணங்களுக்கு நான் ஈடுபடுவதில்லையென்ருராயிற்று. ...

"செய்த் தலைச்சங்கம் செழுமுத்தமீனும்" என்கிற விசேஷணம்-திருவரங்கர் என்பதன் பகுதியாகிய திருவரங்கத்தில் அந்வயிக்கும். திருவரங்கம் எப்படிப்பட்டதென்ருல், முத்துக்களை யுதிர்க்கும் சங்குகள் நிறைந்த வயல்சூழ்ந்தது என்றவாறு. ஈனுதல்-பிரஸவித்தல். 75

நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும்* நிறைவேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்தநாடும் குலவிய பாற்கடலும்*
உன்றனக் கெத்தனை யின்பந்தரு முன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது* இராமாநுசா இவை யீந்தருளே. 76

| | |
|---|---|
| இராமாநுசா | எம்பெருமானரே ! |
| நின்ற வண் கீர்த்தியும் நீள் புனலும்நிறை | நிலைநின்ற பெரும் புகழும் அதிசமான நீர்ப் பெருக்கும் நிறைந்துள்ள |
| வேங்கடம் பொன் குன்றமும் | திருவேங்கடமென்னும் அழகிய திருமலையும் |
| வைகுந்தம் நாடும் | ஸ்ரீ வைகுண்டமாகிய திருநாடும் |
| குலவிய பால் கடலும் | கொண்டாடத்தக்க திருப்பாற்கடலும் |
| உன் தனக்கு | தேவரீருக்கு |
| எத்தனை இன்பம் தரும் | எவ்வளவு ஆநந்தத்தை விளைக்குமோ |
| உன் இணை மலர் தாள் | தேவரீருடைய உபய பாதாரவிந்தங்கள் |
| என் தனக்கும் அது | எனக்கும் அவ்வளவு ஆநந்தத்தை யுண்டாக்கும். |
| இவை | இப்படிப்பட்ட திருவடிகளை |
| ஈந்தருள் | அடியேனுக்குத் தந்தருளவேணும். |

* * *:—கீழ்ப்பாட்டில் அமுதனார் விளக்கிய பரமபக்தியை அறிந்த எம்பெருமானர் மிகவும் உகந்தருளி 'இவர்க்கு நாம் எதைச் செய்வோம்' என்றிருப்பதாகக் கண்ட அமுதனார். ஸ்வாமிந்! அடியேனுக்கு தேவரீர் வேறொன்றும் செய்தருளவேண்டா; அடியேனுக்கு ஸர்வஸ்வமாகிய இந்தத் திருவடித்தாமரைகளைத் தந்தருளவேண்டுமத்தனை யென்கிறார். 76

ஈந்தனனீயாதவின்னருள்* எண்ணில்மறைகுறும்பைப்
பாய்ந்தனனம்மறைப்பல்பொருளால்* இப்படியனைத்தும்
ஏய்ந்தனன் கீர்த்தியினலென்வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன்* வண்மையிராமாநுசற்கென் கருத்தினியே. 77

| | |
|---|---|
| ஈயாத | (இதற்கு முன்பு ஒருவர்க்கும்) அருளாத |
| இன் அருள் | விலக்ஷணமான க்ருபையை |
| ஈந்தனன் | அடியேனுக்குச் செய்தருளினவரும் |
| எண் இல் மறை குறும்பை | எண்ணிறந்த வேதவிரோதிமதங்களை |
| அம்மறை பல் பொருளால் பாய்ந்தனன் | அந்த வேதங்களின் அர்த்தங்களையே கொண்டு கண்டித்தவரும், |
| கீர்த்தியினல் | தமது கீர்த்தியாலே |
| இப்படி அனைத்தும் ஏய்ந்தனன் | இப்பூமியெங்கும் வியாபித்தவரும் |
| என் வினைகளை | எனது கருமங்களை |
| வேர் பறிய காய்ந்தனன் | வேரோடே அறும்படி போக்கினவரும் |
| வண்மை | ஔதார்யமே வடிவு கொண்டவருமான |
| இராமாநுசற்கு | எம்பெருமானர்க்கு |
| இனி என் கருத்து | இன்னமும் (செய்யத்தக்கதாகத்) திருவுள்ளத்தில் ஏதேனுமுண்டோ? |

* * *:—கீழ்ப்பாட்டில் தாம் அபேக்ஷித்தபடியே திருவருளைத் தந்தருளப்பெற்று, க்ருதக்ருத்யராய், அவர் செய்தருளின உபகாரங்களை அநுஸந்தித்து, இவையெல்லாம் செய்தபின்பு இன்னமும் செய்தருள்வதாகத் திருவுள்ளம்பற்றியிருப்பது எதுவோ என்கிறார்.

மறைக்குறும்பாவது—வேதத்திற்கு மாறாகச்சொல்லும் தப்புப் பொருள்கள். ஈந்தனன், பாய்ந்தனன், ஏய்ந்தனன், காய்ந்தனன் என்பவற்றை வினைமுற்றாகவே கொண்டு உரைத்தலுமாம். 77

... .... ....

கருத்தில்புகுந்துள்ளில்கள்ளங்கழற்றி* கருதரிய
வருத்தத்தினல் மிகவஞ்சித்து* நீயிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்கியபின் என்னெஞ்சில்
பொருத்தப்படாது* எம்மிராமாநுச! மற்றோர் பொய்ப்பொருளே. 78

| | |
|---|---|
| எம் இராமாநுச | எம்பெருமானரே ! |
| நீ | தேவரீர் |
| கருத அரிய வருத்தத்தினல் மிக வஞ்சித்து | நெஞ்சால் நினைக்க முடியாத பரிச்ரமங்கள் பட்டு என்னை நன்றாக ஏமாத்தி |

கருத்தில் புகுந்து — (எனது) நெஞ்சிலே வந்து புகுந்து
உள்ளில் கள்ளம் கழற்றி — உள்ளேயிருந்த ஆத்மாபஹார தோஷத்தைப் போக்கி
திருத்தி — சிக்ஷித்து
இந்த மண் அகத்தே — இந்த லோகத்திலே
திருமகள் கேள்வனுக்கு ஆக்கிய பின் — திருமாலுக்கு ஆளாம்படி பண்ணின பின்பு
மற்று ஓர் பொய்ப்பொருள் — (இதற்கு மாறான) வேறு எந்த தப்புவிஷயமும்
என் நெஞ்சில் — என் மனத்தில்
பொருந்தப்படாது — பொருந்தமாட்டாது.

* * *—எம்பெருமானார் தம்மைத் திருத்துகைக்காகப் பட்டபாடுகளை எடுத்துச் சொல்லி, இப்படி என்னைத் திருத்தி தேவரீருக்கு உத்தேச்யமான விஷயத்திலே ஆட்படுத்தின பின்பு இனி வேறு எந்த விஷயமும் என்னெஞ்சுக்கு இசையமாட்டாதென்கிறார். 78

பொய்யைச்சுரக்கும் பொருளைத்துரந்து* இந்தப்பூதலத்தே
மெய்யைப் புரக்குமிராமாநுசன்நிற்க* வேறுநம்மை
உய்யக்கொள்ள வல்லதெய்வமிங்கியாதென் றுலர்ந்துஅவமே
ஐயப்படா நிற்பர்* வையத்துள்ளோர் நல்லறிவிழந்தே. 78

பொய்யை சுரக்கும் பொருளை துரந்து — பொய்யான விஷயத்தையே மேன்மேலும் வெளிப்படுத்துகிற (புற மதத்தவர்களின்) அர்த்தங்களைக் கண்டித்து
இந்த பூதலத்தே — இப்பூமியிலே
மெய்யை புரக்கும் — ஸத்யத்தை ரக்ஷிக்கிற
இராமாநுசன் — எம்பெருமானார்
நிற்க — எழுந்தருளியிருக்கும் போது
(இவரைக் கணிசியாமல்)
வையத்து உள்ளோர் — இப்பூமியிலுள்ளவர்கள்
நம்மை உய்யக் கொள்ளவல்ல — 'நம்மை உஜ்ஜீவிக்கச் செய்யக் கூடிய
வேறு தெய்வம் இங்கு யாது என்று — வேறு ஏதாவது தேவதை இவ்வுலகில் உண்டோ?' என்று (விசாரித்துக் கொண்டு)
உலர்ந்து — மனவருத்தத்தாலே உடம்பு உலர்ந்து
நல் அறிவு இழந்து — (எம்பெருமானார் திருவடிகளே சரணம் என் திருக்கையாகிற) நல்ல ஞானம் பெறாமல்
அவமே — வீணாக
ஐயம் படா நிற்பர் — ஸம்சயப்படா நின்றார்கள். ஐயோ!

பொய்யைச் சுரக்கும் பொருளென்றது—பொய் தவிர வேறில்லாத அர்த்தம் என்றபடி. 'ஸர்வம் அஸத்யம்' என்கிறவர்களாகையாலே அஸத்யமயம். மெய்யைப்புரக்கு மிராமாநுசன்= "யதார்த்தம் ஸர்வவிஜ்ஞாநம்" என்று ஸ்தாபித்தருளினவர். புரத்தல்—காப்பாற்றுதல்.

நல்லார்பரவு மிராமாநுசன்* திருநாமம் நம்ப
வல்லார்திறத்தை மறவாதவர்கள் யவர்*அவர்க்கே
எல்லாவிடத்திலு மென்றுமெப் போதிலுமெத்தொழும்பும்*
சொல்லால்மனத்தால் கருமத்தினுல் செய்வன் சோர்வின்றியே 80

நல்லார் பரவும் இராமாநுசன் — ஸத்துக்களாலே கொண்டாடப்படுகிற எம்பெருமானாருடைய
திரு நாமம் — திருநாமத்தை
நம்ப வல்லார் திறத்தை — (தங்களுக்குத் தஞ்சமாக) நம்பியிருக்க வல்லவர்களுடைய படிகளை
மறவாதவர்கள் எவர் — மறவாமல் எப்போதும் சிந்திப்பவர்கள் யாரோ,
அவர்க்கே — அப்படிப்பட்ட ஸ்ரீராமாநுஜ பக்தபக்தர்களுக்கே
எல்லா இடத்திலும் — ஸகல தேசங்களிலும்
என்றும் — ஸகல அவஸ்தைகளிலும்

| | |
|---|---|
| எப்போதிலும் | ஸகல காலங்களிலும் |
| எத்தொழும்பும் | ஸகலவித கைங்கரியங்களையும் |
| சொல்லால் மனத்தால் கருமத்தினல் | மன மொழி மெய்களென்னும் த்ரிகாணங்களாலும் |
| சோர்வு இன்றி செய்வன் | பிரியாதே யிருந்து செய்வேன். |

* * *:—தம்முடைய நிலைநின்ற நிஷ்டையைப் பேசுகிருர் இதில். ஸத்துக்களனைவரும் கொண்டாடும்படியான எம்பெருமானருடைய திருநாமங்களையே தங்களுக்குத் தஞ்சமாக நம்பியிருக்கிற மஹான்களையே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீராமாநுஜ பக்தபக்தர்களுக்கே அடியேன் * ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமைகள் செய்யக்கடவே னென்றுராயிற்று. தொழும்பு—அடிமை. .... .... .... 80

சோர்வின்றியுன்றன் துணையடிக்கீழ்* தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்ற வெனக்கு* அரங்கன்செய்ய தாளிணைகள்
பேர்வின்றியின்று பெறுத்து மிராமாநுச வினியுன்
சீரொன்றிய கருணைக்கு* இல்லைமாறு தெரிவுறிலே. 81

| | |
|---|---|
| உன் தன் துணை அடி கீழ் | தேவரீருடைய உபய பாதங்களின் கீழே |
| சோர்வு இன்றி தொண்டு பட்டவர் பால் | சோராமல் அடிமைப்பட்டவர்கள் விஷயத்தில் |
| சார்வு இன்றி நின்ற எனக்கு | பொருத்தமில்லாம லிருந்த எனக்கு |
| இன்று | இன்றைத்தினத்தில் |
| அரங்கன் செய்ய தாள் இணைகள் | பெரிய பெருமாளுடைய சிவந்த திருவடியிணைகளை |
| பேர்வு இன்றி பெறுத்தும் இராமாநுசா | ஒருகாலும் விட்டு நீங்காதபடி சிரோ பூஷணமாகத் தந்தருளின எம்பெருமானரே! |
| இனி | இப்படியான பின்பு |
| தெரிவுறில் | ஆராயுமளவில் |
| உன் | தேவரீருடைய |
| சீர் ஒன்றிய கருணைக்கு | சிறந்த திருவருளுக்கு |
| மாறு இல்லை | ஒப்பு இல்லை. |

தெரிவுற்றஞானம் செறியப்பெருது* வெந் தீவினையால்
உருவற்றஞானத் துழல்கின்ற வென்னை* ஒருபொழுதில்
பொருவற்ற கேள்வியனக்கி நின்றுனென்ன புண்ணியனே
தெரிவுற்றகீர்த்தி* இராமாநுசனென்னும் சீர்முகிலே. 82

| | |
|---|---|
| தெரிவு உற்ற ஞானம் செறிய பெருது | தெளிவான ஞானத்தைச் சேரப்பெருமல் |
| வெம் தீ வினையால் | மிகவுங் கொடிதான கருமத்தாலே |
| உரு அற்ற ஞானத்து உழல்கின்ற என்னை | உபயோகமற்ற ஞானத்தையுடையனய் (ஒன்றிலும் நிலையில்லாமல்) திரிகின்ற என்னை |
| ஒரு பொழுதில் | ஒரு க்ஷணகாலத்தில் |
| பொருவு அற்ற கேள்வியன் ஆக்கி நின்றுன் | ஒப்பற்ற பஹுச்ருதனுக ஆக்கியருளினவரும் |
| தெரிவு உற்ற கீர்த்தி | ப்ரஸித்தமான புகழையுடையவரும் |
| சீர் முகில் என்னும் | (ஔதார்யத்தில்) சிறந்த மேகமென்னத் தக்கவருமான |
| இராமாநுசன் | எம்பெருமானர் |
| என்ன புண்ணியனே | என்ன தார்மிகரோ? [ஒப்பற்ற தர்மிஷ்ட ரென்றபடி.] |

சீர்கொண்டு பேரறம்செய்து* நல்வீடு செறிதுமென்னும்
பார்கொண்ட மேன்மையர் கூட்டனல்லேன்* உன்பதயுகமாம்
ஏர்கொண்ட வீட்டை யெளிதினிலெய்துவ னுன்னுடைய
கார்கொண்ட வண்மை* இராமாநுசா! இது கண்டுகொள்ளே. 83

| | |
|---|---|
| இராமாநுசா | எம்பெருமானாரே! |
| சீர் கொண்டு | சமம் தமம் முதலிய குணங்களை யுடையராய் |
| பேர் அறம் செய்து | சிறந்த தருமமாகிய சரணாகதி யோகத்தை யநுஷ்டித்து |
| நல் வீடு செறிதும் என்னும் | பரம புருஷார்த்தமான மோக்ஷத்தை அடைந்திடுவோம் என்றிருக்கிற |
| பார்கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன் | ப்ரஸித்தமான ப்ரபாவத்தையுடைய ப்ரபந்நர்களுடைய கோஷ்டியில் நான் சேர்ந்தவனல்லேன்; |
| உன் பதயுகம் ஆம் | தேவரீருடைய உபயபாதங்களாகிற |
| ஏர் கொண்ட வீட்டை | பரம விலக்ஷணமான மோக்ஷத்தை |
| எளிதினில் எய்துவன் | ஸுலபமாக அடைந்திடுவேன்; |
| கார் கொண்ட | (ஔதார்யத்தில்) மேகத்தை வென்றிருக்கிற |
| உன்னுடைய | தேவரீருடைய |
| வண்மை இது | ஔதார்யம் இப்படிப்பட்டது; |
| கண்டுகொள் | தேவரீரே இதனைக் கண்டு கொள்ளலாம். |

[அடியேன் சொல்ல வேணுமோ?]

* * *:— சரமச்லோகத்திலே கண்ணபிரான் நியமித்தபடியே நாம் சரணாகதியை அநுஷ்டித்து விட்டோமாகையால் நமக்கு மோக்ஷம் கைபுகுந்துவிட்டதேயாமென்று அறுதியிட்டிருக்கும் மஹான்களில் அடியேன் சேர்ந்தவனல்லேன்; அப்படி அடியேன் ஒன்றும் அநுஷ்டிக்கவில்லை. தேவரீருடைய திருவடிகளாகிற மோக்ஷத்தை அடைந்திடத் தடையில்லை யென்கிற மனவுறுதியே அடியேனுக்குள்ளது என்றாராயிற்று. ... .... 83

கண்டுகொண்டே னெம்மிராமாநுசன்றன்னைக் காண்டலுமே* [நோய்
தொண்டுகொண்டே னவன் தொண்டர்பொற்றாளில்* என் தொல்லை வெந்
விண்டுகொண்டேனவன் சீர்வெள்ளவாரியை வாய்மடுத் தின்று
உண்டுகொண்டேன்* இன்னமுற்றனவோதி லுலப்பில்லையே. 84

| | |
|---|---|
| எம் இராமாநுசன் தன்னை | ஸ்வாமி எம்பெருமானாரை |
| இன்று கண்டு கொண்டேன் | இன்று (உள்ளபடி) தெரிந்துகொண்டேன்; |
| காண்டலுமே | இப்படி தெரிந்துகொண்டவளவிலே |
| அவன் தொண்டர் பொன் தாளில் | அவரது பக்தர்களுடைய அழகிய திருவடிகளில் |
| தொண்டுகொண்டேன் | அடிமைப்பட்டேன்; (அதனால்) |
| என் தொல்லை வெம் நோய் | எனது பழைய கொடுவினைகளை |
| விண்டுகொண்டேன் | நீக்கிக்கொண்டேன், |
| அவன் சீர் வெள்ளம் வாரியை | அவருடைய கல்யாண குண ப்ரவாஹமாகிற கடலை |
| வாய் மடுத்து உண்டு கொண்டேன் | வாயார அநுபவிக்கப் பெற்றேன்; |
| இன்னம் உற்றன | இப்படியாக இன்னமும் நான் பெற்ற நன்மைகளை |
| ஓதில் | சொல்லத் தொடங்கினால் |
| உலப்பு இல்லை | (அதுக்கு) ஒரு முடிவு கிடையாது. |

* * *:—இனிமேலும் எம்பெருமானார் திருவருளால் நான் பெறப்போகிற நன்மைகள் அளவற உண்டு; எனினும் இன்றளவும் நான் பெற்ற பேறுகளுக்கு எல்லையுண்டோ வென்றாராயிற்று. ... .... .... 84

ஓதியவேதத்தி னுட்பொருளாய்* அதனுச்சி மிக்க
சோதியை நாத னெனவறியா துழல்கின்ற தொண்டர்*
பேதைமைதீர்த்த விராமாநுசனைத் தொழும் பெரியோர்
பாதமல்லாலென் றன் னுருயிர்க்கு* யாதொன்றும் பற்றில்லையே. 85

| | | | |
|---|---|---|---|
| ஓதிய வேதத்தின் உள் பொருள் ஆய் | அத்யயநம் பண்ணப்படுகிற வேதங்களின் உட்பொருளாயும் | பேதைமை | அவிவேகத்தை |
| அதன் உச்சி மிக்க சோதியை | அந்த வேதங்களின் முடிவாகிய உபநிஷத்துக்களிலே மிகவும் விளங்குபவனுமுள்ள ஸ்ரீமந் நாராயணனை | தீர்த்த | போக்கடித்த |
| | | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| | | தொழும் | ஸேவிக்கின்ற |
| | | பெரியோர் | மஹான்களுடைய |
| | | பாதம் அல்லால் | திருவடிகள் தவிர |
| நாதன் என அறியாது | ஸர்வசேஷியென்று தெரிந்துகொள்ளாமல் | என் தன் ஆர் உயிர்க்கு | எனது அருமையான ஆத்மாவுக்கு |
| உழல்கின்ற தொண்டர் | கண்ட விடங்களிலும் அடிமை செய்து திரிகின்ற பாமரர்களுடைய | யாது ஒன்றும் பற்று இல்லை | வேறு ஏதேனும் புகலிடமில்லை. |

* * *:—கீழ்ப்பாட்டில் "அவன் சீர் வெள்ளவாரியை வாய்மடுத்து உண்டுகொண்டேன்" என்றும் "அவன் தொண்டர் பொற்றாளில் தொண்டு கொண்டேன்' என்றும் சொன்ன இரண்டு விஷயங்களுள் முதற்சொன்ன விஷயமே [அதாவது—ஸ்ரீராமாநுஜ பக்தர்களுக்கு பக்தனயிருப்பதே] எனக்குச் சிறந்த உத்தேச்யமென்கிறார் இதில். வேதத்தின் நுண் பொருள் என்றும் பிரிக்கலாம். .... ... .... 85

பற்றுமனிசரைப்பற்றி* அப்பற்று விடாதவரே
உற்றாரென வுழன்றோடி நையேனினி* ஒள்ளியநூல்
கற்றார்பரவு மிராமாநுசனைக் கருதுமுள்ளம்
பெற்றார்யவர்* அவரெம்மை நின்றாளும் பெரியவரே. 86

| | | | |
|---|---|---|---|
| பற்று மனிசரை பற்றி | உபயோகமற்ற மநுஷ்யர்களைப்பற்றி | ஒள்ளிய நூல் கற்றார் | சிறந்த சாஸ்த்ரங்களைக் கற்றவர்களாலே |
| அப் பற்று விடாது | அந்தப் பற்றுதலை விடாமல் | பரவும் | கொண்டாடப்படுகிற |
| | | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| அவரே உற்றார் என | அவர்களையே உறவினராகக் கொண்டு | கருதும் உள்ளம் பெற்றார் யவர் | அநுசந்திக்கும்படியான நெஞ்சையுடையோர் யாவரோ, |
| உழன்று | அவர்கள் பின்னே அலைந்து | அவர் | அந்த மஹான்களே |
| ஓடி | அவர்களிட்ட காரியங்களைச் செய்ய ஓடி | எம்மை | நம்மை |
| இனி நையேன் | இனிமேல் துவள மாட்டேன்; | நின்று ஆளும் பெரியவர் | சாச்வதமாக அடிமை கொள்ளும் மஹாத்மாக்கள். |

ஒள்ளிய நூல்—"சுடர்மிகு சுருதி" என்றார் ஆழ்வாரும். 86

பெரியவர்பேசிலும் பேதையர் பேசிலும்* தன்குணங்கட்கு
உரியசொல்லென்று முடையவனென்றென்று* உணர்வில் மிக்கோர்
தெரியும்வண்கீர்த்தி யிராமாநுசன் மறை தேர்ந்துலகில்
புரியுநன்ஞானம்* பொருந்தாதவரைப் பொரும் கலியே. 87

| | | | |
|---|---|---|---|
| பெரியவர் பேசிலும் | ஞானசக்திகளால் நிறைந்த மஹான்கள் பேசினாலும் | தன் குணங்கட்கு உரிய சொல் என்றும் உடையவன் என்று என்று | தனது திருக்குணங்களுக்கு ஏற்ற சொற்களை எப்போதும் உடையவனென்று பலகாலுஞ் சொல்லி |
| பேதையர் பேசிலும் | ஒன்றுந் தெரியாதவர்கள் பேசினாலும் | | |

| | | | |
|---|---|---|---|
| உணர்வில் மிக்கோர் தெரியும் | சிறந்த ஞானிகள் அநுஸந்திக்கிற | உலகில் | இவ்வுலகத்தில் |
| வண் கீர்த்தி | திவ்யகீர்த்தியை யுடையரான | புரியும் | உபதேசித்தருளின |
| இராமாநுசன் | எம்பெருமானர் | நல் ஞானம் பொருந்தாதவரை | நல்ல ஞானத்தில் சேராதவர்களை |
| மறை தேர்ந்து | வேதங்களை ஆராய்ந்து | கலி பொரும் | கலிபுருஷன் பீடிப்பன். |

* * *:—கீழ்ப்பாட்டிற் கூறின அத்யவஸாயம் எனக்குக் கலியின் கொடுமையினால் ஒரு காலத்தில் மாறிவிடக் கூடுமென்று நினைக்கிறீர்களோ, அப்படி நினைக்கவேண்டா; இராமாநுச னடியார் திறத்தில் கலிபுருஷன் ஒரு கொடுமையும் செய்யமுடியாதவன்; மற்றவர்களைத்தான் கலிபுருஷன் கெடுப்பன். எனது அத்யவஸாயம் நெடுநாளளவும் நிலைநிற்கக் கூடியதே என்றதாயிற்று.

[பெரியவர் பேசிலும் இத்யாதி] இதன் கருத்து யாதெனில்-எம்பெருமானருடைய திருக் குணங்களை மஹாஜ்ஞானிகள் தாம் பேசி முடிக்கவல்லவர்கள்; அற்பஜ்ஞானிகள், நம்மால் பேசமுடியாதென்று பின்வாங்கக் கூடியவர்கள்; என்பதில்லை; "தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் தலைத்தலைச்சிறந்து பூசிப்ப" என்றும் "பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே வாசமலர்த் துழாய் மாலையான்—வடிவு" என்றும் சொன்னாற்போல, பெரியோர் சொன்னாலும் சிறியோர் சொன்னாலும் அவரவர்களுடைய யோக்யதைக்குத் தக்கபடி சொல்லித் துதிக்கத்தகுந்தவர் எம்பெருமானர் என்று பெரியோர்கள் தெரிந்துகொண்டு, நாம் நமது சக்திக்குத் தக்கபடி ஸ்தோத்ரம் பண்ணுவோமென்று துதிக்கின்றார்களென்கை. அப்படி துதிக்கப்படுகின்ற எம் பெருமானர் உபதேசித்த ஞானத்தை அநாதரித்து அவ்வுபதேசத்தின்படி நடவாதவர்களை கலி தோஷத்தினால் வருந்துவார்களென்றதாயிற்று. .... ... 87

கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல்* கலைப்பெருமான்
ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து* அதனால்
வலிமிக்கசீய மிராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்கதென்று* இப்புவனத்தில் வந்தமை போற்றுவனே. 88

| | | | |
|---|---|---|---|
| கலி மிக்க | நிலவளம் மிகுந்த | தன் உள்ளம் தடித்து | தமது திருவுள்ளம் பூரித்து |
| செந்நெல் கழனி | செந்நெல்கழனிகளையுடைய | அதனால் வலி மிக்க | அத்தால் மிடுக்கு அதிகரித்த |
| குறையல் | திருக்குறையலூரில் அவதரித்தவராய் | சீயம் | சிங்கம்போன்ற |
| கலை பெருமான் | சாஸ்த்ரமென்னும்படியான திவ்யப்ரபந்தங்களையருளிச் செய்த பெருமைவாய்ந்த திருமங்கையாழ்வாருடைய | இராமாநுசன் | எம்பெருமானர் |
| மிக்க ஒலி பாடலை | அதிசயித்தஇசையையுடைய பெரிய திருமொழியை | மறை வாதியர் ஆம் புலி மிக்கது என்று இப்புவனத்தில் வந்தமை | வேதத்தில் துர்வாதங்கள் பண்ணுகிற குத்ருஷ்டிகளாகிற புலிகள் அதிகமாய் விட்டனவென்று (அவற்றைத் தண்டிப்பதற்காக) இவ்வுலகில் அவதரித்தபடியை |
| உண்டு | அநுபவித்து | போற்றுவன் | புகழ்ந்திடக் கடவேன். |

கலிமிக்க செந்நெற்கழனி—கலியாவது ஆரவாரம்; உழுவது நடுவது அறுப்பதாய்ச் செல்லுகிற கோலாஹலம். .... ... .... 88

போற்றரும் சீலத்திராமாநுச* நின்புகழ் தெரிந்து
சாற்றுவனேல் அதுதாழ்வதுதீரில்* உன்சீர் தனக்கோர்
ஏற்றமென்றே கொண்டிருக்கிலுமென் மனமேத்தி யன்றி
ஆற்றகில்லாது* இதற்கென்னினைவா யென்றிட் டஞ்சுவனே. 89

| | | | |
|---|---|---|---|
| போற்ற அரு சீலத்து | புகழ்ந்து தலைக்கட்ட முடியாத சீல குணத்தை யுடைய | உன் சீர் தனக்கு ஓர் ஏற்றம் | தேவரீருடைய திருக் குணங்களுக்கு மேன்மையாகும் |
| இராமாநுச | எம்பெருமானாரே;, | என்றே கொண்டு இருக்கினும் | என்று நான் தெரிந்து கொண்டிருந்தாலும் |
| நின் புகழ் | தேவரீருடைய திருக் குணங்களை | என் மனம் | எனது நெஞ்சானது |
| தெரிந்து சாற்றுவனேல் | உணர்ந்து பேசுவானாகில் | ஏத்தி அன்றி | (தேவரீருடைய திருக் குணங்களைப்) புகழ்ந்தல்லது |
| அது | (நீசனாகிய நான்) பேசுகிறது | ஆற்றகில்லாது | தரித்திருக்க மாட்டாது; |
| தாழ்வு | (தேவரீருக்கு) அவத்யமாம்; | இதற்கு | இவ்விஷயத்திலே |
| அது தீரில் | அப்படி நான் பேசுவது தவிர்ந்தால் | என் நினைவாய் என்றிட்டு அஞ்சுவன் | தேவரீர் என்ன நினைக்குமோ வென்று பயப்படுகின்றேன். |

நினையார் பிறவியை நீக்கும்பிரானை* இந்நீணிலத்தே
எனையாள வந்த விராமாநுசனை* இருங்கவிகள்
புனையார் புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்
வனையார்* பிறப்பில் வருந்துவர்மாந்தர் மருள்சுரந்தே. 90

| | | | |
|---|---|---|---|
| பிறவியை நீக்கும் பிரானை | ஸம்ஸாரத்தை யொழிக்கும் உபகாரகராயும் | புனையும் பெரியவர் தாள்களில் | (ஏதோ பாக்கியத்தாலே) பாடல்களைப் பாடுகிற மஹான்களின் திருவடிகளில் |
| இ நீள் நிலத்தே | இப்பெரிய பூமியிலே | பூ தொடையல் வனையார் | புஷ்ப மாலைகளை ஸமர்ப்பியாதவர்களாயுமுள்ள |
| எனை ஆள | என்னை அடிமை கொள்வதற்கே | மாந்தர் | மனிதர்கள் |
| வந்த | அவதரித்தவராயுமுள்ள | மருள் சுரந்து | அஜ்ஞானம் அதிகமாகப் பெற்று |
| இராமாநுசனை | எம்பெருமானாரை | பிறப்பில் வருந்துவர் | ஸம்ஸாரத்திற் கிடந்து துன்பப்படுவர்கள். |
| நினையார் | சிந்தியாதவர்களாயும், | | |
| இரு கவிகள் புனையார் | (அவர் விஷயமாக) நல்ல பாடல்களைப் பாடாதவர்களாயும் | | |

* * *:—கீழ்ப்பாட்டில் அஞ்சுவனே என்ற விவருடைய அச்சம் தீரும்படி குளிரக் கடாக்ஷித்தார் எம்பெருமானார்; அந்தக் கடாக்ஷ வைபவத்தாலே அச்சம் தீரப்பெற்றுத் தேறுதலடைந்து, மநோ வாக்காயங்களில் ஏதேனுமொன்றால் எம்பெருமானார் விஷயத்தில் ஒரு நன்மை செய்து வாழ்ந்துபோகலாமாயிருக்க, பாவிகள் அதுசெய்யாதே பாழாய்ப்போகிறார்களே! என அநுதபிக்கிறார் இதில். .... .... .... 90

மருள் சுரந்தாகம வாதியர்கூறும்* அவப்பொருளாம்
இருள் சுரந்தெய்த்த வுலகிருள்நீங்க* தனனீண்டியசீர்
அருள் சுரந்தெல்லா வுயிர்கட்கும்நாத னரங்கனென்னும்
பொருள் சுரந்தான்* எம்மிராமாநுசன் மிக்கபுண்ணியனே. 91

| | | | |
|---|---|---|---|
| ஆகமம் வாதியர் | (சிவன் சொன்ன) சைவ ஆகமத்தைப் பிரமாணமாகக் கொண்டு வாதம் பண்ணுகிற பாசுபதர்கள் | கூறும் | (சிவனுடைய பரத்துவ விஷயமாகச்) சொல்லுகிற |
| மருள் சுரந்து | அஜ்ஞானம் அதிகரிக்கப் பெற்று | அவம் பொருள் ஆம் இருள் சுரந்து | நீசமான அர்த்தங்களாகிற இருள் மேலிட்டு (அதனால்) |

| | | | |
|---|---|---|---|
| எய்த்த | கெட்டுப்போன | எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும் பொருள் | 'எல்லாப் பிராணிகளுக்கும் ஸ்வாமி ஸ்ரீரங்கநாதனே' என்கிற அர்த்தத்தை |
| உலகு | உலகத்தவர்களுடைய | சுரந்தான் | வெளியிட்டவரான |
| இருள் | அஜ்ஞாநாந்தகாரமானது | எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| நீங்க | போகும்படியாக | மிக்கபுண்ணியன் | சிறந்த புண்யாத்மா. |
| தன் | தம்முடைய | | |
| ஈண்டிய சீர் அருள் சுரந்து | விலக்ஷணமான க்ருபையைப் பெருக்கி | | |

***:—இந்த ஸம்ஸாரிகள் இப்படி விமுகராயிருக்கச் செய்தேயும் இவர்களைத் தம் பேருக உஜ்ஜீவிக்கச் செய்வதற்காக எம்பெருமானார் முயன்றதைச் சிந்தித்து அவரைக் கொண்டாடுகிறார்.

மிக்க புண்ணியனுன எம்மிராமாநுசன்............பொருள் சுரந்தான் என்றும், பொருள் சுரந்தவனுன எம்மிராமாநுசன் மிக்க புண்ணியன் என்றும் இரண்டுபடியும் யோஜிக்கலாம். 91

புண்ணியநோன்பு புரிந்துமிலேன்* அடிபோற்றி செய்யும்
நுண்ணருங்கேள்வி நுவன்றுமிலேன்* செம்மைநூற் புலவர்க்கு
எண்ணருங்கீர்த்தி யிராமாநுச இன்று நீபுகுந்தென்
கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும்* நின்றவிக்காரணம் கட்டுரையே. 92

| | | | |
|---|---|---|---|
| செம்மை நூல் புலவர்க்கு | நல்லசாஸ்த்ரங்களைக் கற்றுக் கவிசொல்ல வல்லவர்களுக்கும் | நுண் அரு கேள்வி | ஸூக்ஷ்மமாய் அருமையான ச்ரவணத்தை |
| எண்ண அரு சீர்த்தி | அளவிட முடியாத கீர்த்தியையுடைய | நுவன்றும் இலேன் | (செய்யவேணுமென்று வாயாலே) சொல்லவுமில்லை. (அப்படியிருக்கும்) |
| இராமாநுச | எம்பெருமானாரே !, | இன்று | இன்று |
| புண்ணியம் நோன்பு புரிந்தும் இலேன் | புண்ணியமான ஒருவிரதத்தையும் அடியேன் அநுஷ்டிக்கவில்லை ; | என் கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் | அடியேனது கண்ணினுள்ளேயும் நெஞ்சினுள்ளேயும் |
| அடி போற்றி செய்யும் | தேவரீருடைய திருவடிகளை வாழ்த்துகைக்கு உறுப்பான | புகுந்து நின்ற இக்காரணம் கட்டுரை | புகுந்து எழுந்தருளியிருப்பதற்குக் காரணமருளிச் செய்யவேணும். |

கட்டப்பொருளை மறைப்பொருளென்று* கயவர் சொல்லும்
பெட்டைக்கெடுக்கும் பிரானல்லனே* என் பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னு மொள்வாளுருவி
வெட்டிக்களைந்த* இராமாநுசனென்னும் மெய்த்தவனே. 93

| | | | |
|---|---|---|---|
| கிட்டி | அடியேன்பக்கல் வந்து நெருங்கி | இராமாநுசன் என்னும் | எம்பெருமானாரென்கிற |
| | | மெய் தவன் | மாமுனிவர் (எப்படிப்பட்டவரென்ருல்) |
| தன் அருள் என்னும் ஒள் வாள் உருவி | தம்முடைய கிருபையாகிற அழகியவாளை உறையில் நின்றும் கழற்றி (அதனுல்) | கயவர் | துஷ்டர்களான குத்ருஷ்டிகள் |
| என் பெருவினையை கிழங்கொடு வெட்டி களைந்த | எனது மஹா பாபங்களை வேரோடே அறுத்தொழித்த | கட்டம்பொருளை மறை பொருள் என்று சொல்லும் பெட்டை | தப்பான அர்த்தங்களை வேதங்களின் அர்த்தமாகக் கொண்டு சொல்லுகிற பிரட்டுப் பேச்சுகளை |
| | | கெடுக்கும் பிரான் அல்லனே | கண்டித்தொழித்தமஹாநுபாவரன்றே. |

கட்டம்—கஷ்டம்; கட்டப்பொருளென்றது கஷ்டப்பட்டுச் சொல்லும் பொருள் என்றபடி; மதாந்தரஸ்தர்கள் சொல்லும் பொருள்கள் அஸ்வரஸமாகையால் க்லிஷ்டங்களாயிருக்குமென்க. கயவர்—நீசர், துஷ்டர். பேட்டு—பிறரை வஞ்சிக்கச் சொல்லும் பொய்ப்பேச்சு. மெய்த்தவன்—தவமாவது சரணாகதியோகம். .... .... 93

தவந்தருஞ் செல்வம் தகவுந்தரும்* சரியாப்பிறவிப்
பவந்தருந் தீவினை பாற்றித்தரும்* பரந்தாமமென்னும்
திவந்தரும் தீதிலி ராமாநுசன்தன்னைச் சார்ந்தவர்கட்கு
உவந்தருந்தேன்* அவன்சீரன்றி யானொன்றுமுள்மகிழ்ந்தே 94

| | |
|---|---|
| தீது இல் இராமாநுசன் | எவ்வகைக் குற்றமும் அற்றவரான எம்பெருமானார் |
| தன்னை சார்ந்தவர்கட்கு | தம்மைவந்து அடைந்தவர்களுக்கு |
| தவம் தரும் | சரணாகதி நிஷ்டையைக் கொடுத்தருள்வர்; |
| செல்வம் தகவும் தரும் | பக்தியாகிற செல்வத்தையும் தமது அருளையும் கொடுத்தருள்வர்; |
| சரியா பிறவி பவம் தரும் தீவினை | நிவர்த்திக்க முடியாத ஜந்ம ஸம்ஸாரங்களை உண்டாக்குகின்ற கொடு வினைகளை |
| பாற்றி தரும் | போக்கடித்தருள்வர்; |
| பரம் தாமம் என்னும் திவம் தரும் | பரமபதமென்று சொல்லப்படுகிற வானுலகத்தை அளிப்பர்; (ஆனபின்பு) |
| யான் | அடியேன் |
| அவன் சீர் அன்றி | அவ்வெம்பெருமானாருடைய திருக்குணங்களைத் தவிர்த்து |
| ஒன்றும் | வேறொன்றையும் |
| உள் மகிழ்ந்து உவந்து அருந்தேன் | மனக் காதலோடே விரும்பி அநுபவிக்க மாட்டேன். |

இப்பாட்டில், தரும் என்னும் பதம் ஐந்து இடங்களில் வருகின்றது. இரண்டாமடியின் முதலிலுள்ள தரும் என்பது மாத்திரம் தீவினைக்கு விசேஷணம்; மற்ற நான்கும் எம்பெருமானார் பக்கல் அந்வயிக்கும் வினைமுற்றுக்கள்.

“சலியாப்பிறவி, சரியாப்பிறவி” என்பன பாடபேதங்கள். பவம்-வடசொல். பரந்தாம-வடசொல். திவம்-வடசொல் விகாரம் .... .... 94

உண்ணின்றுயிர்களுக் குற்றனவேசெய்து* அவர்க்குயவே
பண்ணும் பரனும் பரிவிலனம்படி* பல்லுயிர்க்கும்
விண்ணின் தலைநின்று வீடளிப்பானெம் மிராமாநுசன்
மண்ணின் தலத்துதித்து* உய்மறைநாலும் வளர்த்தனனே. 95

| | |
|---|---|
| உயிர்களுக்கு உள் நின்று | எல்லா ஆத்மாக்களுக்கும் அந்தர்யாமியாயிருந்து கொண்டு |
| உற்றனவே செய்து | ஹிதமானவற்றையே நடத்திக் கொண்டு |
| அவர்க்கு | அவ்வாத்மாக்களுக்கு |
| உயவே பண்ணும் பரனும் | உஜ்ஜீவநத்தையே பண்ணிக் கொண்டிருக்கிற எம்பெருமானும் |
| பரிவு இலன் ஆம் படி | (ஆத்மாக்களிடத்தில் எம்பெருமானாரைப் போல்) ப்ரீதி யுடையவனல்லன் என்ன வேண்டும்படியாக |
| பல் உயிர்க்கும் | ஸகல ஆத்மாக்களுக்கும் |
| வீடு அளிப்பான் | மோக்ஷத்தை அருள்வதற்காக |
| எம் இராமாநுசன் | ஸ்வாமி எம்பெருமானார் |
| விண்ணின் தலை நின்று | ஸ்ரீவைகுண்டத்தில் நின்றும் |
| மண்ணின் தலத்து உதித்து | இப்பூதலத்திலே அவதரித்து |
| உய்மறைநாலும் | எல்லார்க்கும் உஜ்ஜீவந ஹேதுவான நான்கு வேதங்களையும் |
| வளர்த்தனன் | குறைவின்றி வளரச்செய்தருளினார். |

இப்பாட்டின் ஈற்றடியை "மண்ணின் தலத்துதித்து மறைநாலும் வளர்த்தனனே" என்றே அத்யாபகர்கள் ஓதுவர்கள். "நேற்பதினாறே" என்ற கட்டளைக் கலித்துறையின் இலக்கணப்படி பதினாறெழுத்து ஒத்திருந்தாலும் தளைதட்டுகிறபடியாலும், மணவாளமாமுனிகளுரையில் "ஸர்வோஜ்ஜீவந சாஸ்த்ரமான" என்கிற ஒரு வாக்கியம் வ்யர்த்தமாகவேண்டிவருகையாலும் இவ்விரண்டு குறைகட்கும் இடமறும்படி "....உய் மறைநாலும்" என்கிற ப்ராசீநபாடம் கொள்ளத்தக்கது. உய் என்பதற்குப் பொருளாகவே மணவாள மாமுனிகள் "ஸர்வோஜ்ஜீவந சாஸ்த்ரமான" என்கிற வாக்கியமருளிச் செய்தாரென்க. .... .... .... 95

வளரும்பிணிகொண்ட வல்வினையால்* மிக்க நல்வினையில்
கிளருந்துணிவு கிடைத்தறியாது* முடைத் தலையூன்
தளருமளவும் தரித்தும் விழுந்தும் தனிதிரிவேற்கு
உளரெம்மிறைவர்* இராமாநுசன் றன்னை யுற்றவரே. 96

| | | | |
|---|---|---|---|
| வளரும் பிணி கொண்டவல் வினையால் | அளவற்ற துன்பங்களை யுண்டாக்கவல்ல கொடிய கருமங்களாலே | தரித்தும் விழுந் தும் | ஒருவாறு தரித்திருந்தும் (சப்தாதி விஷயங்களிலே) போய் விழுந்தும் |
| மிக்க நல் வினையில் | பரம தர்மமான சரணாகதியில் | தனி திரி வேற்கு | துணையின்றித்திரிகிற எனக்கு |
| கிளரும் துணிவு கிடைத்தறியாது | மஹாவிச்வாஸம் கிடைக்காததனால் | இறைவர் | ஸ்வாமிகள் (யாரென்றால்) |
| முடை தலை ஊன் தளரும் அளவும் | கெட்ட நாற்றங்களுக்கு இருப்பிடமான சரீரம் கட்டுக் குலையும்வரையில் | எம் இராமாநுசன் தன்னை உற்றவர் | நம் எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் |
| | | உளர் | இருக்கிறார்கள். |

தன்னையுற்றாட்செய்யும் தன்மையினோர்* மன்னு தாமரைத்தாள்
தன்னையுற்றாட்செய்ய வென்னையுய்த்தானின்று* தன் தகவால்
தன்னையுற்றாரன்றித் தன்மையுற்றாரில்லை யென்றறிந்து
தன்னையுற்றாரை* இராமாநுசன் குணஞ்சாற்றிடுமே. 97

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசன் | எம்பெருமானாரானவர், | இன்று | இன்றைத் தினத்தில் |
| தன்னை உற்றார் அன்றி தன்னை உற்றாரை குணம் சாற்றிடும் தன்மை உற்றார் இல்லை என்று அறிந்து | தம்மைப் பற்றியிருப்பாருண்டே யொழிய தம்மைப் பற்றி யிருப்பவர்களுடைய குண கீர்த்தனம் பண்ணும் ஸ்வபக்த பக்தர்கள் ஒருவருமில்லையென்று திருவுள்ளம்பற்றி | தன் தகவால் | தமது அருளாலே (என்ன செய்தாரென்றால்) |
| | | தன்னை உற்று ஆள் செய்யும் தன்மையினோர் | தம்மையடைந்து கைங்கரியம் பண்ணும் ஸ்வபாவமுடையரான ஸ்வபக்தர்களுடைய |
| | | மன்னு தாமரை தாள் தன்னை உற்று ஆள் செய்ய | ஒன்றோடொன்று சேர்ந்த திருவடித் தாமரைகளை நான் அடைந்து ஆட்செய்யும் படி |
| என்னை | அடியேனை | உய்த்தான் | வைத்தருளினார். |

* * *—எம்பெருமானார் என்னைத் தம்மிடத்து ஆட்படுத்திக்கொள்ளாமல் தம்மை அடுத்தவர்கள் பக்கல் என்னை ஆட்படுத்தினார். இதற்கு என்ன காரணமென்கிறீர்களோ? எல்லோரும் நம்மையே நேராகவந்து ஆச்ரயிக்கிறார்களே யொழிய நம்மை ஆச்ரயித்தவர்களை ஆச்ரயிப்பார் ஆருமில்லையே; இவ்வமுதனார், நம்மை ஆச்ரயித்தவர்களை ஆச்ரயிக்கிற அதிகாரியாக இருக்கட்டும்— என்று திருவுள்ளம்பற்றிச் செய்தார்.

இப்பாட்டின் அந்வயக்ரமம் சிறிது வருத்தப்படுத்தும்; ஜாகரூகராயிருந்து அந்வயித்துக் கொள்க;—தன்னையுற்றாறன்றித் தன்னையுற்றாரைக் குணம் சாற்றிடுந் தன்மையுற்றாரில்லையென் றறிந்து, இராமாநுசன், தன்னையுற்றாட்செய்யுந் தன்மையினோர் மன்னு தாமரைத்தாள் தன்னை யுற்று ஆட்செய்யத் தன்தகவால் இன்று என்னையுய்த்தான்—என்று அந்வயம்.

சாற்றிடும் என்கிற விசேஷணபதம் பாட்டின் முடிவில் வந்து நின்றது அபூர்வப் பிரயோக மென்பர். என்னையுற்றான் என்று ஓதுவர்கள். .... .... .... 97

இடுமேயினிய சுவர்க்கத்தில்* இன்னம் நரகிலிட்டுச்
சுடுமேயவற்றைத் தொடர்தரு தொல்லை* சுழல்பிறப்பில்
நடுமேயினிநம் மிராமாநுசன் நம்மை நம்வசத்தே
விடுமேசரண மென்றால்* மனமேநையல் மேவுதற்கே. 98

| | |
|---|---|
| நம் இராமாநுசன் | நம் எம்பெருமானார், |
| சரணம் என்றால் | உமது திருவடிகளே சரணமென்று நாம் சொல்லிவிட்டோமானால் |
| இனிய சுவர்க்கத்தில் இடுமே | (சிலர்க்கு) இனிதாகத் தோன்றுகிற ஸ்வர்க்கத்திலே நம்மைக் கொண்டு சேர்த்திடுவரோ? |
| இன்னம் | அல்லது |
| நரகில் இட்டு சுடுமே | நரகத்திலே கொண்டு தள்ளி தஹிக்கச் செய்வரோ? |
| அவற்றை தொடர்தரு | அந்த ஸ்வர்க்க நரகங்களைத் தொடர்ந்து கிடக்கிற |
| தொல்லை சுழல் பிறப்பில் | அநாதியாயும் சுழன்று வருவதாயுமுள்ள ஜன்மத்திலே |
| நடுமே | நிறுத்துவரோ? |
| இனி | மேலுள்ள காலங்களில் |
| நம்மை | நம்மை |
| நம் வசத்தே விடுமே | நாம் போகிற வழியேவிட்டு வைப்பரோ? |
| | (இவை செய்யமாட்டாரான பின்பு) |
| மனமே! | ஓ நெஞ்சே! |
| மேவுதற்கு | பேறுபெறும் விஷயமாக |
| நையல் | நீ கரையவேண்டா. |

98

நையல்—முன்னிலை யெதிர்மறை வினைமுற்று. நையாதே என்றபடி.

தற்கச்சமணரும் சாக்கியப்பேய்களும்* தாழ்சடையோன்
சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும்* நான்மறையும்
நிற்கக்குறும்புசெய் நீசரும்மாண்டனர் நீணிலத்தே
பொற்கற்பகம்* எம்மிராமாநுச முனி போந்தபின்னே 99

| | |
|---|---|
| தற்கம் சமணரும் | தர்க்கம் பண்ணுகிறசமணர்களும் |
| பேய் | பேய்போலே பிடித்த பிடிவிடாதேநிற்கிற |
| சாக்கியர்களும் | பௌத்தர்களும் |
| தாழ் சடையோன் சொல் கற்ற சோம்பரும் | ருத்ரனுடைய சொல்லாகிய சைவாகமத்தைக் கற்ற தாமஸர்களான சைவர்களும் |
| சூனிய வாதரும் | சூந்யவாதிகளும் |
| நால் மறையும் நிற்க | நான்கு வேதங்களும்விளங்கிக்கொண்டிருக்கச் செய்தே |
| குறும்பு செய் நீசரும் | (அவற்றுக்குச் சேராத) அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளும் |
| மாண்டனர் | ஒழிந்தார்கள்; |
| | (எப்போது? என்றால்) |
| பொன் கற்பகம் எம் இராமாநுச முனி | சிறந்த கல்ப வ்ருக்ஷம் போலே உதாரரான ஸ்வாமி எம்பெருமானார் |
| நீள் நிலத்தே போந்த பின் | விசாலமான இப்பூமியிலே திருவவதரித்த பின்பு. |

போந்ததென்னெஞ்சென்னும் பொன்வண்டு* உனதடிப்போதி லொண்சீ
ராந்தெளிதேனுண்டமர்ந்திட வேண்டி* நின்பாலதுவே
ஈந்திடவேண்டு மிராமாநுச இதுவன்றி யொன்றும்
மாந்தகில்லாது* இனிமற்றொன்றுகாட்டி மயக்கிடலே. 100

| | | | |
|---|---|---|---|
| இராமாநுச | எம்பெருமானாரே ! | நின் பால் | தேவரீரிடத்தில் |
| என் நெஞ்சு என்னும் பொன் வண்டு | எனது நெஞ்சாகிற அழகிய வண்டானது | போந்தது | வந்துசேர்ந்தது |
| உனது அடி போதில் | தேவரீருடையதிருவடித் தாமரைகளில் | அதுவே ஈந்திடவேண்டும் | அத்திருக்குணங்களையே அளித்தருளவேணும் ; |
| ஒண் சீர் ஆம் தெளிதேன் உண்டு அமர்ந்திட வேண்டி | அழகிய குணங்களாகிற தேனைப்பருகி நித்ய வாஸம்பண்ண விரும்பி | இது அன்றி ஒன்றும் | இத்திருக்குணங்களைத்தவிர வேறொன்றையும் |
| | | மாந்த கில்லாது | (நெஞ்சு) புஜிக்கமாட்டாது ; |
| | | இனி | இப்படியான பின்பு |
| | | மற்று ஒன்று காட்டி | வேறொரு விஷயத்தைக் காட்டி |
| | | மயக்கிடல் | மயக்கவேண்டா. |

* * *—ஸ்வாமிந்! அடியேனுடைய நெஞ்சு தேவரீருடைய திருக்குணங்களையே எப்போதும் அநுபவிக்கவிருப்பங்கொண்டு மேல்விழுந்து தேவரீரிடம் வந்து சேர்ந்தது. இது இனி வேறொன்றை விரும்பாது; தேவரீரும் இனி இதை ஸம்ஸாரத்தில் போகவொட்டாமல் தேவரீரிடத்திலேயே நிலைநிறுத்திக் கொள்ளவேணும்: என்றாராயிற்று:

தமது நெஞ்சை ஒரு வண்டாக ரூபணம் பண்ணினதற்கு ஏற்ப எம்பெருமானாருடைய திவ்யகுணங்களை மதுவாக ரூபணம் பண்ணினர். இந்த வண்டுக்கு அந்தத் தேன் தவிர வேறொன்றும் ரஸிக்கமாட்டாது.

மயக்கிடல்=முன்னிலை யெதிர்மறை வினைமுற்று. மயக்காதே என்றபடி. 100

மயக்குமிருவினை வல்லியிற்பூண்டு* மதிமயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றியவென்னை* துயரகற்றி
உயக்கொண்டு நல்குமிராமாநுசவென்ற துன்னை யுன்னி
நயக்குமவர்க் கிதிழுக்கென்பர்* நல்லவரென்று நைந்தே 101

| | | | |
|---|---|---|---|
| மயக்கும் | "அஜ்ஞானத்தை விளைக்க வல்ல | நல்கும் | அருள் செய்கின்ற |
| இரு வினை | புண்ய பாபமென்னும் இரு கருமங்களாகிற | இராமாநுச | எம்பெருமானாரே !" |
| வல்லியில் | விலங்கில் | எனறது இது | என்று தேவரீருடைய பாவநத்வத்தைப் பேசுகையாகிற இது |
| பூண்டு | அகப்பட்டுக் கொண்டு | உன்னை உன்னி நைந்து | தேவரீரை அநுஸந்தித்து உருகி |
| மதி மயங்கி | அறிவுகெட்டு | என்றும் நயக்குமவர்க்கு | எப்போதும் ஆசையுடனிருப்பவர்களுக்கு |
| துயக்கும் | ப்ரமிக்கச் செய்கிற | இழுக்கு என்பர் நல்லவர் | தகாதது என்று ஸத்துக்கள் சொல்லுவர்கள். |
| பிறவியில் | ஸம்ஸாரத்திலே | | |
| தோன்றிய என்னை | பிறந்த அடியேனை | | |
| துயர் அகற்றி உய கொண்டு | துக்கங்களைப் போக்கி உஜ்ஜீவிக்கச் செய்து | | |

* * *—எம்பெருமானார்க்கு, பாவநத்வம் என்றும் போக்யத்வம் என்றும் இரண்டு படிகள் உண்டு. பாவநத்வமாவது—பக்தர்களுடைய பாவங்களைப்போக்கிப் பரிசுத்தப்படுத்தல். போக்யத்வமாவது எப்போதும் அநுபவிக்கக் கூடியவராயிருக்கை. இவ்விரண்டில் பாவநத்வத்தை விட போக்யத்வமே சிறந்தது; ஏனென்றால், நம்முடைய பாவங்களைப் போக்கினரென்கிற காரணத்தாலே நாம் அவரைப் பாவநர் என்று அநுஸந்திக்கவேண்டும்; இது ஒரு உபாதியைப் பற்றி வருவது; போக்யத்வத்தை அநுஸந்திப்பதோ இப்படிப்பட்டதல்ல. அது ஸ்வரூபப்ராயுக்தம். ஆகையாலே, பாவநத்வத்தை அநுஸந்திப்பதைவிட போக்யதையை அநுஸந்திப்பதே

சிறந்தது. அப்படியிருக்க இவ்வமுதனர் இப்பிரபந்தத்தில் அடிக்கடி எம்பெருமானருடைய பாவநத்வத்தை அநுஸந்தித்தார்; 'என்னுடைய பாவங்களையெல்லாம் போக்கினர், என்னுடைய குற்றங்களையெல்லாம் நீக்கினர்' என்று அடிக்கடி சொல்லியிருக்கிறர். அப்படி சொன்னதற்கு அநுதாபப்படுகிறர் இப்பாட்டில். போக்யதையில் ஈடுபட்டுப் பேசவேண்டியிருக்க, பாவநத்வத்தில் ஈடுபட்டமை தோற்றப் பேசினது பிசகு என்று பெரியோர்கள் சொல்லுவர்கள் என்றுராயிற்று. 101

.... ... ...

நையும்மன முன்குணங்களையுன்னி* என்னாவிருந்தெம்
ஐயனிராமாநுசனென்றழைக்கும்* அருவினையேன்
கையுந்தொழும் கண்கருதிடுங்காணக் கடல்புடைசூழ்
வையமிதனில்* உன்வண்மையென்பாலென்வளர்ந்ததுவே. 102

| | (எம்பெருமானரே) |
|---|---|
| மனம் | எனது நெஞ்சானது |
| உன் குணங்களை உன்னி | தேவரீருடைய திருக்குணங்களைச் சிந்தித்து |
| நையும் | கரைகின்றது; |
| என் நா | எனது வாக்கானது |
| இருந்து | நிலை நின்று |
| எம் ஐயன் இராமாநுசன் என்று அழைக்கும் | எமக்கு ஸ்வாமியான எம்பெருமானரே! என்று அழைக்கின்றது. |
| அரு வினையேன் | மஹாபாபியான என்னுடைய |
| கையும் | கைகளும் |
| தொழும் | அஞ்ஜலிபண்ணுகின்றன; |
| கண் | கண்களானவை |
| காண கருதிடும் | (தேவரீரை) ஸேவிக்க ஆசைப்படுகின்றன; |
| கடல் புடைசூழ் வையம் இதனில் | சுற்றிலும் கடல் சூழப்பெற்ற இப்பூமண்டலத்தினுள்ளே |
| உன் வண்மை | தேவரீருடைய ஔதார்ய குணம் |
| என் பால் வளர்ந்தது என் | அடியேன் மீது (இவ்விதமாக) வளர்ந்ததற்குக் காரணம் யாதோ? |

வளர்ந்தவெங்கோப மடங்கலொன்றய்* அன்று வாளவுணன்
கிளர்ந்த பொன்னகம் கிழித்தவன்* கீர்த்திப் பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தை யிராமாநுசனென்றன் மெய்வினைநோய்
களைந்து நன்ஞானமளித்தனன்* கையில் கனியென்னவே. 103

| | |
|---|---|
| அன்று | முன்னொருகாலத்தில் |
| வளர்ந்த வெம் கோபம் மடங்கல் ஒன்று ஆய் | கடூரமான கோபம் மேலிடப்பெற்ற ஒரு நரசிங்க மூர்த்தியாகி |
| வாள் அவுணன் | வாளையுடைய ஹிரண்யாஸுரனது |
| கிளர்ந்த பொன் ஆகம் | செருக்கினால் நெறித்திருந்த பொன்போன்ற மார்வை |
| கிழித்தவன் | கிழித்துப்போகட்டவனை எம்பெருமானுடைய |
| கீர்த்தி பயிர் எழுந்து | திருப்புகழ்களாகிற பயிர் வளர்ந்து |
| விளைந்திடும் சிந்தை | விளையப்பெற்ற திருவுள்ளத்தை யுடையரான |
| இராமாநுசன் | எம்பெருமானர் |
| என் தன் மெய் வினை நோய் களைந்து | எனது உடலைப்பற்றியிருக்கிற வினைநோய்களையெல்லாமொழித்து |
| கையில் கனி என்ன | கையிலங்கு நெல்லிக்கனி போலே ஸுலபமாக |
| நல் ஞானம் அளித்தனன் | விலக்ஷணமான ஞானத்தைத் தந்தருளினர். |

கையில்கனியென்னக் கண்ணனைக் காட்டித்தரிலும்*உன்தன்
மெய்யில்பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்* நிரயத்
தொய்யில் கிடக்கிலும் சோதிவிண்சேரிலும் இவ்வருள் நீ
செய்யில்தரிப்பன்* இராமாநுச என்செழுங் கொண்டலே. 104

| | |
|---|---|
| செழு கொண்டல் | (ஔதார்பத்தில்) விலக்ஷணமான மேகம் போன்ற |
| என் இராமாநுச | எம்பெருமானே! (தேவரீர்) |
| கண்ணனை | எம்பெருமானை |
| கையில் கனி என்ன | உள்ளங்கை நெல்லிக்கனி போலே |
| காட்டி தரினும் | காட்டிக்கொடுத்தாலும் |
| உன்தன் மெய்யில் பிறங்கிய சீர் அன்றி யான் வேண்டிலன் | தேவரீருடைய திருமேனியில் விளங்குகிறஸௌந்தரியம் முதலிய குணங்களைத் தவிர வேறொன்றிலும் நான் கண்வைக்கமாட்டேன்; |
| நிரயம் தொய்யில் | ஸம்ஸார நரகக்குழியில் |
| கிடக்கினும் | அழுந்திக் கிடந்தேனாகிலும் |
| சோதி விண் சேரினும் | சோதிமயமான பரமபதத்தை அடைந்தேனாகிலும் |
| இவ் அருள் | (தேவரீருடைய) திருமேனியழகை அநுபவித் திருக்கைக்கு உருப்பான) கிருபையை |
| நீ செய்யில் | தேவரீர் செய்தருளினால் தான் |
| தரிப்பன் | (ஸம்ஸாரத்திலோமோக்ஷத்திலோ) கால்பாவிநிற்பேன். |

நிரயத்தோய்யில்=நிரயமாவது நரகம். இந்த ஸம்ஸாரநிலமே நரகமெனப்படும். தோய்யில்—சேறு. எழனுருபு தொக்கியிருக்கிறது. தோய்யல் என்பாருமுளர் .... .... 104

செழுந்திரைப் பாற்கடல் கண்டுயில்மாயன்* திருவடிக்கீழ்
விழுந்திருப்பார் நெஞ்சில் மேவுநன்ஞானி* நல்வேதியர்கள்
தொழுந்திருப்பாத னிராமாநுசனைத் தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடுமிடம்* அடியேனுக் கிருப்பிடமே. 105

| | |
|---|---|
| செழு திரை பால் கடல் | அழகிய அலைகளையுடைய திருப்பாற்கடலில் |
| கண் துயில் மாயன் | பள்ளிக்கொண்டிராநின்ற ஸர்வேச்வரனுடைய |
| திரு அடி கீழ் | திருவடிகளின் கீழே |
| விழுந்து இருப்பார் | விழுந்துகிடக்கும் மஹான்களுடைய |
| நெஞ்சில் மேவும் | ஹ்ருதயத்திலே பொருந்தியெழுந்தருளியிருக்கிற |
| நல் ஞானி | சிறந்த ஞானியாயும் |
| நல் வேதியர்கள் தொழும் திருபாதன் | நல்ல வைதிகர்களால் ஸேவிக்கப்பட்ட திருவடிகளை யுடையராயு மிருக்கிற |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| தொழும் | ஸேவிக்கின்ற |
| பெரியோர் | மஹாத்மாக்கள் |
| எழுந்து இரைத்து ஆடும் இடம் | உடம்பு இருந்த விடத்தில் இராமல் கிளர்ந்து கோஷித்துக்கொண்டு கூத்தாடும் இடம் |
| அடியேனுக்கு இருப்பு இடம் | அடியேன் வஸிக்குமிடமாகும். |

* * *:—கீழ்ப்பாட்டில் "நிரயத் தொய்யில் கிடக்கினும் சோதிவிண் சேரினும்" என்று ஸம்ஸாரத்தையும் பரமபதத்யையும் வாசியற்றதாகச் சொன்ன அமுதனாரை நோக்கிச் சிலர், 'உலகத்தில்எல்லாரும் ஸம்ஸாரத்தை வெறுத்துப் பரமபதத்தை ஆசைப்படாநிற்க நீர் ஸம்ஸாரத்தையும்பரமபதத்தையும் துன்பமாகக் கருதிப் பேசுகின்றீரே, உமக்கு உத்தேச்யமான ஸ்தானம் எது? சொல்லும்' என்ன; ஸ்ரீராமாநுஜபக்தர்கள் களித்துக் கூத்தாடுகின்ற இடமே எனக்குப் பரமோத்தேச்யமான ஸ்தானம் என்றார். .... .... ... 105

[சாற்றுப் பாசுரங்கள்]

இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்* மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர்* அவைதன்னொடும்வந்
திருப்பிடம் மாயனிராமாநுசன்மனத் தின்றவன்வந்
திருப்பிடம்* என்றனிதயத்துள்ளே தனக்கின்புறவே. 106

மாயனுக்கு — ஸர்வேச்வரனுக்கு
இருப்பு இடம் — வாஸஸ்தானம் (எவையென்றால்)
வைகுந்தம் — பரமபதமும்
வேங்கடம் — திருவேங்கடமலையும்
மாலிருஞ்சோலை என்னும் பொருப்பு இடம் — திருமாலிருஞ் சோலை யென்கிற திருமலையும் (ஆகிய இவையாம்)
என்பர் நல்லோர் — என்று ஸத்துக்கள் சொல்லுவர்கள்.
மாயன் — (இவற்றை இருப்பிடமாக வுடைய) ஸர்வேச்வரன்
அவை தன்னொடும் வந்து இருப்பிடம் — அந்த ஸ்ரீவைகுண்டம் முதலியவற்றோடேகூட வந்து எழுந்தருளியிருப்பது
இராமாநுசன் மனத்து — எம்பெருமானாருடைய திருவுள்ளத்திலேயாம்;
அவன் இன்று வந்து — அவ்வெம்பெருமானார்தாம் இப்போது வந்து
தனக்கு இன்பு உற இருப்பிடம் — தமக்கு ஆநந்தமாக எழுந்தருளி யிருப்பது
என் தன் இதயத்து உள்ளே — அடியேனுடைய ஹ்ருதயத்தினுள்ளேயாம்.

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடியே அமுதனாருடைய எல்லை கடந்த ப்ராவண்யத்தை அறிந்த எம்பெருமானார் 'நம்மேல் இவ்வளவு காதல்கொண்டிருக்கிற இவருடைய நெஞ்சை நாம் விட்டு நீங்கலாகாது' என்று கொண்டு அமுதனாருடைய திருவுள்ளத்தை மிகவும் விரும்பியருள, அதனைக் கண்டு மகிழ்ந்து பேசுகிறார். .... .... .... 106

இன்புற்றசீலத் திராமாநுசா* என்று மெவ்விடத்தும்
என்புற்றநோ யுடல்தோறும் பிறந்திறந்து* எண்ணரிய
துன்புற்று வீயினுஞ்சொல்லுவதொன்றுண் டுன்தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி* என்னையாக்கியங்காட்படுத்தே. 107

இன்பு உற்ற — ஆநந்த பூர்ணரா யெழுந்தருளி யிருக்கிற
சீலத்து இராமாநுச — ஸௌசீல்யகுணமுடைய எம்பெருமானாரே,!
சொல்லுவது ஒன்று உண்டு — தேவரீரிடத்தில் அடியேன் விஜ்ஞாபிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு
(அஃது என்னவென்றால்)
என்பு உற்ற நோய் உடல் தோறும் — எலும்பிலே உறைந்து நலியக்கூடிய வியாதிகளுக்கு இருப்பிடமான சரீரங்களிலெல்லாம்
பிறந்து இறந்து — பிறப்பதும் இறப்பதுமாகி
எண்ண அரிய துன்பு உற்று வீயினும் — எண்ணமுடியாத துன்பங்களை யநுபவித்து முடிந்து போனாலும்
என்றும் — எல்லாக்காலங்களிலும்
எவ் இடத்தும் — எல்லாவிடங்களிலும்
உன் தொண்டர்கட்கே — தேவரீருடைய பக்தர்கள் விஷயத்திலேயே
அன்பு உற்று இருக்கும் படி என்னை ஆக்கி — பக்தனாயிருக்கும்படி அடியேனைச் செய்தருளி
அங்கு — அந்த பக்தர்களிடத்தில்
ஆள் படுத்து — (அடியேனை) ஆட்படுத்தியருளவேணும்.
(இதுவே அடியேனுடைய வேண்டுகோள்)

அங்கயல்பாய்வயல் தென்னரங்கன்* அணியாகமன்னும்
பங்கய மாமலர்ப் பாவையைப்போற்றுதும்* பத்தியெல்லாம்
தங்கிய தென்னத் தழைத்துநெஞ்சேநந்தலைமிசையே
பொங்கியகீர்த்தி* இராமாநுசனடிப்பூமன்னவே. 108

நெஞ்சே — ஓ மனமே!
பத்தி எல்லாம் தங்கியது என்ன தழைத்து — பக்தியெல்லாம் நம்மிடத்திலே குடிகொண்டதென்று சொல்லும்படியாக வீறுபெற்று,
பொங்கிய கீர்த்தி இராமாநுசன் அடி பூ — பரந்த புகழை யுடையரான எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகள்
நம் தலைமிசையே மன்ன — நமது தலைமேலே நித்ய வாஸம் பண்ணும்படியாக,
(நாம் செய்யவேண்டிய காரியம் என்னவென்றால்)
அம் கயல் பாய் வயல் தென் அரங்கன் — அழகிய கயல் மீன்கள் பாய்கிற கழனிகள் சூழ்ந்த தென்னரங்கத்தில் உறையும் பெருமானுடைய

| | | | |
|---|---|---|---|
| அணி ஆகம் மன்னும் | அழகிய திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகிறவளாய் | பங்கயம் மாமலர் பாவையை | சிறந்த தாமரைப் பூவில் பிறந்த பதுமை போன்றவளான ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| | | போற்றுதும் | வாழ்த்துவோம். |

* * *—இப்பிரபந்தத்தின் தொடக்கத்தில் " இராமாநுசன் சரணாரவிந்தம் நாம் மன்னி வாழ" என்று எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளைப் பொருந்தி வாழ்வதே தமக்குப் பரம புருஷார்த்தமாக அருளிச் செய்தவராகையாலே அந்தப் புருஷார்த்தம் நமக்கு யாவஜ்ஜீவம் ஸித்திக்கும்படியாக-எல்லாச் செல்வங்களையும் அளிக்கவல்ல பெரியபிராட்டியாரைப் பிரார்த்திப்போமென்கிறார்—முடிவான இப்பாட்டில்.

ஸாமாந்ய ஸம்பத்தை அளிக்கவல்ல பிராட்டியே இந்த விசேஷ ஸம்பத்தையும் அளிக்கக் கடவள் என்றதாயிற்று. .... .... .... 108

எம்பெருமானர் திருவடிகளே சரணம். திருவரங்கத்தமுதனர் திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

---

இராமாநுச நூற்றந்தாதி—அடிவரவு.

1. பூமன் கள்ளார் பேரிய லென்னை,
எனக் கியலும் மொழி வருத்து மிறை
மன் சீர்.
2. சீரிடம் செய்யும் கதி சோரா, தாழ்,
முனி யெய்தற் குறு வாரப்பொழில் நிதி.
3. நிதி கார்த்தி வைப்பா மொய்த்த காரேய்,
திக்குக் கொள்ள நெஞ்சில் கூட்டு
மின்ப மாண்டு.
4. ஆண்டு பொரு மடையார் நில நயவேன்,
அடல் படி யாக்கிப் பொருளும்
சேம மண்
5. மண் ஆயி சுரச் சொல்லார் பேறு
கூறு மிறை நிக ரான துதிப் படி.
6. அடி பார்த் தற்புதன் நாட்டி கண்
கோக்குலம்,
மற்றொரு பேதையர் கடனுணர்
கொழுந்து.
7. கொழு விரும் பிடியைப் பண்டரு வாழ்
ஞானம்,
சரண மாரெனச் சிந்தை யென்னையும்
சார்.
8. சார் கைத்த வண்மை தேர் செய்த்தலை
நின்ற,
ஈந்தனன் கருத்தில் பொய்யை நல்சோர்வி
9. சோர் தெரிவுற்ற சீர் கண் டோதி பற்று,
பெரியவர் கலிமிக்க போற்றரும் நினையார்.
10. நினையார்மருள் புண்ணி கட்டத் தவ
முண்ணின்,
வளரும் தன்னையுற் றிடும் தற் போந்த.
11. போந்ததென் மயக்கும் னையும் வளர்ந்த,
கையிற் செழுந்திரை யிருப் பின்
பங்கயல் பூ.

---

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய
நித்யாநுஸந்தானவுரையில்

இராமாநுச நூற்றந்தாதி உரை
முற்றுப்பெற்றது

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களிலிருந்து

முன்னோர்கள் தொகுத்த

# நித்யாநு ஸந்தானம்

## இரண்டாம் பகுதி

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமி இயற்றிய திவ்யார்த்த தீபிகையுரையின் ஸாரமான வியாக்கியானம் கொண்டது.

(இரண்டாம் பதிப்பு)

ஸ்ரீ ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தி நினைவுமாலையின் பதினுருவது மலராக வெளியிடப்பட்டது.

சென்னை ரத்னம் பிரஸ் பிராஞ்சில்
பதிப்பிக்கப்பட்டது.

கிடைக்குமிடம்—கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

விலை 1—8—0

1953

ஸ்ரீ

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

விசதவாக் சிகாமணியான மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# உபதேச ரத்தினமாலை

---

தமக்குக் கிடைத்த உபதேச வழியின்படியே வெண்பாவிலமைத்துப் பேசுவதாகக் கூறுதல்.

எந்தை திருவாய்மொழிப்பிள்ளை இன்னருளால் *
வந்த வுபதேச மார்க்கத்தைச்—சிந்தை செய்து *
பின்னவருங் கற்க உபதேசமாய்ப் பேசுகின்றேன் *
மன்னியசீர் வெண்பாவில் வைத்து. 1

| | | | |
|---|---|---|---|
| எந்தை | எமக்கு ஆசிரியரான | பின்னவரும் கற்க | பின்புள்ளாரும் கற்குமாறு |
| திருவாய் மொழிப் பிள்ளை | திருவாய் மொழிப்பிள்ளை யென்கிற திருமலையாழ் வாருடைய | மன்னிய சீர் வெண்பாவில் வைத்து | பொருத்தமான சீர்களையுடைய வெண்பாவென்கிற யாப்பிலே அமைத்து |
| இன் அருளால் வந்த | பரமகிருபையினால் கிடைத்த | | |
| உபதேசம் மார்க்கத்தை சிந்தை செய்து | உபதேச வழியை அநுஸந்தித்து | உபதேசம் ஆய் பேசுகின்றேன் | (உள்ளத்திற்கும் உலகத்திற்கும்) உபதேச ரூபமாகப் பேசுகிறேன். |

"மன்னிய சீர்" என்பதை வெண்பாவுக்கு விசேஷணமாக்காமல் "மன்னிய சீர்களைப் பேசுகின்றேன்"— ஆழ்வாராசாரியர்களின் திருக்குணங்களைப் பேசுகின்றேன் என்றுரைப் பாருமுளர். 1

.... .... ...

இப்பிரபந்தத்தை விவேகிகள் உகப்பதே போதுமென்றல்.

கற்றோர்கள் தாமுகப்பர் கல்வி தன்னிலாசையுள்ளோர்*
பெற்றோமெனவுகந்து பின்புகற்பர் *— மற்றோர்கள்
மாச்சரியத்தாலிகழில் வந்ததென்னெஞ்சே! * இகழ்கை
ஆச்சிரியமோதானவர்க்கு. 2

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே! | | |
| கற்றோர்கள் தாம் உகப்பர் | கல்வி பயின்றவர்கள் (இப் பிரபந்தத்தைப் பெற்று) மகிழ்ந்திடுவர்கள்; | மாச்சரியத்தால் | மாத்ஸர்யத்தினால் [பகை பாராட்டி] |
| | | இகழில் | இதனை இகழ்ந்தால் |
| கல்வி தனில் ஆசை உள்ளோர் | கல்வியில் விருப்பமுள்ளவர்கள் | வந்தது என் | அதனால் நமக்கு உண்டாகும் சேதமென்ன? (ஒன்றுமில்லை) |
| பெற்றோம் என உகந்து | 'இது லபிக்கப் பெற்றோமே!'என அகங்குழைந்து | அவர்க்கு | அப்படிப்பட்டவர்களுக்கு |
| பின்பு கற்பர் | பிறகு இதை அப்யஸிப்பர்கள்; | இகழ்கை | நல்லவிஷயங்களை இகழ்வதென்பது |
| மற்றோர்கள் | (கீழ்ச்சொன்ன இரண்டு வகுப்பிலுஞ் சேராத) மற்றையோர்கள் | ஆச்சரியமோ தான் | வியப்போ? [அவர்கட்கு இது இயல்பேயன்றோ.] |

" ஆச்சரியமோ-தானவர்க்கு " என்று பிரித்து தானவர்க்கு-ஆஸுரப்ரக்ருதிகளுக்கு என்று பொருளுரைப்பாருமுளர்; ஆயினும் மணவாளமாமுனிகள் இங்ஙனம் விவக்ஷித்து அருளிச் செய்பவரல்லர் என்பர் பெரியோர். 2

.... ....

### ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு வாழ்த்துக் கூறுதல்.

*ஆழ்வார்கள்வாழி அருளிச்செயல்வாழி*
தாழ்வாதுமில் குரவர்தாம் வாழி*—ஏழ்பாரும்
உய்ய அவர்களுரைத்தவைகள்தாம்வாழி*
செய்யமறைதன்னுடனே சேர்ந்து. 3

| | | | |
|---|---|---|---|
| ஆழ்வார்கள் வாழி | பொய்கையாழ்வார்முதலான ஆழ்வார்கள் வாழ்ந்திடுக; | ஏழ் பாரும் உய்ய | பூமண்டலம் முழுவதும் உஜ்ஜீவிக்குமாறு |
| அருளிச் செயல் வாழி | அவர்களருளிய திவ்வியப் பிரபந்தங்கள் வாழ்ந்திடுக; | அவர்கள் | அவ்வாசிரியர்கள் |
| தாழ்வு ஆதும் இல் குரவர் தாம் வாழி | தாழ்வொன்று மில்லாத [மிகச் சிறந்த] எம்பெருமானார் முதலான ஆசாரியர்கள் வாழ்க; | உரைத்தவைகள் தாம் செய்ய மறை தன்னுடனே சேர்ந்து வாழி | அருளிச் செய்த ஸ்ரீ ஸூக்திகளும் விலக்ஷணமான வேதங்களோடு கூட வாழ்க. |

"செய்யமறை தன்னுடனே சேர்ந்து" என்றது வேதங்களும் வாழவேணுமென்று அவற்றுக்குமாக மங்களாசாஸனம் செய்தபடி. ஆழ்வாராசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுக்கெல்லாம் வேதமே மூலமானது பற்றி அவற்றுக்கும் மங்களாசாஸனம் ப்ராப்தம். "செய்யமறை தன்னுடனே சேர்ந்த அவர்களுரைத்தவைகள்" என்று அந்வயித்து 'வேதங்களுக்குச்சேர ஆசாரியர்கள் அருளிச்செய்தவை' என்று பொருளுரைப்பாருமுளர். 3

### ஆழ்வார்களின் அவதாரக்ரமம் கூறுதல்

பொய்கையார் பூதத்தார் பேயார்*புகழ்மழிசை
அய்யன் அருள்மாறன் சேரலர் கோன்*—துய்யபட்ட
நாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் நன்கலியன்*
ஈதிவர்தோற்றத்தடைவாமிங்கு. 4

| | | | |
|---|---|---|---|
| பொய்கையார் | பொய்கையாழ்வார் முதல்வர், | அன்பர்தாள் தூளி | தொண்டரடிப் பொடியாழ்வார் எட்டாமவர், |
| பூதத்தார் | பூதத்தாழ்வார் இரண்டாமவர் | நல் பாணன் | பரமஸாத்விகரான திருப்பாணாழ்வார் ஒன்பதாமவர், |
| பேயார் | பேயாழ்வார் மூன்றாமவர், | நன் கலியன் | விலக்ஷணரான திருமங்கையாழ்வார் பத்தாமவர்; |
| புகழ் மழிசை ஐயன் | கீர்த்திவாய்ந்த திருமழிசைப்பிரான் நான்காமவர், | ஈது | இந்த வரிசைக்கிரமமானது |
| அருள் மாறன் | அருள் மிகுந்த நம்மாழ்வார் ஐந்தாமவர், | இங்கு | இவ்வுலகில் |
| சேரலர் கோன் | குலசேகரப்பெருமாள் ஆறுமவர், | இவர் தோற்றத்து அடைவு ஆம் | இவ்வாழ்வார்களின் அவதாரக்ரமமாகும். |
| துய்ய பட்ட நாதன் | பரிசுத்தமான பெரியாழ்வார் ஏழாமவர், | | |

இக்காலத்தவர்கள் சிலர் ஆராய்ச்சி செய்வதாகப்புகுந்து தவறுதலான சில நிரூபணங்களைக் காட்டி இந்த அடைவினை மாறுபடுத்தி, பின்னே யுள்ளவர்களை முன்னே தள்ளி முன்னேயுள்ளவர்களைப் பின்னே யிழுத்து மனம்போனவாறாக அவதாரக்ரமங்களைக் கல்பிக்கின்றனர்; அதனால் ஆஸ்திகர்களின் நெஞ்சு கலங்காமைக்காகப்* பொய்யிலாத மணவாள மாமுனிகள் இங்ஙனே அடைவுதன்னை அமைத்தருளினாராயிற்று. 4

....

ஆழ்வார்களவதரித்த மாத நக்ஷத்திரங்களைக் கூறுவோமெனல்.

அந்தமிழால்நற்கலைகள் ஆய்ந்துரைத்த வாழ்வார்கள்*
இந்தவுலகிலிருள்நீங்க*—வந்துதித்த
மாதங்கள்நாள்கள்தமை மண்ணுலகோர்தாமறிய*
ஈதென்று சொல்லுவோம்யாம். 5

| | | | |
|---|---|---|---|
| அம் தமிழால் நல் கலைகள் | அழகிய தமிழ்பாஷையினால் திவ்வியப் பிரபந்தங்களை | வந்து உதித்த | வந்து அவதரிக்கப் பெற்ற |
| ஆய்ந்து உரைத்த ஆழ்வார்கள் | ஆராய்ந்தருளிச் செய்த (மேற்கூறிய) ஆழ்வார்கள் | மாதங்கள் நாள்கள் தமை | மாஸங்களையும் நக்ஷத்திரங்களையும் |
| இந்த உலகில் இருள் நீங்க | இவ்விருள் தருமா ஞாலத்தில் அகவிருள் தொலைவதற்காக | மண் உலகோர் தாம் அறிய | இந்நிலவுலகத்தவர்கள் நிஷ்கர்ஷமாகத் தெரிந்து கொள்ளும் பொருட்டு |
| | | ஈது என்று | இன்னவையென்று |
| | | யாம் சொல்லுவோம் | இனி நாம் கூறுவோமாக. |

இன்ன ஆழ்வார் இன்ன மாதத்தில் இன்ன நக்ஷத்திரத்தில் அவதரித்தாரென்பது அக்காலத்தில் வழங்கிவந்தாலும் பிற்காலத்தில் எக்காரணத்தாலும் பிறழ்வு விளையாமைக்காக அவற்றை ப்ரபந்தீகரித்தருள்கின்றாரென்க. பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்த முதல் திருவந்தாதி வியாக்கியானத் தொடக்கத்தில் "இந்த முதலாழ்வார்கள் இன்னவிடத்தில் அவதரித்தார்களென்பது காலப்பழமையாலே நிச்சயிக்கப் போகாது" என்று பொருள்பட ஒரு ஸ்ரீஸூக்தி காண்கிறது. அவ்விடத்தில் அரும்பதவுரைக்காரர்கள் இங்கு ஏதோ வாக்கியப் பிறழ்வு உள்ளது என்று எழுதியுள்ளார்கள். பெரியவாச்சான் பிள்ளை அங்ஙனம் அருளிச் செய்தது உண்மையாயிருப்பின் பரம ப்ராமாணிகரான மணவாளமாமுனிகள் இவ்வுபதேசரத்தினமாலையில் "எண்ணருஞ் சீர்ப்பொய்கை முன்னோரிவ்வுலகில் தோன்றிய வூர் வண்மைமிகு கச்சி மல்லை மாமயிலை" என்று அறுதியிடாக அருளிச்செய்ய நேர்ந்திராது. பெரியவாச்சான் பிள்ளை காலத்திற்கு முன்னமே அவதரித்து அநுஸந்தானத்திலும் நிகழ்ந்து வரும் திருவந்தாதித் தனியன்களிலும் "கச்சிநகர் வந்துதித்த பொய்கைப்பிரான்" என்றும், "கடன்மல்லைப் பூதத்தார்" என்றும் உள்ளதற்கு மாறாகப் பெரியவாச்சான் பிள்ளை தாம் அருளிச் செய்யவும் ப்ரஸக்தியில்லை. ஆயினும் வாக்கியப் பிறழ்வு விளைந்திட்டது. இங்ஙனே பிறழ்வு நேராமைக்காகவே மாமுனிகள் ஆழ்வார்களவதரித்த மாஸ நக்ஷத்ர திவ்ய தேசங்களை இப்பிரபந்தத்தில் இட்டருள்கின்றாரென்றுணர்க. .... .... 5

முதலாழ்வார்களின் மாத நக்ஷத்திரங்கள் கூறுதல்.

ஐப்பசியிலோணம் அவிட்டம் சதயமிவை*
ஒப்பிலவாநாள்களுலகத்தீர்!*—எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார்பேயாழ்வார்*
தேசுடனே தோன்றுசிறப் பால். 6

| | | | |
|---|---|---|---|
| உலகத்தீர் | உலகத்திலுள்ளவர்களே | ஒப்பு இல ஆம் நாள்கள் | ஒப்பில்லாதவையான நாட்கள் எவை யென்றால், |
| எப் புவியும் பேசு புகழ் | உலகமெங்கும் பேசப்படுகின்ற புகழையுடைய | ஐப்பசியில் ஓணம் அவிட்டம் சதயம்இவை | ஐப்பசிமாதத்தில் திருவோணம் அவிட்டம் சதயமென்னும் இத்திரு நாட்களாம். |
| பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார் | பொய்கை பூதம் பேயாழ்வார் மூவரும் | | |
| தேசுடனே தோன்று சிறப்பால் | தேஜஸ்ஸுடனே அவதரித்த ஏற்றத்தினால் | | |

* * * இவ்வாழ்வார்கள் மூவரும் விபவத்தில் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாதவராய், கூடித்திரியும் யோகிகளாயிருந்ததினாலும், அர்ச்சையிலும் அப்படியே கூடியே வாழ்வதனாலும் இம்மூவர்க்கும் சேர்த்தே பாசுர மிட்டருளினாராயிற்று. ஐப்பசி, ஐப்பிசி என இரண்டுமுண் டென்பர். ஓணம்—'ச்ரோணை' என்னும் வடசொற்சிதைவு. 'தேசுடனே' என்றவிடத்து அயோநிஜத்வப்ரயுக்தமான தேஜஸ்ஸு விவக்ஷிதம். "சிறப்பால் ஒப்பிலவாம்" என்று அந்வயிக்கும். .... .... .... 6

போய்கையார் முதலான மூவர்க்கு முதலாழ்வார்களேன்கிற திருநாமம் நிகழ்ந்தமைக்குக் காரணங் கூறுதல்.

மற்றுள்ளவாழ்வார்களுக்கு முன்னேவந்துதித்து*
நற்றமிழால்நூல்செய்து நாட்டையுய்த்த*—பெற்றிமையோர்
என்று முதலாழ்வார்களென்னும்பேரிவர்க்கு
நின்றதுலகத்தே நிகழ்ந்து. 7

| | |
|---|---|
| இவர்க்கு | பொய்கையார் பூதத்தார் பேயார்என்கிற இம்மூவர்க்கும் |
| முதலாழ்வார்கள் என்னும் பேர் | முதலாழ்வார்களென்கிற திருநாமம் |
| உலகத்தே நிகழ்ந்து நின்றது | உலகத்தில் ப்ரஸித்தமானது (எதனாலேயென்னில்) |
| | (இவ்வாழ்வார்கள் மூவரும்) |
| மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்து உதித்து | (திருமழிசைப்பிரான் முதலான) மற்ற ஆழ்வார்களுக்கு முன்னம் வந்து தோன்றி |
| நல் தமிழால் | விலக்ஷணமான தமிழினால் |
| நூல் செய்து | திருவந்தாதிகளென்கிற திவ்யப் பிரபந்தங்களை யருளிச்செய்து |
| நாட்டை உய்த்த | இவ்வுலகை உஜ்ஜீவிப்பித்த |
| பெற்றிமையோர் என்று | பெரியார் என்கிற காரணத்தினால். |

* * * பொய்கையார் முதலான மூவர்க்கும் முதலாழ்வார்களென்று ப்ரஸித்தமாகத் திருநாமம் வழங்கிவருகின்றது. இத்திருநாமத்திற்கு இன்னது காரணமென்று நிரூபிக்கிறது இப்பாசுரம். மற்றுமுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்தபடியினால் முதல்வராயினர்; நற்றமிழால் நூல் செய்ததனால் ஆழ்வார்களாயினர் என்றதாயிற்று. பெற்றிமை—பெருமை. என்று—என்ற காரணத்தினால் என்றபடி. "பெற்றிமையோ ரென்றும்" என்கிற பாடம் மறுக்கவும் மறக்கவும்தக்கது. .... ... ... 7

திருமங்கையாழ்வாருடைய அவதார நாள் கூறுதல்.

பேதைநெஞ்சே!இன்றைப்பெருமை யறிந்திலையோ!*
ஏதுபெருமை யின்றைக் கென்றென்னில்!*—ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ்மங்கையர்கோன் மாநிலத்தில்வந்துதித்த*
கார்த்திகையில் கார்த்திகைநாள் காண். 8

| | |
|---|---|
| பேதை நெஞ்சே | அறிவில்லாத மனமே? |
| இன்றை பெருமை அறிந்திலையோ | இன்றைக்குள்ள பெருமையை நீ அறிந்து கொள்ளவில்லையோ? |
| இன்றைக்கு என்று | இன்றைக்கு அஸாதாரணமாக |
| ஏது பெருமை என்னில் | என்ன பெருமை யுள்ளது என்கிறாயோ? (கேள்) |
| ஓதுகின்றேன் | சொல்லுகின்றேன்; |
| வாய்த்த புகழ் | பொருந்திய புகழை யுடையரான |
| மங்கையர்கோன் | திருமங்கையாழ்வார் |
| மா நிலத்தில் | விசாலமான இவ்வுலகில் |
| வந்து உதித்த | வந்து தோன்றப்பெற்ற |
| கார்த்திகையில் கார்த்திகை நாள் காண் | கார்த்திகைமாதத்து க்ருத்திகா நக்ஷத்ரமன்றோ இன்று. |

* * * அந்தந்த ஆழ்வார்களின் திருநக்ஷத்திர தினங்களில் கோயில்களிலும் க்ருஹங்களிலும் நாள்பாட்டென்று ஸேவிப்பதற்கு உதவ வேணுமென்று சிஷ்யர்களின் வேண்டுகோளினால் இப்பிரபந்தம் அருளிச் செய்ததனால் அதற்குத் தகுதியாகவே இந்த நாட்பாட்டுக்களில் பெரும்பாலும் 'இன்று' என்று அமைக்கப்பட்டது. அந்த அவதார நன்னாளை நோக்கிய நிர்த்தேசம் இது. இரண்டாமடியில், "இன்றைக்கென்னேன்னில்" என்று சில பிரதிகளிற் பாடம் கண்டாலும் அதில் அர்த்தம் பொருந்தாது. ஏது என்பதும் என் என்பதும் பர்யாயமாதலால் புநருக்தமாகும்; ஆகவே 'இன்றைக்கென்றேன்னில்' என்பதே பாடம். "அதற்கென்று என்ன ஏற்றம்" என்று உலக வழக்குள்ளதாதல் அறிக. .... 8

மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த பெருமை.

மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன*
ஆறங்கம்கூறஅவதரித்த*—வீறுடைய
கார்த்திகையில்கார்த்திகைநாள் இன்றென்று காதலிப்பார்*
வாய்த்தமலர்த்தாள்கள் நெஞ்சே!வாழ்த்து. 9

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | ஓ மனமே! | வீறு உடைய | பெருமை வாய்ந்த |
| மாறன் பணித்த | நம்மாழ்வாருளிச்செய்த | கார்த்திகையில் கார்த்திகை நாள் இன்று என்று | கார்த்திகை மாதத்து க்ருத்திகை யன்றோ இன்று என்று கொண்டு |
| தமிழ் மறைக்கு | த்ராவிடவேதமான 'திருவிருத்தம்' முதலிய நான்கு பிரபந்தங்களுக்கும் | காதலிப்பார் | குதூஹலிப்பவர்களினுடைய |
| ஆறு அங்கம் கூற | ஆறு அங்கங்களாக ஆறு பிரபந்தங்களை யருளிச் செய்யும் பொருட்டு | வாய்த்த மலர் தாள்கள் | (நமக்கு) ப்ராப்தமான பாதாரவிந்தங்களை |
| மங்கையர் கோன் அவதரித்த | திருமங்கை யாழ்வார் அவதரிக்கப்பெற்ற | வாழ்த்து | தோத்திரஞ் செய்வாயாக. |

* * * ஆசார்யஹ்ருதயத்தில் "வேத சதுஷ்டயாங்கோபாங்கங்கள் பதினாலும் போலே இந்நாலுக்கும் இருந்தமிழ் நூற்புலவர் பனுவலாறும் மற்றை யெண்மர் நன்மாலைகளும்" என்றுள்ளது. வடமொழி வேதத்திற்கு அங்கங்களும் உபாங்கங்களும் இருப்பது போலே தமிழ் வேதத்திற்கும் அவை யுண்டு; ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்கிற நான்கு வேதங்களுக்கும் சீக்ஷா வியாகரணம் நிருக்தம் சந்தஸ் கல்பம் ஜ்யோதிஷம் என்கிற ஆறு அங்கங்களும், மீமாம்ஸா ந்யாய புராண தர்மசாஸ்த்ரங்கள் முதலிய உபாங்கங்கள் எட்டும் ஆகப் பதினாலும் போலே, திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழியாகிற இந்தத் தமிழ்மறை நான்கிற்கும் திருமங்கையாழ்வாருடைய திவ்வியப் பிரபந்தங்களாறும் மற்றை யாழ்வார்கள் எண்மருடைய விலக்ஷண ப்ரபந்தங்களும் அங்கோபாங்கங்களாமென்பது தாற்பரியம். திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் ஆகிய ஆறு பிரபந்தங்களும் ஆறு அங்கமாகக் கொள்ளப்பட்டன. நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தைப் பின்பற்றியே இவர் அருளிச்செய்திருப்பது கொண்டே இங்ஙனே கூறலாயிற்றென்க. 9

திருப்பாணாழ்வார் திருநாள் கூறுதல்

கார்த்திகையுரோகிணிநாள் காண்மினின்றுகாசினியீர்*
வாய்த்தபுகழ்ப் பாணர்வந்துதிப்பால்* —ஆத்தியர்கள்
அன்புடனேதான் அமலனாதிபிரான்கற்றதற்பின்
நன்குடனேகொண்டாடும்நாள். 10

| | |
|---|---|
| காசினியீர் | உலகத்தவர்களே! |
| இன்று | இந்நாள் |
| கார்த்திகை உரோகிணி நாள் காண்மின் | கார்த்திகைமாதத்து ரோஹிணி நக்ஷத்திரமாகும்; |
| வாய்த்த புகழ் | பொருந்திய புகழையுடையரான |
| பாணர் | திருப்பாணாழ்வார் |
| வந்து உதிப்பால் | வந்துதோன்றினபடியால் |
| ஆத்தியர்கள் | ஆஸ்திகர்கள் |
| அன்புடனே தான் | பக்தியோடு |
| அமலனாதிபிரான் கற்றதன்பின் | அமலனாதிபிரானென்கிற பிரபந்தம் (இவராருளால்) கற்கப்பெற்றோமென்று மகிழ்வது பற்றியும் |
| நன்குடனே | நலமாக |
| கொண்டாடும் நாள் | கொண்டாடப்பெறும் நாளாகுமிது. |

* * * தமிழில் ரகரமுதலான சொல் வரத்தகாதாதலால் "கார்த்திகையில் ரோகிணி நாள்" என்பது சுத்த பாடமன்று; "கார்த்திகையில் உரோகிணி நாள்" என்னில் வெண்டளை பிறழுமாதலால் அதுவும் பாடமன்று; "கார்த்திகையுரோகிணிநாள்" என்பதுவே சுத்த பாடம். "புதியன புகுதலும் வழுவல" என்ற நன்னூற் சூத்திரத்தைக் கொண்டு ரகர முதலதான சொற் பிரயோகமும் சிறுபான்மை வழுவற்றதென்பாருமுளர். அறியவேண்டு மர்த்தங்களையெல்லாம் அழகாக அமைத்துப் பத்தே பாசுரமாகச் சுருங்கவருளிச் செய்தவர் இவ்வாழ்வாரேயாதலால் "அமலனாதிபிரான் கற்றதற்பின்" என்று சிறப்பித்தெடுத்துக் கூறினரென்க. நன்கு—நன்மை. .... .... .... 10

## தொண்டரடிப்பொடியாழ்வார் திருநாள் கூறுதல்

மன்னியசீர்மார்கழியில் கேட்டையின்றுமாநிலத்தீர்!
என்னிதனுக்கேற்றமெனிலுரைக்கேன்* —துன்னுபுகழ்
மாமறையோன் தொண்டரடிப்பொடியாழ்வார்பிறப்பால்*
நான்மறையோர் கொண்டாடும்நாள். 11

| | |
|---|---|
| மாநிலத்தீர் | பரந்தவுலகத்திலுள்ளவர்களே! |
| இன்று | இன்றைத்தினம் |
| சீர் மன்னிய | சிறப்புப்பொருந்திய |
| மார்கழியில் கேட்டை | மார்கழிமாதத்துக்கேட்டையாகும்; |
| இதனுக்கு | இந்நாளுக்கு |
| ஏற்றம் என் எனில் | என்ன ஏற்றமென்றால் |
| உரைக்கேன் | சொல்லுகின்றேன்; (கேண்மின்;) |
| துன்னு புகழ் | நிரம்பிய புகழையுடையராய் |
| மா மறையோன் | பரம வைதிகரான |
| தொண்டரடிப் பொடி ஆழ்வார் | தொண்டரடிப்பொடியாழ்வாருடைய |
| பிறப்பால் | அவதாரம் காரணமாக |
| நால் மறையோர் | வைதிகோத்தமர்கள் |
| கொண்டாடும் நாள் | ஆதரிக்கும் திருநாளாகுமிது. |

## திருமழிசைப்பிரான் திருநாள் கூறுதல்

தையில்மகமின்று தாரணியீர்! ஏற்றம்* இந்தத்
தையில்மகத்துக்குச் சாற்றுகின்றேன்*—துய்யமதி
பெற்ற மழிசைப்பிரான்பிறந்தநாளென்று*
நற்றவர்கள்கொண்டாடும்நாள். 12

| | |
|---|---|
| தாரணியீர் | நிலவுலகத்தவர்களே! |
| இன்று | இந்நாள் |
| தையில் மகம் | தைமாதத்து மகநக்ஷத்திரமாகும்; |
| இந்த தையில் மகத்துக்கு ஏற்றம் சாற்றுகின்றேன் | இந்தத்தையில் மகத்திற்குண்டான பெருமையைச்சொல்லுகின்றேன்; (கேண்மின்;) |

| | |
|---|---|
| துய்ய மதி பெற்ற | பரிசுத்தமான மதியைப் பெற்ற |
| மழிசை பிரான் | திருமழிசையாழ்வார் |
| பிறந்த நாள் என்று | திருவவதரித்த திருநாளென்று |
| நல் தவர்கள் | மஹாதபஸ்விகள் |
| கொண்டாடும் நாள் | கொண்டாடப் பெற்ற நாளாமிது. |

*** இவ்வாழ்வார் பேயாழ்வாரை யடிபணிந்து திருந்தினவராதலால் அது தோன்றத் "துய்யமதி பெற்ற" என்றருளிச் செய்தார். மக நக்ஷத்திரத்தைச் சுற்றி ஸப்தர்ஷிகள் வர்த்திப்பதாகச் சோதிடர்கள் கூறுவார்கள்; அதற்கேற்ப "நல்தவர்கள் கொண்டாடும் நாள்" என்றருளிச்செய்தார் போலும். தரணியென்னும் வடசொல் தாரணியென்று நீட்டல் பெற்றது. 12

## குலசேகராழ்வார் திருநாள் கூறுதல்.

மாசிப்புனர்பூசம் காண்மினின்று மண்ணுலகீர்*
தேசித்திவசத்துக்கேதென்னில் —*பேசுகின்றேன்
கொல்லிநகர்க்கோன் குலசேகரன்பிறப்பால்*
நல்லவர்கள் கொண்டாடும்நாள். 13

| | |
|---|---|
| மண் உலகீர் | பூமண்டலத்திலுள்ளவர்களே! |
| இன்று | இன்றைத்தினம் |
| மாசிபுனர்பூசம் காண்மின் | மாசி மாதத்துப் புனர்வஸு நக்ஷத்திரமன்றோ; |
| இத்திவசத்துக்கு | இந்நாளுக்கு |
| தேசு ஏது என்னில் | என்ன மதிப்பு என்றால் |
| பேசுகின்றேன் | சொல்லுகிறேன்,(கேண்மின்.) |

| | |
|---|---|
| கொல்லி நகர் கோன் | கொல்லியென்னும் நகர்க்குத் தலைவரான |
| குலசேகரன் | குலசேகராழ்வாருடைய |
| பிறப்பால் | திருவவதாரம்காரணமாக |
| நல்லவர்கள் | ஸத்துக்கள் |
| கொண்டாடும் நாள் | சிலாகிக்கும் நாளாமிது. |

*** தேசு—தேஜஸ் என்னும் வடசொல்விகாரம். திவசம்—திவஸமென்னும் வடசொல் விகாரம். 13

## நம்மாழ்வார் திருவவதாரநாள் கூறுதல்.

ஏரார்வைகாசி விசாகத்தினேற்றத்தை*
பாரோரறியப் பகர்கின்றேன்* - சீராரும்
வேதம்தமிழ்செய்த மெய்யனெழில்குருகை*
நாதனவதரித்தநாள். 14

| | |
|---|---|
| ஏர் ஆர் | சீர்மை மிகுந்த |
| வைகாசி விசாகத்தின் | வைகாசி மாதத்து விசாக நக்ஷத்திரத்தினுடைய |
| ஏற்றத்தை | சிறப்பை |
| பாரோர் | உலகத்தவர்கள் |
| அறிய | தெரிந்து கொள்ளுமாறு |
| பகர்கின்றேன் | சொல்லுகிறேன்; |
| சீர் ஆரும் வேதம் | சீர்மை மிகுந்த வடமொழி வேதத்தை |

| | |
|---|---|
| தமிழ் செய்த மெய்யன் | த்ராவிடமாகச் செய்தருளின யதார்த்தவாதியாய் |
| எழில் குருகை நாதன் | அழகிய திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வார் |
| அவதரித்த நாள் | தோன்றிய திருநாளன்றோ இது. |

நம்மாழ்வாரும் அவர்திருநாளும் அவர்திருவாக்கும் ஒப்பற்றவை யெனல்.

உண்டோவைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்? *
உண்டோசடகோபர்க் கொப்பொருவர்?* —உண்டோ
திருவாய்மொழிக்கொப்பு? தென்குருகைக்குண்டோ *
ஒருபார்தனிலொக்குமூர்? 15

| | |
|---|---|
| வைகாசி விசாகத்துக்கு ஒப்பு ஒரு நாள் உண்டோ | வைகாசி விசாகத்தோடொத்ததொரு திருநாள் உண்டோ? (இல்லை) |
| சடகோபர்க்கு ஒப்பு ஒருவர் உண்டோ | நம்மாழ்வாரை யொத்த ஓராழ்வாருண்டோ? (இலர்) |
| திருவாய்மொழிக்கு ஒப்பு உண்டோ | திருவாய்மொழியோடொத்ததொரு திவ்யப் பிரபந்தமுண்டோ? (இல்லை ;) |
| பார் தனில் | இப்பூமண்டலத்திற்குள்ளே |
| தென் குருகைக்கு ஒக்கும் ஒரு ஊர் உண்டோ | திருநகரியோடொத்ததொரு திவ்ய தேசமுண்டோ? (இல்லை.) |

பெரியாழ்வார் திருநாள்கூறுதல்.

இன்றைப்பெருமையறிந்திலையோ ஏழைநெஞ்சே !*
இன்றைக்கென்னேற்றமெனிலுரைக்கேன் *—நன்றிபுனை
பல்லாண்டுபாடிய நம்பட்டர்பிரான் வந்துதித்த *
நல்லானியில் சோதிநாள். 16

| | |
|---|---|
| ஏழை நெஞ்சே | அறிவிலியான மனமே! |
| இன்றை பெருமை அறிந்திலையோ | இன்றைக்குண்டான பெருமையை அறிய மாட்டாயோ? |
| இன்றைக்கு ஏற்றம் என்னில் | இந்நாளுக்கு என்ன பெருமை யென்னில், |
| உரைக்கேன் | சொல்லுகிறேன் கேள் ; |
| நன்றிபுனை | நன்மைவாய்ந்த |
| பல்லாண்டு பாடிய | திருப்பல்லாண்டை யருளிச் செய்த |
| நம் பட்டர் பிரான் வந்து உதித்த | நம் பெரியாழ்வார் வந்து தோன்றிய |
| ஆனியில் சோதி நல் நாள் | ஆனிமாதத்து ஸ்வாதி யென்கிற நல்ல நாள் காண். |

மாநிலத்தின்முன் நம்பெரியாழ்வார்வந்துதித்த *
ஆனிதன்னில்சோதியென்றாலாதரிக்கும் *—ஞானியர்க்கு
ஒப்போரிலை யிவ்வுலகுதனி லென்று நெஞ்சே! *
எப்போதும் சிந்தித்திரு. 17

| | |
|---|---|
| ஓ நெஞ்சே | ஓ மனமே! |
| முன் | முற்காலத்தில் |
| நம் பெரியாழ்வார் | நமக்குத் தலைவரான பெரியாழ்வார், |
| மா நிலத்தில் வந்து உதித்த | இவ்வுலகில் வந்து தோன்றப்பெற்ற |
| ஆனி தன்னில் சோதி என்றால் | ஆனிமாதத்து ஸ்வாதீ நக்ஷத்ரமென்றபோதே |
| ஆதரிக்கும் | கொண்டாடுகின்ற |
| ஞானியர்க்கு | ஞானிகளான பெரியார்களுக்கு |
| ஒப்போர் இவ் உலகு தனில் இல்லை என்று | ஸமமானவர்கள் இவ்வுலகில் யாருமிலரென்று |
| எப்போதும் சிந்தித்து இரு | ஸதாகாலமும் அநுஸந்திப்பாயாக. |

பெரியாழ்வாரேன்ற திருநாமத்திற்குக் காரணம் கூறுதல்

மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள் *
தங்களார்வத்தளவுதானன்றி—* பொங்கும்
பரிவாலே' வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான்பெற்றான் *
பெரியாழ்வாரென்னும் பெயர். 18

| | | | |
|---|---|---|---|
| வில்லிபுத்தூர் பட்டர்பிரான் | ஸ்ரீ வில்லி புத்தூரிலவ தரித்த விட்டுசித்தர் | மற்றுள்ள ஆழ்வார்கள் தங்கள் | மற்ற ஆழ்வார்களுடைய |
| பெரியாழ்வார் என்னும் பெயர் | பெரியாழ்வாரென்கிற திரு நாமத்தை | ஆர்வத்து அளவு தான் அன்றி | அபிநிவேசத்திற்காட்டிலும் அதிகமாக |
| பெற்றான் | (விருதாகப்) பெற்றார்; (இது எதனாலேயென் னில்,) | பொங்கும் பரி வாலே | விஞ்சி யெழுந்த பரிவு காரணமாக. |
| மங்களஆசாச னத்தில் | எம்பெருமானுக்குக் காப் பிடும் விஷயத்தில் | | |

* * * பட்டர்பிரானுக்குப் பெரியாழ்வாரென்கிற விருது எதனால் விளைந்தது? இவர் மற்ற ஆழ்வார்களிற் காட்டில் வயதில் மூத்தவருமல்லர்; பொய்கையார் முதலாகக் குலசேகரரீறாகவுள்ள ஆழ்வார்கள் இவரைவிட மூத்தவர்கள். பெரிய பிரபந்தங்கள் இட்டருளினவரென்று சொல்லலாமோ வென்னில், நம்மாழ்வாரைவிட இவர் அதிகப்பிரபந்தங்களிட்டவரல்லர்; ஆகவே எதனா லிவரைப் பெரியாழ்வாரென்கிறது? என்னில்; எம்பெருமானுக்கு என்வருகிறதோ வென்று வயிறு பிடித்து மங்களா சாஸநம் செய்வதில் இவருடைய காதல் பெரிதானது பற்றியே இவரைப் பெரியாழ்வாரென்றனர் என்றதாயிற்று. மற்ற ஆழ்வார்களுக்கு மங்களா சாஸநருசியே இல்லையென்று சொல்லவொண்ணாது; எல்லார்க்கும் அது உண்டு; ஆனாலும் அது இவர்க்குக் கனத்திருந்தது என்னுமிடம் முன்னடிகளில் விளங்கக் காண்க. 18

## திருப்பல்லாண்டின் முதன்மைக்குக் காரணம் கூறுதல்

கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம்
ஆதி திருப்பல்லாண்டானதுவும்—*வேதத்துக்
கோமென்னுமதுபோல் உள்ளதுக்கெல்லாம்சுருக்காய்
தான்மங்கலமாதலால். 19

| | | | |
|---|---|---|---|
| கோது இல ஆம் | குற்றமற்றவையான | வேதத்துக்கு ஓம் என்னுமது போல் | ஸகல வேதங்களுக்கும் ப்ரணவம் போலே |
| ஆழ்வார்கள் கூறுகலைக்கு எல்லாம் | ஆழ்வார்களருளிய திவ்யப் பிரபந்தங்களுங் கெல் லாம் | உள்ளதுக்கு எல்லாம் சுரு க்கு ஆய் | உள்ள அர்த்தங்களுக்கெல் லாம் ஸங்க்ரஹமாய்க் கொண்டு |
| திருப்பல்லாண்டு ஆதி ஆனது வும் | திருப்பல்லாண்டே முதற் பிரபந்தமாகப் பெற்ற தும் (எதனாலே யென் னில்) | மங்கலம் ஆக லால் தான் | மங்கள ரூபமாயுமிருப்பது பற்றியே. |

* * * கோதில ஆம்—அஸாரமென்று கழிக்கத் தக்க அம்சங்களொன்றுமின்றிக்கே முழுதும் ஸாரமேயான என்றபடி. வேதங்களுக்கு ப்ரணவம் முதன்மையானது போல, திவ்யப்பிரபந்தங்களுக்கெல்லாம் திருப்பல்லாண்டு முதன்மையாயிற்று. ப்ரணவமானது ஸகலவேதார்த்த ஸாரநிதியாகவும் மங்கலச் சொல்லாகவுமிருக்கும்; அதுபோலவே திருப்பல்லாண்டும் ஸகல திவ்யப்ரபந்த ஸாரார்த்த நிதியாகவும் மங்கலமயமாகவுமிருக்குமென்க.

ஸர்வாதிகாரமான இப்பிரபந்தத்தில் ஓமென்று பிரயோகித்ததனால் ப்ரணவம் ஸர்வாதிகாரமென்று ஆசிரியரது திருவுள்ளமாக உணரத்தகும். .... I9

## திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார்க்கும் ஒப்பில்லாமை கூறுதல்.

உண்டோதிருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர்கலைதான்*
உண்டோபெரியாழ்வார்க்கொப் பொருவர்—*தண்டமிழ்நூல்
செய்தருளுமாழ்வார்கள்தம்மில் அவர்செய்கலையில்*
பைதல்நெஞ்சே நீயுணர்ந்துபார்.

| | |
|---|---|
| தண்தமிழ் நூல் செய்தருளும் ஆழ்வார்கள் தம்மில் | திவ்வியப் பிரபந்தங்களருளிச் செய்த ஆழ்வார்களுக்குள்ளே |
| பெரியாழ்வார்க்கு ஒப்பு ஒருவர் உண்டோ | பெரியாழ்வாரோடொத்தவொருவர் உளரோ? (இல்லை); |
| அவர் செய் கலையில் | அவ்வாழ்வார்களருளிச் செய்த நூல்களுள் |
| திருப்பல்லாண்டுக்கு ஒப்பது ஓர் கலை தான் உண்டோ | திருப்பல்லாண்டோடொத்ததொரு பிரபந்தந்தானுண்டோ (இல்லை.) |
| பைதல் நெஞ்சே | பேதை மனமே! |
| நீ உணர்ந்து பார் | இதை நீ விமர்சித்து அறிவாயாக. |

* * * இப்பாட்டின் மூன்றுமடியில் "அவர் செய் கலையை" என்று பலரும் ஓதிவரும் பாடம் மறுக்கவும் மறக்கவும் தக்கது. அது அநந்விதம். ... .... 20

ஆண்டாள் மதுரகவிகள் உடையவர் இம்மூவருடைய அவதார நாட்களை இனிக் கூறுவேனெனல்

ஆழ்வார்திருமகளாராண்டாள்*மதுரகவி
யாழ்வாரெதிராசராமிவர்கள்—*வாழ்வாக
வந்துதித்தமாதங்கள் நாள்கள் தம்மின்வாசியையும்*
இந்தவுலகோர்க்குரைப்போம்யாம். 21

| | |
|---|---|
| ஆழ்வார் திருமகளார் ஆண்டாள் | (கீழ்ச் சொன்ன) ஆழ்வாருடைய பெண்பிள்ளையான ஆண்டாளென்ன |
| மதுரகவியாழ்வார் | மதுரகவியாழ்வாரென்ன |
| எதிராசர் ஆம் இவர்கள் | எம்பெருமானாரென்ன ஆகிய இம்மூவரும் |
| வாழ்வு ஆக | லோகோஜ்ஜீவனார்த்தமாக |
| வந்து உதித்த | இங்கு வந்து தோன்றப்பெற்ற |
| மாதங்கள் நாள்கள் தம்மின் வாசியையும் | மாஸ நக்ஷத்ரங்களின் வைலக்ஷண்யத்தையும் |
| இந்த உலகோர்க்கு | இவ்வுலகத்தவர்களுக்கு |
| யாம் உரைப்போம் | இனி யாம் எடுத்துரைப்போம். |

* * * பொய்கையார் முதலானவர்கள் எம்பெருமானது திருக்குணக்கடலில் ஆழ்ந்ததனால் ஆழ்வார்களென்று பெயர்பெற்றதுபோல, மதுரகவிகள் நம்மாழ்வாருடைய குணக்கடலில் ஆழ்ந்ததனால் இவரும் ஆழ்வாரெனப் பெற்றாரென்க. ஆண்டாளும் மதுரகவிகளும் திவ்வியப் பிரபந்தங்களருளிச் செய்தமைபற்றி இவர்களுக்கும் திருநாள்பாட்டு இட்டருளவேண்டியதாயிற்று. எம்பெருமானார் "தமிழ் மறைகளாயிரமும் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்றபடி அருளிச் செயல்களை வளர்த்த, தாயாதலாலும் அவர் விஷயமான நூற்றந்தாதிப்பிரபந்தம் அவதரித்திருத்தலாலும் அவர்க்கும் திருநாள்பாட்டு இட்டருளவேண்டியதாயிற்று. திருவரங்கத்தமுதனார் பிரபந்தம் பணித்தவராயிருந்தாலும் அவர்க்கு அர்ச்சைத்திருக்கோலம் அமைந்திலதாதலால் நாள்பாட்டு ஸேவிக்கப்ரஸக்தியில்லையென்று விடப்பட்டது. ஆழ்வார்திருமகளார்-ஆழ்வார்களெல்லார்க்கும் திருமகளான என்னவுமாம். 21

ஆண்டாளுடைய திருநாள் கூறுதல்

இன்றோ திருவாடிப்பூரம்*எமக்காக
வன்றோ இங்காண்டாளவதரித்தாள்—*குன்றாத
வாழ்வான வைகுந்தவான்போகந்தன்னையிகழ்ந்து*
ஆழ்வார்திருமகளாராய். 22

| | | | |
|---|---|---|---|
| இன்றோ திரு ஆடி பூரம் | திருவாடிப்பூர மென்னும் திருநாள் இன்றைக் கன்றோ; | இங்கு | இவ்விருள் தருமா ஞாலத் திலே |
| ஆண்டாள் | சூடிக் கொடுத்த நாச்சியார் | ஆழ்வார் திருமகளார் ஆய் | பெரியாழ்வாரது புதல்வி யாய் |
| குன்றாத வாழ்வு ஆன | நித்ய ஸ்ரீயான | எமக்காக அன்றோ அவதரித்தாள் | நம் போல்வாருடைய உஜ்ஜீவனத்திற்காகவன்றோ திருவவதாரம் செய் தாள். |
| வைகுந்தம்வான் போகம் தன்னை இகழ்ந்து | ஸ்ரீ வைகுண்டத்திலுள்ள திவ்ய போகத்தையும் விட்டு | | |

* * * எம்பெருமான் இந்நிலத்தில் திருவவதரித்து கீதோபநிஷத்தைத் தன் முகத்தாலே வெளியிட்டருளி உபகரித்தான்; அது வடமொழியாயும் கஹநமாயுமிருப்பதனால் அனைவர்க்கும் ஒருங்கே பயன்படவில்லை; இக்குறை தீரப் பெரியபிராட்டியார் தாம் வந்து திருவவதரித்து "வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ்" என்று புகழத்தக்கதான திவ்வியப் பிரபந்தத்தை எளிய தமிழ் நடையில் உபகரித்து அஸ்மதாதிகளைஉய்வித்தாள் என்பது இங்கு உணரத்தக்கது. .... .... .... .... .... 22

ஆண்டாளுக்கும் அவளுடைய நன்னாளுக்கும் ஒப்பில்லை யெனல்

பெரியாழ்வார்பெண்பிள்ளையாய் ஆண்டாள்பிறந்த*
திருவாடிப்பூரத்தின் சீர்மை—*ஒருநாளைக்
குண்டோ மனமேயுணர்ந்துபார்* ஆண்டாளுக்
குண்டாகி லொப்பிதற்குமுண்டு. 23

| | | | |
|---|---|---|---|
| ஆண்டாள் | சூடிக்கொடுத்த நாச்சியார் | மனமே உணர்ந்து பார் | நெஞ்சே! இதை ஆராய்ந்து காண்; |
| பெரியாழ்வார் பெண் பிள்ளை ஆய் | பெரியாழ்வார் திருமகளாக | | |
| பிறந்த | அவதரிக்கப் பெற்ற | ஆண்டாளுக்கு ஒப்பு உண்டாகில் இதற்கும் ஒப்பு உண்டு | ஆண்டாளோடொத்த வ்யக்தியுண்டாகில் இந்நாளோடொத்த நாளும் வேறொன்று இருக்கும். |
| திரு ஆடி பூரத்தின் சீர்மை | திருவாடிப்பூர நன்னாளின் பெருமை | | |
| ஒரு நாளைக்கு உண்டோ | மற்றொரு நாளைக்கு உளதோ? | | |

* * * முதலடியில் "பெண்பிள்ளை" என்கிற சொல் 'பெண் பிளை' எனத் தொக்கிருப்பதாகக் கொள்ளவேணும்; இல்லையேல் வெண்டளை பிறழும். ... .... 23

ஆண்டாள் பெருமைகூறுதல்

அஞ்சுகுடிக்கொருசந்ததியாய்* ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்குந்தன்மையளாய்—*பிஞ்சாய்ப்
பழுத்தாளையாண்டாளைப் பத்தியுடன்நாளும்*
வழுத்தாய்மனமேமகிழ்ந்து. 24

| | | | |
|---|---|---|---|
| அஞ்சு குடிக்கு | (1) ஐந்து குடும்பங்களுக்கு, (2) எம்பெருமானுக்கு என்ன தீங்குவருகிறதோ வென்று அஞ்சுகின்ற (ஆழ்வார்கள் பதின்மரின்) குடிக்கு | விஞ்சிநிற்கும் தன்மையள் ஆய் | அதிசயித்திருக்கு மியல்வினளாய் |
| | | பிஞ்சு ஆய் பழுத்தாளை | இளம் பிராயத்திலேயே அன்பு முதிரப்பெற்ற |
| ஒரு சந்ததி ஆய் | ஒரு புதல்வியாய் தோன்றி | ஆண்டாளை | சூடிக்கொடுத்த நாச்சியாரை |
| | | மனமே | நெஞ்சே! |
| | | மகிழ்ந்து | உகந்து |
| ஆழ்வார்கள் தம் செயலை | ஆழ்வார்களின் படியை | பத்தி உடன் | பக்தியோடு |
| | | நாளும்வழுத்தாய் | எப்போதும் துதிப்பாயாக. |

* * *:—இப்பாட்டில் முதலடி சிலேடையாக அமைந்தது. "அஞ்சு குடிக்கு" என்றது ஐந்து குடும்பங்களுக்கு என்றும், அஞ்சுகின்ற குடும்பத்திற்கு என்றும் பொருள்படும். ஐந்து குடும்பங்கள் எவையென்னில்; ஆண்டாளுக்கு முன்னே அவதரித்த ஏழு ஆழ்வார்களின் குடி ஐந்தாகும்; எங்ஙனே யென்னில்; முதலாழ்வார்கள் மூவரும் சேர்ந்து ஒரு குடி [அயோநிஜ குடும்பம்] என்க; இரண்டாவது திருமழிசையாழ்வாரது குடி; மூன்றுவது நம்மாழ்வாரது குடி; நான்காவது குலசேகராழ்வாரது குடி; ஐந்தாவது பெரியாழ்வாரது குடி.. ஆக அஞ்சு குடிக்கு மாக ஆண்டாளொருத்தியே ஸந்தானமாகத் தோன்றின ளென்கை.

ஆண்டாளுக்குப் பிறகு அவதரித்தருளின தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பாணுழ் வார் கலியன் ஆகிய மூவர்க்குங்கூட இவளே சந்ததி என்கிற பொருளும் விளங்கக் குறையில்லை; எங்ஙனனே யென்னில், அஞ்சு குடியென்பதற்கு அஞ்சுகின்ற குடி யென்றும் பொருள் படுத லால் ஆழ்வார்கள் பதின்மரையும் இச்சொல்லால் ஸங்க்ரஹிக்கக் குறையில்லை. எம்பெருமா னுக்கு என்ன அபாயம் நேருமோ! என்று அஞ்சுகை பதின்மர்க்கும் உளதாதலால் அப்பதின் மரையும் அஞ்சுகுடியென்னத் தட்டில்லை; ஆகவே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் ஆண்டாளொ ருத்தியே புதல்வியாகத் தோன்றியவள் என்கிற பரமார்த்தமும் தெரிவிக்கப்பட்டதாயிற்று. *ப்ரஜயா பித்ருப்ய:* என்று வேதத்தில் ஓதப்பட்டதொரு கடனும் ஆழ்வார்கட்கு ஆண்டாளால் தீர்ந்த தென்கை.

ஆழ்வார்கள் இயற்கையிலே ஆண்களாய்ப் பிறந்து பெண்மையை ஏறிட்டுக்கொண்டு பேசினார்கள்; ஆண்டாள் அப்படியல்லாமல் இயற்கையிலேயே பெண்ணாய்ப் பிறந்து புருஷோத் தமனை யநுபவிக்குந் திறத்தில் சிறந்த வுரிமையுடையளானதுபற்றி "ஆழ்வார்கள் தஞ் செயலை விஞ்சி நிற்குந் தன்மையளாய்" என்றருளிச்செயலாயிற்று. இவள் பருவம் நிரம்புவதற்கு முன்னமே *வானிடை வாழுமவ்வானவர்க்கு* என்பது முதலான பாசுரங்களில் தானே பணித்தபடி பகவத்விஷயத்தில் அன்பு அதிகரிக்கப்பெற்றவளாதலால் "பிஞ்சாய்ப் பழுத்தாள்" எனப்பட்டாள். "அவரைப்பிராயந்தொடங்கி" என்றதும் காண்க. வழுத்துதல்—துதித்தல். 24

### மதுரகவியாழ்வாரின் திருநாள் கூறுதல்

ஏரார்மதுரகவி யிவ்வுலகில்வந்துதித்த*
சீராரும்சித்திரையில்சித்திரைநாள்—*பாருலகில்
மற்றுள்ளவாழ்வார்கள் வந்துதித்தநாள்களினும்*
உற்றதெமக்கென்றுநெஞ்சேயோர். 25

| | | | |
|---|---|---|---|
| ஏர் ஆர் மதுரகவி | சிறப்புப் பொருந்திய மதுர கவிகள் | மற்றுள்ள ஆழ் வார்கள் | பொகையார் முதலான மற்ற ஆழ்வார்கள் |
| இ உலகில் வந்து உதித்த | இந்நிலத்தில் வந்து தோன் றப்பெற்ற | வந்து உதித்த நாள்களினும் | வந்துதோன்றிய நாள்களிற் காட்டி லும் |
| சீர் ஆரும் சித் திரையில் சித் திரை நாள் | சிறப்புடைய சித்திரை மாதத்துச் சித்திரை நக்ஷத்திரமானது (எப்படிப்பட்ட தென்றால்) | எமக்கு உற்றது | நமக்கு மிகவும்உபாதேய மானது |
| பார் உலகில் | பூலோகத்தில் | என்று நெஞ்சே ஓர் | என்று மனமே! பிரதிபத்தி பண்ணுவாயாக. |

* * *:—ஸ்ரீவசன பூஷணத்தில் நான்காம் பிரகரணத்தில் "உண்டபோதொருவார்த்தை யும் உண்ணுதபோதொருவார்த்தையும் சொல்லுவார் பத்துப் பேருண்டிறே; அவர்கள் பாசுரங் கொண்டன்று இவ்வர்த்த மறுதியிடுவது; அவர்களைச் சிரித்திருப்பாரொருவருண்டிறே; அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்த மறுதியிடக் கடவோம்" என்று மதுரகவிகளுக்கு ஏற்றம் சொல்லப் பட்டிருப்பதால் அதை நோக்கி இப்பாசுரம் அவதரித்த தென்க. 'ஆசார்யனே உபாயம்' என் கிற அர்த்தம் இவருடைய திவ்யப்பிரபந்தமான கண்ணிநுண் சிறுத்தாம்பினாலேயே அறுதி யிடப்படுமாதலால் இவ்வேற்றம் தகும்.

### மதுரகவிகளின் பிரபந்தம் நாலாயிரத்தினுள் சேர்ந்தமை கூறுதல்

வாய்த்ததிருமந்திரத்தின் மத்திமமாம்பதம்போல்*
சீர்த்த மதுரகவி செய்கலையை—*ஆர்த்தபுகழ்
ஆரியர்கள்தாங்கள் அருளிச்செயல்நடுவே*
சேர்வித்தார் தாற்பரியம்தேர்ந்து. 26

| | | | |
|---|---|---|---|
| வாய்த்த | நமக்கு ஏற்றதான | ஆரியர்கள் தாங்கள் | பூருவாசாரியர்கள் |
| திருமந்திரத்தில் | அஷ்டாக்ஷரமஹாமந்த்ரத்தில் | அருளிச் செயல் நடுவே | நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களோடே |
| மத்திமம் ஆம் பதம் போல் | இடையிலுள்ளதான நம: பதம் போன்றதாக | சேர்வித்தார் | சேர்த்தருளினார்கள்; (எதனாலே யென்னில்) |
| மதுரகவி செய் | மதுரகவிகள் செய்தருளின | | |
| சீர்த்த கலையை | திவ்வியப் பிரபந்தத்தை | தாற்பரியம் தேர்ந்து | அந்தக் கண்ணிநுண் சிறுத்தாம்பு பிரபந்தத்தின் கருத்தை நோக்கியாம். |
| ஆர்த்த புகழ் | நிறைந்த புகழையுடையரான | | |

* * *—ஆழ்வார்களருளிச் செய்த திவ்வியப் பிரபந்தங்களெல்லாம் எம்பெருமானுடைய ஸ்வரூபரூப குணவிபூதி சேஷ்டிதங்களைப் பாக்கப்பேசுவன; அப்படிப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களினிடையே ஆழ்வார்தோத்திரமான இவரது பிரபந்தம் சேருவதற்கு நியாயமில்லையேயென்று சிலர் சங்கிக்கக் கூடுமாதலால் அன்னவர்கட்குத் தெளிவு பெறுத்துமிப்பாசுரம். ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களெல்லாம் பெரும்பாலும் திருமந்திரம் த்வயம் சரமச்லோகம் ஆகிய ரஹஸ்யத்ரயத்தின் பொருள்களையே விவரிப்பனவாகும்; அதில் திருமந்திரத்தில் நடுவேயுள்ளதான நம:பதத்தில் நம் ஆசாரியர்கள் முக்கியமாக பாகவத சேஷத்வத்தை அநுஸந்தித்துப் போருவர்கள். இவ்விஷயம் முமுக்ஷுப்படியிலும் அதன் வியாக்கியானத்திலும் விசதம். அப்படிப்பட்ட பாகவத சேஷத்வத்தையே கனக்கப் பேசுமதான கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆழ்வாரருளிச்செயல்களிடையே சேர்ந்து திகழவேண்டுவது அவசியம் என்று நம் ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றினார்களென்றதாயிற்று. ... .... .... 26

### எம்பெருமானார் திருநாள் கூறுதல்

இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்ததிருவாதிரைநாள்*
என்றையினுமின்றிதனுக்கேற்றமென் தான்—*என்றவர்க்குச்
சாற்றுகின்றேன்கேண்மின் எதிராசர்தம்பிறப்பால்*
நாற்றிசையும்கொண்டாடும்நாள். 27

| | | | |
|---|---|---|---|
| உலகீர் | உலகத்தவர்களே! | | |
| இன்று | இந்நாள் | | |
| சித்திரையில்ஏய்ந்த | சித்திரை மாதத்தில் பொருத்தம் பெற்ற | சாற்றுகின்றேன் | விடை கூறுகின்றேன்; |
| | | கேண்மின் | கேளுங்கள்; |
| திரு ஆதிரை நாள் | திருவாதிரை நக்ஷத்திரம் | எதிராசர் தம் | யதிராஜரான உடையவருடைய |
| என்றையினும் | மற்றுமுள்ள தினங்களைக் காட்டிலும் | பிறப்பால் | திருவவதாரத்தினால் |
| இன்று இதனுக்கு | இற்றை நாளுக்கு | நால் திசையும் | நாலு திசைகளிலுமுள்ளவர்கள் |
| ஏற்றம் என் தான் என்றவர்க்கு | சிறப்பு என் கொல்? என்று கேட்பவர்களுக்கு | கொண்டாடும் நாள் | கொண்டாடுகின்ற நாளாமிது. |

ஆழ்வார்கள்தாங்கள் அவதரித்தநாட்களினும்*
வாழ்வானநாள்நமக்கு மண்ணுலகீர்—*ஏழ்பாரு
முய்யவெதிராசருதித்தருளும்*சித்திரையில்
செய்ய திருவாதிரை. 28

| | | | |
|---|---|---|---|
| மண் உலகீர் | மண்ணுலகத்தவர்களே ! | ஏழ் பாரும் உய்ய | உலகமெல்லாம் உஜ்ஜீவிக்கும்படி |
| ஆழ்வார்கள் தாங்கள் | பொய்கையார் முதலான ஆழ்வார்கள் | எதிராசர் உதித்தருளும் | எம்பெருமானார் திருவவதரிக்கப்பெற்ற |
| அவதரித்த நாட்களினும் | அவதரிக்கப்பெற்ற நாட்களைவிட | சித்திரையில் செய்ய திரு ஆதிரை | சித்திரைமாதத்தில் சிறப்புடைத்தான திருவாதிரையேயாம். |
| நமக்கு வாழ்வு ஆன நாள் | நமக்கு விசேஷித்து உஜ்ஜீவன ஹேதுவான நாள் (எது வென்றால்) | | |

* * *ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்த மாத்திரமே; அவற்றைப் பலபடிகளாலும் வளர்த்தருளினவர் எம்பெருமானரே யாதலாலும், இவ்விஷயத்தை அக்காலத்திலேயே "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" "எங்கள் கதியே இராமாநுச முனியே! சங்கை கெடுத்தாண்டதவராசா! பொங்குபுகழ் மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும் தங்குமனம் நீயெனக்குத் தா" என்பவை முதலான தனியன்களால்பூருவர்கள் வெளியிட்டிருந்ததனுலும், பெற்றவர்களைக்காட்டிலும் வளர்த்தவர்களுக்கேபெருமை பொருந்துமாதல்பற்றி இப்பாசுரம்மிகப்பொருத்தமாக அமைந்தது.

எந்தையெதிராசர் இவ்வுலகிலெந்தமக்கா*
வந்துதித்த நாளென்னும் வாசியினல்—*இந்தத்
திருவாதிரைதன்னின் சீர்மைதனைநெஞ்சே*
ஒருவாமலெப்பொழுதுமோர். 29

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே! | இந்த திரு ஆதிரை தன்னின் | இந்தத் திருவாதிரைத் திருநாளினுடைய |
| எந்தை எதிராசர் | அஸ்மதாசார்யரான எம்பெமானர் | சீர்மை தனை | சிறப்பை |
| இ உலகில் | இந்நிலவுலகத்தில் | ஒருவாமல் | இடைவிடாமல் |
| எம் தமக்கு ஆ | நமக்காகவே | எப்பொழுதும் | ஸதாகாலமும் |
| வந்து உதித்த நாள் என்னும் வாசியினல் | வந்து தோன்றப்பெற்ற திருநாளென்கிற வைலக்ஷண்யத்தைக் கொண்டு | ஓர் | சிந்தித்திரு. |

* * *ஆதிசேஷனே எம்பெருமானராகத் திருவவதரித்தருளினர்; இவர் நலமந்தமில்லதோர்நாட்டிலே* சென்றால்குடையாம் இருந்தால்சிங்காசனமாம்* இத்யாதிப்படியே எம்பெருமானுக்குஸகலவித கைங்கரியங்களும் செய்துகொண்டுவாழ வேண்டியிருக்க, அதைவிட்டுப் பலபல கஷ்டங்களுக்குஆஸ்பதமான இவ்விருள் தருமாஞாலத்திலே அவதரித்தருளினது நித்யஸம்ஸாரிகளான நம்போல்வாரைப் பிறவிக் கடலில் நின்றும் கை கொடுத்தெடுப்பதற்காகவே யென்று அநுஸந்தித்து இவரது திருநாளைக் கொண்டாடவேணுமென்றாயிற்று. .... 29

முதலாழ்வார்கள் கலியன் திருப்பாணழ்வாராகிய இவர்களின்திருவவதார ஸ்தலங்கள் கூறுதல்.

எண்ணரும்சீர்ப்பொய்கைமுன்னேர் இவ்வுலகில்தோன்றியவூர்*
வண்மைமிகுகச்சிமல்லைமாமயிலை—*மண்ணியினீர்
தேங்குங்குறையலூர் சீர்க்கலியன்தோன்றியவூர்*
ஓங்குமுறையூர்பாணனூர். 30

எண்ண அருசீர் — எண்ணமுடியாத திருக்குணங்களையுடைய
பொய்கை முன்னோர் — பொய்கையார் பூதத்தார் பேயார் மூவரும்
இ உலகில் தோன்றிய ஊர் — இந்நிலத்தில் அவதரிக்கப் பெற்ற தலங்கள் எவை யென்றால்,
வண்மை மிகு கச்சி மல்லை மா மயிலை — (முறையே) அழகிய காஞ்சீ நகரமும் திருக்கடல் மல்லையும் மயிலையுமாம்;
மண்ணியின் நீர் தேங்கும் குறையலூர் — மண்ணியாற்றின் தீர்த்தம் வந்து தேங்குமிடமான திருக்குறையலூரானது
சீர் கலியன் தோன்றிய ஊர் — சீர்மை மிக்க திருமங்கையாழ்வார் அவதரித்த தலம்;
ஓங்கும் உறையூர் — உயர்ந்த உறையூரானது
பாணன் ஊர் — திருப்பாணாழ்வார் திருவவதரித்த தலம்

தொண்டரடிப்பொடியாழ்வார் குலசேகராழ்வார்களின் திருவவதார ஸ்தலம் கூறுதல்.

தொண்டரடிப்பொடியார் தோன்றியவூர்*தொல்புகழ்சேர்
மண்டங்குடியென்பர் மண்ணுலகில்—*எண்டிசையும்
ஏத்தும்குலசேகரனூரெனவுரைப்பர்*
வாய்த்ததிருவஞ்சிக்களம். 31

தொல் புகழ் சேர் — நித்தியமான புகழையுடைய
மண்டங்குடி — திருமண்டங்குடி யென்கிற பதியை
தொண்டரடிப் பொடியார் தோன்றிய ஊர் என்பர் — தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்த தலமென்பர் பெரியார்;
வாய்த்த — அடியார்கள் ஈடுபடத்தக்க
திருவஞ்சிக்களம் — திருவஞ்சிக்களமென்கிற பதியை
எண் திசையும் ஏத்தும் — எட்டுத் திசையிலுமுள்ளாரும் துதிக்கும்படியான
குலசேகரன் ஊர் என உரைப்பர் — குலசேகராழ்வார் தோன்றிய தலமென்பர்.

திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் பெரியாழ்வார்களின் திருவவதார ஸ்தலம் கூறுதல்.

மன்னுதிருமழிசை மாடத்திருக்குருகூர்*
மின்னுபுகழ்வில்லிபுத்தூர் மேதினியில்—*நன்னெறியோர்
ஏய்ந்தபத்திசாரரெழில்மாறன் பட்டர்பிரான்*
வாய்ந்துதித்தவூர்கள்வகை. 32

மேதினியில் — இந்நிலவுலகில்
மன்னு திருமழிசை — நித்திய ஸ்ரீயான திருமழிசையும்
மாடம் திருகுருகூர் — மாடங்கள் சூழ்ந்த திருநகரியும்
மின்னு புகழ் வில்லிபுத்தூர் — விளங்கும் புகழையுடைய ஸ்ரீ வில்லிபுத்தூரும் (ஆகிய இம்மூன்று திருப்பதிகள்) (முறையே)
நல் நெறியோர் ஏய்ந்த பத்திசாரர் — ஸன்மார்க்க நிஷ்டர்கள் சேரும் திருமழிசையாழ்வாரென்ன,
எழில் மாறன் — அழகிய நம்மாழ்வாரென்ன
பட்டர்பிரான் — பெரியாழ்வாரென்ன ஆகிய இம்மூவரும்
வாய்ந்து — இவ்வுலகத்தைக் காப்பதற்கு பொருத்தமாக
உதித்த ஊர்கள் வகை — அவதரிக்கபெற்ற திவ்ய தேசங்களாம்.

ஆண்டாள் மதுரகவிகள் உடையவர்களின் அவதாரஸ்தலங்கள் கூறுதல்

சீராரும் வில்லிபுத்தூர் செல்வத்திருக்கோளூர்*
ஏரார்பெரும்பூதூரென்னுமிவை—*பாரில்
மதியாருமாண்டாள் மதுரகவியாழ்வார்*
எதிராசர் தோன்றியவூரிங்கு. 33

| | | | |
|---|---|---|---|
| பாரில் | இவ்வுலகில் | மதி ஆரும் ஆண்டாள் | ஞானம் நிரம்பிய ஆண்டாளும் |
| சீர் ஆரும் வில்லி புத்தூர் | ஸ்ரீவில்லிபுத்தூர் | மதுரகவி யாழ்வார் | மதுரகவியாழ்வாரும் |
| செல்வம் திரு கோளூர் | ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீமல்கிய திருக்கோளூர் | எதிராசர் | உடையவரும் |
| ஏர் ஆர் பெரும்பூதூர் என்னும் இவை | ஸ்ரீபெரும்பூதூர் என்று சொல்லப்படுகிற இத் தலங்கள் (முறையே) | இங்கு தோன்றிய ஊர் | இவ்வுலகில் வந்து அவதரித்த திருப்பதிகளாம். |

* * *—திவ்யப் பிரபந்தங்களை யருளிச் செய்தவர்கள் விஷயமாகத் தெரிவிக்கவேண்டிய மாஸ—நக்ஷத்ர—அவதார ஸ்தலங்களை இந்தப்பாசுரத்தோடு அருளிச் செய்து தலைக்கட்டினாராயிற்று. திருவரங்கத்தமுதனா ரருளிச் செய்த இராமாநுச நூற்றந்தாதியைப்பற்றி இதில் ஒன்றும் அருளிச் செய்யாமையாலே அந்தப் பிரபந்தம் நாலாயிரத்தினுள் சேர்ந்ததாக அக்காலத்தில் கொள்ளப்படவில்லை யென்று தெரிகிறது. ஆனதுபற்றியே அப்பிள்ளையென்னுமாசிரியர் அந்த நூற்றந்தாதியைத் தவிர்த்தே நாலாயிரக் கணக்கு இட்டருளினர் போலும் மணவாளமாமுனிகள் தாமே நூற்றந்தாதியை நாலாயிரதிவ்யப்ரபந்தங்களோடொப்ப ஆதரிக்கவேணுமென்றும், திருக்கார்த்திகைமுதலாகக் கொள்ளும் அநத்யயன நியமம் இந்த நூற்றந்தாதிக்கும்சேர்த்துக் கொள்ளப்படவேணுமென்றும் நியமித்தருளினரென்று பெரியார்பணிக்கக் கேட்டிருக்கை. ... ... ... 33

அருளிச்செயல்களுக்கு அவதரித்த வியாக்கியானங்களைப்பற்றிக் கூறுவோமெனல்.

ஆழ்வார்களேற்றம் அருளிச்செயலேற்றம்*
தாழ்வாதுமின்றியவைதாம்வளர்த்தோர்— *ஏழ்பாரு
முய்ய அவர்செய்தவியாக்கியைக ளுள்ளதெல்லாம்*
வையமறியப்பகர்வோம் வாய்ந்து. 3

4

| | | | |
|---|---|---|---|
| ஆழ்வார்கள் ஏற்றம் | ஆழ்வார்களுடைய வைபவமும் | ஏழ் பாரும் உய்ய | உலகங்களெல்லாம் உஜ்ஜீவிக்குமாறு |
| அருளிச்செயல் ஏற்றம் | அவர்களுடைய திவ்ய ஸூக்திகளின் வைபவமும் | அவர் செய்த | அவ்வாசாரியர்கள் அருளிச் செய்த |
| தாழ்வு ஆதும் இன்றி | ஒருகுறையுமுறுதபடி | வியாக்கியைகள் உள்ளது எல்லாம் | வியாக்கியானங்களெல்லாவற்றையும் |
| அவை | அவற்றை | வையம் அறிய வாய்ந்து பகர்வோம். | உலகத்திலுள்ளார் அறியுமாறு பொருத்தமாகக் கூறுவோமாக. |
| வளர்த்தோர் தாம் | வளர்த்தவர்களான பூருவாசாரியர்களையும் | | |

* *—இதில் மூன்றாமடியில் "அவர்கள் செய்த" என்றோதுவது பொருந்தாது; வெண்டளைபிறழும். 'அவர்செய்த' என்பதே சுத்தபாடம். .... 34

ஆழ்வார்களையுமருளிச்செயல்களையும் கனக்க மதிக்க வேண்டுமெனல்.

ஆழ்வார்களையுமருளிச்செயல்களையும்*
தாழ்வா நினைப்பவர்கள்தாம்*நரகில்—வீழ்வார்க
ளென்றுநினைத்து நெஞ்சே யெப்பொழுதும் நீயவர் பால்*
சென்றணுகக் கூசித் திரி. 35

திருவாய்மொழியாம் நங்கள் வரிவளை யென்பது * காலம்பல சென்றும் காண்பதாணை உங்களோ டெங்களிடையில்லையே *பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு * இத்யாதி பாசுரங்கள் காண்க.

என் சங்கையினல்—என்கிற சங்கையினுலென்றபடி. .... .... 72

அங்கமரர்பேண வவர்நடுவேவாழ் திருமாற்கு*
இங்கோர்பரிவரிலையென்றஞ்ச—* எங்கும்
பரிவருளரென்னப் பயந்தீர்ந்தமாறன் *
வரிகழல்தாள்சேர்ந்தவர்வாழ் வார். 73

| | |
|---|---|
| அங்கு | அந்த நித்யவிபூதியிலே |
| அமரர் | நித்ய ஸூரிகளும் முக்தர்களும் |
| பேண | மங்களாசாஸனம் பண்ணிக் கொண்டிருக்க |
| அவர் நடுவே வாழ் திருமாற்கு | அந்த நித்ய முக்தர்களோடே வாழ்கின்ற ஸர்வேச்வரனுக்கு |
| இங்கு | இந்நிலத்திலே |
| ஓர் பரிவர் இலை என்று | பரிந்து காப்பிடுவார் ஒருவருமில்லையேயென்று |
| அஞ்ச | தாம் பயப்பட, |
| எங்கும் பரிவர் உளர் என்ன | எவ்விடத்திலும் பரிவுள்ளவர்கள் இருக்கின்றார்களென்று எம்பெருமான் கூற (அதனல்) |
| பயம் தீர்ந்த மாறன் | அச்சம் தீரப் பெற்ற ஆழ்வாருடைய |
| வரி கழல் தாள் | வரியையுடைய வீரக்கழலோடே கூடின திருவடிகளை |
| சேர்ந்தவர் | அடைந்தவர்கள் |
| வாழ்வார் | உஜ்ஜீவிக்கப் பெறுவர்கள். |

* * * கீழ்த்திருவாய்மொழியான *நங்கள் வரிவளையில் * ஓர் கோல நீல நன்னெடுங்குன்றம் வருவதொப்பான்* என்று அநுஸந்தித்த அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹ வைலக்ஷண்யத்திலே திருவுள்ளம் சென்று 'இப்படிப்பட்ட ஸௌந்தர்ய' ஸௌகுமார்யங்களுக்குத் தோள்கலமான இவ்வடிவுடனே ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களின் காரியம் செய்கைக்காக, பிரதிகூலர்வர்த்திக்கிற இந்த நிலத்திலே தனியே வந்தவதரித்து ஸஞ்சரிக்கின்றனே. பரிவர் ஒருவருமில்லையே! என்ன தீங்கு நேரிடுமோ!, என்று ஆழ்வார் வயிறெரிந்து பயப்பட, அதற்கு எம்பெருமான் "ஆழ்வீர்! நமக்குப் பரிகைக்கு முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யரும் உண்டு; ஒருகுறையுமில்லை" என்றருளிச்செய்ய, ஆழ்வார் அச்சம் தீர்ந்தாராயிற்று * அங்குமிங்கும் பதிகத்தில். இத்திருவாய்மொழியில்* கலக்கமில்லா நல்தவமுனிவர் கரைகண்டோர் துளக்கமில்லாவானவரெல்லாம் தொழுவார்கள் என்ற பாசுரத்தினல் ஆழ்வாருடைய அச்சம் தீர்ந்தமை அறியத்தக்கது. .... .... .... .... .... 73

வாராமலச்சமினி மால்தன் வலியினையும் *
சீரார் பரிவருடன் சேர்த்தியையும்—* பாருமெனத்
தானுகந்த மாறன்தாள் சார்நெஞ்சே சாராயேல்
மானிடவரைச் சார்ந்து மாய். 74

| | |
|---|---|
| இனி அச்சம் வாராமல் | இனி மேலும் (ஆழ்வார்க்கு அச்சம் மறுவலிடாதபடியாக |
| மால் | ஸர்வேச்வரன் |
| தன் வலியினையும் | தன்னுடைய பராக்ரமங்களையும் |
| சீர் ஆர் பரிவருடன் சேர்த்தியையும் | மேன்மை பொருந்திய அன்பரோடு தான் சேர்ந்திருக்கிறபடியையும் |
| பாரும் என | காட்டிக்கொடுக்க, |
| தான் உகந்த | (அது கண்டு) உகந்தருளின |
| மாறன் தாள் | ஆழ்வாரது திருவடிகளை |
| நெஞ்சே சார் | நெஞ்சமே! அடைந்திடு; |
| சாராய் ஏல் | அங்ஙனம் அடைய மாட்டாயாகில் |
| மானிடவரை சார்ந்து மாய் | ஸம்ஸாரிகளோடே கூடி ஸ்வரூபமழிந்துபோ. |

* * *கீழே *அங்குமிங்கும் பதிகத்தில் ஆழ்வார்க்குண்டான அச்சத்தை எம்பெருமான் ஒருவாறு தீர்த்திருக்கச் செய்தேயும், இன்னமும் இவர்க்கு நம் பக்கல் பரிவின் கனத்தாலே

அச்சம் மறுவலிடக் கூடுமென்றெண்ணி, பிரதிகூலர்க்குக் கணிசிக்கவொண்ணாதபடி அரணுடைத்தான திருச் செங்குன்றூரிலே மஹாசக்திமான்களான மூவாயிரம் வேதியர்கள் பரிந்து நோக்க, அவர்களுடன் தான் சேர்ந்து வாழ்கிறபடியையும் தனக்கு அஸாதாரணமாகவுள்ள வீர்ய பராக்ரமாதி குணஸம்ருத்தியையும் காட்டிக்கொடுக்க, அதனால் அச்சம்கெட்டு அவன்வடிவழகிலே நெஞ்சை வைத்து அநுபவித்து உகந்தாரென்பதைத் தெரிவிப்பதாம் * வார்கடாவருவித் திருவாய்மொழி.

இங்ஙனே யநுபவித்த ஆழ்வாருடைய திருவடிகளைச் சேர்ந்தால்தான் உஜ்ஜீவனம். இல்லையேல் ஸம்ஸாரிகளோடே சேர்ந்து பாழாய்ப்போக வேண்டியது தானென்றாராயிற்று. ... 74

மாயன்வடிவழகைக் காணாத வல்விடா
யாய் * அதறவிஞ்சியழுதலற்றும்—* தூயபுகழ்
உற்றசடகோபனை நாமொன்றிநிற்கும் போதுபகல்*
அற்றபொழுதான தெல்லியாம். 75

| | | | |
|---|---|---|---|
| மாயன் | ஸர்வேச்வரனுடைய | தூய புகழ் உற்ற சடகோபனை | பரிசுத்த கீர்த்திவாய்ந்த ஆழ்வாரை |
| வடிவு அழகை | திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தை | நாம் ஒன்றி நிற்கும் போது | நாம் கிட்டி நின்று அநுபவிக்குங் காலம் எதுவோ அது தான் |
| காணாத | ஸேவிக்கப் பெறாமையாலுண்டான | பகல் | பகலாகும்; |
| வல் விடாயது | மிக்க வருத்தமானது | அற்ற பொழுதானது | அவ்வநுபவம் விச்சேதித்த காலமானது |
| அற விஞ்சி | மிகவும் அதிகரிக்க (அதனால்) | எல்லி ஆம் | காளராத்ரியாகும். |
| அழுது அலற்றும் | அலற்றியழுதவாரன | | |

* * * கீழ்ப்ரஸ்துதமான அநுபவம் மாநஸாநுபவமாத்திரமாய் பாஹ்யஸம்ச்லேஷயோக்ய மல்லாமையாலே மிகவும் நோவுபட்டு காட்டுத்தீகதுவினாற் போலே சாலவும் பரிதபித்து, அவனது வடிவழகைப் பலபடியாக வருணித்துக்கொண்டு பெருங்கூப்பீடாகக் கூப்பிடுகிற திருவாய்மொழி * மாயக்கூத்தாவாமனா வென்பது. .... .... 75

எல்லி பகல்நடந்த விந்தவிடாய் தீருகைக்கு *
மெல்லவந்து தான்கலக்க வேணுமென—* நல்லவர்கள்
மன்னுகடித்தானத்தே மாலிருக்கமாறன் கண்டு
இந்நிலையைச் சொன்னானிருந்து. 76

| | | | |
|---|---|---|---|
| எல்லி பகல் நடந்த | இரவும் பகலும் ஓயாதே வளர்ந்த | நல்லவர்கள் மன்னு | நற்புகழ் வேதியர்கள் நிலைபெற்று வாழ்கிற |
| இந்த விடாய் தீருகைக்கு | கீழ்த்திருவாய்மொழியிலுண்டான வருத்தம் தீர்வதற்காக | கடித்தானத்தே | திருக்கடித்தானத்திலே |
| மெல்ல வந்து தான் கலக்க வேணும் என | பைய வந்து (எம்பெருமான்) தான் ஸம்ச்லேஷிக்க வேணுமென்றெண்ணி | மால் இருக்க | அந்த ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்க |
| | | மாறன் கண்டு | அவ்விருப்பை ஆழ்வார் ஸேவித்து |
| | | இருந்து | நிலைபெற்றிருந்து |
| | | இந்நிலையை சொன்னான். | இந்தச் செய்தியை அருளிச்செய்தார். |

* * * கீழே அநவரதமாக நிகழ்ந்த தம்முடைய பெருவிடாய் கெடும்படி தம்மோடே வந்து ஸம்ச்லேஷிக்க விரும்பி அடுத்தணித்தாகத் திருக்கடித்தானமென்னும் மலைநாட்டுத் திருப்பதியிலே வந்திருந்து தம்பக்கலிலே மிகவும் ஆவல் கொண்டிருக்கிறபடியை அவன் காட்டிக்கொடுக்க, அத்தை அநுஸந்தித்து ஆழ்வார் தாம் ஹ்ருஷ்டராகிற படியைத் தெரிவிப்பதாம் * எல்லியுங்காலையும் பதிகம். .... ... ... 76

இருந்தவன் தான் வந்து இங்கிவரெண்ணமெல்லாம்*
திருந்த விவர் தந்திறத்தே செய்து—* பொருந்தக்
கலந்தினியனாயிருக்கக் கண்டசடகோபர் *
கலந்தநெறி கட்டுரைத்தார் கண்டு. 77

| | | | |
|---|---|---|---|
| இருந்தவன் தான் | திருக்கடித்தானத்திலிருந்த ஸர்வேச்வரனே | பொருந்த கலந்து | ஒரு நீராய்க் கலந்து |
| இங்கு வந்து | இவ்விடத்தேற வந்து | இனியன் ஆய் இருக்க கண்ட | இனிமையோடேயிருக்கும் படியை ஸேவித்த |
| இவர் எண்ணம் எல்லாம் திருந் | இவ்வாழ்வாருடைய மனோரதம் முழுவதும் முற்றுப்பெற | சடகோபர் | ஆழ்வார் |
| | | கலந்த நெறி | அவன் தம்மோடு ஸம்ச்லேஷித்த படியை |
| இவர் தம் திறத்தே செய்து | இவரிடத்தே அருள் செய்து | கண்டு கட்டுரைத்தார் | திருவுள்ளத்தாலே கண்டு அருளிச் செய்தார். |

* * * திருக்கடித்தானத்திலிருப்பைக் கீழ்த்திருவாய் மொழியான * எல்லியுங் காலையில் நாட்டிக் கொடுத்த எம்பெருமான் ஆழ்வாரிருப்பிடத்தளவும் மெள்ள வந்து தன்னை முற்றாட்டாக அநுபவிக்கும் படியாக்கி வைத்து ஒரு நீராகக் கலந்து அத்தாலே தான் இனிமை பெற்றனாயிருக்கிறபடியைக் கண்ட ஆழ்வார் அவன் தம்முடனே வந்து கலந்தபடியைப் பேசினாராயிற்று * இருத்தும் வியந்து பதிகத்தில். .... .... 77

கண்ணிறைய வந்து கலந்த மாலிக்கலவி *
திண்ணிலையாவேணுமெனச் சிந்தித்து —* தண்ணிதெனும்
ஆருயிரினேற்றமது காட்ட ஆய்ந்துரைத்தான் *
காரிமாறன் தன்கருத்து. 78

| | | | |
|---|---|---|---|
| கண் நிறைய வந்து கலந்த மால் | கண்ணார வந்து கலந்த எம்பெருமான் | ஆர்உயிரின் | அருமையான ஆத்மாவினுடைய |
| | | ஏற்றம் அது காட்ட | ஏற்றத்தைக் காட்டிக் கொடுக்க |
| இக்கலவி திண்ணிலை ஆவேணும் என சிந்தித்து | இந்தக் கலவியானது சாச்வதமாயிருக்க வேணுமென்றெண்ணி | காரி மாறன் | ஆராய்ந்து |
| | | ஆய்ந்து | ஆழ்வார் |
| தண்ணிது எனும் | கீழே சிறிய தென்பதாக ஆழ்வார் பேசின | தன் கருத்து உரைத்தான் | தமது திருவுள்ளத்தை அருளிச் செய்தார். |

* * * * இருத்தும் வியந்தென்கிற கீழ்த்திருவாய் மொழியிலே பேருவகையோடேயநுபவிக்கிற வளவில் ஆழ்வார் * சிறியேனுடைச் சிந்தையுள் * என்று தம்முடைய சிறுமையைஅநுஸந்தித்தார்; அதனால் இவர் நைச்யாநுஸந்தானம் பண்ணி அகலக்கூடுமென்றெண்ணின எம்பெருமான் இந்த ஸம்ச்லேஷம் இடையறாது செல்ல வேணு மென்று கருதி,'ஆழ்வீர்! மிகவுயர்ந்தான ஆத்மவஸ்துவை நீர் தண்ணிதாக நினைப்பது தகுதியன்று; இதன் ஏற்றத்தைக் காணீர்' என்று ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டிக்கொடுக்க, இனி நைச்யாநுஸந்தானம் பண்ணி அகலமாட்டாமையாகிற தமது திருவுள்ளத்தை வெளியிட்டாராழ்வார் * கண்கள் சிவந்து பதிகத்தில். "தெருளும் மருளும் மாய்த்தோமே" என்ற பாசுரத்தில் நோக்காக "காரிமாறன் தன் கருத்து ஆய்ந்துரைத்தான்" என்றது. .... ... 78

கருமால் திறத்திலொரு கன்னிகையாம் மாறன் *
ஒருமாகலவியுரைப்பால்—* திரமாக
அந்நியருக்காகா தவன்றனக்கேயாகு முயிர் *
அந்நிலையையோரு நெடிதா. 79

| | |
|---|---|
| கருமால் திறத்தில் | ஸ்ரீகிருஷ்ண பகவான் விஷயத்தில் |
| ஒரு கன்னிகை ஆம் மாறன் | ஒரு கன்னிகையின் தன்மையை யடைந்த ஆழ்வார் |
| ஒரு மா கலவி உரைப்பால் | ஒரு விலக்ஷண ஸம்ச்லேஷ லக்ஷணங்களை (த்தோழி பேச்சாலே) அருளிச் செய்ததனுல் |
| திரம் ஆக | ஸ்திரமாக |
| உயிர் அன்னியருக்கு ஆகாது | ஆத்மா அந்ய சேஷப்படாமல் |
| அவன் தனக்கே ஆகும் அந்நிலையை | அப்பெருமானுக்கே உரித்தாம் நிலையை |
| நெடிது ஆ | தீர்க்கமாக |
| ஓரும் | ஆராய்மின். |

* * * ஆழ்வார் தம்முடைய அநந்யார்ஹத்வத்தைத் தோழி பாசுரத்தாலே வெகு சமத்காரமாக அருளிச் செய்த பதிகம் * கருமாணிக்கமலை யென்பது. பராங்குச நாயகி விவாஹ யோக்யமான பருவம் வாய்ந்தவளாக இருந்ததனுல் அவளுக்கு விவாஹம் நடத்தவேணுமென்று மாதா பிதாக்கள் எண்ணி ஸ்வயம்வரஸந்நாஹம் பண்ணின வளவிலே * அன்றிப்பின் மற்றொருவர்க்கு என்னைப் பேசலொட்டேன் மாலிருஞ் சோலை யெம்மாயற்கல்லால் * மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் * என்னும்படியான தன்மை வாய்ந்திருக்கிற தலைவி அந்த விவாஹ ஸன்னாஹத்தைத் தவிர்க்க வேண்டி ஏற்கனவே தனக்கு எம்பெருமானேடே விவாஹமாய்விட்டதென்பதைத் தன் வாக்காலே சொல்லிக்கொள்ள இயலாதாகையாலே தோழி ஊஹமாகச்சொல்லுகிற பாசுரத்தாலே [ஏற்கனவே கலவி நடந்துவிட்டாப் போலிருக்கிறதே! என்று தெரிவிக்கும் முகத்தாலே] அநந்யார்ஹத்வம் வெளியிட்டபடி.

இப்பாட்டினீற்றடியில் "இந்நிலையை" என்கிற பாடம் தவறு; "அந்நிலையை" என்பதே நன்கு பொருந்தும். ஆ என்பது ஈற்றுச் சீராதலால். .... .... 79

நெடுமாலழகுதனில் நீள்குணத்தில் * ஈடு
படுமாநிலையுடைய பத்தர்க்கு—* அடிமைதனில்
எல்லைநிலம்தானுக வெண்ணினன்மாறன் * அது
கொல்லைநிலமான நிலை கொண்டு. 80

| | |
|---|---|
| நெடுமால் அழகுதனில் | ஸர்வேச்வரனுடைய வடிவழகிலும் |
| நீள் குணத்தில் ஈடு படும் | குண விசேஷத்திலும் ஈடுபடும்படியான |
| மா நிலை உடைய | சிறந்த தன்மையுடையரான |
| பத்தர்க்கு அடிமை தனில் | பாகவதர்களுக்கு அடிமைப் படும் திறத்தில் |
| எல்லை நிலம் தான் ஆக மாறன் எண்ணினன் | சரமாவதி தாஸ்யம் தமக்கேயுள்ளதென்று ஆழ்வார் அத்யவஸாயங் கொண்டார்; (எதனுலே யென்னில்) |
| அது கொல்லை நிலம் ஆன நிலைகொண்டு | அந்த பாகவத சேஷத்வமே இதற்குமேலில்லையென்னலாம் படியான உத்தம புருஷார்த்தமென்று கொண்டு. |

* * * கீழ்த்திருவாய் மொழியாகிற * கருமாணிக்க மலையில் ஆத்மாவுக்குச் சொன்ன பகவதநந்யார்ஹத்வமானது நிலை நிற்பது பாகவத சேஷத்வபர்யந்தமானுல் என னுமிடத்தை யநுஸந்தித்து "அவனுடைய ஸௌந்தர்ய சீலாதிகளில் தோற்று அடிமைபுக்கிருக்கும் பாகவதர்களுக்கு சேஷமாயிருக்குமிருப்பே எனக்குப் புருஷார்த்தம்" என்றறுதியிட்டு அந்தப் பரமார்த்தத்தை * நெடுமாற்கடிமை யெனும் பதிகத்திலே ஆழ்வாருளிச் செய்தாரென்கை.

. கோல்லை நிலம்—இதற்கு மேலாக வொரு நிலமில்லையென்னலாம்படி சரமாவதியானநிலமென்க. இரண்டாமடியில் "பத்தர்" என்றே பாடம் வழங்கிவருகின்றது! 'பத்தர்கரு' என்று ஸ்ரீகோசங்களிற் பெரும்பாலுங் காண்கிற பாடம் மிக அழகியது. அதுவே கொள்ளத்தக்கது.

கொண்டபெண்டிர் தாம்முதலாக் கூறுமுற்றூர் கன்மத்தால்
அண்டினவரென்றே யவரைவிட்டு—*தொண்டருடன்
சேர்க்கும் திருமாலைச் சேருமென்றான் * ஆர்க்குமிதம்
பார்க்கும் புகழ்மாறன் பண்டு. 81

| | | | |
|---|---|---|---|
| ஆர்க்கும் இதம் பார்க்கும் புகழ் மாறன் | அனைவர்க்கும் ஹிதமே சிந்திக்கிற யசஸ்வியான நம்மாழ்வார் | கன்மத்தால் அண்டினவர் என்று | கர்மோபாதியாலே நெருங்குமவர்களத்தனை யென்று கொண்டு |
| பண்டு | முன்பு | அவரை விட்டு | அந்த ஆபாஸபந்துக்களை விட்டு |
| கொண்ட பெண்டிர் தாம் முதலா கூறும் உற்றார் | மனைவி முதலாகச் சொல்லப்படுகிற பந்துவர்க்கமெல்லாம் | தொண்டருடன் சேர்க்கும் திருமாலை | நம்மை பாகவத கோஷ்டியிலே சேர்க்க வல்லவனை ஸர்வேச்வரனை |
| | | சேரும் என்றான் | சேருங்கோளென்று உபதேசித்தார். |

*** தன்னைப் பற்றினாரை பாகவதர்கள் திருவடிகளிலே சேர்த்து ரக்ஷித்தருள வல்ல ஸர்வேச்வரனே ஸகலவிதபந்துவுமாவான்; அல்லாதாரடங்கலும் ஔபாதிகபந்துக்கள்; ஆன பின்பு ஔபாதிக பந்துக்களை விட்டு நிருபாதிக ஸகலவித பந்துவுமான ஸர்வேச்வரனுக்கு அடிமை செய்து உஜ்ஜீவியுங்கோளென்று, அனைவர்க்கும் ஹிதைஷியான ஆழ்வார் உபதேசித்தருளின பதிகம் * கொண்ட பெண்டிரென்பதாம். .... .... 81

பண்டையுறவான பரனைப் புளிங்குடிக்கே
கண்டு * எனக்கெல்லாவுறவின் காரியமும் —* தண்டறநீ
செய்தருளென்றே யிரந்த சீர்மாறன் தாளிணையே *
உய்துணையென் றுள்ளமேயோர். 82

| | | | |
|---|---|---|---|
| பண்டை உறவு ஆன பரனை | அநாதிஸித்தமான ஸம்பந்தத்தையுடையனான பரம புருஷனை | தண்டு அற நீ செய்தருள் என்று | தட்டில்லாமல் நீ செய்தருள வேணும்' என்று |
| புளிங்குடிக்கே கண்டு | திருப்புளிங்குடியிலே ஸேவித்து | இரந்த | பிரார்த்தித்த |
| எனக்கு | 'அடியேனுக்கு | சீர் மாறன் | ஆழ்வாருடைய |
| எல்லா உறவின் காரியமும் | ஸகலவிதமான உறவினுடையவும் காரியங்களை | தாள் இணையே | உபய பாதங்களே |
| | | உய் துணை என்று | நமக்கு உஜ்ஜீவ நோபாய மென்று |
| | | உள்ளமே ஓர் | நெஞ்சே ! நினை. |

*** நிருபாதிக பந்துவான ஸர்வேச்வரனைத் திருப் புளிங்குடியிலே ஸேவித்து எனக்கு ஸகலவித பந்துக்ருத்யமும் நீ செய்தருள வேணும்' என்று ஆழ்வார் பிரார்த்தித்த படியைக் கூறுவதாம் * பண்டை நாளாலே பதிகம். * சோதிவாய் திறந்துன் தாமரைக் கண்களால் நோக்காய் * நின்பாதபங்கயமே தலைக்கணியாய் * என்றிப்படி பாசுரந்தோறும் ஒவ்வொரு வகையான பிரார்த்தனை யிருப்பது காண்க. தண்டு அற— தடையின்றிக்கே; அல்லது. காலதாமதமின்றி. 82

ஓரா நீர் வேண்டினவை யுள்ளதெல்லாம் செய்கின்றேன் *
நாராயணனன்றோ நானென்று—* பேருறவைக்
காட்டவவன் சீலத்தில் கால்தாழ்ந்த மாறனருள் *
மாட்டிவிடும் நம்மனத்து மை. 83

| | | | |
|---|---|---|---|
| நீர் ஓரா வேண்டினவை உள்ளது எல்லாம் | '(ஆழ்வீர் !) நீர் ஆராய்ந்து அபேக்ஷித்தவை யெல்லாவற்றையும் | அவன் சீலத்தில் | அப்பெருமானது சீல குணத்திலே |
| செய்கின்றேன் | நான் தலைக்கட்டித் தருகின்றேன்; | கால் தாழ்ந்த | ஆழங்காற்பட்ட |
| நான் நாராயணன் அன்றோ என்று | 'நான் ஸர்வ சக்தனான நாராயணனன்றோ' என்று (எம்பெருமான்) | மாறன் அருள் | ஆழ்வாருடைய திருவருளானது |
| பேர் உறவை காட்ட | தனது சிறந்த உறவையும் நினைப்பூட்டின வளவிலே | நம் மனத்து | நமது நெஞ்சிலுள்ள |
| | | மை | அஜ்ஞான விருளை |
| | | மாட்டி விடும். | மாளச் செய்துவிடும். |

* * * கீழ்த்திருவாய் மொழியாகிய பண்டை நாளில் எனக்கெல்லாவுறவின் காரியமும் செய்தருளவேணுமென்று இரந்த ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர்! நீர் பிரார்த்திக்க வேணுமோ? நானே 'பிரார்த்தித்துச் செய்ய வேண்டும் படியன்றோ எனக்குண்டான நாராயணத்வப்ரயுக்தமான உதிரத் தெறிப்பு இருப்பது. ஆன பின்பு நானே உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் நிறைவேற்றிக் கொடுக்கிறேன்' என்று எம்பெருமானருளிச் செய்ய, தன் பெறுமை பாராதே என் சிறுமை பாராதே இப்படியருளிச் செய்வதே! இதொரு சீலகுணமிருக்கும்படியென்!, என்று அவனுடைய சீல குணத்திலே யீடுபட்டுப் பேசினது * ஓராயிரமாய் பதிகம்.

ஓரா—செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம். 83

மையார்கண் மாமார்பில் மன்னும் திருமாலை *
கையாழிசங்குடனே காணவெண்ணி— * மெய்யான*
காதலுடன் கூப்பிட்டுக் கண்டுகந்த மாறன்பேர்
ஓதவுய்யுமே யின்னுயிர். 84

| | |
|---|---|
| மை ஆர் கண் மா | மையணிந்த கண்களை யுடையளான பெரிய பிராட்டியானவள் |
| மார்பில் மன்னும் | திருமார்பிலே நித்யவாஸம் பண்ணப் பெற்ற |
| திருமாலை | எம்பெருமானை |
| கை ஆழி சங்குடனே காண எண்ணி | திருக்கை நிறைந்த திருவாழி திருச் சங்குகளுடனே ஸேவிக்க விரும்பி |
| மெய் ஆன காதலுடன் கூப்பிட்டு | உண்மையான அபி நிவேசத்தோடே கூவியழைத்து |
| கண்டு உகந்த | அவ்வாறே ஸேவித்து உள்ளம் பூரித்த |
| மாறன் பேர் ஓத | ஆழ்வாருடைய திருநாமங்களை அநுஸந்திக்கவே |
| இன் உயிர் உய்யும் | விலக்ஷணமான ஆத்ம வஸ்து உஜ்ஜீவிக்கும். |

* * * திருமார்பிலே பிராட்டி திகழ கின்ற திருமாலைத் திருவாழி திருச்சங்குகளுடனே ஸேவிக்க ஆசைப்பட்டு ஆழ்வார் கூப்பிட, தூணிலே தோன்றிச் சிறுக்கனுக்கு உதவினாப்போலே எம்பெருமான் மாநஸமாகத் தோன்றித் தன் குணங்களை யநுபவிப்பிக்க, அத்தை யநுபவித்து உகந்தபடியைக் கூறுவதாம் * மையார் கருங்கண்ணிப் பதிகம்.

மா—ஸ்ரீ மஹா லக்ஷ்மி; வட சொல். .... .... 84

இன்னுயிர்மால் தோன்றின திங்கென்னெஞ்சிலென்று * கண்ணால்
அன்றவனைக் காணவெண்ணியாண்பெண்ணாய்—* பின்னையவன்
றன்னை நினைவிப்பவற்றால் தான்தளர்ந்த மாறனருள்*
உன்னுமவர்க்குள்ள முருகும். 85

| | |
|---|---|
| இன் உயிர் மால் | எனக்குத் தாரகனான எம்பெருமான் |
| இங்கு தோன்றினது | இப்போது ஸேவை ஸாதித்ததானது |
| என் நெஞ்சில் என்று | எனது நெஞ்சிலே யன்றி ப்ரத்யக்ஷமாக வில்லையே' என்று (வருந்தி) |
| அன்று அவனை கண்ணால் காண எண்ணி | அப்போது அப்பெருமானைக் கண்ணாரக் கண்டநுபவிக்க விரும்பி |
| ஆண் பெண் ஆய் | ஆண் தன்மை குலைந்து பெண் தன்மை யடைந்து |
| பின்னை அவன் தன்னை நினைவிப்பவற்றால் | மேலும் அப்பெருமானை நினைப்பூட்டுகின்ற மேகம் முதலியவற்றால் |
| தான் தளர்ந்த | தளர்ச்சியடைந்த |
| மாறன் அருள் | ஆழ்வாருடைய க்ருபையை |
| உன்னுமவர்க்கு | அநுஸந்திப்பவர்களுக்கு |
| உள்ளம் உருகும். | நெஞ்சு குழையும். |

* * * கீழ்த்திருவாய் மொழியாகிய * மையார் கருங்கண்ணியில் உண்டான அநுபவம் மாநஸாநுபவமாகையாலே அவனை பாஹ்ய காணங்களாலே அநுபவிக்க விரும்பி அப்போதே அந்த விருப்பம் நிறைவேறப் பெறாமையாலே ஒரு பிராட்டி தசையை யெய்தி ஸ்மாரக பதார்த்தங்களாலே [பக்ஷிஸமூஹங்களாலும் மேகஸமூஹங்களாலும்] ஆழ்வார் தளர்ந்த படியைக் கூறுவதாம் * இன்னுயிர்ச் சேவலும் பதிகம். .... .... 85

உருகுமாலென்னெஞ்ச முன்செயல்களெண்ணி *
பெருகுமால் வேட்கையெனப்பேசி —* மருவுகின்ற
இன்னாப்புடனவன்சீ ரேய்ந்துரைத்தமாறன் சொல் *
என்னாச்சொல்லாதிருப்ப தெங்கு. 86

| | |
|---|---|
| உன் செயல்கள் எண்ணி | '(எம்பெருமானே!) உனது சரிதைகளை நினைத்து |
| என் நெஞ்சம் உருகும் | எனது உள்ளம் உருகா நின்றது; |
| வேட்கை பெருகும் என பேசி | (அதற்கு மேலே) ஆசையும் அதிகரித்து வாரா நின்றது' என்று கூறி |
| மருவுகின்ற இன்னாப்புடன் | (கீழே ஸ்மாரக பதார்த்தங்களாலே நோவு பட்டு) அநுவர்த்திக்கின்ற அந்த அவஸாதத்துடனே |
| அவன் சீர் ஏய்ந்து உரைத்த | அப்பெருமானது ப்ரணயித்வ குணத்தைப் பொருத்தமாக எடுத்துரைத்த |
| மாறன் சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியை |
| என் நா | எனது நாவானது |
| சொல்லாது இருப்பது எங்கு | அநுஸந்தியாம லிருப்பது எவ்விடத்தில்? |

* * * கீழ்த்திருவாய்மொழியாகிய * இன்னுயிர்ச் சேவலில், ஸ்மாரகபதார்த்தங்களாலே நோவுபட்டுச் செல்லா நிற்கச் செய்தே, * இருந்தும் வியந்தென்கிற திருவாய் மொழியிலே தலை தடுமாறாகக் கலந்த கலவி நினைவுக்கு வந்து தரிக்க, அதனையருளிச் செய்த திருவாய்மொழியாம் * உருகுமால்நெஞ்சப்பதிகம்.

திருவாய் மொழியில் "உருகுமால் நெஞ்சம்" என்று பாசுரமிருந்தாலும், இங்கு, வெண்பாவாகையாலே வெண்டளைக்குச்சேர "உருகுமால் என்னெஞ்சம்" என்பதே சுத்தபாடமாகும். ... .... ... 86

எங்காதலுக்கடி மாலேய்ந்த வடிவழகென்று *
அங்காது பற்றாசா வாங்கவன்பால் —* எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப்போகவிடும் மாறன்றாள் *
உள்ளினர்க்குத் தீங்கையறுக்கும். 87

| | |
|---|---|
| எம் காதலுக்கு அடி | எமது அன்புக்குக் காரணம் |
| மால் ஏய்ந்த வடிவு அழகு என்று | எம்பெருமானிடத் துள்ள விக்ரஹ ஸௌந்தரியமே என்று அறுதியிட்டு |
| அங்கு ஆது பற்றாசு ஆ | அந்த வடிவழகே ஆலம்பனமாக |
| ஆங்கு அவன் பால் | அப்பெருமானை நோக்கி அவனுறையுமொரு திருப்பதியிலே |
| எங்கும் உள்ள புள் இனத்தை | எவ்விடத்துமுள்ள பறவைக் கூட்டத்தை |
| தூது ஆக போக விடும் | தூதனுப்பின |
| மாறன் தாள் | ஆழ்வாருடைய திருவடிகளானவை |
| உள்ளினர்க்கு தீங்கை அறுக்கும் | தம்மை அநுஸந்தித்தவர்களுடைய தீமைகளைப் போக்கிவிடும். |

* * * கண்ணுற் கண்ட பகுதிகளையெல்லாம் தூது விடுகிற பதிகமாம் * எங்கானலகங் கழிவாயென்பது ஆசார்ய ஹ்ருதயத்தில் "தம்மிழையும் சிறந்த செல்வமும்." இத்யாதி சூர்ணையில் "......ஸௌந்தர்யங்களையுணர்த்தும் வ்யூஹவிபவ பாத்வத்வயார்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்" என்று, ஸௌந்தர்யமே பற்றாசாக இத்திருவாய் மொழியில் தூது விட்டதாக அருளிச் செய்ததற்கேற்ப முன்னடிகள் அருளிச் செய்யப்பட்டன. .... .... 87

அறுக்குமிடரென்றவன்பா லாங்குவிட்டவதூதர்*
மறித்துவரப் பற்றாமனத்தால்* அறப்பதறி
செய்யதிருநாவாயில் செல்லநினைந்தான் மாறன்*
மையலினாற் செய்வறிய ாமல். 88

இடர் அறுக்கும் என்று — நமது துயரங்களைப் போக்கியருள்வனென்று கொண்டு
அவன் பால் ஆங்கு விட்ட தூதர் — அப்பெருமானைக் குறித்து அனுப்பப் பட்ட தூதர்
மறித்து வர பற்று மனத்தால் — மீண்டு வருமளவும் ஆறியிருக்கமாட்டாத திருவுள்ளத்தாலே
அற பதறி — மிகவும் விரைந்து
மையலினால் — அறிவுகலக்கத்தினால்
செய்வு அறியாமல் — செய்ய வேண்டியது இன்னதென்றறியாமல்
மாறன் — ஆழ்வார்
செய்ய திருநாவாயில் — விலக்ஷணமான திருநாவாய்ப் பதியை நோக்கி
செல்ல நினைந்தன் — எழுந்தருள முயன்றார்.

* * * கீழ்த்திருவாய் மொழியாகிய * எங்கானலில் விடப்பட்ட தூதர் அத்தலைப்பட்டு எம்பெருமானுக்கு ஸ்வதசையை யறிவித்து மீண்டு வருவதற்கு முன்னே ஆழ்வார் மிகவும் பதறித் திருநாவாயிலே செல்ல நினைந்த படியைக் கூறுவதாம்* அறுக்கும் வினையாயின பதிகம் ஈற்றடியில் 'செய்வதறியாமல்' என்கிற பாடம் மறுக்கத் தக்கது; தளை தட்டுதலால். செய்வு என்றாலும் செய்வதென்றே பொருள்படும்; "வியாக்கியைகள செய்வால்" என்ற உபதேசரத்னமாலைப் பிரயோகமும் காண்க. ... .... .... 88

மல்லடிமை செய்யும் நாள் மால்தன்னைக் கேட்க * அவன்
சொல்லுமளவும் பற்றாத்தொன்னலத்தால்—* செல்கின்ற
ஆற்றாமைபேசி அலமந்த மாறனருள் *
மாற்றாகப் போகுமென்றன்மால். 89

மல் அடிமை செய்யும் நாள் — பரிபூரணமான கைங்கரியம் செய்யப் பெறுங் காலம் எப்போதோ வென்று
மால் தன்னை கேட்க — எம்பெருமானைக் நோக்கிக் கேட்க
அவன் சொல்லும் அளவும் பற்றா — அப்பெருமான் அறுதியிட்டுச் சொல்லுமளவும் ஆறியிருக்கமாட்டாத
தொல் நலத்தால் — இயற்கையான பக்தியினால்
செல்கின்ற ஆற்றாமை பேசி அலமந்த மாறன் — தமக்கு நிகழ்கின்ற ஆற்றாமையை எடுத்துக் கூறி அலமாப்பை யடைந்த ஆழ்வாருடைய
அருள் மாற்று ஆக — கருணையே மருந்தாக
என்றன் மால் போகும் — எனது அஜ்ஞானம் தொலையும்.

* * * கீழ்த்திருவாய் மொழியாகிய * அறுக்கும் வினையில் * அடியேனணுகப் பெறு நாள் எவைகொலோ * ஓர் நாளறியேனே * நாளேலறியேன் * கண்ணாரக்களிக்கின்றதிங்கென்று கொல்கண்டே * என்றிப்படி பலகால் பேசின ஆழ்வார் நித்ய கைங்கரியம் செய்யப் பெறும் நாள் என்றைக்கென்று எம்பெருமானைக் கேட்க, அவன் அறுதியிட்டுச் சொல்லுமளவும் பொறுத்திருக்கமாட்டாமையினாலே தமக்கு நிகழ்கின்ற ஆற்றாமையைப் பேசின பதிகம் * மல்லிகை கமழ் என்பதாம். 89

மாலுமது வாஞ்சை முற்றும் மன்னுமுடம்பின் முடிவில் *
சாலநண்ணிச் செய்வனெனத் தானுகந்து—* மேலவனைச்
சீரார் கணபுரத்தே சேருமெனும் சீர்மாறன் *
தாராளே நந்தமக்குத் தாள். 90

மால் — எம்பெருமான்
உமது வாஞ்சை முற்றும் — '(ஆழ்வீர்) உம்முடைய அபேக்ஷிதங்களெல்லாவற்றையும்
மன்னும் உடம்பின் முடிவில் — இந்த சரீரத்தின் முடிவிலே
சால நண்ணி செய்வன் என — மிகவும் பொருத்தமாகத் தலைக்கட்டித் தருகிறேன்' என்றருளிச் செய்ய,
தான் உகந்து — தாம் மனமகிழ்ந்து
மேல் அவனை — 'அப் பரம புருஷனை
சீர் ஆர் கணபுரத்தே சேரும் எனும் — திருக்கண்ணபுரத்திற் சென்று ஆச்ரயியுங்கோள்' என்றருளிச் செய்த
சீர்மாறன் — நம்மாழ்வார்
நந்தமக்கு — நமக்கு
தாள் தாராளே — தமது திருவடிகளை ப்ரஸாதித்தருளமாட்டாரோ?

* * * 'நாளேலறியேன்' என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! உமக்கு இந்த தேஹாவஸானத்திலே உம்மைப் பரமபதத்திலே கொண்டு போய் அடிமை கொள்ளக் கடவோம்' என்று நாளிட்டுக்கொடுக்க, அத்தாலே திருவுள்ள முவந்து அப்பெருமானைத் திருக்கண்ணபுரத்திலே சென்று சேருங்கோளென்று பரோபதேசம் பண்ணின பதிகம் * மாலை நண்ணி யென்பதாம். * மரணமானால் வைகுந்தங் கொடுக்கும்பிரான் * என்றதில் நோக்கு. 90

தாளடைந்தோர் தங்கட்குத் தானே வழித்துணையாம் *
காளமேகத்தைக் கதியாக்கி—* மீளுதலாம்
ஏதாமிலாவிண்ணுலகிலேகவேண்ணும் மாறனென*
கேதமுள்ளதெல்லாம் கெடும். 91

| | | | |
|---|---|---|---|
| தாள் அடைந்தோர் தங்கட்கு | தன் திருவடிகளைப் பற்றினவர்களுக்கு | விண் உலகில் | பரமபதத்தில் |
| தானே வழித்துணை ஆம் காளமேகத்தை | தானே மார்க்கபந்துவாகின்ற காளமேகப் பெருமாளை | ஏக எண்ணும் | எழுந்தருள எண்ணின |
| கதி ஆக்கி | வழிக்கு ரக்ஷகனாகக் கொண்டு | மாறன் என | ஆழ்வார் என்று சொன்ன மாத்திரத்திலே |
| மீளுதல் ஆம் ஏதம் இலா | மீட்சியாகிற குற்றமில்லாத | கேதம் உள்ளது எல்லாம் கெடும் | துக்கமென்று பேர்பெற்றவை யெல்லாம் ஒழிந்து போம். |

* * * "மார்க்கபந்து சைத்யம் மோஹநத்தே மடுவிடும்" என்பது ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தி. கீழே * மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான் * என்றபடியே 'தேஹாவஸாநத்திலே பேறு' என்று எம்பெருமான் நாளிட்டுக் கொடுக்கையாலே போக வொருப்பட்டார் ஆழ்வார்; அவர்க்குத் திருமோகூர்க் காள மேகப்பெருமாள் வழித்துணையாக அமைந்தார்; இவ்விஷயம் * தாளதாமரைத் திருவாய் மொழியிலே அருளிச் செய்யப்பட்டது. .... 91

கெடுமிடர் வைகுந்தத்தைக் கிட்டினாற்போல *
தடமுடையனந்தபுரந்தன்னில்—*படவரவில்
கண்டுயில் மாற்காட்செய்யக் காதலித்தான் மாறன் *உயர்
விண்டனிலுள்ளோர் வியப்பவே. 92

| | | | |
|---|---|---|---|
| மாறன் | நம்மாழ்வார் | தடம் உடை அனந்தபுரம் தன்னில் | தடாகங்களையுடைய திருவனந்தபுரத்திலே |
| உயர் விண் தனில் உள்ளோர் வியப்ப | உயர்ந்த பரமபதத்திலுள்ள நித்தியஸூரிகள் ஆச்சரியப்படும்படி | படம் அரவில் கண் துயில் மாற்கு | படமுடைய சேஷன் மீது பள்ளி கொண்டருளும் திருமாலுக்கு |
| கெடும் இடர் வைகுந்தத்தை கிட்டினாற் போல | துக்கமற்றதான ஸ்ரீவைகுண்டத்தை யடைந்து அடிமை செய்யப்பெற்றாற்போல | ஆள் செய்ய காதலித்தான் | அடிமை செய்ய விரும்பினார். |

* * * பரமபதத்தில் போனால் அங்குச் செய்யக்கூடிய கைங்கரியங்களைத் திருவனந்தபுரத்திலே சேஷசாயியான ஸ்ரீபத்மநாபப் பெருமாள் திருவடிகளிலே தாமும் தமருமாகச் சென்று செய்ய விரும்பினபடியைக் * கெடுமிடராய வெல்லா மென்கிற திருவாய் மொழியிலருளிச் செய்தாரென்க. .... .... .... 92

வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை *
தான்மருவாத்தன்மையினால் * தன்னையின்னம்—பூமியிலே
வைக்குமெனச் சங்கித்து மால்தெளிவிக்கத்தெளிந்த *
தக்கபுகழ்மாறனெங்கள் சார்வு. 93

| | | | |
|---|---|---|---|
| வேய் மரு தோள் இந்திரை கோன் | மூங்கில் போன்ற தோள் களையுடையளான பிராட்டிக்கு வல்லபனான எம்பெருமான் | தன்னை இன்னம் பூமியிலே வைக்கும் என சங்கித்து | தம்மை இன்னமும் இந்த ஸம்ஸாரத்திலேயே இட்டுவைக்குமோவென்று அதிசங்கித்து |
| மேவுகின்ற தேசத்தை | எழுந்தருளியிருக்குமிடத்தை | மால் தெளிவிக்க தெளிந்த | எம்பெருமான் தேற்றத் தேறின |
| தான் மருவா தன்மையினால் | தாம்புகப்பெறுமையினாலே | தக்க புகழ் மாறன் | தகுதியான புகழையுடைய ஆழ்வார் |
| | | எங்கள் சார்வு | எமக்குப் புகல். |

* * * தாம் மநோரதித்தபடியே அப்போதே அத்தேசத்திலே போய் அடிமை செய்யப் பெறுமையாலே கலங்கி 'பழையபடியே நமக்கு ஸம்ஸாரத்தி விருப்பே சேஷித்து விடுகிறதோ, என்று, ப்ரக்ருதி ஸம்பந்தத்தின் கொடுமையாலும் ஈச்வரஸ்வாதந்திரியத்தைப் பற்றவும் தமக்குண்டான அதிசங்கையை * வேய்மரு தோளிணைப் பதிகத்திலருளிச் செய்தாரென்க. மேலே சொன்ன அதிசங்கை முகபேதத்தாலே அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. அதாவது—ஒரு படுக்கையிலேகூட விருக்கச் செய்தே பசு மேய்க்கப் போகிற விடியற்காலம் வந்து, அக்காலத்துக்கேற்ற குயில் மயில் முதலானவற்றினுடைய பாடலாடல் முதலான அடையாளங்களையும் காண்கையாலே அவற்றையே கொண்டு 'கண்ணபிரான் பசுமேய்க்கப் போனான்' என்று அதிசங்கை பண்ணி நோவு படுகிற இடைப் பெண்கள் பேச்சாலே அருளிச்செய்ததான * வேய்மரு தோளிணைப் பதிகத்திற்கு ஆழ்வார் தமக்குண்டான அதிசங்கையே உள்ளுறை பொருளாம்.

இதில் பத்தாவது பாட்டில் * செங்கனிவாயெங்களாயர் தேவே* என்றதின் சுவடறிந்து பூருவர்கள் நிர்வஹித்தபடியைத் தழுவி "மால் தெளிவிக்கத் தெளிந்த" என்றருளிச் செய்யப்பட்டது.

.... .... .... ... 93

சார்வாகவேயடியில் தானுரைத்த பத்திதான் *
சீரார் பலத்துடனே சேர்ந்ததனை—* சோராமல்
கண்டுரைத்தமாறன் கழலிணையே நாடோறும் *
கண்டுகக்குமென் னுடையகண். 94

| | | | |
|---|---|---|---|
| அடியில் | ஆரம்பத்தில் * வீடுமின் முற்றத்திலே | சோராமல் உரைத்த | ஒன்றும் குறையாமல் அருளிச் செய்த |
| சார்வு ஆகவே | எல்லார்க்கும் உபாதேயமாகவே | மாறன் | ஆழ்வாருடைய |
| தான் உரைத்த பத்தி தான் | தாமருளிச் செய்த பக்தியானது | கழல் இணையே | உபய பாதங்களையே |
| சீர் ஆர் பலத்துடனே சேர்ந்ததனை கண்டு | சிறந்த பலனோடே சேர்ந்தபடியை யறிந்து | நாள் தோறும் | எப்போதும் |
| | | என்னுடைய கண் | எனது கண்கள் |
| | | கண்டு உகக்கும் | ஸேவித்துக்களிக்கும். |

* * * திருவாய்மொழி யென்பது ஒரு சிறந்த சாஸ்த்ரம். உபக்ரமித்த அர்த்தத்தை உபஸம்ஹாரம் பண்ணுவதென்பது சாஸ்த்ரார்த்தமாகையாலே முதலில் உபக்ரமித்த பக்தியோகத்தை * சார்வே தவநெறிக் கென்கிற திருவாய் மொழியிலே உபஸம்ஹரித்தருளினாரென்கிறது. "பிணக்கறவைச் சார்வாக நிகமித்து" என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியும் காண்க. 94

கண்ணனடியிணையில் காதலுறுவார்செயலை *
திண்ணமுறவே சுருங்கச்செப்பியே—*மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கை தலைக்கட்டினான்மாறன் *
ஆனபுகழ்சேர் தன்னருள். 95

| | |
|---|---|
| கண்ணன் அடி இணையில் | எம்பெருமானது பதவிணையில் |
| காதல் உறுவார் செயலை | பக்தியுடையவர்களின் செய்கையை |
| திண்ணம் உற | திடமாக |
| மாறன் | ஆழ்வார் |
| ஆன புகழ் சேர் தன் அருள் | சிறந்த கீர்த்தியோடே சேர்ந்த தமது க்ருபையினாலே |
| சுருங்க செப்பி | சுருக்கமாக அருளிச் செய்து |
| மண்ணவர்க்கு | இவ்வுலகத்தவர்களுக்கு |
| தான் உபதேசிக் கை தலைக் கட்டினான் | தாம் உபதேசிக்குந் தொழிலை முடித்துக் கொண்டார். |

* * * எம்பெருமான் தம்மைப் பரம பதத்திலே கொண்டு போகப் பதறுகிறபடியைக் கண்டு, சரம தசையிலே புதைத்துக் கிடக்கும் மஹாநிதிகளைப் புத்திரன்முதலானோர்க்குக் காட்டு மாபோலே ஆழ்வாரும் ஒருவருமிழவாதபடி எல்லார்க்கும் ஹிதங்களைச் சுருக்கமாக உபதேசிக்க வேண்டி * கண்ணன் கழலிணைப் பதிகத்திலே * தாள்வாய்மலரிட்டு நாள்வாய் நாடீரே * * பாடீரவன் நாமம் * சுனைநன்மலரிட்டு நினைமின் நெடியானே * என்றிப்படி மனோவாக்காயங்களென்கிற கரணத்ரயத்தாலும் ஆகும் வ்ருத்தியை யுபதேசித்துத் தலைக்கட்டினாராயிற்று.

"செயலைச் சுருங்கச் செப்பி" என்றது 'செய்யவேண்டிய காரியத்தை ஸங்க்ஷேபமாக அருளிச்செய்து' என்றபடி. ... .... ... 95

அருளாலடியிலெடுத்த மாலன்பால் *
இருளார்ந்த தம்முடம்பையிச்சித்து —* இருவிசும்பில்
இத்துடன் கொண்டேக இசைவுபார்த்தேயிருந்த *
சுத்திசொல்லும் மாறன்செஞ்சொல். 96

| | |
|---|---|
| அருளால் | க்ருபையினாலே |
| அடியில் எடுத்த மால் | (ஸம்ஸாரத்தில் நின்றும்) அடியிலே யெடுத்தருளின எம்பெருமான் |
| அன்பால் | ப்ரேம விசேஷத்தாலே |
| இருள் ஆர்ந்த தம் உடம்பை இச்சித்து | ஹேயமான தமது திருமேனியை ஆசைப்பட்டு |
| இருவிசும்பில் | பரமபதத்தில் |
| இத்துடன் கொண்டு ஏக | (தம்மை) இந்த சரீரத்தோடே கொண்டு போக |
| இசைவு பார்த்தே இருந்த | (தமது) அனுமதியை எதிர்பார்த்திருந்த |
| சுத்தி | அவனது சுத்தியை |
| மாறன் செஞ்சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியானது |
| சொல்லும் | தெரிவிக்கும். |

* * * திருவாய்மொழி தொடங்கும் போதே * மயர்வற மதிநலமருளினன் * என்னும் படியாக அடியிலே தம்மை விஷயீகரித்தருளின ஸர்வேச்வரன் தம்மைப் பரமபதத்தேறக் கொண்டு போகத் திருவுள்ளம்பற்றி, இந்த சரமதிருமேனியோடே கொண்டுபோகப் பாரித்து அதற்குத் தம்முடைய இசைவை யெதிர்பார்த்திருந்தமையை ஆழ்வார் * அருள்பெறுவாரடியார் பதிகத்திலே அருளிச் செய்தாரென்க. இப்பதிகத்திலே * இகழ்வின்றி யென்னெஞ்சத் தெப்பொழுதும் பிரியானே * என்ற பாசுரத்தில் நோக்காகவும், மேல் பதிகத்தில் * மங்கவொட்டுன் மாமாயை * என்றதை நோக்கியும் அருளிச் செய்தபடி.

இதில் மூன்றாமடியில் "இவரிசைவு பார்த்திருந்த" என்று சிலர் ஓதும் பாடம் மறுக்கவும் மறக்கவும் தக்கது. அதில் 'இவர்' என்பது அந்வயிக்க வுரியதன்று. இரண்டாமடியில் 'தம்முடம்பை யிச்சித்து' என்றது போலஇங்கும் 'தம்மிசைவு' என்னப் பொருந்துமேயல்லது இவரிசைவு என்னப் பொருந்தாது. இவ்விஷயம் ஆழ்ந்த வ்யுத்பத்தியுடையார்க்கே அவகாஹிக்கும். .... ... .... 96

செஞ்சொற்பரன்றனது சீராரும்மேனிதனில் *
வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின் *—விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக் கைவிடுவித்துக்கொண்ட *
திண்டிறல்மாறன்னந்திரு. 97

| | | | |
|---|---|---|---|
| செஞ்சொல் பரன் | செஞ்சொற்களாலே பிரதிபாதிக்கப்படுகின்ற பரம புருஷன் | அவனை கால் கட்டி | அவன் திருவடிகளைக் கட்டிக்கொண்டு |
| சீர் தனது ஆரும் மேனி தனில் | தம்முடைய சிறந்த திருமேனியிலே | கை விடுவித்துக் கொண்ட | (அவனது மாயவலையினுள் தாம் அகப்படாதபடி) தம்மை விடுவித்துக் கொண்ட |
| வஞ்சித்து செய்கின்ற வாஞ்சை தனின் விஞ்சுதலை கண்டு | வஞ்சனையாகச் செய்கிற விருப்ப மிகுதியைக் கண்டு | திண் திறல் மாறன் | திடமான சக்தியை யுடையரான ஆழ்வார் |
| | | நம் திரு | நமக்குச் செல்வம். |

* * * தம்மோடே வந்து கலந்து தமக்கு விதேயனாய்த் தம் திருமேனியிலே மிகுந்த அபிநிவேசமுடையனாய்த் திருமேனியோடே தம்மைத் திருநாட்டிலேகொண்டு போகவேணுமென்று எம்பெருமான் காட்டுகிற குதூஹலத்தைக் கண்ட ஆழ்வார் 'ஐயோ! இவ்வழுக்குடம்பின் தோஷ மிகுதியை யறியாமல் ராகாந்தனாயிருக்கிற இவனுக்குஇதின் தோஷத்தை யுணர்த்தினேனாகில் இத்தைத் தவிர்வன்' என்று நினைத்து இதின் தோஷங்களை அவனுக்கறிவிக்க, அபிமத விஷயத்தில் அழுக்கு உகப்பாரைப்போல அது தானே அவனுக்கு மேல்விழுகைக்கு உடலாக 'பிரானே! இந்த விஞ்சையை நீ கழித்துக் கொள்ளவே வேண்டும்'' என்று அவனைக் கால் கட்டி அந்த வாஞ்சையை விடுவித்துக் கொண்டாராழ்வார் * செஞ்சொற்கவிகாளென்கிற திருவாய்மொழியிலே.

ஸர்வசக்தனான அவனுடைய பிடிவாதத்தையும் ஆழ்வார் ஸ்வசக்தியாலேமாற்றினாராகலால் 'திண் திறல் மாறன்' என்று மாமுனிகளிடம் விருது பெற்றாரென்க.

* மங்கவொட்டுன் மாமாயை * என்கிற பாசுரம் இத்திருவாய் மொழிக்கு உயிரானது. ''வேர் சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாப்போலே ஜ்ஞாநியை விக்ரஹத்தோடே ஆதரிக்கும்'' என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியும் ''வேர் சூடுவார் மண்பற்றுப்போலே'' என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். .... 97

திருமால் தன்பால் விருப்பம் செய்கின்ற நேர்கண்டு *
அருமாயத்தன் றகல்விப்பானென் —* பெருமால்நீ
இன்றென்பால்செய்வா னென்னென்ன இடருற்று நின்றான் *
துன்னுபுகழ்மாறனைத்தான் சூழ்ந்து. 98

| | | | |
|---|---|---|---|
| திருமால் தன் பால் | ஸர்வேச்வரன் தம்மிடத்து | நீ பெருமால் செய்வான் என் | நீ மிக்க வியாமோஹத்தைச் செய்வானேன்?' |
| விருப்பம் செய்கின்ற நேர் கண்டு | அதிகமான ஆதரம் செய்யும்படியைக் கண்டு | என்ன | என்று (ஆழ்வார்) கேட்க, |
| | | தான் | (அப்போது) எம்பெருமான் தான் |
| அன்று அரு மாயத்து அகல்விப்பான் என் | '(எம்பெருமானே!) இதற்கு முன்பெல்லாம் (என்னை) ப்ராக்ருதியிலே யிட்டு வைத்து அகற்றி விடுவானேன்? | துன்னு புகழ் மாறனை | மிக்க புகழையுடையரான அவ்வாழ்வாரை |
| | | சூழ்ந்து | வளைந்து கொண்டு |
| | | இடர் உற்று நின்றான். | (அவர் கேட்ட கேள்விக்கு விடை சொல்லமாட்டாமல்) தடுமாறி நின்றான். |
| இன்று என் பால் | இப்பொழுது என்னிடத்தில் | | |

* * * எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே அளவுகடந்த அபிநிவேசத்தைக் காட்டத் தொடங்கினான்; அதுகண்ட ஆழ்வார் 'பிரானே! இன்றளவும் என்னைப் படுகுழியிலே தள்ளி வைத்து இன்று இங்ஙனே ஆதரிப்பதற்கு என்ன ஹேது? என்று மடிபிடித்துக்கேட்க,

அதற்கு ஒரு மறுமாற்றமும் சொல்லப் போகாமையாலே எம்பெருமான் தடுமாறி நின்றான்; என்பது * திருமாலிருஞ் சோலைமலை யென்றே னென்கிற திருவாய் மொழியிலருளிச் செய்யப்பட்டதாம். ஆசார்ய ஹ்ருதயத்தின் முடிவில் "இன்று அஹேதுகமாக ஆதரிக்கிற நீ அநாத்ய நாதரஹேது சொல்லென்று மடியைப் பிடிக்க" என்று தொடங்கி விரிவாக அருளிச்செய்துள்ள விஷயங்கள் இங்கே அநுஸந்தேயம். 98

.... ...

சூழ்ந்துநின்ற மால்விசும்பில் தொல்லைவழிகாட்ட *
ஆழ்ந்ததனை முற்றுமநுபவித்து —* வாழ்ந்தங்
கடியருடனே யிருந்தவாற்றை யுரைசெய்தான் *
முடிமகிழ்சேர் ஞானமுனி. 99

| | | | |
|---|---|---|---|
| முடி மகிழ் சேர் ஞானம் முனி | திரு முடியிலே வகுளமாலை யணிந்த ஞானமுனிவராகிய ஆழ்வார் | அதனை முற்றும் ஆழ்ந்து அனுபவித்து | அங்குள்ள அநுபவங்களை யெல்லாம் ஆழ்ந்து அநுபவித்து |
| சூழ்ந்து நின்ற மால் | தம்மைச் சூழ்ந்து நின்ற எம்பெருமான் | அங்கு வாழ்ந்து | அவ்விடத்தே வாஸம் பண்ணி |
| விசும்பில் | பரமபதத்தில் | அடியருடனே இருந்த ஆற்றை | நித்யமுக்தர்களுடனே யிருந்தபடியை |
| தொல்லை வழி காட்ட | அர்சாதி மார்க்கமான அர்ச்சிராதி மார்க்கத்தைக் காட்டிக் கொடுக்க | உரை செய்தான் | அருளிச் செய்தார். |

* * * எம்பெருமான் ஆழ்வாரைத் திருநாட்டிலே கொண்டு போய் வைத்து இவரும் தானுமாக அநுபவிப்பதாய் மநோரதித்து இவர்க்கு அர்ச்சிராதி மார்க்கத்தையும் அங்குள்ளார் பண்ணும் ஸத்கார விசேஷங்களையும் பரமபதப்ராப்தியையும் அங்குநடைபெறும் விசேஷங்களையும் தன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளையும் விசதமாக இவர் கண்டநுபவிக்கலாம்படி பரஜ்ஞாந தசையைப் பிறப்பித்துக் காட்டிக்கொடுக்க, இவரும் அவற்றை அழகிதாகத் திருப்புளியாழ்வாரடியிலிருந்து கொண்டே கண்டநுபவித்து * அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்து தாம் பெற்ற அப்பேற்றை * சூழ்விசும்பு பதிகத்திலருளிச் செய்தா ரென்றதாயிற்று. 99

முனிமாறன் முன்புரைசெய் முற்றின்பம் நீங்கி *
தனியாகிநின்று தளர்ந்து * நனியாம்
பரமபத்தியால் நைந்து பங்கயத்தாள் கோனை *
ஒருமையுற்றுச் சேர்ந்தா னுயர்ந்து. 100

| | | | |
|---|---|---|---|
| முனி மாறன் | சடகோப மாமுனிவர் | பங்கயத்தாள் கோனை | திருமாலை |
| முன்பு உரை செய் | கீழே அருளிச் செய்த | ஒருமை உற்று உயர்ந்து சேர்ந்தான் | திருவுள்ளத்தாலே ஒருமைப்பட்டு அத்தாலே நித்யஸூரிகளின் உயர்வை யுடையராகி எம்பெருமானோடே சேர்ந்தாராயிற்று. |
| முற்றின்பம் நீங்கி | இன்பம் முழுதும் நீங்கினவராகி | | |
| தனி ஆகி நின்று தளர்ந்து | தனிமையாய் நின்று வருந்தி | | |
| நனி ஆம் பரம பத்தியால் நைந்து | அதிகமாக விளைந்த பரம பக்தியினால் பரிபக்வராய் | | |

* * * சூழ்விசும்பணி முகிலென்கிற கீழ்த்திருவாய் மொழியிலே பரம பதத்திலேபுக் குபரிபூர்ணரான சாலியாய் நித்யஸூரிகள் திரளிலே யிருக்கிறபடியாகத் தம்மை யநுஸந்தித்த விதுஜ்ஞாநாநுஸந்தானமாத்திரமாய் உள்ளபடியே யன்றிக்கே யொழிகையாலே, மேருமலையுச்சியிலே இன்பம் தலைச்சிறப்ப விருந்தவன் பேராழமான பாதாளத்திலே தலைகீழாகத் தள்ளுண்டு விழுந்து நோவுபடுமா போலே இப்பிறவிப் பெருங்குழியிலேயே தனியே தாமிருக்கிறபடியைக் கண்டு ஆற்றாமை தலையெடுத்துப் பெருமிடறு செய்து கூப்பிட்டுப் பெரிய ஆர்த்தியோடே திருவடிகளிலே சரணம்புக, பெரிய திருவடி திருத்தோளிலே பெரிய பிராட்டியாரோடேகூட இவர

பேக்ஷித்தபடியே எம்பெருமான் வந்து தோற்றி, காற்கட்டான ப்ரக்ருதிஸம்பந்தத்தையு மறுத்துத் திருநாட்டிலே கொண்டுபோய் நித்யஸூரிகளோடே ஒரு கோவையாக்கி நித்ய கைங்கரியம் கொண்டருள, இங்ஙனம் தாம் * அவாவற்று வீடுபெற்ற படியை * முனியே நான்முகனேயென்கிற திருவாய்மொழியில் அருளிச் செய்து தலைக்கட்டினாராழ்வார் — என்றதாயிற்று. 100

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்

இயற்றிய

திருவாய்மொழி நூற்றந்தாதி உரை முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர்திருவடிகளே சரணம்.







## ஆர்த்திப்பிரபந்தத் தனியன்கள்.

தேன்பயிலுந் தாரா னெதிராசன் சேவடிமேல்
தான்பரம பத்தி தலையெடுத்து—மாந்தர்க்
குணவாக வார்த்தியுட ஞெண்டமிழ்கள் செய்தான்
மணவாள மாமுனிவன் வந்து.

| | |
|---|---|
| மணவாள மாமுனிவன் வந்து | மணவாள மாமுனிகள் அவதரித்து, |
| தேன் பயிலும் தாரான் | (மதுவைப் பருகுவதற்காக) வண்டுகள் நித்யவாஸம் பண்ணப்பெற்ற புஷ்பமாலைகளை யணிந்த |
| எதிராசன் | எம்பெருமானுருடைய |
| சே அடி மேல் | திருவடிகள் விஷயமாக |
| தான் பரமபத்தி தலை எடுத்து | தாம் பரமபக்தி அதிகரிக்கப் பெற்றதனுல் |
| ஆர்த்தியுடன் | இவ்விருள் தருமாஞாலத்தில் அடிக்கொதிப்பினு லுண்டான நிர்வேதத்தோடு |
| ஒண் தமிழ்கள் | (ஆர்த்திப்பிரபந்த மென்னும்) அழகிய தமிழ்பாசுரங்களை |
| மாந்தர்க்கு உணவு ஆக செய்தான் | இந்நிலத்தார்க்கு உணவாகும் படி அருளிச்செய்தார். |

வம்பவிழ்தார் வண்மை மணவாள மாமுனிவன்
அம்புவியிற் கால்பொருந்தா வார்த்தியினுல்—உம்பர்தொழும்
விண்ணுலகிற் செல்ல விரைந்தெதிரா சன்பதங்கள்
நண்ணி யுரைத்தான் நமக்கு.

| | |
|---|---|
| வம்பு அவிழ்தார் | அப்போதலர்ந்த பூமாலைகளை யணிந்துள்ளவரும் |
| வண்மை | ஔதார்யம் மிக்கவருமான |
| மணவாளமா முனிவன் | மணவாளமாமுனிகள் |
| அம்புவியில் | இப்பூலோகத்தில் |
| கால் பொருந்தா ஆர்த்தியினுல் | இருந்துவாழ முடியாத ஆர்த்தியாலே |
| உம்பர் தொழும் விண் உலகில் | நித்யஸூரி ஸேவிதமான திருநாட்டிலே |
| செல்லவிரைந்து | எழுந்தருள த்வரித்து |
| எதிராசன் பதங்கள் நண்ணி | உடையவருடைய திருவடிகளின் மீது விருப்பமாக |
| நமக்கு உரைத்தான் | ஆர்த்திப் பிரபந்தத்தை நமக்கு அருளிச்செய்தார். |

தனியனுரை முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஜீயர் திருவடிகளே சரணம்.

**மணவாளமாமுனிகள் அருளிச்செய்த**

# ஆர்த்திப்பிரபந்தம்.

ஸ்ரீகாஞ்சி - ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய உரையுடன் கூடியது.

---

வாழி யெதிராசன் வாழி யெதிராசன்
வாழியெதி ராசனென வாழ்த்துவார்—வாழியென
வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர் தலை. 1

| | |
|---|---|
| வாழி எதிராசன் வாழி எதிராசன் வாழி எதிராசன் என வாழ்த்துவார் வாழி | எப்போதும்எம்பெருமானார்க்கே மங்களாசாஸனம் செய்பவர்கள் யாவரோ அவர்கள் வாழ வேண்டும் |
| என வாழ்த்துவார் வாழி | என்றிப்படி ஸ்ரீராமாநுஜ பக்தர்களுக்கு மங்களா சாஸனம் செய்பவர்கள் வாழவேண்டும் |
| என வாழ்த்துவார் | என்றிப்படி ராமாநுஜ பக்த பக்தர்களுக்கு மங்களா சாஸனம் செய்பவர்களது |
| தாள் இணையில் | உபயபாதங்களிலே |
| விண்ணோர் | நித்யஸூரிகள் |
| தலை தாழ்த்துவார் | தலையை வணங்கி நமஸ்கரிப்பர்கள். |

* * * எம்பெருமானார்க்கு மங்களாசாஸனம் செய்பவர்கள் யாவரோ, அவர்களுக்கும் மங்களாசாஸனம் செய்பவர்கள் யாவரோ, அவர்களுக்கும் மங்களாசாஸனம் செய்பவர்கள் யாவரோ அவர்கள் நித்யஸூரிகளால் கொண்டாடப் படுவர்களென்கை. 1

இராமா னுசாய நமவென்று சிந்தித்
திராமா னுசரோ டிறைப்போழ்—திராமாறு
சிந்திப்பார் தாளிணையிற் சேர்ந்திருப்பார் தாளிணையை
வந்திப்பார் விண்ணோர்கள் வாழ்வு. 2

| | |
|---|---|
| இராமானுசாய நம என்று | ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்று |
| சிந்தித்து இரா | இதையே அநுஸந்தானம் செய்து கொண்டு இருக்கமாட்டாத |
| மானுசரோடு | மனிதர்களோடுகூடி |
| இறை போழ்து | நொடிப் பொழுதும் |
| இராமாறு சிந்திப்பார் தாள் இணையில் | ஸஹவாஸம் செய்யமுடியாதபடி சிந்தை கொண்டிருப்பவர்களது உபய பாதங்களில் |
| சேர்ந்து இருப்பார் தாள் இணையை | அந்வயித்திருப்பவர்களது உபய பாதங்களை |
| வந்திப்பார் | தொழுதேத்துமவர்கள் |
| விண்ணோர்கள் வாழ்வு | நித்யஸூரிகளையும் வாழ்விக்க வல்லவராவர். |

* * * ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ என்று அநவரதம் சிந்தித்திருக்க ப்ராபதம். அங்ஙனே சிந்தித்திருக்க இயலாவிடினும் அங்ஙனே சிந்தித்திருப்பாருடைய ஸஹவாஸமாவது செய்ய ப்ராப்தம். அப்படிப்பட்ட அத்யவஸாயமுடையவர்கள் விண்ணோர்களினும் மேம்பட்டவராவர் என்றதாயிற்று. இரா—இராமல்; மாறுசிந்திப்பார் என்னவுமாம். ... ... .... ... ... .... 2

தந்தைநற்றாய் தாரம் தனயர் பெருஞ்செல்வம்
என்றனக்கு நீயே யெதிராசா—இந்தநிலைக்
கேராத விவ்வுடலை யின்றே யறுத்தருளப்
பாராத தென்னோ பகர். 3

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! |
| நல் தந்தை தாய் தாரம் தனயர் பெருசெல்வம் | நல்ல தகப்பனாரும் தாயாரும் மனைவியரும் மக்களும் மஹத்தான ஸம்பத்துமாகிய எல்லாம் |
| என்தனக்குநீயே | எனக்கு தேவரீரே யாவீர்; |
| இந்த நிலைக்கு | என்று இங்ஙனே கொண்டிருக்கும் அத்யவஸாயத்திற்கு |
| ஏராத இ உடலை | ஏற்றிருக்க மாட்டாத இந்த ப்ராக்ருத தேஹத்தை |
| இன்றே அறுத்து அருள் பாராதது | இன்றைக்கே தொலைக்கத் திருவுள்ளம் பற்றாமலிருப்பது |
| என்னோ | என்ன காரணத்தினாலோ? |
| பகர் | அருளிச்செய்யவேணும். |

* * * "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய் தந்தையுமவரே யினியாவாரே" என்று நம்மாழ்வார் எம்பெருமானையே எல்லாமுமாகக் கொண்டார்; "மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ் ஸர்வம் யதேவ" என்று நம்மாழ்வாரையே எல்லாமுமாகக் கொண்டார் ஆளவந்தார். அப்படி யன்றிக்கே எம்பெருமானாரையே எல்லாமுமாகக் கொள்ளவேணுமென்பது மணவாள மாமுனிகளின் அத்யவஸாயம். ஆனாலும் இந்த அத்யவஸாயத்திற்கு இந்த ப்ராக்ருத தேஹத்தோடிருப்பு ப்ரதிபந்தகமாயிருத்தலால் இதனையுடனே தவிர்த்தருளவேணுமென்று இரக்கிறார். 3

இந்த வுடற்சிறைவிட டெப்பொழுது யானேகி
அந்தமில்பே ரின்பத்து ளாகுவேன்—அந்தோ!
இரங்கா யெதிராசா என்னையினி யுய்க்கை
பரங்கா ணுனக்குணர்ந்து பார். 4

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! |
| இந்த உடல் சிறைவிட்டு | ப்ராக்ருத சரீரத்தோடு வாழ்வதாகிற இந்தச்சிறையில் நின்று நீங்கி |
| யான் ஏகி | அடியேன் அர்ச்சிராதி மார்க்கத்தாலே சென்று |
| அந்தம்இல் பேர் இன்பத்துள் எப்பொழுது ஆகுவேன் | ஒருநாளும் முடிவில்லாத ப்ரஹ்மானந்தசாலியாக எப்பொழுது ஆகப்பெறுவேன்? |
| அந்தோ இரங்காய் | ஐயோ! இரங்கியருள்கின்றீரில்லையே; |
| இனி | அடியேன்வேறு புகலற்றேனான பின்பு |
| என்னை உய்க்கை | என்னை உஜ்ஜீவிப்பித்தருள்வதானது |
| உனக்கு பரம் காண் | தேவரீருக்கேயன்றோ பாரம்; |
| உணர்ந்து பார் | இதை ஆலோசித்துப் பாரீர். |

* * * பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமான இந்நிலைமை சிறைக்கூடத்திலே கிடந்து துவள்வதொக்கும். இப்படிப்பட்ட சிறையில் நின்று விடுபட்டு * அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை * என்னும்படியான பேற்றை அடியேன் எப்போது பெற்றவனாவேன்? எதிராசரே! தேவரீர் திருவுள்ளமிரங்காவிடில் இப்போது பாவியேனுக்குக்கிட்டுமோ? அடியேனுடைய உஜ்ஜீவனம் உம் அதீனமன்றோ என்றாராயிற்று. இரங்காய்—இரங்கியருள வேணும் என்றுமாம். 4

தன்புதல்வன் கூடாமல் தான்புசிக்கும் போகத்தால்
இன்புறுமோ தந்தை யெதிராசா—உன்புதல்வன்
அன்றோ வுரையாய்யான் ஆதலா லுன்போகம்
நன்றோ வெனையொழிந்த நாள். 5

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! |
| தந்தை | (உலகத்தில்) பிதாவானவன் |
| தன் புதல்வன் கூடாமல் | தன் புத்திரனோடு கூடியிராமல் |
| தான் புசிக்கும் போகத்தால் | தானொருவனே தனியாயிருந்து அநுபவிக்கின்ற போகத்தினால் |
| இன்பு உறுமோ | ஆனந்திக்கலாகுமோ! |
| யான் உன் புதல்வன் அன்றோ | அடியேன் தேவரீரது புத்திரனல்லேனோ |
| உரையாய் | அருளிச்செய்யவேணும்; |
| ஆதலால் | அடியேன் உமது |
| உன்போகம் | புதல்வனே யாதலால் உமது போகமானது |
| எனை ஒழிந்த நாள் | என்னோடுகூடி யநுபவிக்கப் பெறாதபோது |
| நன்றோ | நல்லதாகுமோ? |

* * * "தேசாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பித்ரு ஹ்ருதயம் கிடக்குமா போலே" என்ற ஸ்ரீவசந பூஷண ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம்பற்றி முன்னடிகள் அருளிச்செய்தபடி. ஸம்பந்நனான பிதாவானவன் புத்திரனோடுகூடியன்றோ போகங்களைப் புசித்து மகிழ்வன்; புத்திரனைவிட்டுப் பிரிந்து தான் தனியே ஒருபோகம் புசித்து மகிழ மாட்டானன்றோ; அதுபோல, ஸ்வாமிந்! உமக்கு புத்திரனாகிய அடியேனைவிட்டுத் தேவரீர் தனியே * கட்டெழில் வானவர்போக முண்பாரே * என்னும்படியான போகத்தையனுபவித்துக் களித்திருக்கப்ராப்தியுண்டோ? என்னையுங் கூட்டிக்கொண்டு கூறனுபவஞ்செய்வதன்றோ பாங்கு என்றூராயிற்று. 5

வேம்புமுற்றக் கைப்பு மிகுவதுபோல் வெவ்வினையேன்
தீம்புமுற்றுந் தேகமுற்றிச் செல்லுங்கால்—ஆம்பரிசால்
எற்கவே சிந்தித் தெதிராசா விவ்வுடலைத்
தீர்க்கவே யானவழி செய். 6

| | | | |
|---|---|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! | தீம்பும் முற்றும் | தீ வினைகளும் முற்றி வாரா நின்றன; |
| வேம்பு முற்ற கைப்பு மிகுவது போல் | வேப்பம் பிஞ்சானது முற்ற முற்ற, கைப்புஅதிகப்படுவது போல | ஆம் பரிசால் | ஸ்வரூபாநுரூபமாக |
| வெவ் வினையேன் | மஹாபாபியான அடியேனுடைய | எற்கவேசிந்தித்து | முற்கோலிச் சிந்தித்து |
| | | இ உடலை | இந்த தேஹத்தை |
| தேகம் முற்றி செல்லுங்கால் | தேஹமானது முற்றி வருவதற்கேற்ப | தீர்க்கவே ஆன வழி செய் | தீர்ப்பதற்கான வுபாயம் செய்தருள்க. |

* * * ஸ்வாமிந்! வேம்பு முற்ற முற்றக் கசப்பு முற்றுவதுபோல அடியேனது தேஹமும் முற்றமுற்றப் பாவங்களே முற்றிவாராநின்றன. இது அஸஹ்யமாயிருத்தலால் இவ்வுடல்தொடர்பைத் தீர்க்குமுபாயம் தேவரீரே செய்தருளத் தக்கது. 6

அன்னை குடிநீ ரருந்திமுலை யுண்குழவி
தன்னுடைய நோயைத் தவிராளோ—என்னே!
எனக்கா வெதிராசா வெல்லாநீ செய்தால்
உனக்கது தாழ்வோ வுரை. 7

| | | | |
|---|---|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! | என்னே | இது நான்சொல்ல வேண்டுமோ? |
| முலைஉண்குழவி தன்னுடைய நோயை | ஸ்தனந்தய ப்ரஜையினுடைய வியாதியை (தவிர்க்க விரும்பிய) | எனக்கா | அடியேனுக்காக |
| அன்னை | தாயானவள் | எல்லாம் நீ செய்தால் | எல்லா வுபாயங்களையும் தேவரீரே அனுட்டித்தால் |
| குடி நீர்அருந்தி தவிராளோ | தான் கஷாயம் குடித்து தவிர்க்கமாட்டாளோ? | அது உனக்கு தாழ்வோ | அது தேவரீர்க்குக் குறையாமோ? |
| | | உரை | அருளிச்செய்யவேணும். |

* * * பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ - உத்தரசதகத்திலே "ருக்ணே தோகே ஸ்வ இவ ஜநநீ தத்கஷாயம் பிபந்தீ" என்றருளிச் செய்ததையடியொற்றி முன்னடிகள் அருளிச் செய்தபடி. தன் குழந்தையின் நோய்தீர்வதற்காகத் தாய்தானே கஷாயம் முதலியன குடித்தலாகிற ஔஷதஸேவைபண்ணுவதென்கிற ஒரு முறையுண்டாம். அதுபோல * இப்பிறவியென்னும் நோயிலேயகப்பட்டுத் துடிக்கின்றவெனக்கு இந்நோய் தீரத்தக்க வுபாயங்களைத் தேவரீரே யனுட்டித்து அடியேனை நோய்தீர்ந்தவனாகச் செய்தால் இது முறையாகாதோ? என்னைக் குழந்தையாகக் கொண்டிருக்கின்ற வுமக்கு இதுவன்றோ உற்றது என்றூராயிற்று. குடிநீர்—கஷாயம். 7

தன்குழவி வான்கிணற்றைச் சார்ந்திருக்கக் கண்டிருந்தாள்
என்பதன்றோ வன்னைபழி யேற்கின்றாள்—நன்குணரில்
என்னாலே யென்னாச மேலு மெதிராசா
உன்னாலே யாமுறவை யோர். 8

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானுரே! |
| நன்கு உணரில் | நன்ருக ஆராய்ந்து பார்க்குமளவில் |
| என் நாசம் என்ஞலேயேனும் | நான் நசித்துபோவது என்ஞலேயாஞலும் |
| உன்ஞலே ஆம் உறவை | தேவரீரோடே யுண்டாயிருக்கின்ற உறவை |
| ஓர் | சிறிது ஆலோசித்துப் பார்க்க வேணும். |
| தன் குழவி | தன்னுடைய குழந்தை |
| வான்கிணற்றை சார்ந்துஇருக்க | பெரிய கிணற்றினருகே யிருக்க |
| கண்டிருந்தாள் என்பது அன்ரோ | அதை விலக்காமல் பார்த்துக்கொண்டிருந்தாளென்கிற காரணத்திஞலன்ரோ |
| அன்னே பழிஎற்கின்ருள் | தாயானவள் பழிக்குப் பாத்திரமாகின்ருள். |

* * * "ப்ரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும் வாங்காதொழிந்தால் தாயே
தள்ளிஞளென்னக்கடவதிறே" என்கிற ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம்
பற்றி முன்னடிகள் அருளிச் செய்கிறபடி. கிணற்றின்கரையிலே குழந்தை யிருக்கின்
றதைக் கண்ட தாயானவள் அப்போதே யோடிச்சென்று கிணற்றின் கரையில் நின்றும்
அக்குழந்தையை அப்பாற்படுத்திற்றிலளாகில், குழந்தை கிணற்றிலேவிழுந்தவளவில்
"தாய் அப்போதே சென்றெடுத்திருந்தால் குழந்தை விழுந்திருக்குமோ? கிணற்றின்
கரையிலிருப்பை இவள் அநுமதிபண்ணியிருக்கையாலேயன்ரோ விழுந்தது; ஆனபின்பு
இவளன்ரோ தள்ளிஞள்" என்று லோகம் பழிசொல்லும். அன்றியும், அந்தத் தாய்
தானும் 'நானே யன்ரோ தள்ளினேன்!' என்று சொல்லிக் கதறுவள். ஆகவே, ஸ்வா
மிந்! என்னுடைய நாசத்தை நானே விளைத்துக்கொண்டேனெனினும் உமக்கும்
நமக்குமுண்டானவுறவை ஆராய்ந்து பார்க்குமிடத்து எனது நாசத்திற்கு தேவரீரே
காரணமென்னும்படி பழி உமது தலையிலேயாகுமன்ரோ? அங்ஙனுகாதபடி பார்த்துக்
கொள்ளீர் என்ருராயிற்று. ... ... ... ... 8

கூபத்தில் வீழுங் குழவி யுடன்குதித்தவ்
வாபத்தை நீக்குமந்த வன்னேபோல்—பாபத்தால்
யான்பிறப்பே னேலுமினி யெந்தை யெதிராசன்
தான்பிறக்கு மேன்னேயுய்ப்ப தா. 9

| | |
|---|---|
| கூபத்தில் வீழும் குழவியுடன் குதித்து | கிணற்றில் விழுங் குழந்தை யுடனே தானும் குதித்து |
| அவ்வாபத்தை நீக்கும் அன்னே போல் | அந்த மரணுபத்தைத் தவிர்க்கின்றஅப்படிப்பட்டவத்ஸலையான தாய்போல |
| பாபத்தால்யான் பிறப்பேன் எலும் | என் தீவினையிஞல் நான் ஸம்ஸாரக் கடலில் விழுந்து துவள்வேஞயினும் |
| இனி என்னே உய்ப்பதா | இனியடியேனே உஜ்ஜீவனப்படுத்தும் பொருட்டு |
| எந்தைஎதிராசன் | ஸ்வாமி யெம்பெருமானுர் |
| தான் பிறக்கும் | இந்த ஸம்ஸார ஸாகரத்திலே தாமும் வந்து தோன்றிஞர். |

* * * இந்த ஸம்ஸார ஸாகரத்திலே கிடந்து துவள்கின்ற வும்மைக் கரையேற்ற
வேணுமாஞல் இந்த ஸம்ஸாரத்திற் பிறவாத வொருவர் அதற்கு சக்தராக வேணுமே
யல்லது உம்மைப் போலவே ஸம்ஸாரக்கடலில் ஒருகால் விழுந்து துவண்டவரான
ஸ்ரீராமாநுஜர் உம்மைக் கரையேற்ற எங்ஙனம் சக்தராவர்? என்று சிலர் கேட்பதாகக்
கொண்டு அதற்கு விடை யிருக்கிருர் இப்பாசுரத்திஞல். கிணற்றில் விழுந்த குழந்
தையையெடுத்துப் பிழைப்பிப்பதற்காகத் தாயும் உடன் குதித்தால் அந்தக் குதிப்பு
எதற்காகவென்று நோக்கவேண்டாவோ? 'குழந்தையும் கிணற்றில் விழுந்தது, தாயும்
கிணற்றில் விழுந்தாள், என்னவாசி?' என்று சொல்லுவாருண்டோ? அதுபோல பாபத்
திஞல் இப்பிறவிக்கடலில் விழுந்த, விழுகின்ற, விழப்போகின்ற என்போல்வாரை
உத்தரிப்பிக்கைக்காகவன்ரோ எதிராசர்தாமும் இப்பிறவிக் கடலிலே ஒக்கக் குதித்தது
என்கிருர். நமது பிறவி கருமத்திஞல்; அவருடைய அவதாரம் கருணேயிஞல் என்ற
தாயிற்று. கூபம்—வடசொல். ... .... ... ... 9

பூமகள்கோன் தென்னரங்கர் பூங்கழற்குப் பாதுகமாய்த்
தாமகிழுஞ் செல்வச் சடகோபர்—தேமலர்த்தாட்
கேய்ந்தினிய பாதுகமா மெந்தையிரா மாநுசனை
வாய்ந்தெனது நெஞ்சமே வாழ். 10

| | | | |
|---|---|---|---|
| எனதுநெஞ்சமே! | எனது மனமே! | தேன் மலர் தாட்கு | தேன்மிக்க மலர்போன்ற திருவடிகளுக்கு |
| பூமகள் கோன் தென் அரங்கர் பூ கழற்கு | திருமகள் கொழுநனுன ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளுக்கு | ஏய்ந்து | பொருந்தி |
| தாம்பாதுகம் ஆய் மகிழும் | தாம் பாதுகையாயிருந்து கொண்டு மகிழ்கின்ற | இனிய பாதுகம் ஆம் | ப்ரியமான பாதுகையாயிருக்கின்ற |
| செல்வம் சடகோபர் | ஸ்ரீ சடகோபருடைய | எந்தை இராமாநுசனை | ஸ்வாமி யெம்பெருமானுரை |
| | | வாய்ந்து வாழ் | அடிபணிந்து வாழ்வாயாக. |

* * * எம்பெருமானுடைய திருவடி நிலையான நம்மாழ்வார்க்குத் திருவடி நிலையான எம்பெருமானுரை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்குமாறு நெஞ்சுபோல்வாரான தொண்டரை விளித்து அருளிச் செய்தாராயிற்று. .... ... ... 10

உன்னை யொழிய வொருதெய்வம் மற்றறியா
மன்னு புகழ்சேர் வடுகநம்பி—தன்னிலையை
என்றனக்கு நீதந் தெதிராசா வெந்நாளும்
உன்றனக்கே யாட்கொள் ளுகந்து. 11

| | | | |
|---|---|---|---|
| எதிராசா | எம்பெருமானுரே! | வடுகநம்பி தன் நிலையை | வடுகநம்பியினுடைய நிஷ்டையை |
| உன்னை ஒழிய | தேவரீரைத்தவிர | நீஎன் தனக்கு உகந்து தந்து | தேவரீர் அடியேனுக்கு மகிழ்வுடன் அளித்து |
| மற்று ஒரு தெய்வம் அறியா | வேறொருதெய்வ முண்டென்றறியாத | எந்நாளும் | எக்காலத்திலும் |
| மன்னு புகழ் சேர் | சாச்வதமான கீர்த்தியையுடைய | உன் தனக்கே ஆட்கொள் | உமக்கே ஆட்பட்டிருப்பேனும்படி செய்துகொள்ளவேணும் |

* * * "வடுகநம்பி ஆழ்வானையுமாண்டானையும் இருகரைய ரென்பர்" என்பது ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி. ஆழ்வார் திருவடிகளில் ஸ்ரீமதுரகவிகள் இருந்தாப் போலே வடுகநம்பிகள் 'ப்ராப்யப்ராபகங்களிரண்டும் எம்பெருமானுர் திருவடிகளே' என்றிருப்பர் என்று ப்ரஸித்தம். கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் எம்பெருமானுர் திறத்திலே மிகவும் ப்ரவணர்களாயிருந்தாலும் அவர்கள் பெருமாள் பக்கலிலுஞ் சென்று பல் காட்டுவது, ப்ரவணராய்ப் போருவதாமிவ்வளவைக் கொண்டு அவர்களையும் வடுகநம்பி குறைகூறுவராம். ஆகவே வடுகநம்பிகள் சரமபர்வநிஷ்டை அத்விதீயமென்பது நாடறிந்தது. அவருடைய நிஷ்டாவிசேஷம் தமக்குமுண்டாம்படி கடாக்ஷித்தருள வேணுமென்று இப்பாட்டில் பிரார்த்திக்கிறபடி. ... .... .... 11

தேசந் திகழுந் திருவாய் மொழிப்பிள்ளை
மாசில் திருமலையாழ் வாரென்னை—நேசத்தால்
எப்படியே யெண்ணிநின்பால் சேர்த்தா ரெதிராசா
அப்படியே நீசெய் தருள். 12

| | | | |
|---|---|---|---|
| எதிராசா | எம்பெருமானுரே! | நேசத்தால் | பரமப்ரீதியுடனே |
| தேசம் திகழும் | (புகழால் தேசந்தோறும் விளங்குகின்ற | என்னை எப்படி எண்ணி நின் பால் சேர்த்தார் | அடியேன் திறத்தில் என்ன திருவுள்ளம்பற்றி தேவரீரைக் காட்டிக் கொடுத்தருளினரோ |
| திருவாய் மொழிப்பிள்ளை | திருவாய்மொழிப் பிள்ளையென்கிற | அப்படியே நீ செய்தருள் | அந்தத்திருவுள்ளம் நிறைவேறுமாறு தேவரீர் செய்தருள்க. |
| மாசு இல் திருமலை ஆழ்வார் | களங்கமற்ற திருமலையாழ்வாரென்னுமாசிரியர் | | |

* * * யதிராஜ விம்சதியில் 'ஸ்ரீமந் யதீந்த்ர தவ திவ்ய பதாப்ஜ ஸேவாம் ஸ்ரீசைலநாத கருணாபரிணுமதத்தாம்” என்றருளிச் செய்தது இப்பாசுரத்திற்குச் சேர அநுஸந்தேயம். ஸ்வாமிந்! தேவரீருடைய திருவடிகளை நானாகக் கண்டிலேன், அடியேனது ஆசாரியர் காட்டிக்கொடுத்தருளினதால் கண்டேனத்தனை. காட்டிக்கொடுத்தவருடைய திருவுள்ளம் தேவரீரறியாததன்று; அது நிறைவேறுமாறு கடாக்ஷித்தருளவேணுமென்கிறார். தேசம்—தேஜஸ் என்றுமாம். தேஜஸ்வியான திருவாய்மொழிப் பிள்ளையென்க. ... ... ... .... ... ... 12

எதிராசன் வாழி யெதிராசன் வாழி
எதிராசன் வாழியென்றேன் றேத்திச்—சதிராக
வாழ்வார்கள் தாளிணைக்கீழ் வாழ்வார்கள் பெற்றிடுவர்
ஆழ்வார்கள் தங்க ளருள். 13

| | |
|---|---|
| எதிராசன் வாழி எதிராசன் வாழி எதிராசன் வாழி என்று எத்தி | அநவரதமும் எம்பெருமானார்க்கே மங்களாசாஸனம் செய்து |
| சதிர் ஆக | ஒரு குறையுமின்றி |
| வாழ்வார்கள் | வாழ்பவர்களான ஆழ்வான் போல்வாருடைய |
| தாள் இணை கீழ் | திருவடிவாரத்தின் கீழே |
| வாழ்வார்கள் | வாழ்பவர்கள் தாம் |
| ஆழ்வார்கள் தங்கள் அருள் | ஆழ்வார்களுடைய பரம க்ருபையை |
| பெற்றிடுவர் | பெறுவர்கள். |

* * * எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம்பெற்றார்க்கல்லது ஆழ்வார்களின் திருவருள் பலியாதென்கை. ... ... ... ... 13

அதிகார முண்டே லரங்க ரிரங்காரோ
அதிகார மில்லாதார்க் கன்றோ—எதிராசா
நீயிரங்க வேண்டுவது நீயுமதிகாரிகளுக்
கேயிரங்கி லென்செய்வோம் யாம். 14

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! |
| அதிகாரம் உண்டு எல் | (கர்ம ஜ்ஞான பக்தியோகாதிகளில்) யோக்யதையிருந்தால் |
| அரங்கர் இரங்காரோ | எம்பெருமான் க்ருபை செய்தருள மாட்டானோ? |
| அதிகாரம் இல்லாதார்க்கு அன்றோ நீ இரங்க வேண்டுவது | அப்படிப்பட்ட யோக்யதையற்றவர்கள் விஷயத்திலன்றோ தேவரீர் அருள் செய்யத்தகுவது; |
| நீயும் | க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரென்று புகழ் பெற்ற தேவரீரும் |
| அதிகாரிகளுக்கே இரங்கில் | யோக்யர்களுக்கே க்ருபைசெய்தருள்வதானால் |
| யாம் என் செய்வோம் | அடியேன் செய்வதென்கொல்? |

* * * இராமாநுச நூற்றந்தாதியில் * ஞானங்கனிந்தநலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு வானங்கொடுப்பது மாதவன் * என்று எம்பெருமான் யோக்யர்களுக்கே அருள்செய்பவனென்று சொல்லி, உடனே “இராமாநுசன் தன்னையெய்தினர்க்கு அத்தானங் கொடுப்பது தன் தகவென்னுஞ் சரண் கொடுத்து” என்று எம்பெருமானாருடைய க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யத்வம் அழகாகப் பேசப்பட்டது. அதைத் திருவுள்ளம்பற்றி இப்பாசுரமருளிச் செய்கிறபடி. அடியேன் போன்ற அநதிகாரிகளுக்கும் தேவரீர் அருள்செய்தாலன்றோ எம்பெருமானிற்காட்டில் தேவரீர்க்கு ப்ரஸித்தமாயுள்ள வைலக்ஷண்யம் தேறுவது என்றாராயிற்று. என் செய்வோம் யாம்—இனிமேல் அதிகாரம் ஸம்பாதித்துக்கொள்ள எம்மாலாகுமோ? என்றபடி. தேவரீரைவிட்டு வேறொருவரை ஆச்ரயிக்கத் தானாகுமோ! என்றபடியுமாம். ... ... 14

எம்பெரு மானார் திருவடிக ளேசரணம்
என்பதுவே நாவுரைக்கு மித்தாலேன்—அன்பவர்பால்
இப்போ தளவும்யா னென்றுங்காண் கின்றிலேன்
எப்போதுண் டாவ தினி. 15

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமானார் திரு அடிகளே சரணம் என்பதுவே நா உரைக்கும் | எனது நாவானது 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று சப்தமாத்திரத்தையே (ப்ரேமமின்றிச்) சொல்லாநின்றது ; | அன்பு | ப்ரேமம் |
| இத்தால் என் | இந்த வெற்றுரையால் என்னாகும் ? | இப்போது அளவும் | இதுகாறும் |
| அவர்பால் | அவ்வெதிராசரிடத்தில் | ஒன்றும் யான் காண்கின்றிலேன் | சிறிதுமுண்டானதாக அடியேனுக்குத் தெரியவில்லை ; |
| | | இனி எப்போது உண்டாவது | அது இனிமேல் எந்நாளுண்டாகும் ? |

* * * கீழ்ப்பாட்டில் அதிகாரமில்லாதவராகத் தம்மைச் சொல்லிக்கொண்டாரே அதை நிலைநாட்டுகிறாரிப்பாட்டில். 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்றே ஓய்வின்றிச் சொல்லிக் கொண்டிருக்கின்றீரே, இதைவிட வேறு அதிகார ஸம்பத்து வேணுமோ? நீர் அதிகாரியேயாவீர் ; அநதிகாரியல்லீர்—என்று சிலர் சொல்ல அதற்கு விடைகூறுகின்றார் ; பொரிபுறந்தடவின உக்திமாத்திரமே யென்பக்கலுள்ளது ; ப்ரேமங் கனிந்து சொல்லுகின்றிலேன். அப்படிச்சொன்னாலன்றோ அதிகாரஸம்பத்து உள்ள தாவது. இதுகாறும் ப்ரேமமுண்டானதாகத் தெரியவில்லை ; இனிமேலா அது உண்டாகப்போகிறது ! இல்லை. ஆகவே அதிகாரிகளிடத்துச் செல்லக்கூடிய தேவரீரது கருணையைச் செலுத்தியருள்வதே நன்று என்றாராயிற்று. ... ... 15

ஆகாத தீதென் றறிந்தும் பிறர்க்குரைத்தும்
ஆகாத தேசெய்வ னாதலால்—மோகாந்தன்
என்றுநினைத் தென்னை யிகழே லெதிராசா
என்றுன் னடிசேர்வன் யான். 16

| | | | |
|---|---|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே ! | ஆதலால் | ஆகையினாலே |
| ஈது ஆகாதது என்று அறிந்தும் | இது சாஸ்த்ரநிஷித்தமென்று நான் தெரிந்துகொண்டிருந்தும் | என்னை மோகாந்தன் என்று நினைத்து இகழேல் | என்னை மோஹாந்தனாகத் திருவுள்ளம் பற்றிக் கைவிடலாகாது ; |
| பிறர்க்கு உரைத்தும் | பரோபதேசங்கள் பண்ணியும் போந்தேனாகிலும் | | |
| ஆகாததே செய்வன் | சாஸ்த்ர நிஷித்தங்களையே செய்து போருகின்றேன் ; | யான் என்று உன் அடி சேர்வன் | அடியேன் எப்போது உமது திருவடியைச் சார்வேன் ? |

* * * இன்னது செய்யத் தகுந்தது ; இன்னது செய்யத் தகாதது என்று அடியேன் விவேகித்தறிந்து அதைப் பிறர்க்கும் உபதேசித்துப் போருகின்றேனாகிலும் ஸ்வானுஷ்டானத்தில் வந்தவாறே பிசகிப் போகின்றேன் ; சாஸ்த்ர நிஷித்தங்களான கிருத்யங்களையே செய்து போருகின்றேன். ஆதலால் இவன் மோஹாந்தன் என்று தேவரீர் கைவிடப் போதுமான நிலைமை என் பக்கலுளதாயினும் அங்ஙனம் கைவிடலாகாது, என்றவாறே 'கைவிடுவேனல்லேன்' என்று எம்பெருமானார் பணிக்க, ஸ்வாமிந் ! எப்போது அடியேனைத் திருவடி சேர்த்துக் கொள்வதாகத் திருவுள்ளம் பற்றி யிருப்பதென்கிறாராயிற்று. மோகாந்தன்—தற்சம வடசொல். விஷயாந்தர வ்யாமோஹத்தினால் கண் தெரியாதவன் என்றபடி. ... ... 16

பொல்லாங் கனைத்தும் பொதிந்துகொண்டு நன்மையிலோன்
றில்லா வெனக்கு மெதிராசா—நல்லார்கள்
நண்ணுந் திருநாட்டை நான்தருவே னென்றநீ
தண்ணேன் றிருக்கிறதேன் றான். 17

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானுரே! |
| பொல்லாங்கு அனைத்தும் | தீதானவைகளையெல்லாம் |
| பொதிந்து கொண்டு | மிகுதியாக மேற்கொண்டு |
| நன்மையில் ஒன்று இல்லா எனக்கும் | நன்மையென்று பேர்பெற்றவற்றில் ஒன்றுகூட இல்லாத அடியேனுக்கும் |
| நல்லார்கள் நண்ணும் திருநாட்டை நான் தருவேன் என்ற நீ | நன்மை மிகுந்தவர்கள் அடையக்கூடிய திருநாட்டையளிப்பதாக வாயோலை செய்து கொடுத்திருக்கிற தேவரீர் |
| தண்ணென்று இருக்கிறது என் தான் | மெத்தென்றிருப்பது [தாமதிப்பது] என்ன காரணத்தினுல்? |

*** "எனக்கும் திருநாட்டை நான் தருவேனென்ற நீ" என்று இப்பாட்டில் கூறியிருப்பதனுல் எம்பெருமானுர் மணவாளமாமுனிகளை நோக்கி உமக்கு நான் திருநாடு தருவேன் என்று பிரதிஜ்ஞை செய்தருளினதாகத் தெரியவருகின்றது. "எம்பெருமானுர் திருவடி ஸம்பந்தம்பெற்றூர்க்கெல்லாம் முத்திச்செல்வம் குறையற்றது" என்று சரணுகதிகத்யாநுஸந்தானத்தினன்று தொடங்கி ஒருப்ரஸித்தியிருத்தலால் அதுகொண்டு இங்ஙனேபணிக்கின்றுரென்றுங் கொள்ளலாம். ... ... ... 17

என்று விடிவதெனக் கேந்தா யெதிராசா
ஒன்று மறிகின்றி லேனுரையாய்—குன்றுமல்
இப்படியே யிந்தவுயிர்க் கென்று மிருளேவிளைக்கும்
இப்பவமாம் நீண்ட விரவு. 18

| | |
|---|---|
| எந்தாய் எதிராசா | ஸ்வாமிந்! எம்பெருமானுரே! |
| குன்றுமல் | ஒருநாளும் சுருங்காமல் |
| இப்படியே என்றும் | இவ்வண்ணமாகவே எக்காலத்தும் |
| இந்த உயிர்க்கு | இந்த ஆத்மாவுக்கு |
| இருளே விளைக்கும் | அஜ்ஞாநாந்தகாரத்தையே மிகுவிக்கின்ற |
| இப் பவம் ஆம் நீண்ட இரவு | இந்த ஸம்ஸாரமாகிற காளராத்ரியானது |
| எனக்கு என்று விடிவது | என்வரையில் ஒய்வது எப்போதோ? |
| ஒன்றும் அறிகின்றிலேன் | இந்நாளில் ஓய்வதென்று சிறிது மறிகிலேன்; |
| உரையாய் | அந்நாளைத் தேவரீரே அருளிச்செய்யவேணும். |

*** இந்த ஸம்ஸாரமென்னும் காளராத்திரியானது அகவிருளை வளர்த்திக்கொண்டு ஓய்வின்றிச் செல்கின்றதே; பொழுதுவிடியும்நாள் இல்லையா? அது எந்நாளென்றறிகின்றிலேன்; இன்ன நாளென்று தேவரீரே குறிப்பிட்டால் ஆறியிருப்பேனென்கை. பவம்—ஸம்ஸாரம்; வடசொல். ... ... ... ... 18

அல்லும் பகலும்யா னுக்கை வழியுழன்று
செல்லுமதுன் தேசுக்குத் தீங்கன்றே—நல்லார்கள்
தந்தனயர் நீசர்க்காட் செய்யச் சகிப்பரோ
எந்தை யெதிராசா விசை. 19

| | |
|---|---|
| எந்தை எதிராசா | ஸ்வாமிந் எம் பெருமானுரே! |
| யான் அல்லும் பகலும் ஆக்கை வழி உழன்று செல்லுமது | அடியேன் இரவும் பகலும் தேஹமிழுத்துக் கொண்டு போகும் வழியிலேயே சென்று திரிவதானது |
| உன் தேசுக்கு தீங்கு அன்றே | தேவரீருடைய தேஜஸ்ஸுக்கு நிறக்கேடல்லவோ? |
| நல்லார்கள் | பெரியார்கள் |
| தம் தனயர் | தமது மக்கள் |
| நீசர்க்கு ஆள் செய்ய சகிப்பரோ | நீசர்க்கு இழிதொழில் செய்திருக்குமிருப்பைக் கண்டு சகிப்பர்களோ? |

*** பெரியாழ்வார் * உனக்குப் பணிசெய்திருக்குந் தவமுடையேன் இனிப்போயொருவன் தனக்குப்பணிந்து கடைத்தலை நிற்கை நின்சாயையழிவுகண்டாய் * என்றருளிச் செய்தபுடையிலே இப்பாசுரமருளிச் செய்கிறபடி. ஸ்வாமிந்! தேவரீருக்குத்

தொண்டுசெய்து திரியக்கடமைப்பட்டிருக்கு மடியேன் இப் பொல்லாவாக்கைக்குத் தொண்டுசெய்து திரிவேனாயின் இது எனக்குத் தகுமெனினும் தேவரீருடைய தேஜஸ்ஸுக்கு அவத்யமாய் முடியுமன்றோ? ராஜபுத்ரன் நீசர்கட்கு ஆட்செய்திருக்கு மிருப்பை மஹாராஜன் பொறுத்திருக்க வல்லவனோ? இதையாராய்ந்து அடியேனைக் கைக்கொண்டருள வேணுமென்கிறாராயிற்று. ... ... ... 19

போம்வழியைத் தருமென்னு மின்பமேல்லாம்
புசித்துவழி போயமுத விரசையாற்றில்
நான்முழுகி மலமற்றுத் தெளிவிசும்பை
நண்ணிநலந் திகழ்மேனி தன்னைப் பெற்றுத்
தாமமரர் வந்தெதிர்கோண் டலங்கரித்துச்
சற்கரிப்ப மாமணி மண்டபத்துச் சென்று
மாமலராள் கோன்மடியில் வைத்துகக்கும்
வாழ்வுநமக் கெதிராச னருளும் வாழ்வே. 20

| | |
|---|---|
| போம்வழியைத் தரும் என்னும் இன்பம் எல்லாம் | ‘போம்வழியைத் தரும்’ என்கிற அருளிச் செயலால் சொல்லப்படுகிற அர்ச்சிராதி மார்க்கப்பேரின்ப மெல்லாவற்றையும் |
| புசித்து | அநுபவித்து |
| வழி போய் | அர்ச்சிராதி வழியே சென்று |
| அமுதம் விரசை ஆற்றில் | அம்ருதமயமான விரஜாநதியிலே |
| நாம் முழுகி | நாம் தீர்த்தமாடி |
| மலம் அற்று | ப்ராக்ருதி மலங்களெல்லாம் கழியப்பெற்று |
| தெளி விசும்பை நண்ணி | கலங்காப் பெருநகராகிய திருநாட்டைக் கிட்டி |
| நலம்திகழ் மேனி தன்னை பெற்று | சுத்த ஸத்வமயமான அப்ராக்ருத தேஹத்தைப்பெற்று |
| அமரர் தாம் வந்து எதிர் கொண்டு | நித்யஸூரிகள் வந்து எதிர் கொண்டழைத்துப்போய் |
| அலங்கரித்து சற்கரிப்ப | ப்ரஹ்மாலங்காரங்கள் செய்து மரியாதைகள்பண்ண (அவற்றைப்பெற்று) |
| மணி மண்டபத்து சென்று | திருமாமணி மண்டபத்திலே சென்று சேர்ந்தவளவிலே |
| மாமலராள் கோன் | திருமகள் கொழுநனான எம்பெருமான் |
| மடியில் வைத்து உகக்கும் வாழ்வு | தன் மடியின்மீது வைத்துக் கொண்டு உகக்கும்படியான வாழ்வே |
| நமக்கு எதிராசர் அருளும் வாழ்வு | நமக்கு எம்பெருமானார் அநுக்ரஹிக்கும் செல்வமாகும். |

* * * திருவாய்மொழியில் (3—9—3) * ஒழிவொன்றில்லாத * என்கிற பாசுரத்திலே “போம்வழியைத் தரும் நங்கள் வானவரீசனை” என்றருளிச்செய்தார் நம்மாழ்வார்; ‘பரமபதத்தைத் தரும்’ என்று சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாது *போம் வழியைத் தருமென்கையாலே பரமபத ப்ராப்தியிற்காட்டிலும் அர்ச்சிராதிமார்க்கத்திற் செல்வதுதானே பரம ப்ரயோஜனமென்றும் அந்த ஆனந்தம் மிகப் பெரிதென்றும் காட்டிற்றாகிறது. அப்படிப்பட்ட இன்பமெல்லாம் புசித்துக்கொண்டே அர்ச்சிராதி மார்க்கத்திற் சென்று விரஜாநதியிற் குடைந்தாடி ப்ராக்ருத தோஷங்களெல்லாங் கழிந்து திருநாட்டைக்கிட்டி திவ்யதேஹத்தைப் பெற்று அவ்விடத்து ஸத்காரங்களையும் லபித்து எம்பெருமானது மடிமீதேறி வாழப்பெறுவதே வைகுந்தச் செல்வமாகும்; இச்செல்வம் எம்பெருமானார் திருவருளடியாகவே கிடைப்ப தொன்று என்றாராயிற்று. ஸ்வாமிந்! இச்செல்வத்தைத் தேவரீர் அருள்செய்ய வேணுமென்கை. ... ... 20

திருமலை யாழ்வார் திருவாய் மொழிப்பிள்ளை சீரருளால்
தருமதி கொண்டவர் தம்மையுத் தாரகராகவெண்ணி
இருமனமே யவர்க்கா யெதிராச ரேமைக்கடுகப்
பரம பதந்தனிலேற்றுவ ரென்னபயம்நமக்கே. 12

மனமே — ஓ நெஞ்சே!,
திருமலை ஆழ்வார் திருவாய்மொழிப்பிள்ளை — திருமலையாழ்வாரென்கிற அஸ்மதாசார்யரானவர்
சீர் அருளால் — தம்முடைய திருவருளாலே
தரும் — தந்தருளின
மதியை கொண்டு — ஞானத்தை ஸாதனமாகக் கொண்டு
அவர் தம்மை — அவ்வாசிரியரையே
உத்தாரகர் ஆக எண்ணி இரு — ஸம்ஸாரத்தில் நின்று நம்மை உத்தரிப்பவராக அத்யவஸாயங்கொண்டு விசாரமற்றிரு;
எதிராசர் — உடையவரானவர்
அவர்க்கு ஆய் — அத்திருவாய் மொழிப்பிள்ளைக்காக
எமை — நம்மை
கடுக — சீக்கிரமாக
பரமபதம் தன்னில் ஏற்றுவர் — திருநாட்டில் சேர்விப்பர்;
நமக்கு என்ன பயம் — இதைப்பற்றி நாம் அஞ்ச வேண்டுவதுண்டோ?

*** நெஞ்சே! நமக்கென்று வகுத்த ஆசாரியர் திருவாய்மொழிப் பிள்ளை யாவர்; அவரது திருவருளால் பெற்ற ஞானத்தைக் கொண்டு அவருடைய அபிமானமே உத்தாரகமென்று நீ அத்யவஸாயங் கொண்டிரு; அவர்க்காக எம்பெருமானார் பேறு தந்தருள்வரென்று நாம் கவலையற்றிருக்க ப்ராப்தம் என்றாராயிற்று. ... ... 21

தீதற்ற ஞானத் திருவாய் மொழிப்பிள்ளை சீரருளால்
ஏதத்தை மாற்று மெதிராசா தம்மபி மானமென்னும்
போதத்தை யேறிப் பவமாம் புணரி தனைக்கடந்து
கோதற்ற மாதவன் பாதக் கரையைக் குறுகுவனே. 22

தீது அற்ற ஞானம் — களங்கமில்லாத ஞானத்தையுடையவரான
திருவாய்மொழிப் பிள்ளை — திருமலையாழ்வாருடைய
சீர் அருளால் — சிறந்த கிருபையினாலே
ஏதத்தை மாற்றும் எதிராசர் தம் அபிமானம் என்னும் போதத்தை ஏறி — காமாதி தோஷஹரரான எம்பெருமானாருடைய அபிமானமாகிற படகில் ஏறி
பவம் ஆம் புணரி தனை கடந்து — ஸம்ஸாரமாகிற பெருங்கடலைக் கடந்து
கோது அற்ற மாதவன் பாதம் கரையை — அகில ஹேயப்ரத்யநீகனான பகவானுடைய திருவடிகளாகிற கரையை
குறுகுவன் — அணுகப் பெறுவேன்.

*** அஸ்மதாசார்யருடைய நிர்ஹேதுக க்ருபையாலே எம்பெருமானாருடைய அபிமானத்திற்கிலக்காகி எம்பெருமானடிசேரப் பெறுவது திண்ணமென்றதாயிற்று. போதம், பவம்—வடசொற்கள். ... ... ... ... 22

அடியார்கள் குழாங்க ளழகோலக்க மிருக்க
ஆனந்த மயமான மாமணி மண்டபத்துப்
படியாது மில்படுக்கை யாயிருக்கு மனந்தன்
பணமணிக டம்மிலொளி மண்டலத்தி னிடையில்
வடிவாரு மாமலராள் வலவருகு மற்றை
மண்மகளு மாய்மகளு மிடவருகு மிருக்க
நடுவாக வீற்றிருக்கும் நாரணனைக் கடுக
நானனுப விக்கும்வகை நல்கெனெதிராசா. 23

என் எதிராசா — அடியேனுக்கு ஸ்வாமியான யதிராஜரே!
அடியார்கள் குழாங்கள் — நித்ய முக்தர்களாகிற அடியார்களுடைய திரள்
அழகு ஓலக்கம் இருக்க — அழகான கோஷ்டியாக விருந்து ஸேவித்திருக்க
ஆனந்தமயம் ஆன மா மணி மண்டபத்து — ஆனந்தமே வடிவமெடுத்ததான திரு மா மணிமண்டபத்திலே

| | |
|---|---|
| படி ஆதும் இல் | எதுவும் உபமானமாகப்போராதபடி |
| படுக்கை ஆய் இருக்கும் | சயனமாகவிருக்கிற |
| அனந்தன் | ஆதிசேஷனுடைய |
| பணு மணிகள் தம்மில் | படங்களிலுள்ள ரத்னங்களினின்று வீசிய |
| ஒளிமண்டபதின் இடையில் | காந்தி ஸமூஹத்தின் நடுவே |
| வலம் அருகு | வலதுபக்கத்தில் |
| வடிவு ஆரும் மாமலராள் | அழகு பொருந்திய ஸ்ரீமஹாலக்ஷ்மியும் |
| இட அருகு | இடதுபக்கத்தில் |
| மற்றை மண் மகளும் ஆய் மகளும் இருக்க | மற்றை தேவிமார்களான பூமிப்பிராட்டியும் நீளாதேவியும் வீற்றிருக்க |
| நடுஆக வீற்றிருக்கும் நாரணனை | நடுவேயெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானை |
| கடுக நான் அநுபவிக்கும் வகை நல்கு | விரைவாக நான் அனுபவிக்குமாறு அருள்செய்யவேணும். |

* * * ஆழ்வார் * அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதன்று கொலோ * என்று பாரித்து * அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை * என்று அடியார்கள் குழாங்களிடையே இருக்கப் பெற்றதையே பரமபுருஷார்த்தமாக அருளிச் செய்ததனால் இங்கு 'அடியார்கள் குழாங்களுடகோலக்கமிருக்க' என்று முந்துறவருளிச் செய்தார். திருநாட்டில் திவ்யாஸ்தானமண்டபத்தில திவ்ய ஸிம்ஹாஸனத்திலே திவ்யமஹிஷீ பரிவ்ருதனாய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனைக் கடுக அடியேன் அனுபவிக்கும்படி செய்தருளவேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. ... ... ... 23

இந்தவுடல் விட்டிரவி மண்டலத் தூடேகி
    இவ்வண்டங் கழித்திடையி லாவரண மேழ்போய்
அந்தமில்பாழ் கடந்தழகார் விரசைதனிற் குளித்தங்
    கமானவனு லொளிக்கோண்ட சோதியும் பெற்றமரர்
வந்தெதிர்கோண் டலங்கரித்து வாழ்த்தி வழிநடத்த
    வைகுந்தம் புக்குமணி மண்டபத்துச் சேன்று
நந்திருமா லடியார்கள் குழாங்களுடன் கூடும்
    நாளேனக்குக் குறுகும்வகை நல்கேன் னேதிராசா. 24

| | |
|---|---|
| என் எதிராசா | எம்பெருமானாரே ! |
| இந்த உடல் விட்டு | இவ்வழுக்குடம்பை விட்டொழிந்து |
| இரவி மண்டலத்தூடு ஏகி | ஸூர்ய மண்டலத்தைக் கீண்டு சென்று |
| இவ் அண்டம் கழித்து | இந்த ப்ரஹ்மாண்டத்தைக் கடந்து |
| இடையில் ஆவரணம் ஏழ் போய் | நடுவிலுள்ள ஸப்தாவரணங்களையும் கடந்து |
| அந்தம் இல் பாழ் கடந்து | முடிவில்லாததான மூலப்ரக்ருதியையும் கடந்து |
| அழகு ஆர் விரசைதனில் குளித்து | ரமணீயமான விரஜா நதியில் நீராடி |
| அங்கு | அதன் பிறகு |
| அமானவனால் | அமாநவ கரஸ்பர்சத்தினால் |
| ஒளிகொண்ட சோதியும் பெற்று | தேஜோமயமான திவ்யதேஹத்தையும் பெற்று |
| அமரர் வந்து எதிர்கொண்டு அலங்கரித்து வாழ்த்தி வழி நடத்த | நித்யஸூரிகள் எதிர்கொண்டு வந்து ப்ரஹ்மாலங்காரங்கள் செய்து துதித்து அழைத்துக்கொண்டு செல்ல |
| வைகுந்தம் புக்கு | ஸ்ரீ வைகுண்டம் சேர்ந்து |
| மணி மண்டபத்து சென்று | திருமாமணி மண்டபத்தையடைந்து |
| நம் திருமால் அடியார்கள் குழாங்களுடன் கூடும் நாள் | பகவத் பக்தர்களான நித்யஸூரிகளின் கோஷ்டியோடே கூடிவாழும் நாள் |
| எனக்கு குறுகும் வகை நல்கு | அடியேனுக்கு ஸமீபித்ததாம்படி க்ருபை செய்தருளவேணும். |

* * * சரீரத்தைவிட்டு ஆத்மா உத்க்ரமித்தகாலம் தொடங்கிப் பரமபுருஷார்த்த ப்ராப்திபர்யந்தமான பேற்றின்வரிசைகள் இப்பாட்டில் அருளிச்செய்யப்பட்டன. இத்

தகைய பேறுகளை விரைவில் அடியேன் பெறுமாறு அருள்புரியவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று. ... ... ... ... ... 24

என்றுநிரே துகமாக வென்னையபி மானித்து
யானுமதறிந் துனக்கே யாயிருக்கும் வகைசெய்தாய்
அன்றுமுத லின்றளவு மனவரதம் பிழையே
யடுத்தடுத்ததுச் செய்வ தநுதவிப்ப தினிச் செய்யேன்
என்றுன்னை வந்திரப்ப தாமென் கொடுமைகண்டு
மிகழாதே யிரவுபக லடிமைகொண்டு போந்தாய்
இன்றுதிரு நாடுமெனக் கருளவெண்ணு கின்றாய்
இனிக்கடுகச் செய்தருள வேண்டுமெதிராசா. 25

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! |
| என்னை நிரேதுகமாக அபிமானித்து | தேவரீர் அடியேனை நிர்ஹேதுகமாக அபிமானித்தருளி |
| யானும் அது அறிந்து உனக்கேஆய் இருக்கும்வகை | அவ்வபிமான விசேஷத்தை அடியேனுமறிந்து தேவரீருக்கே அநந்யார்ஹசேஷமாயிருக்கும்படி |
| என்று செய்தாய் | எந்நாளில் செய்தருளினீரோ, |
| அன்றுமுதல் | அந்நாள் முதலாக |
| இன்று அளவும் | இந்நாள்வரையிலும் |
| அனவரதம் | ஓய்வின்றி |
| அடுத்து அடுத்து | இடையறாது |
| பிழையேசெய்வது | அபராதங்களையே செய்வது |
| அநுதவிப்பது | பச்சாத்தாபப் படுவது |
| இனி செய்யேன் என்று | இனிப் பிழை செய்யமாட்டேனென்று சொல்லி |
| உன்னை வந்து இரப்பது ஆம் | தேவரீரிடம்வந்து க்ஷமைவேண்டுவது ஆக விப்படிப்பட்ட |
| என்கொடுமை கண்டும் | எனது கொடிய செய்கைகளைக் கடாக்ஷித்தும், |
| இகழாதே | உபேக்ஷியாமல் |
| இரவு பகல் | ஸர்வகாலத்திலும் |
| அடிமை கொண்டு போந்தாய் | என்பால் கைங்கரியம் கொண்டருளினீர்; |
| இன்று திருநாடும் எனக்கு அருள எண்ணுகின்றாய்; | இப்போது பரமபதத்தையும் எனக்கருளத் திருவுள்ளம் பற்றி யிருக்கிறீர்; |
| இனி | இப்படியானபின்பு |
| கடுக செய்தருள வேண்டும் | அந்த முக்தி தானத்தை விரைவாகச் செய்தருளவேணும், |

* * * ஸ்வாமிந்! அடியேனைத் தேவரீர் அங்கீகரித்தருளினவன்று தொடங்கி இன்றளவும் நான் பிழைசெய்வதும் அநுதபித்து க்ஷமைவேண்டுவதும் மீண்டும் பிழை செய்வதும் அநுதபித்து க்ஷமைவேண்டுவதுமாயிருந்து வருகின்றேன். இப்படியிருந்தும் என்னைக்கொண்டு பல கைங்கர்யங்கள் செய்வித்துக்கொண்டீர்; இவ்விபூதியில் கைங்கர்யமேயன்றி அவ்விபூதியில் நித்ய கைங்கர்யமும் கொண்டருளத் திருவுள்ளம் பற்றியிருக்கின்றீரென்பதையுமறிவேன். அதில் காலவிளம்பம் வேண்டாவென்று பிரார்த்திக்கின்றேனத்தனை யென்கிறார். 'நிர்ஹேதுகம்' என்னும் வடசொல் நிரேதுகமெனத் திரிந்தது. ... .... ... ... ... 25

தென்னரங்கர் தமக்காமோ? தேவியர்கட் காமோ?
சேனையர்கோன் முதலான சூரியர்கட் காமோ?
மன்னியசீர் மாறனருள் மாறிதமக் காமோ?
மற்றுமுள்ள தேசிகர்கள் தங்களுக்கு மாமோ?
என்னுடைய பிழைபொறுக்க யாவருக்கு முடியும்?
எதிராசா வுனக்கன்றி யானொருவர்க் காகேன்
உன்னருளா லெனக்குருசி தன்னையு முண்டாக்கி
ஒளிவிசும்பி லடியேனை யொருப்படுத்து விரைந்தே. 26

| பதம் | பொருள் |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! |
| என்னுடைய பிழைபொறுக்க | எனது அபசாரங்களைப்பொறுப்பதற்கு |
| தென் அரங்கர் தமக்குஆமோ | ஸ்ரீரங்க நாதனாலாகுமோ? |
| தேவியர்கட்கு ஆமோ | பெரிய பிராட்டியார் முதலான தேவிமார்களால் தானாகுமோ? |
| சேனையர்கோன் முதலான சூரியர்கட்குஆமோ | ஸேனை முதலியார் முதலான நித்ய ஸூரிகளால் தானாகுமோ? |
| மன்னிய சீர் மாறன் அருள் மாரி தமக்கு ஆமோ | சிறந்த .குணசாலிகளான நம்மாழ்வார் கலியன் முதலான ஆழ்வார்களால் தானாகுமோ? |
| மற்றும் உள்ள தேசிகர்கள் தங்களுக்கும் ஆமோ | மற்றுமுள்ள நாத யாமுநாதிகளான ஆசாரியர்களால் தானாகுமோ? |
| உனக்கு அன்றி யாவருக்கு முடியும் | தேவரீராலன்றி வேறொருவரால் பொறுக்கலாகுமோ ? |
| யான் (உனக்கு அன்றி) ஒருவர்க்கு ஆகேன் | அடியேன் தேவரீர்க்கே அநந்யார்ஹசேஷபூதன் ; |
| உன் அருளால் | தேவரீரது கிருபையினாலே |
| எனக்கு உருசி தன்னையும் உண்டாக்கி | அடியேனுக்கு ப்ராப்ய ருசியையுண்டாக்கி வைத்து |
| அடியேனை ஒளி விசும்பில்விரைந்துஒருப்படுத்து | அடியேனைத் திருநாட்டில் விரைவாகச் சேர்த்தருள வேணும். |

* * * மஹாக்ருபாளுக்களாகப் புகழ்பெற்றவர்களான எம்பெருமான் பிராட்டிமார்கள் நித்யஸூரிகள் ஆழ்வார்கள் ஆசாரியர்கள் ஆக இவர்களில் ஒருவர்க்கும் பொறுக்க வொண்ணாதபடி அபசாரங்களை அளவறச் செய்திருக்குமடியேனை ஸ்வாமிந் ! தேவரீரே க்ஷமைக்கு இலக்காக்கிப் பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளையும் விளைத்துக் காலதாமதமின்றித் திருநாடு சேர்த்தருள வேணுமென்றாராயிற்று. ... ... 26

இவ்வுலகி லினியொன்று மேண்ணாதே நெஞ்சே
இரவுபக லெதிராச ரேமக்கினிமே லருளும்
அவ்வுலகை யலர்மகள்கோ னங்கிருக்கு மிருப்பை
யடியார்கள் குழாங்கடமை யவர்களனு பவத்தை
இவ்வுயிரு மதுக்கிட்டுப் பிறந்திழந்து கிடந்த
தென்னுமத்தை யென்றுமதுக் கிடைச்சுவராய்க் கிடக்கும்
வெவ்வினையால் வந்தவுடல் விடும்பொழுதை விட்டால்
விளையுமின்பந் தன்னை முற்றும் விடாமலிருந் தெண்ணே. 27

| பதம் | பொருள் |
|---|---|
| நெஞ்சே | மனமே! |
| இவ் உலகில் ஒன்றும் எண்ணாதே | இனி இவ்வுலகில் ஒன்றையும் பற்றிச் சிந்தியாதே ; |
| (பின்னை எதைப்பற்றிச் சிந்திக்க வேண்டுமென்னில்;) | |
| எதிராசர் தமக்கு இனிமேல்அருளும் அவ் உலகை | எம்பெருமானார் நமக்கு இனி அருளப்போகிற அவ்விபூதியையும் |
| அலர்மகள் கோன் இருக்கும் இருப்பை | திருமகள் கொழுநனான பரமபுருஷன்எழுந்தருளியிருக்கிறபடியையும் |
| அடியார்கள் குழாங்கள் தமை | அங்குள்ள பாகவத கோஷ்டிகளையும் |
| அவர்கள் அனுபவத்தை | அவர்கள் அநுபவிக்கும் பரிசுகளையும் |
| இவ் உயிரும் அதுக்குஇட்டுப் பிறந்து இழந்து கிடந்தது என்னுமத்தை | இவ்வாத்ம வஸ்துவும் அப்படிப்பட்ட அநுபவங்களுக்குஇட்டுப் பிறந்து இழந்து கிடக்கிறபடியையும் |
| என்றும் அதுக்கு இடைச்சுவர் ஆய் கிடக்கும் வெம் வினையால்வந்தஉடல் விடும்பொழுதை | அவ்வநுபவங்கட்கு எப்போதும் விரோதியாயிருக்கின்ற கொடிய பாவங்களாலுண்டான தேஹம் விமோசனமாகுங் காலத்தையும் |
| விட்டால் வினையும் இன்பம் தன்னை | தேஹ வியோகமான பின்பு விளையப்போகிற பேரின்பத்தையும் |
| முற்றும் | ஆகியஇவை யெல்லாவற்றையும் |
| இரவு பகலும் விடாமல் இருந்து எண் | இரவும்பகலும் இடைவிடாது சிந்தித்துப்போரு. |

* * * "நோபஜநம் ஸ்மரந் இதம் சரீரம்" என்று உபநிஷத்தில் ஓதினபடியே இவ்வுலகில் சரீராநுபந்தியான வொன்றையும் சிந்தைசெய்யாமல் பரமபதாநுபவங்களையே சிந்திக்குமாறு தம் திருவுள்ளத்திற்கு உரைத்தாராயிற்று. 27

பண்டுபல வாரியரும் பாருலகோ ருய்யப்
பரிவுடனே செய்தருளும் பல்கலைக டம்மைக்
கண்டதெல்லா மெழுதி யவை கற்றிருந்தும் பிறர்க்குக்
காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்
புண்டரீகை கேள்வனுறை பொன்னுலகு தன்னில்
போகநினை வொன்றுமின்றிப் பொருந்தியிங்கே யிருந்தேன்
எண்டிசையு மேத்துமெதி ராசனரு ளாலே
எழில்விசும்பே யன்றியிப்போ தேன்மனமேண் ணுதே. 28

| | |
|---|---|
| பண்டு பல ஆரியரும் | பூருவாசாரியர்கள் பலரும் |
| பார் உலகோர் உய்ய | இந்நிலவுலகத்தோர் உஜ்ஜீவிக்குமாறு |
| பரிவு உடனே செய்தருளும் | அன்போடு அருளிச்செய்த |
| பல் கலைகள் தம்மை | பல திவ்யக்ரந்தங்களில் |
| கண்டது எல்லாம் எழுதி | எதைப் பார்த்தாலும் அதையெல்லாம் எழுதியும் |
| அவை கற்றிருந்தும் | அவற்றை ஆசாரியர் பக்கலிலே அப்யஸித்தும் |
| பிறர்க்கு காதலுடன் கற்பித்தும் | அந்தேவாஸிகளுக்கு ப்ரேமமுடன் போதித்தும் |
| காலத்தை கழித்தேன் | பொழுதைப் போக்கினேன் ; |
| புண்டரீகை கேள்வன் உறை பொன் உலகு தன்னில்போக | திருமால் நித்யவாஸம் செய்தருளுகிற நித்ய விபூதியிலே சென்று சேர |
| நினைவு ஒன்றும் இன்றி | சிறிதும் எண்ணமின்றிக்கே |
| இங்கே பொருந்தியிருந்தேன் | இவ்விபூதியிலேயே ஆசையுள்ளவனாயிருந்தேன்! (இதுவரையில் இப்படியிருந்தேனாயினும்) |
| இப்போது | இப்போதோ வென்றால், |
| எண் திசையும் ஏத்தும் எதிராசன் அருளாலே | எவ்விடத்திலுள்ளவர்களும் துதிக்கும்படியான எம்பெருமானாது க்ருபையினாலே |
| எழில் விசும்பே அன்றி | பரமபதந்தவிர வேறொன்றை |
| என்மனம் எண்ணாது | என்னெஞ்சுசிந்திக்கமாட்டாதேயிரா நின்றது. |

* * * 'தெரித்தெழுதிவாசித்துங்கேட்டும் வணங்கிவழிபட்டும் பூசித்தும் போக்கினேன்போது'; (2444) என்று திருமழிசைப்பிரானருளிச் செய்தபடியே பூருவாசார்ய க்ரந்தங்களைக்கொண்டே பலபடியாலும் போது போக்கி யிருந்தேனாதலால் * இச்சுவை தவிர யான்போ யிந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன் என்றே இதுகாறு மிருந்தேன்; இப்போது திருநாட்டிலநுபவங்களுக்கு ஆசைப்படுமாறு எம்பெருமானரது திருவருளைப்பெற்றேன் என்றாராயிற்று. ... ... ... 28

சாறு வாகமத நீறு செய்து சம ணச்சேடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக் கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரி முறித்திட
மாறு செய்திடு கணாத வாதியர்கள் வாய்தகர்த்தற மிகுத்துமேல்
வந்த பாசுபதர் சிந்தியோடும்வகை வாதுசெய்த வேதிராசனார்
கூறு மாகுரு மதத்தோ டோங்கிய குமாரிலன்மத மவற்றின்மேல்
கோடிய தர்க்கசரம் விட்டபின் குறுகி மாய வாதியரை வென்றிட
மீறி வாதில்வரு பார்க்கரன்மத விலக்கடிக்கோடி யெறிந்துபோய்
மிக்க யாதவ மதத்தை மாய்த்த பெரு வீரர் நாளுமிக வாழியே. 29

| | |
|---|---|
| சாறுவாகமதம் நீறுசெய்து | சார்வாக மதத்தை பஸ்மமாக்கியும் |
| சமணம்செடிக்கு அனல்கொளுத்தியே | சமணமதமாகிற செடி நெருப்புப் பற்றியெறியும்படி செய்தும் |
| சாக்கியம் கடலை வற்றுவித்து | சாக்ய மதமாகிற ஸமுத்ரத்தை சோஷிப்பித்தும் |
| மிகு சாங்கியம் கிரி முறித்திட | மிகுந்த ஸாங்க்யமதமாகிய மலையைச் சேதித்தவளவிலே |
| மாறு செய்திடு கணுதவாதியர்கள் வாய் தகர்த்து | துர்வாதம் பண்ணுகிற கணுத மதஸ்தர்களின் வாயைத் தகர்த்து, |
| அற மிகுத்து மேல் வந்த | அதிக ப்ரஸங்கத்துடனே மேல் விழுந்து வந்த |
| பாசுபதர் | சைவர்கள் |
| சிந்தி ஓடும் வகை | சிதறியோடும்படி |
| வாது செய்த | வாதப் போர் நடத்தியவரும், |
| கூறு மா குரு மதத்தொடு | உலகில் பேசப்படுகிற குருமதமென்ன |
| ஓங்கிய குமாரிலன் மதம் | ஓங்கியிருக்கின்ற குமாரிலமதமதமென்ன |
| அவற்றின்மேல் | ஆகிய அப்படிப்பட்ட மதங்களின்மீது |
| கொடிய தர்க்க சரம்விட்டபின் | கடோமான தர்க்கங்களாகிற அம்புகளைப் பொழிந்து, பின்பு |
| மாய வாதியரை | மாயாவாதிகளை |
| குறுகி வென்றிட | அவர்களிருக்குமிடமணுகிச் சென்று வாதித்து ஜயித்திட்டு |
| மீறி வாதில்வரு | மிகைத்து வாதத்தில் வருகின்ற |
| பாற்கரன்மதம் | பாஸ்கரனுடைய மதமாகிற |
| விலக்கடிக்குஒடியெறிந்து | துர்மார்க்கத்தைச் சேதித்து |
| போய் | அப்பால் சென்று |
| மிக்க யாதவ மதத்தை மாய்த்த | மிகைத்த யாதவமதத்தை த்வம்ஸம் பண்ணினவருமான |
| பெரு வீரர் எதிராசனார் | மஹாவீரரான எம்பெருமானார் |
| நாளும் | எந்நாளும் |
| மிக வாழி | ஒரு குறையுமின்றி வாழவேணும். |

* * * அனேக துர்மதங்களை யொழித்து துர்வாதிகளை வென்றவரான எம்பெருமானார் நித்யஸ்ரீர்நித்யமங்களமாக விளங்கவேணுமென்று மங்களாசாஸனம் பண்ணினாராயிற்று. குருமத மென்பது ப்ராபாகரமதம். குமாரிலன் மத மென்பது பாட்டமதம்.

சீராரு மெதிராசர் திருவடிகள் வாழி
திருவரையிற் சாத்திய சேந்துவராடை வாழி
ஏராருஞ் செய்யவடி வெப்பொழுதும் வாழி
இலங்கிய முந்நூல்வாழி யிணைத்தோள்கள் வாழி
சோராத துய்ய செய்ய முகச்சோதி வாழி
தூமுறுவல் வாழி துணைமலர்க் கண்கள் வாழி
ஈராறு திருநாம மணிந்த வெழில் வாழி
இனிதிருப்போ டெழில் ஞான முத்திரை வாழியே. 30

| | |
|---|---|
| சீர் ஆரும் எதிராசர் | சீர்மை மிக்க எம்பெருமானுருடைய |
| திருஅடிகள்வாழி | ஸ்ரீபாதங்கள் வாழ்க; |
| திரு அரையில் சாத்திய | திருவரையிலே தரித்துள்ள |
| செம்துவர்ஆடை வாழி | காஷாய வஸ்த்ரம் வாழ்க ; |
| எர்ஆரும்செய்ய வடிவு | அழகுபொருந்திய திவ்யமங்கள விக்ரஹம் |
| எப்பொழுதும் வாழி | எந்நாளும் வாழ்க; |
| இலங்கிய முந்நூல் வாழி | திருமார்பிலே விளங்காநின்ற முப்புரியான ப்ரஹ்மஸூத்ரம் வாழ்க; |
| இணைதோள்கள் வாழி | இரண்டு திருத்தோள்களும் வாழ்க; |
| சோராத துய்ய செய்ய முகம் சோதிவாழி | ஒருநாளும் வாட்டமடையாத பரம பரிசுத்தமான செவ்விய திருமுகமண்டலச் சுடர்வாழவேணும். |
| தூமுறுவல்வாழி | அழகிய புன்முறுவல் வாழ்க; |
| துணை மலர் கண்கள் வாழி | மலர்போன்ற இரண்டுதிருக்கண்களும் வாழ்க; |
| ஈர் ஆறுதிரு நாமம்அணிந்த எழில் வாழி | த்வாதசோர்த்வ புண்டரங்கள் சாத்திக்கொண்டிருக்கு மழகு வாழ்க; |
| இனிது இருப் போடு எழில் ஞானமுத்திரை வாழி | பரம போக்யமாக எழுந்தருளியிருக்குமிருப்பும் ஞானமுத்ரையும் வாழ்க. |

* * * "ஆசாரியன் சிச்சனுருயிரைப் பேணுமவன், தேசாரும் சிச்சன் அவன் சீர்வடிவை ஆசையுடன் நோக்குமவன்" என்று உபதேசரத்தினமாலையில் அருளிச் செய்தபடியே ஆசார்யனுடைய திவ்ய மங்களவிக்ரஹமே அஸ்மதாதிகளுக்குப் பரமோத்தேச்யமாதலால் நமக்கு நித்யாநுஸந்தேயமாக எம்பெருமானுருடைய திவ்யாவயவங்களுக்கு மங்களாசாஸனம் செய்தருளினராயிற்று. ... ... ... 30

அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவருங் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வமுற்றுந் திருத்திவைத்தான் வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரை செய்த தமிழ் மறைவளர்த்தோன் வாழியே
அறமிகுநற் பெரும்பூதூ ரவதரித்தான் வாழியே
அழகாரு மெதிராச ரடியிணைகள் வாழியே. 31

| | |
|---|---|
| அறுசமயம்செடி அதனை அடி அறுத்தான் வாழி | ஆறு பாஹ்யமதங்களாகிறசெடிகளை வேரோடு அறுத்தொழித்த எதிராசர் வாழ்க; |
| அடர்ந்து வரும் குதிட்டிகளை அறதுறந்தான் வாழி | நெருங்கி வந்த குத்ருஷ்டிகளை அறவே யொழித்தவர்வாழ்க. |
| செறுகலியை சிறிதும் அற தீர்த்துவிட்டான் வாழி | செறுகின்ற கலிபுருஷன் சிறிதுமில்லாதபடி தீர்த்தொழித்தவர் வாழ்க; |
| தென் அரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழி | ஸ்ரீ ரங்கநாதனுடைய ஸாம்ராஜ்யங்களை பரிஷ்கரித்தவர் வாழ்க; |
| மறை அதனில் பொருள் அனைத்தும் வாய்மொழிந்தான் வாழி | வேதார்த்தங்களை யெல்லாம்விசதீகரித்தருளினவர் வாழ்க( |
| மாறன் உரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழி | நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியை வளர்த்த தாயானவர் வாழ்க; |
| அறம்மிகு நல் பெரும்பூதூர் அவதரித்தான் வாழி; | தர்மமார்க்கம் தழைத்தோங்கும் படியான ஸ்ரீபெரும்பூதூரிலே உதித்தவர் வாழ்க; |
| அழகுஆரும்எதிராசர்அடி இணைகள் வாழி | அழகுபொலிந்த எம்பெருமானுருடைய உபயபாதங்களும் வாழ்க. |

* * * எம்பெருமானுருடைய திவ்ய சேஷ்டிதங்களுக்கு மங்களாசாஸனம் செய்தருளுகிறபடி. சாக்ய உலூக்ய அக்ஷபாத க்ஷபண கபில பதஞ்சலி மதங்களாறும் அறுசமயங்களெனப்படும். வேறுவகையாகவுஞ் சொல்வதுண்டு. வேதங்களைப்பிரமாணமாக வொப்புக்கொண்டே அவற்றில் அபார்த்தம் செய்பவர்கள் குத்ருஷ்டிகளாவார். மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தது வேதார்த்தஸங்க்ரஹம் ஸ்ரீ பாஷ்யம் முதலிய திவ்யக்ரந்தங்களாலும் உபதேசமுகத்தாலும். * வான்திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ் மேலான்ற தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன் * என்றதையடியொற்றி மாறனுரை செய்த தமிழ்மறைவளர்த்தோனென்றது. ... ... ... 31

சங்கரபற்கரயாதவ பாட்டபிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர் மாய்குவரேன்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலை யென்றுமிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமை யாறுமெனத்துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்
மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள் சூழ்வயல்நாளும் சிறந்தபெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே. 32

| | |
|---|---|
| செம்கயல் வாவிகள் வயல் சூழ் | அழகிய கயல்மீன்கள் நிறைந்த வாவிகளாலும் கழனிகளாலும் சூழப்பட்டு |
| நாளும் சிறந்த | இடைவிடாத சிறப்புப் பொருந்திய |
| பெரும்பூதூர் | ஸ்ரீபெரும்பூதூரிலே |
| சீமான் இளையாழ்வார் வந்தருளிய நாள் | ஸ்ரீராமாநுஜர் அவதரித்தருளிய திருநக்ஷத்திரமாகிய |
| திருஆதிரைநாள் | திருவாதிரைத் திருநாள் (எப்படிப்பட்டதெனில்) |
| சங்கரர் பாக்கரர் யாதவர் பாட்டர் பிரபாகரர் தங்கள் மதம் சாய்வு உற | சங்கரர் முதலானாருடைய மதங்கள் சைதில்யமடைய |
| வாதியர் மாய்குவர் என்று | அப்படிப்பட்ட மதாந்தரஸ்தர்கள் யாவரும் தொலைந்திடுவர்களென்று கொண்டு |
| சதுமறைவாழ்ந்திடும் நாள் | நான்கு வேதங்களும் களிப்புப் பெறும் நாளாகும். |
| வெம்கலி | வெவ்விய கலிபுருஷன் |
| இங்கு நமக்கு இனிவீறு இலை என்று | இந்நிலவுலகத்தில் நமக்கு இனிமேல் சாம்ராஜ்யமில்லையென்றுகொண்டு மிகவும் சோர்வடையும் நாளாகும். |
| மேதினி | பூமிப்பிராட்டியானவள் |
| நம் சுமை ஆறும் என துயர்விட்டு விளங்கிய நாள் | (இனி) நம் தலைச்சுமை ஒழியுமென்று கொண்டு துயர் தீர்ந்து விளங்கும் நாளாகும் |
| மங்கையர் ஆளி பராங்குசன் முன்னவர் வாழ்வுமுளைத்திடு நாள் | கலியன் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களினுடைய ஸந்தோஷம் தலையெடுக்கும் நாளாகும்: |
| மன்னிய தென் அரங்காபுரி மாமலை மற்றும் உவந்திடும் நாள் | அழகிய திருவரங்கம் திருமலை முதலான திவ்ய தேசங்களெல்லாம்உகக்கும்நாளாகும். |

* * * சங்கராதி மதாந்தரஸ்தர்களின் அபார்த்தங்களைக் கண்டித்து வேதாந்த ஸதர்த்த ஸ்தாபனம் பண்ணுகைக்காகவும், கலிபுருஷஸாம்ராஜ்யத்தைச் சிதைப்பதற்காகவும், பூபாரமாயிருக்கின்ற துஷ்டர்களை யெல்லாம் ஸஜ்ஜனமாக்கிப் பூதேவியை மகிழ்விப்பதற்காகவும், பராங்குசபரகாலாதிகளான ஆழ்வார்களின் அருளிச்செயல்களை மிகவளர்த்து அவர்களையுகப்பிக்கைக்காகவும் திவ்யதேசஸமுத்தாரத்திற்காகவும் எம்பெருமானார் திருவவதரித்தாரென்றதாயிற்று. 32

இன்னமெத்தனை காலமிந்த வுடம்புடன் யானிருப்பன்
இன்னபொழுதுடம்பு விடுமின்னபடியதுதான்
இன்னவிடத்தே யதுவுமென்னு மிவையெல்லாம்
எதிராசா நீயறிதி யானிவையொன்றறியேன்
என்னை யினியிவ்வுடம்பை விடுவித்துன்னருளால்
ஏராரும் வைகுந்தத்தேற்ற நினைவுண்டேல்
பின்னைவிரையாமல் மறந்திருக்கிறதென்பேசாய்
பேதைமைதீர்த்தேனை யடிமைகொண்ட பெருமானே. 33

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே ! |
| இன்னம் எத்தனைகாலம்இந்த உடம்புடன் யான் இருப்பன் | இன்னமும் எவ்வளவுகாலம்இவ்வழுக்குடம்போடு அடியேனிருப்பேன்?(என்பதென்ன?) |
| உடம்பு இன்ன பொழுதுவிடும் | இவ்வுடம்பு இன்னகாலத்திலே விட்டுநீங்கும் (என்பதென்ன) |
| அதுதான் இன்னபடி | இந்ததேஹவியோகம்இன்னபடியாக நேரும் (என்பதென்ன) |
| அதுவும் இன்ன இடத்தே | அந்த தேஹவியோகம் இன்ன ஸ்தலத்திலே யாகும் (என்பதென்ன) |
| என்னும் இவை எல்லாம்நீ அறிதி | ஆகிய இவையெல்லாவற்றையும் தேவரீர் அறியக்கடவீர்: |
| யான் இவை ஒன்று அறியேன் | அடியேன் இவற்றிலொன்றையும் அறிகின்றிலேன்; |
| பேதைமை தீர்த்து என்னை அடிமை கொண்ட பெருமானே | அகவிருளைப்போக்கி அடியேனை ஆட்படுத்திக்கொண்டஸ்வாமி! |

| பதம் | பொருள் |
|---|---|
| இனி உன் அருளால் என்னை இ உடம்பை விடுவித்து | இனி தேவரீர் கருணையினாலே எனக்கு இந்த தேஹம்தொலையும்படி செய்வித்து |
| எர்ஆரும்வைகுந்தத்து எற்றகினைவு உண்டு எல் | அழகிய திருநாட்டிலேஎன்னைச் சேர்ப்பிக்கத் திருவுள்ளமுண்டாகில் |
| பின்னை விரையாமல் மறந்து இருக்கிறது என் | இன்னமும் மறந்துகால தாமதம் செய்வது என்னே? |
| பேசாய் | அருளிச்செய்யவேணும்; |

இவ்விபூதியில் அடியேன் இன்னமும் இருக்கக்கூடிய நாள் இவ்வளவென்றும் இன்னபோதிலே இன்னவிடத்திலே இன்னபடியாக அடியேனுக்கு தேஹாவஸானமாகுமென்றும் எல்லாம் தேவரீர் அறியவல்லீர்; அடியேனுக்கு இவையொன்றும் தெரியாது. இவ்வழுக்குடம்பைப்போக்கித் திருவடிசேர்த்துக்கொள்ளத் திருவுள்ள முண்டாகில் உபேக்ஷித்துக் காலதாமதம் செய்வதுஎன்னே? என்றாராயிற்று. 33

முன்னைவினை பின்னைவினை யாரத்தமென்னும்
    மூன்றுவகையான வினைத்தொகையனைத்தும் யானே
என்னையடைந்தோர் தனக்குக் கழிப்பனென்னுமரங்கர்
    எதிராசா நீயிட்டவழக்கன்றோ சொல்லாய்
உன்னையல்லதறியாத யானிந்தவுடம்போடு
    உழன்றுவினைப்பயன் புசிக்கவேண்டுவதேன்றுண்டோ
என்னுடையவிருவினையை யிறைப்பொழுதில்மாற்றி
    ஏராரும்வைகுந்தத்தேற்றி விடாய் நீயே. 34

| பதம் | பொருள் |
|---|---|
| எதிராசா! | எம்பெருமானாரே! |
| என்னை அடைந்தோர் தமக்கு | "என்னுடைய பக்தர்களுக்கு |
| முன்னைவினை பின்னை வினை ஆரத்தம் என்னும் மூன்று வகை ஆன | பூர்வாகம் உத்தராகம் ப்ராப்த கருமம்என்று சொல்லப்பட்ட மூவகையான |
| வினை தொகை அனைத்தும் | பாவத்திரள்களையெல்லாம் |
| யானே கழிப்பன் என்னும் அரங்கர் | நானே போக்கி யருள்வேன்" என்றருளிச்செய்த திருவரங்கநாதர் |
| நீ இட்ட வழக்கு அன்றோ | தேவரீருக்கு விதேயரன்றோ? |
| சொல்லாய் | அருளிச்செய்யவேணும்; |
| உன்னை அல்லது அறியாத யான் | தேவரீரையன்றி வேறொருவரையும் தஞ்சமென்றறியாத அடியேன் |
| இந்த உடம்பொடு உழன்று | இவ் வழுக்குடம்போடே அலைந்து |
| வினைப்பயன் புசிக்க வேண்டுவது ஒன்று உண்டோ | கருமபலன்களை யனுபவிக்க வேணுமென்பதொரு நிர்ப்பந்தமுண்டோ? |
| என்னுடைய இரு வினையை | எனது விசாலமான பாவங்களை |
| இறை பொழுதில் | க்ஷணகாலத்திலே |
| மாற்றி | தீர்த்து |
| எர்ஆரும்வைகுந்தத்து நீயே எற்றிவிடாய் | அழகிய திருநாட்டிலே தேவரீரே அடியேனைச் சேர்த்தருளவேணும். |

* ஸர்வதர்மாந் பரித்யஜ்ய* என்கிற சரமச்லோகத்திலே *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி * என்றதில் விவக்ஷிதமானதை ஒன்றரையடிகளில் அருளிச் செய்கிறார், முன்னைவினையாவது பூர்வாகம்; ஆச்ரயிப்பதற்கு முன்னே அறிந்துமறியாமலுஞ் செய்த பாவங்கள். பின்னைவினையாவது உத்தராகம்; ஆச்ரயித்தபிறகு ப்ரக்ருதிவாஸனையினால் ப்ராமாதிகமாக நேரும் பாவங்கள். ஆரத்தமாவது ப்ராரப்த கருமம்—பலன் கொடுக்க ஆரம்பித்த கருமங்களென்றபடி. என்றிப்படி மூவகைப்பட்ட தீவினைகளையும் என்னடியார்க்கு நானே தவிர்ப்பேனென்று சரமச்லோக முகத்தாலேயருளிச்செய்தவர் திருவரங்கநாதர்; அவர் தேவரீர்க்கு ஸர்வாத்மனா விதேயரென்பது ப்ரஸித்தம்; அப்படியிருக்க, தேவரீரையே புகலென்று பற்றின வடியேன் இன்னமும் கருமபலன்களை யனுபவித்துக்

கொண்டிருக்க தேவரீர் பார்த்துக்கொண்டிருப்பது தகுதியோ? ப்ராப்யபூமியிலே யென்னைக்கொண்டுபோய்ச் சேர்த்தருளவேணு மென்றாராயிற்று. யதிராஜவிம்சதியில் *ச்ருத்யக்ரவேத்ய* இத்தியாதிச்லோகம் இப்பாசுரத்திற்குச் சார்பாக அநுஸந்தேயம். 34

அருளாலேயடியேனை யபிமானித்தருளி
அநவரதமடிமைகொள்ள நினைத்து நீயிருக்க
மருளாலேபுலன்போக வாஞ்சைசெய்யுமென்றன்
வல்வினையை மாற்றியுன்பால் மனம்வைக்கப்பண்ணாய்
தெருளாரும் கூரத்தாழ்வானு மவர்செல்வத்
திருமகனார்தாமு மருளிச்செய்த தீமைத்
திரளானவத்தனையுஞ் சேரவுள்ளவென்னைத்
திருத்தியுய்யக்கொள்ளும் வகை தேருமெதிராசா. 35

| | |
|---|---|
| எதிராசா! | எம்பெருமானாரே! |
| அருளாலே அடியேனை நீ அபிமானித்தருளி | பரமக்ருபையினாலே அடியேனை ஓரடியானாகத் தேவரீர் திருவுள்ளம்பற்றி |
| அனவரதம் அடிமைகொள்ள நினைத்து இருக்க | நிரந்தர கைங்கரியங்கள் கொண்டருள நினைப்பிட்டிருக்க, (அதற்குமாறாக) |
| மருளாலே | அஜ்ஞானத்தினாலே |
| புலன் போகம் வாஞ்சை செய்யும் என்தன் | இந்திரியங்களுக்குற்ற விஷய போகங்களை அபேக்ஷித்திருக்கின்ற அடியேனுடைய |
| வல்வினையை மாற்றி | பிரபலகருமங்களைத் தொலைத்து |
| உன்பால் மனம் வைக்க பண்ணாய் | தேவரீர் திறத்திலேயே அடியேன் அநுரக்தனாயிருக்கச் செய்தருளவேணும்; |
| தெருள் ஆரும் கூரத்து ஆழ்வானும் | சிறந்த ஞானம் மிக்க கூரத்தாழ்வானும் |
| அவர் செல்வம் திருமகனார் தாமும் | அவ்வாழ்வானுடைய செல்வக் குமாரரான பட்டரும் |
| அருளிச்செய்த | நைச்யாநுஸந்தானமாகப் பேசின |
| தீமைதிரள் ஆன அத்தனையும் | பாப ஸமூஹங்களான வனைத்தும் |
| சேர உள்ள என்னை | ஒன்றுசேர்ந்து ஒருருவெடுத்திருக்குமடியேனை |
| திருத்தி உய்யக் கொள்ளும் வகை தேரும் | திருத்தி உஜ்ஜீவிப்பிக்கும் வகையைச் சிந்தித்தருள்வீராக. |

கூரத்தாழ்வான் பட்டர் முதலானார் தங்களுடைய ஸ்தவங்களிலே அபரிமிதமாக நைச்யாநு ஸந்தானம் செய்துகொண்டிருக்கிறார்கள், ஆனால் அந்த நைச்சியம் அவர்களிடத்தில் உண்மையாகச் சிறிதுங் கிடையாது. அவர்கள் தாம் ஏறிட்டு அநுஸந்தித்துக் கொண்ட அந்த நைச்சியமெல்லாம் வடிவெடுத்தவன் அடியேனே; இப்படிப்பட்டவென்னை தேவரீர் ஏற்கெனவே அபிமானித்தருளி அத்தாணிச் சேவகங் கொள்ளத் திருவுள்ளம்பற்றியிருந்தும் அடியேன் ப்ராக்ருத போகங்களிலேயே யீடுபட்டிருக்கும்படியான பாவியாயிராநின்றேன்; இந்நிலையை மாற்றியருள வேணுமென்றாராயிற்று. *வாசாமகோசரமஹாகுண தேசிகாக்ர்ய* என்ற யதிராஜ விம்சதி ச்லோகம் பின்னடிகட்குச் சேர அநுஸந்திப்பது. 35

வாசனையிலூற்றமோ மாளாதவல்வினையோ
ஏதென்றறியே னெதிராசா—தீதாகும்
ஐம்புலனிலாசை யடியேன் மனந்தன்னை
வன்புடனே தானடரும் வந்து. 36

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே! |
| தீது ஆகும் ஐம் புலனில் ஆசை | மிகக்கொடியதாகிய விஷய விருப்பமானது |
| அடியேன் மனம் தன்னை | அடியேனது நெஞ்சை |
| வன்புடனே | பலாத்காரமாக |
| தான் வந்து அடரும் | தானே மேல்விழுந்து வந்து நலியாநின்றது; (இதற்குக் காரணம்) |

| | |
|---|---|
| வாசனையில் ஊற்றமோ | அநாதி பாபவாஸனையின் கனமோ ? |
| மாளாத வல் வினையோ | ப்ராயச்சித்தங்களாலும் அநுபவத்தாலும் தொலையாத பிரபல கருமமோ ? |
| ஏது என்று அறியேன் | இவற்றில் எதுகாரணமோ ? அறிகின்றிலேன். |

*இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந;* என்கிற கீதைக்குச் சார்பாகப் பின்னடிகள் அமைந்துள்ளன. முதலடியில் 'வாதனை' என்றும் பாடமுண்டு. 36

இன்றளவு மில்லாத வதிகார மேலுமேனக்
கேன்றுளதாம் சொல்லா யெதிராசா—குன்ரு
வினைத்தொடரை வெட்டிவிட்டு மேலைவைகுந்தத்
தேனைக்கடுக வேற்ருத தேன்? 37

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானரே! |
| எனக்கு | அடியேனுக்கு |
| இன்று அளவும் இல்லாத அதிகாரம் | இன்றுவரையில்லாததோர் பரிபக்குவநிலைமை |
| மேலும் என்று உளது ஆம் | இனிமேல் என்றைக்கு உண்டாகும்? [இதுவரையிலுண்டாகாததா இனிமேலுண்டாகப் போகிறது ?] |
| சொல்லாய் | அருளிச்செய்யவேணும்; |
| குன்ரு வினை தொடரை | மாளாத பாபராசியை |
| வெட்டி விட்டு | சேதித்துப்பொகட்டு |
| மேலை வைகுந்தத்து | மேலான பரமபதத்திலே |
| கடுக எனை எற்ருதது என் | சீக்கிரமாக என்னைச் சேர்த்தருளாதது என்னே? |

* * * அடியேனைத் திருநாட்டிலேற்றுகைக்கீடான அதிகார ஸம்பத்து இதுகாறுமில்லாதது இனியொருகால் விளையப்போகிறதென்று நினைக்க ப்ரஸக்திதானுமில்லை. ஆகவே விரோதி பாபவர்க்கங்களைத் தேவரீர் தாமே நிர்ஹேதுக க்ருபையினுல் வெட்டிக் களைந்து வீடு பெறுவிப்பது நலம் என்ருராயிற்று. 37

அஞ்சி லறியாதா ரைம்பதிலும் தாமறியார்
என்சோ லெனக்கோ வெதிராசா—நேஞ்சம்
உனதா ளொழிந்தவற்றை யேயுகக்க வின்றும்
அனுதாபமற்றிருக்கையால். 38

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானரே! |
| அஞ்சில் அறியாதார் ஐம்பதிலும் தாம் அறியார் என் சொல் எனக்கோ | ஐந்து வயதில் விவேகம் பெருதவர்கள் ஐம்பது வயதிலும் விவேகம் பெறமாட்டார்களென்கிற பழமொழி எனக்காக விளைந்ததோ? (ஏனென்ருல்) எனது மனமானது |
| உனதாள் ஒழிந்தவற்றையே உகக்க | தேவரீருடைய திருவடிகள் தவிர மற்றவற்றையே விரும்ப |
| இன்றும் | இவ்வளவிலுங்கூட |
| அனுதாபம் அற்று இருக்கையால் | பச்சாதாபமு முண்டாகாதிருப்பதனுல். [இப்படி நினைக்கிறேனென்கை.] |

"அஞ்சிலறியாதார் ஐம்பதிலுமறியாரே" என்ருெரு பழமொழியுண்டு, அதற்குத் தாமே யிலக்கென்று நைச்சியாநுஸந்தானமாக அருளிச் செய்கிறபடி. எனக்கு இத்தனை வயதாகியும் செய்த குற்றங்களுக்காக அநுதாபமும் தோன்றவில்லையே யென்கிருர். 38

வேம்புகறி யாக விரும்பினுர் கைத்ததேன்று
தாம்போகடாதே புசிக்குந் தன்மைபோல்—தீம்பனிவ
னேன்றுநினைத் தென்னை யிகழா ரேதிராசர்
அன்றறிந் தங்கீகரிக்கையால். 39

| | |
|---|---|
| வேம்பு கறி ஆக விரும்பினர் தாம் | வேம்பைக் கறியமுதாக விரும்பிக் கைப்பற்றினவர்கள் |
| கைத்தது என்று பொசடாதே | இது கசப்பாயிருக்கிறதென்று உபேக்ஷியாமல் |
| புசிக்கும் தன்மை போல் | உண்பதுபோல, |
| எதிராசர் | எம்பெருமானர் |
| என்னே இவன் தீம்பன் என்று நினைத்து இகழார் | அடியேனை 'இவன் துஷ்டன்' என்று கொண்டு கைவிட மாட்டார்; |
| அன்று அறிந்து அங்கீகரிக்கையால் | அடியேனுடைய துஷ்டத்தன்மையை ஏற்கனவே யறிந்து வைத்தும் அடியேனைக் கைக்கொண்டாராதலால். |

வேம்பையே கறியாகச் சமைத்துண்ணுமவர்கள் அதன் கைப்பைப் பரமபோக்யமாகக் கொள்பவர்களேயன்றி ஐயோ! கைக்கின்றதே யென்று வெறுக்குமவர்களல்லரே; அதுபோல் பாவியேனுடைய தோஷங்களையே பரம போக்யமாகக் கொண்டு அங்கீகரித்தருளின தேவரீர் இன்று தீம்புகண்டு இகழ்வது தகுதியன்றே யென்றுராயிற்று. 39

அவத்தே பொழுதை யடியேன் கழித்திப்
பவத்தே யிருக்குமது பண்போ—திவத்தேயான்
சேரும்வகையருளாய் சீரா ரெதிராசா
போருமினி யிவ்வுடம்பைப் போக்கு. 40

| | |
|---|---|
| சீர்ஆர் எதிராசா | சீர்மை பொருந்திய எம்பெருமானரே! |
| அடியேன் | தேவரீருடைய குணநுபவங்களுக்கு இட்டுப்பிறந்த அடியேன் |
| பொழுதை அவத்தே கழித்து | பொழுதைப் பாழாகப் போக்கி |
| இப் பவத்தே இருக்குமது பண்போ | இந்த ஸம்ஸாரத்திலேயே கிடப்பது தகுதியோ? |
| யான் திவத்தே சேரும் வகை அருளாய் | அடியேன் திருநாடு சேரும்படி யருள்புரியவேணும்; |
| போரும் | இதுவரை ஸம்ஸாரத்தில் சிறையிருந்தது போதும்; |
| இனி இவ் உடம்பைபோக்கு | இனி இவ்வழுக்குடம்பைத் தவிர்த்தருளவேணும். |

எனைப்போல் பிழைசெய்வா ரிவ்வுலகிலுண்டோ
உனைப்போல் பொறுக்கவல்லாருண்டோ—அனைத்துலகும்
வாழப் பிறந்த வெதிராச மாமுனிவா
ஏழைக்கிரங்காயினி. 41

| | |
|---|---|
| அனைத்து உலகும் வாழ பிறந்த | உலகமெல்லாம் உஜ்ஜீவிப்பதற்கென்றே அவதரித்த |
| எதிராசமா முனிவா | எம்பெருமானரே ! |
| இ உலகில் | இந்நிலவுலகத்தில் |
| எனை போல் பிழை செய்வார் உண்டோ | என்னைப்போல் அபசாரப்படுபவர்கள் வேறு யாரேனுமுளரோ? |
| உனை போல் பொறுக்கவல்லார்உண்டோ | தேவரீரைப்போல் (அவ்வபசாரங்களை) க்ஷமிக்க வல்லார் வேறு சிலருளரோ? |
| இனி ஏழைக்கு இரங்காய் | இனி ஏழையான அடியேன்மீது இரங்கியருளவேணும். |

ஐம்புலன்கள் மேலிட் டடரும் பொழுதடியேன்
உன்பதங்க டம்மை நினைந்தோலமிட்டால்—பின்பவைதாம்
எனையட ராம லிரங்கா யெதிராசா
உன்னையல் லாலெனக்குண்டோ ? 42

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானரே! |
| ஐம்புலன்கள் மேலிட்டு அடரும்பொழுது | பஞ்சேந்திரியங்களானவை என்னை ஆக்கிரமித்துக் கொள்ளும்போது |
| அடியேன் | அவற்றுக்கு ஆற்றாத அடியேன் |
| உன்பதங்கள் தம்மை நினைந்து | தேவரீருடைய திருவடிகளைச் சிந்தித்து |
| ஓலமிட்டால் | கூப்பிட்டால் |

| | | | |
|---|---|---|---|
| பின்பு | அதன்பிறகும் | எனக்கு உன்னை அல்லால் உண்டோ? | எனக்கு தேவரீரைத் தவிர வேறு ரக்ஷகருளரோ? |
| அவை தாம் | அவ்விந்திரியங்களானவை | | |
| என்னை அடராமல் இரங்காய் | அடியேனை மேலிடாதபடி கிருபை செய்தருள்கின்றீரில்லையே; | | |

இந்த வுலகிற் பொருந்தாமை யேதுமில்லை
அந்தவுல கிற்போக வாசையில்லை—இந்தநமக்
கெப்படியே தான் தருவ ரெந்தை யெதிராசர்
ஒப்பில் திருநா டுகந்து. 43

| | | | |
|---|---|---|---|
| இந்த உலகில் பொருந்தாமை ஏதும் இல்லை | இந்த ஹேயமான நிலத்தில் ஜிஹாஸை சிறிது முண்டாகவில்லை; | இந்த நமக்கு | இப்படிப்பட்ட நமக்கு |
| | | எந்தைஎதிராசர் | ஸ்வாமி யெம்பெருமானார் |
| | | ஒப்புஇல்திருநாடு | ஒப்பற்றதான பரமபதத்தை |
| அந்த உலகில் போக ஆசை இல்லை | அந்த நித்யவிபூதிக்குச் செல்ல விருப்பமுமுண்டாகவில்லை; | எப்படியேதான் உகந்துதருவர் | எவ்வாறு திருவுள்ளமுவந்து அளித்திடுவர்? |
| | | | [அவரைவெறுத்துப் பயனென்? (குற்றம் நம்மதே.) |

* * * த்யாஜ்ய பூமியில் ஜிஹாஸையும் ப்ராப்ய பூமியில் ப்ராவண்யமுமில்லாத வெனக்கு எம்பெருமானார்தாம் என் செய்வர்! என்று ஒருவாறு ஸமாஹிதராகிறார். 43

மாகாந்த நாரணனார் வைகும் வகையறிந்தோர்க்கு
ஏகாந்த மில்லை யிருளில்லை—மோகாந்தர்
இவ்விடமே காந்தமிரு ளென்றுபய மற்றிருந்து
செய்வர்கடாம் பாவத் திறம். 44

| | | | |
|---|---|---|---|
| மா காந்தர் நாரணனார் | லக்ஷ்மீகாந்தனான ஸ்ரீமந் நாராயணன் | மோக அந்தர் தாம் | மோஹத்தினால் குருடரானவர்கள் |
| வைகும் வகை அறிந்தோர்க்கு | ஸர்வவ்யாபியா யிருக்கும்படியைத்தெரிந்து கொண்டவர்களுக்கு | இவ்விடம் ஏகாந்தம் இவ்விடம் இருள் என்று | 'இது ரஹஸ்யமானவிடம், இது இருட்டானவிடம்,' என்று கொண்டு |
| | | பயம் அற்று இருந்து | அச்சமற்றவர்களாகி |
| ஏகாந்தம்இல்லை இருள் இல்லை | ரஹஸ்யமான விடமென்றும் இருட்டான விடமென்றும் ஒன்றுமில்லை; | பாவம் திறம் செய்வார்கள் | பாபராசிகளைக் கூடு பூரிப்பர்கள். |

இப்பாசுரத்தில் எம்பெருமானாருடைய திருநாமம் ஸ்பஷ்டமாக இல்லையாயினும், முன்னடிகட்கு எம்பெருமானாரும் அவருடைய திருவடிபணிந்தவர்களுமே விஷய பூதராவர்கள். எம்பெருமான் எங்கு முளனாய்க்கொண்டு எதையும் எளிதிலுணர்கின்றா னென்கிற தெளிவுடையவர்கள் 'இது ஏகாந்தமானவிடம், இது இருள்செறிந்தவிடம்' என்று ஓரிடத்திலும் ஒருபாவச்செயலும் செய்யத் துணியார்கள். அப்படிப்பட்ட தெளிவில்லாத அவிவேகிகள்தாம் ஸர்வேச்வரனுடைய ஸர்வ வியாபகத்தையறிய மாட்டாதே அவனையும் வஞ்சித்துவிடலாமென்றெண்ணி ஏகாந்த ஸ்தலங்களிலும் இருள்மிக்க விடங்களிலும் பாவங்களைச் செய்துபோருவர்கள்—என்றவிது, எம்பெருமானாருடைய திருவருளால் எம்பெருமானுடைய ஸர்வவ்யாப்தியை யறிந்தவர்களே! நீங்கள் ஏகாந்தத்திலும் பாவச்செயல் செய்யாதிருக்கவேணுமென்று ஹிதோபதேச மருளியபடி. 44

நாராயணன் திருமால் நாரம்நாமென்னுமுறை
ஆராயில் நெஞ்சே யநாதியன்றோ—சீராரும்
ஆசாரியனாலேயன்றோ நாமுய்ந்ததென்று
கூசாம லெப்போழுதுங்கூறு. 45

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | மனமே! | | |
| ஆராயில் | ஆராய்ந்துபார்க்குமளவில் | உய்ந்தது | ஸம்பந்தஜ்ஞானம்பெற்று உஜ்ஜீவிக்கப்பெற்றது |
| திருமால் நாராயணன் நாம்நாரம் என்னும்முறை அநாதிஅன்றோ | எம்பெருமான் நாராயணன், நாம் நாரசப்தவாச்யம்' என்கிறவிந்த முறையானது நெடுகாளாகவுள்ளதன்றோ? | ஆசாரியனாலே அன்றோஎன்று | ஆசாரியனருளடியாக வன்றோ வென்று |
| நாம் | (இப்படி அநாதிஸித்தமாயிருந்த வுறவை அறியாமலிருந்த) நாம் | எப்பொழுதும் கூசாமல்கூறு | இடைவிடாது தைரியமாகச் சொல்லிக்கொண்டிரு. |

* திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்* என்றும் *நன்றாக நானுன்னையன்றியிலேன்கண்டாய், நாரணனே! நீ யென்னையன்றியிலை* என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுக்கும் சேதநர்களுக்குமுண்டானவுறவு அநாதியேயானாலும் இந்த வுறவையறிவித்து மஹோபகாரஞ் செய்தவர் ஆசார்யரேயாதலால் அந்த ஆசாரியர் பக்கலிலேயே நாம் செய்ந்நன்றி குன்றாதிருக்கவேணுமென்றாராயிற்று. 45

திருவாய்மொழிப்பிள்ளை தீவினையோந்தம்மைக்
குருவாகி வந்துய்யக்கொண்டு—பொருவில்
மதிதானளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே
எதிராசர்க் காளானோம்யாம். 46

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே! | | |
| திருவாய்மொழிப்பிள்ளை | திருமலையாழ்வாரென்னு மாசிரியர் | பொருவு இல் மதி | ஒப்பற்றதாக [சிறந்த] அறிவை |
| குரு ஆகிவந்து | ஆசாரியராகவந்தவதரித்து | தான் அளித்தருளும் வாழ்வு அன்றோ | தாமாகத் தந்தருளினதின் பயனாகவன்றோ |
| தீ வினையோம் தம்மை | பாபிகளான நம்மை | | |
| உய்யக்கொண்டு | உஜ்ஜீவிப்பித்து | யாம் எதிராசர்க்குஆள்ஆனோம் | நாம் எம்பெருமானார்க்கு அடிமைபட்டோம். |

பகவானோடுண்டான உறவை யறிவதிற்காட்டிலும் ஆசார்ய ஸம்பந்தத்தை யறிவதே சிறந்தது. ஆசார்யரென்கிற சொல்லுக்கு எம்பெருமானார்தாம் இலக்கு; அப்பரமாசாரியரோடு நமக்குண்டான வுறவையறிவித்த மஹோபகாரகர் திருவாய்மொழிப்பிள்ளை—என்று ஸ்வாசார்யர் பக்கலிலே பெருநன்றி பாராட்டினாராயிற்று. 46

இராமாநுசாயநமவென் றிரவும் பகலும் சிந்தித்
திராமாநுசர்களிருப்பிடந் தன்னி லிறைப்பொழுதும்
இராமாநுசரவர்க்கெல்லா வடிமையுஞ் செய்யவெண்ணி
இராமாநுசர்தம்மை மாநுசரா வென்கொலெண்ணுவதே. 47

| | | | |
|---|---|---|---|
| இரவும் பகலும் | அநவரதமும் | மாநுசர்அவர்க்கு | மனிதர்களுக்கு |
| இராமாநுசாயநம என்று சிந்தித்து இராமாநுசர்கள் | எம்பெருமானார்க்கே உரியோமென்று எண்ணியிருக்கமாட்டாத மனிசர்கள் | எல்லா அடிமையும் செய்ய எண்ணி இரா | ஸகல கைங்கரியங்களையும் செய்யக் கருதியிராத |
| இருப்பு இடம் தன்னில் | இருக்குமிடங்களிலே | மாநுசர்தம்மை | ஜனங்களை |
| இறைபொழுதும் இரா | க்ஷணகாலமும் இருக்கமாட்டாத | மாநுசர் ஆ எண்ணுவது என்கொல் | மனிதர்களாக வெண்ணுவது எப்படி? [அவர்கள் பசுப்ராயர்களே.] |

எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருக்கவேண்டியது கடமை; அப்படியிருக்கவில்லாதவர்கள் எங்கு வர்த்திக்கின்றார்களோ அங்கு நொடிப்பொழுதும் தங்கலாகாது. அப்படித் தங்காமலிருப்பவர்களுக்கே நாம் ஸகலவித கைங்கரியங்களும் செய்யத்தகும். அங்ஙனம் செய்யாதவர்கள் மானிடவரல்லரென்றே கொள்ளத்தகுவர் என்றாராயிற்று. 47

எண்ணாதேன்னெஞ்ச மிசையாதென்னா விறைஞ்சாதுசென்னி
கண்ணானவை யொன்றுங்காணலுறா கலியார்நலிய
வொண்ணாதவண்ண முலகளித்தோ னெதிராசனடி
நண்ணாதவரை யரங்கேசர் செய்தநலம் நமக்கே.

47

| | |
|---|---|
| கலியார் நலிய ஒண்ணாத வண்ணம் | கலிபுருஷன் ஹிம்ஸை செய்ய முடியாதபடி |
| உலகு அளித்தோன் | உலகங்களைக் காத்தருளினவரான |
| எதிராசன் | எம்பெருமானாருடைய |
| அடி | திருவடிகளை |
| நண்ணாதவரை | பணியாதவர்களை |
| என் நெஞ்சம் எண்ணாது | எனது மனமானது ஸ்மரிக்கமாட்டாது ; |
| என் நா | எனது நாவானது |
| இசையாது | பேசமாட்டாது ; |
| சென்னி இறைஞ்சாது | தலைவணங்காது |
| கண் ஆனவை | கண்களானவை |
| ஒன்றும் காணல் உறா | ஈஷத்தும் காணமாட்டா ; |

(இப்படிப்பட்ட அத்யவஸாய முண்டான விது)

| | |
|---|---|
| நமக்கே அரங்கேசர் செய்த நலம் | நமக்கே அஸாதாரணமாக நம்பெருமாள் செய்த நன்மையாயிற்று. |

ஸ்ரீ ரங்கநாதர் நமக்கொரு பெருநன்மை செய்தருளியிருக்கின்றார்; அஃது என்னவெனில் எம்பெருமானார் பக்கலில் விமுகராயுள்ளவர்களை நெஞ்சால் நினையாமலும் வாயால் சொல்லாமலும் தலையால் வணங்காமலும் கண்ணால் காணாமலும் இருக்கின்றோமே, இதுதான். கலியார் என்றது கோபத்தினாலாகிய சொல்வடிவம்.

48

நந்தாநரகத்தழுந்தாமை வேண்டிடில் நானிலத்தீர்
எந்தாதையான வெதிராசனை நண்ணுமென்றுமவன்
அந்தாதிதன்னை யநுசந்தியுமவன் தொண்டருடன்
சிந்தாகுலங்கெடச் சேர்ந்திரு முத்திபின் சித்திக்குமே.

49

| | |
|---|---|
| நானிலத்தீர் | இப்புவியிலுள்ளவர்களே ! |
| நந்தா நரகத்து அழுந்தாமை வேண்டிடில் | ஒய்வில்லாத ஸம்ஸாரமாகிற நரகத்திலே அழுந்தாமலிருக்கவேணுமென்கிற விருப்பமுண்டாகில் |
| எம் தாதை ஆன | எமக்குத் தந்தையான |
| எதிராசனை | எம்பெருமானாரை |
| நண்ணும் | ஆச்ரயிக்கக்கடவீர்கள் : |
| அவன் அந்தாதி தன்னை | அவர் விஷயமான நூற்றந்தாதியை |
| என்றும் அநுசந்தியும் | நித்தியமும் அநுஸந்திக்கக்கடவீர்கள் ; |
| சிந்தாகுலம் கெட | மனக்கேடுகளெல்லாம் தீரும்படி |
| அவன் தொண்டர் உடன் | அவருடைய பக்தர்களுடனே |
| சேர்ந்து இரும் | எப்போதும் கூடியிருங்கள் ; |
| பின் | இப்படியெல்லாமிருக்குமளவில் |
| முத்தி சித்திக்கும் | வைகுந்தமாநகர் கையதாகும். |

ஸம்ஸாரபந்தம் அடியோடு வேரறுவதற்கு மூன்று உபாயங்களருளிச்செய்கிறாரிதில். எம்பெருமானாரைப் பணிதல், அவர் விஷயமான ப்ரபந்நகாயத்திரியென்று ப்ரஸித்தமான நூற்றந்தாதியைச் சிந்தனை செய்தல், ஸ்ரீராமாநுஜ பக்தர்களோடு ஸஹவாஸஞ் செய்தல்.

49

அவத்தே யருமந்த காலத்தைப்போக்கி யறிவின்மையாலிப்
பவத்தே யுழல்கின்ற பாவியர்காள் பலகாலம் நின்று
தவத்தே முயல்பவர் தங்கட்கு மெய்தவொண்ணாதவந்தத்
திவத்தே யுமைவைக்கும் சிந்தியும் நீ ரெதிராசரென்றே.

50

| | |
|---|---|
| அருமந்த காலத்தை | அருமருந்தான காலத்தை |
| அவத்தே போக்கி | பழுதாகக் கழித்து |
| அறிவு இன்மையால் | அவிவேகத்தினால் |
| இப் பவத்தே உழல்கின்ற | இந்த ஸம்ஸாரத்திலே மாறிமாறித்திரிகின்ற |

பாவியர்காள் — பாபிகளாயுள்ளவர்களே!

நீர் எதிராசர் என்றே சிந்தியும் — நீங்கள் எம்பெருமானாரென்கிற திருநாமத்தையே சிந்தித்திருங்கள்;

(அப்படியிருக்குமளவில்) (அவ்வெம்பெருமானார்)

பல காலம் நின்று தவத்தே முயல்பவர் தங்கட்கும் எய்த ஒண்ணாத — வெகுகாலம் நிலைநின்று தபஸ்ஸிலே முயற்சி செய்பவர்களுக்கும் கிடைக்கமாட்டாததான

அந்த திவத்தே உமை வைக்கும் — அந்தப் பரமபதத்திலே உங்களைச்சேர்த்திடுவர்.

* தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன்போது* என்று திருமழிசைப் பிரானும், *முன்னவராம் நம்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்* என்று (மேலே) தாமும் பணித்தபடியே காலத்தைப் போக்கவேண்டியிருக்க, அநர்க்கமான காலத்தைப் பழுதேபோக்கி அறிவுகெட்டு இந்த ஸம்ஸாரக்கடலிலேயே மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து திரிகின்ற பாவிகளே! *ஊன்வாட வுண்ணாதுயிர்காவலிட்டு உடலிற் பிரியாப்புலனைந்தும் நொந்து தாம்வாடவாடத் தவம் செய்வார்க்கும் பெறுதற்கரிதான பரமபதத்தை எம்பெருமானாரொருவரே அளித்தருளவல்லவர் என்பதையறிந்து அவரது திருநாமத்தையே சிந்தித்து வாழ்ந்துபோங்கள் என்றாராயிற்று. 50

என்றுளனீச னுயிருமன்றேயுண் டிக்காலமெல்லாம்
இன்றளவாகப்பழுதே கழிந்த திருவினையால்
என்றிழவின்றி யிருக்கு மென்னெஞ்ச மிரவுபகல்
நின்றுதபிக்கு மெதிராசா நீயருள்செய்த பின்னே. 51

எதிராசா — எம்பெருமானாரே!

ஈசன் என்று உளன் — எம்பெருமான் என்று முதலாகவுள்ளானோ

அன்றே உயிரும் உண்டு — அன்று முதலாகவே ஜீவாத்மாவுமுண்டு;

இக் காலம் எல்லாம் — இவ்வநாதி காலமெல்லாம்

இன்று அளவு ஆக — இப்போதளவும்

இரு வினையால் பழுதே கழிந்தது — பிரபலகருமத்தினால் வீணாகவே கழிந்து போயிற்று;

என்ற இழவு இன்றி இருக்கும் என் நெஞ்சம் — என்கிற அநுதாபங்கூட இல்லாமலிருக்கின்ற என் மனமானது

நீ அருள் செய்த பின் — தேவரீர் கிருபை செய்தருளினது முதலாக

இரவு பகல் நின்று தபிக்கும் — இரவும் பகலும் இடைவிடாது அநுதாபங்கொள்ளாநின்றது.

கனககிரிமேல் கரியமுகில்போல்
வினதைசிறுவன் மேற்கொண்டு—தனுவிடும்போது
ஏராரரங்க ரெதிராசர்க்காக வென்பால்
வாராமுன்னிற்பர் மகிழ்ந்து 52

தனு விடும் போது — அடியேனுக்கு சரீர வியோகமாகும்போது

ஏர் ஆர் அரங்கர் — ஸ்ரீரங்கநாதர்

எதிராசற்கு ஆக — எம்பெருமானாருடைய அபிமானம் பெற்றவன் நான் என்கிற காரணமாக

கனக கிரிமேல் கரிய முகில் போல் — மேருமலையின்மீது ஒரு காளமேகம் படிந்தாற்போல

வினதை சிறுவன் மேல் கொண்டு — வைநதேயனான கருடனை வாகனமாகக்கொண்டு

மகிழ்ந்து வாரா என்பால் முன் நிற்பர் — உகந்து வந்து என் முன்னே நிற்பர்.

சரமஸமயத்தில் வாய்க்கக் கூடிய பரமலாபத்தை மநோரதிக்கிறாரிப்பாட்டில். *காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின்மீமிசைக் கார்முகில் போல்* என்ற திருவாய்மொழியை யடியொற்றியவை முன்னடிகள். தநு—வடசொல். வாரா—செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்

52

இதத்தாலேதென்னரங்கர் செய்கிறதென்றறிந்தே
யிருந்தாலுந் தற்கால வேதனையின் கனத்தால்
பதைத்தாவோ வென்னுமிந்தப் பாவவுடம்புடனே
பலநோவுமநுபவித்திப் பவத்திருக்கப்போமோ
மதத்தாலே வல்வினையின் வழியுழன்று திரிந்த
வல்வினையேன் றன்னை யுனக்காளாக்கிக்கொண்ட
இதத்தாயும் தந்தையுமா மெதிராசா வென்னை
இனிக்கடுக விப்பவத்தினின்று மெடுத்தருளே. 53

| | |
|---|---|
| மதத்தாலே | அவிவேகத்தாலே |
| வல் வினையின் வழி உழன்று திரிந்த | பிரபல கருமத்தின் வழியே யொழுகித் திரிந்த |
| வல் வினையேன் தன்னை | மஹா பாபியான வென்னை |
| உனக்கு ஆள் ஆக்கிக் கொண்ட | தேவரீர் தமக்கு அடிமையாக்கிக் கொண்ட |
| இதம் தாயும் தந்தையும் ஆம் எதிராசா | நன்மையை நோக்கும் தாயும் தந்தையுமான எம்பெருமானாரே! |
| இனி | இனிமேல் |
| என்னை | அடியேனை |
| கடுக | சீக்கிரமாக |
| இப் பவத்தில் நின்றும் எடுத்து அருள் | இந்த ஸம்ஸாரத்தில் நின்றும் கரைசேர்த்தருளவேணும்; |
| (இப்படிப்பட்ட துக்காநுபவங்கள்) | |
| தென் அரங்கர் | எம்பெருமான் |
| இதத்தாலே செய்கின்றது என்று அறிந்தே இருந்தாலும் | ஹிதபுத்தியினாலே உண்டாக்குமவை யென்று தெரிந்திருந்தாலும் |
| தற்காலம் வேதனையின் கனத்தால் | தற்காலத்திலுண்டான பாதையின் மிகுதியினால் |
| பதைத்து | துடித்து |
| ஆ ஓ என்னும் | ஹா! ஓ!! என்று கத்தும்படியான |
| இந்த பாவம் உடம்பு உடனே | இந்த பாபிஷ்ட சரீரத்துடனே |
| பல நோயும் அனுபவித்து | பல நோய்களையும் அனுபவித்துக் கொண்டு |
| இப் பவத்து இருக்க போமோ | இந்த ஸம்ஸார நிலத்தில் (இனியும்) இருக்க முடியுமோ? (முடியாது.) |

*ஹரிர் து:க்காநி பக்தேப்யோ ஹிதபுத்த்யா கரோதி வை* என்றும், *வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாதகாதல் நோயாளன் போல்* என்றுஞ் சொல்லுகிறபடியே மருத்துவர்கள் செய்கிற ஹிம்ஸைகள்போல் எம்பெருமான் செய்யும் ஹிம்ஸைகளும் ஹிதபுத்தியினாலேயே செய்யுமவையென்று சாஸ்த்ரார்த்தம் தெளிந்திருந்தாலும், இந்த ஸம்ஸாரமண்டலத்தில் படும் துக்கம் பொறுக்கவொண்ணாமையாலே தாம் பதறுகிறபடியை விண்ணப்பஞ் செய்தாராயிற்று. 53

இன்னுமெத்தனைநா ளிவ்வுடம்புடன்
இருந்துநோவுபடக் கடவேனையோ!
என்னையிதினின்றும் விடுவித்துநீர்
என்றுதான் திருநாட்டினு ளேற்றுவீர்?
அன்னையுமத்தனு மல்லாதசுற்றமும்
ஆகியென்னை யளித்தருள்நாதனே!
என்னிதத்தை யிராப்பகலின்றியே
ஏகமெண்ணு மெதிராச வள்ளலே! 54

| | |
|---|---|
| அன்னையும் அத்தனும் | மாதா பிதாக்களாயும் |
| அல்லாத சுற்றமும் ஆகி | மற்றுமுண்டான வுறவுகளாயும் இருந்து கொண்டு |
| என்னை அளித்து அருள் நாதனே | என்னை ரக்ஷித்தருளா நின்ற ஸ்வாமியே! |
| இரா பகல் இன்றியே | இரவு பகலென்கிற வாசியில்லாமல் எப்போதும் |
| என் இதத்தை ஏகம் எண்ணும் | என்னுடைய ஹிதமொன்றையே சிந்திக்கின்ற |
| எதிராச வள்ளலே | மஹோதாரரான எம்பெருமானாரே! |
| இன்னும் | தேவரீருக்கு ஆட்பட்ட பின்பும் |
| எத்தனை நாள் | எவ்வளவு காலம் |
| இவ் உடம்பு உடன் இருந்து | இந்தப் பொல்லாத தேஹத்தோடே யிருந்து |

நோவு படகடவேன் — துன்பப்படுவேன்?
ஐயோ — அந்தோ
நீர் — பரமகாருணிகரான தேவரீர்
இதில் நின்றும் என்னை விடுவித்து — இந்த ஸம்ஸார பந்தத்தில் நின்றும் என்னை முக்தனும்படி பண்ணி
என்று தான் திருநாட்டினுள் ஏற்றுவீர் — என்றைக்குப் பரமபதத்திலே சேரச் செய்தருள்வீர்?

தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப்பெற்றோம்
திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப்பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப்பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப்பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதும் நமக்கவை பொழுது போக்காகப்பெற்றோம்
பின்னையொன்றுதனில் நெஞ்சுபோராமற் பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே. 55

தென் அரங்கர் சீர் அருளுக்கு — ஸ்ரீரங்கநாதருடைய பரம கிருபைக்கு
இலக்கு ஆக பெற்றோம் — லக்ஷ்யமாகும்படியான பாக்கியம் பெற்றோம்;
திரு அரங்கம் திருப்பதியே இருப்பு ஆக பெற்றோம் — ஸ்ரீ ரங்கக்ஷேத்ரவாஸமே வாழ்ச்சியாகப் பெற்றோம்;
மன்னிய சீர் மாறன் கலை — நற்குணங்கள் பொருந்திய நம்மாழ்வாருடைய அருளிச் செயல்களை
உணவு ஆக பெற்றோம் — நித்தியபோக்யமாகக் கொள்ளப் பெற்றோம்;
மதுரகவி சொல் படியே — மதுரகவிகளின் ஸ்ரீ ஸூக்தியின்படியே
நிலை ஆக பெற்றோம் — சரமபர்வ நிஷ்டையாய் இருக்கப் பெற்றோம்;
முன்னவர் ஆம் நம் குரவர் மொழிகள் — நமது பூருவாசாரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளையே
உள்ள பெற்றோம் — சிந்திக்கப்பெற்றோம்;
நமக்கு முழுதும் அவை பொழுது போக்கு ஆக பெற்றோம் — நமக்கு அநவரதமும் அந்த ஸ்ரீ ஸூக்திகளே காலக்ஷேபமாகப் பெற்றோம்;
பின்னை ஒன்று தனில் நெஞ்சு போராமல் பெற்றோம் — இவை தவிர வேறொன்றில் நெஞ்சு பெயர்ந்து செல்லாதபடி பாக்கியம் பெற்றோம்;
பிறர் மினுக்கம் பொறாமை இல்லா பெருமையும் பெற்றோம். — பிறருடைய உயர்த்திகளைக் கண்டு பொறாமைப்படுதலில்லாத பெருமையும் பெற்றோம்.

மாமுனிகள் தம்முடைய பெருமைகளைத்தாமே வெளியிட்டருளும் பாசுரமிது. ஆசாரியர் திருவருளால் பெற்ற பேறுகளை வாய்விட்டுப்பேசி வெளியிடுவது க்ருதஜ்ஞதையின்பரீவாஹமாதலால் இது தற்புகழ்ச்சியாகாது. * பெருங்கேழலார் தம்பெருங் கண்மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம், ஒருவர்நம்போல் வருங்கேழ்பவருளரே* (திருவிருத்தம்) என்பது முதலான பாசுரங்களினால் நம்மாழ்வார் போல்வார் அநுஸந்தித்த கட்டளையிது. தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெறுகையாவது—தம்மை அப்பெருமான் ஆசார்யபதவியில் அமர்த்தித் தான் சிஷ்யனாக இருந்தது. "தேவனுறை திருப்பதியே" என்றும் பாடமுள்ளது. மதுரகவி சொற்படியே நிலையாக" ஸ்ரீவசனபூஷணத்தில் "உண்டபோதொருவார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தையும் சொல்லுவார்" என்று தொடங்கியருளிச்செய்த ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். *தேவுமற்றறியேன் குருகூர்நம்பி பாவினின்னிசைபாடித் திரிவனே* என்றாற் போன்ற அத்யவஸாயமுடைமை சொல்லிற்றாயிற்று.

இப்பாசுரத்தில் "பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே" என்ற பேறுதான் மிகவும் ஸாரமானது. முமுக்ஷுப்படியில் "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந் துகந்திருக்கையும்" என்றவிடத்து வியாக்கியானத்தில் "கீழ்ச்சொன்னவையெல்லாமுண்டானாலும் உண்டாக அரிதாயிருப்பதொன்றிறேயிது" என்று மாமுனிகள்தாமே அருளிச்செய்ததுகொண்டு இப்பேற்றின் அருமைபெருமைகளை யுணர்க.

உன்தனபிமானமே யுத்தாரக மென்று
சிந்தைதெளிந்திருக்கச் செய்தநீ—அந்தோ
எதிராசா நோய்களாலென்னை நலக்காமல்
சதிராக நின்திருத்தாள் தா. 56

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே ! |
| உன் தன் அபிமானமே உத்தாரகம் என்று | தேவரீருடைய அபிமானமே உஜ்ஜீவநோபாயமென்று கொண்டு |
| சிந்தை தெளிந்து இருக்க செய்த நீ | மனம் தேறியிருக்கும்படி செய்தருளின தேவரீர் |
| என்னை நோய்களால் நலக்காமல் | அடியேனை நோய்களாலே வருத்தாமல் |
| சதிர் ஆக | நலமாக |
| நின் திருத்தாள் தா | தேவரீருடைய திருவடிகளைத் தந்தருளவேணும். |

ஸ்ரீவசனபூஷணத்தில் சரமபர்வநிஷ்டா நிரூபணப்ரகரணத்தில்—“ஆசார்யனையும் தான்பற்றும் பற்று அஹங்கார கர்ப்பமாகையாலே காலன்கொண்டு மோதிரமிடுமோபாதி. ஆசார்யாபிமாநமே உத்தாரகம்” என்றருளிச்செய்தபடியே தம்முடைய அத்யவஸாயம் வாய்த்திருக்கிறபடியை முன்னடிகளாலே அருளிச்செய்தாராயிற்று. 56

தேசிகர்கள் போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை
வாசமலர்த் தாளடைந்த வத்துவென்னும்—நேசத்தால்
என் பிழைகள்காணு வெதிராசரே யடியேன்
புன்பகர்வைக் கேளும் பொறுத்து. 57

| | |
|---|---|
| தேசிகர்கள் போற்றும் | ஆசாரியர்களால் துதிக்கப்பெற்ற |
| திருவாய் மொழிப் பிள்ளை | திருமலையாழ்வாருடைய |
| வாசம் மலர் தாள் அடைந்த வத்து என்னும் | நறுமணம் மிக்க தாமரை மலர் போன்ற திருவடிகளைச்சார்ந்த வஸ்து இதுவென்று இக்காரணத்தினாலுண்டான |
| நேசத்தால் | அன்பினாலே |
| என் பிழைகள் காணு | எனது குற்றங்களைக் காணமாட்டாத |
| எதிராசரே | எம்பெருமானாரே ! |
| பொறுத்து | என் பிழைகளை ஸஹித்திருந்து |
| அடியேன் புன்பகர்வை கேளும் | அடியேனது சிறிய விண்ணப்பத்தைக் கேட்டருள்வீராக. |

ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் முடிவில் ‘பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தமசிந்தயித்வா* என்றருளிச்செய்தது போலவுள்ளது இப்பாசுரம். வத்து—வஸ்து. ... ... ... ... .... 57

எந்தை திருவாய் மொழிப்பிள்ளை யின்னருளால்
உன்தனுறவை யுணர்த்தியபின்—இந்தவுயிர்க்
கெல்லாவுறவும் நீயென்றே யெதிராசா
நில்லாததுண்டோ வென்னெஞ்சு. 58

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே ! |
| எந்தை திருவாய் மொழிப்பிள்ளை இன் அருளால் | அஸ்மதாசார்யரான திருமலையாழ்வார் தமது பரமக்ருபையினாலே |
| உன் தன் உறவை | தேவரீருடைய ஸம்பந்தத்தை |
| உணர்த்திய பின் | தெரிவித்தருளினது முதலாக |
| இந்த உயிர்க்கு | இவ்வாத்ம வஸ்துவுக்கு |
| எல்லா உறவும் நீயே என்று | ஸகலவித பந்துவும் தேவரீரேயென்று |
| என் நெஞ்சு நில்லாதது உண்டோ | எனது நெஞ்சு அத்யவஸாயம் கொண்டிராமை யுண்டோ ? |

எனக்குப் பரமோபகாரகரான திருமலையாழ்வார், தேவரீருக்குமடியேனுக்குமுண்டான ஒழிக்கவொழியாத வுறவைத் தெரிவித்தருளின நாள்முதலாக * மாதாபிதா யுவதய:* இத்யாதிச்லோகத்தின்படியே அடியேனுக்கு எல்லாவகையான வுறவுமுறையும் தேவரீரேயென்று திடமாகக் கொண்டேனென்றாராயிற்று. ... ... 58

எந்தை திருவரங்க ரேரார் கருடன்மேல்
வந்து முகங்காட்டி வழிநடத்தச்—சிந்தைசெய்திப்
பொல்லா வுடம்புதனைப் போக்குவதெந்நாள்கோலோ
சொல்லா யெதிராசா சூழ்ந்து. 59

| | |
|---|---|
| எதிராசா | எம்பெருமானாரே ! |
| எந்தை திரு அரங்கர் | நம் தந்தையான ஸ்ரீ ரங்கநாதர் |
| ஏர் ஆர் கருடன் மேல் | அழகுபொலிந்த பெரிய திரு வடியின்மீது |
| வந்து | எழுந்தருளி |
| முகம் காட்டி | திருமுக மண்டலத்தை ஸேவை ஸாதிப்பித்து |
| வழி நடத்த | அர்ச்சிராதிமார்க்கத்தாலே நடத்திக்கொண்டுபோக |
| சிந்தை செய்து | திருவுள்ளம்பற்றி |
| இ பொல்லா உடம்பு தனை போக்குவது | இந்தப் பொல்லாத சரீரத்தைக் கழித்தருள்வது |
| எந்நாள் கொல் | என்றைக்கோ ? |
| சூழ்ந்து சொல்லாய் | (அதைத்தேவரீர்) ஆலோசித்து அருளிச்செய்வீராக. |

எம்பெருமான் பெரியதிருவடியின் மீதெழுந்தருளி ஸேவைஸாதிக்கவும் இவ் வழுக்குடம்பைவிட்டு நீங்கப்பெறுவதும் என்றைக்கோ? என்கிறார். ... ... 59

இந்தவரங்கத் தினிதிரு நீ யென்றரங்கர்
எந்தை யெதிராசர்க் கீந்தவரம்—சிந்தைசெய்யில்
நம்மதன்றோ நெஞ்சமே நற்றாதைசொம் புதல்வர்
தம்மதன்றோ தாயமுறைதான். 60

| | |
|---|---|
| நெஞ்சமே | ஓ மனமே ! |
| அரங்கர் | ஸ்ரீ ரங்கநாதர் |
| எந்தை எதிராசற்கு | நமது ஸ்வாமியான எம்பெருமானாரை நோக்கி |
| நீ இந்த அரங்கத்து இனிது இரு என்று ஈந்த வரம் | நீர் இந்த ஸ்ரீரங்கத்திலேயே சுகமாக வாழக் கடவீரென்று அருளிய அருள்மொழியானது |
| சிந்தைசெய்யில் | ஆராயப்படுமளவில் |
| நம்மது அன்றோ | அது நமக்கும் சொந்தமானதன்றோ ; (அஃதெப்படியென்னில்) |
| தாயம் முறை தான் | பங்குமுறையின்படி |
| நல் தாதை சொம் | வாய்த்த தந்தையினுடைய சொத்தானது |
| புதல்வர் தம்மது அன்றோ | புத்திரர்களுடையதல்லவோ? (அப்படியே யிதுவும்). |

இந்த ஆர்த்திப்பிரபந்தம் மாமுனிகள் தமது சரமதசையிலே யருளிச்செய்த தென்றும், திருமேனியில் நோவு சாத்தியிருந்து ததஸஹிஷ்ணுதையாலே அருளிச் செய்ததென்றும் சிலர் சொல்லிப்போருவது தத்துவமன்று. நம்மாழ்வார் *பொய்ந் நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமிந்நின்ற நீர்மையினியாமுறாமை* என்றும், *எண்ணாராத்துயர்விளைக்குமிவையென்னவுலகியற்கை! — பணிகண்டாய்சா மாறே* என்றும் *இருள்தருமாஞாலத்துளினிப்பிறவியான் வேண்டேன்* என்றும் இங்ஙனே பல பாசுரங்கள் அருளிச்செய்தது எப்படி இந்த ப்ரக்ருதிமண்டலத்தில் ஜிஹாஸையினாலோ அப்படியேதான் மணவாளமாமுனிகளும் இப்பிரபந்தமருளிச் செய்தது. திருநாட்டுக்கெழுந்தருள்வதற்குப் பலவாண்டுகட்கு முன்னமே இது அருளிச் செய்தார். இப்படி இவர்தாம் திருநாடு செல்லப்பதறினாலும் எம்பெருமான் இவர் தம்மை இன்னமும் சிலகாலம் இவ்விபூதியிலேயிருத்தி இவரைக்கொண்டு விலக்ஷண லோகோபகாரங்கள் செய்விக்கவேணுமென்று கருதி, முன்பு எம்பெருமானார்க்கு *அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ* என்று திவ்யநியமநம் தந்தருளினதுபோல இவர்க்கும் அங்ஙனே திருவாணையிட, அதனை ஒருமுகமாக அநுஸந்தித்து உள்ளந்தேறி இப்பிர பந்தத்தைத் தலைக்கட்டியருளினாராயிற்று. ... ... ... 60

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

இயற்றிய

ஆர்த்திப்பிரபந்தவுரை முற்றிற்று.

———

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்
பிள்ளைலோகாசாரியர் திருவடிபணிந்துய்ந்த

# விளாஞ்சோலைப்பிள்ளை பணித்த ஸப்தகாதை—உரையுடன்

(உரையாசிரியர்—ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்)

## — அவதாரிகை —

*எங்கின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே எம்பெருமான் பலபல யோனிகளிலும் திருவவதாரங்கள் செய்யுமாபோலே அவனடியார்களும் அப்படியே திருவவதாரங்கள் செய்து வருவது உலகப் பிரசித்தம். * किमप्यत्राभिजायन्ते योगिनः सर्वयोनिषु। प्रत्यक्षितात्मनाथानां नैषां चिन्त्यं कुलादिकम्— கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்* என்பது முதலிய பல பிரமாணங்களினால் தொண்டக்குலத்தின் சிறப்பு அறியக்கிடக்கின்றது. யோகிகளான மஹான்கள் ஸகல யோனிகளிலும் பிறப்பர்களென்றும், எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்தவர்களான அவர்களுடைய ஜாதி முதலியவற்றிலே கண்வைக்கலாகாதென்றும் மேலே யெடுத்துக் காட்டிய பிரமாணம் கூறுகின்றது. அப்படி அவதரித்த மஹான்களில், பிள்ளையுறங்காவில்லிதாஸர் ஏறு திருவுடையதாஸர் பிள்ளைவானமாமலைதாஸர் முதலான மஹாபாகவதோத்தமர்கள் மிகச்சிறந்து விளங்குபவர்கள். பிள்ளையுறங்காவில்லிதாஸர் எம்பெருமானார்க்கு அந்தரங்கராயிருந்தவர் ; ஏறுதிருவுடையதாஸர் நம்பிள்ளைக்கு அணுக்கராயிருந்தவர்; பிள்ளைவானமாமலைதாஸர் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர்க்கு அன்பராயிருந்தவர். இவர்களைப் போன்றவரும், இவர்களில் விஞ்சிய பெருமைவாய்ந்தவருமான விளாஞ்சோலைப் பிள்ளை யென்பவர் பிள்ளை லோகாசாரியருடைய திருவடிகளிலே ஆச்ரயித்து ஸகல ரஹஸ்யார்த்தங்களுங் கேட்டு உஜ்ஜீவிக்கப் பெற்றவர்.

இவர், பிள்ளையுலகாசிரியர் திருவாய்மலர்ந்தருளிய அஷ்டாதசரஹஸ்யங்களினுள்ளும் *உன்னில் திகழ்வசன பூடணத்தின் சீர்மை யொன்றுக்கில்லை* என்று நிஸ்ஸமாப்யதிகமாகப் போற்றப்படுகின்ற ஸ்ரீவசநபூஷண திவ்யசாஸ்த்ரத்திலே மிகவும் ஊன்றினவராய் அதிலுள்ள அர்த்த விசேஷங்களை நிரந்தரம் அநுபவிப்பது தவிர வேறொன்று அறியாதவராயிருந்தாரென்று ப்ரஸித்தம். பகவத்கீதைக்குள் சரமச்லோகம் சிறப்பெய்தியதுபோல, ஸ்ரீவசநபூஷணத்திற்குள் சரமபர்வநிஷ்டாப்ரகரணம் சிறப்புற்றதாகையாலே அந்த ப்ரகரணத்திலுள்ள முக்கியமான அர்த்தவிசேஷங்களையும் மற்றும் இதர ப்ரகரணங்களிலுள்ள சில அர்த்தவிசேஷங்களையும் திரட்டி லகுவானதொரு பிரபந்தம் பணிக்கவேணுமென்று கருதித் திருவாசிரியம்போலே ஏழு பாட்டாயமைந்த ஸப்தகாதை யென்னுமிந்த ப்ரபந்தத்தைப் பணித்தருளினார். நம்மாழ்வாருடைய ஸப்தகாதையான திருவாசிரியம் ப்ரதமபர்வத்திற்கு அமைந்தது; இவருடைய ஸப்தகாதை சரமபர்வத்திற்கு அமைந்தது. இதுவாயிற்று இதனுக்கு ஏற்றம். ஆசிரியப்பாவான அதிலுங்காட்டில் வெண்பாவான இதுதனக்கு இன்னமும் ஏற்றமுண்டு. ஸ்ரீமதுரகவிகளும் வடுகநம்பியும் தங்கள் சரமபர்வநிஷ்டையை உக்தியனுஷ்டானங்களாலே காட்டினதுபோல இப்பிள்ளையும் காட்டியருளினாராயிற்று. ... *

அவதாரிகை முற்றிற்று.

ஸ்ரீ:

# ஸப்தகாதை

அம்போன் னரங்கர்க்கு மாவிக்கு மந்தரங்க
சம்பந்தங் காட்டித் தடைகாட்டி—உம்பர்
திவமன்னும் வாழ்வுக்குச் சேர்ந்தநெறி காட்டு
மவனன்றே ஆசாரியன். 1

| | |
|---|---|
| அம் பொன் அரங்கர்க்கும் | அழகிய பொன்னரங்கத்தில் வாழும் பெரிய பெருமாளுக்கும் |
| ஆவிக்கும் | ஜீவாத்ம வர்க்கத்திற்கும் (உண்டான) |
| அந்தரங்க சம்பந்தம் காட்டி | மிகவுள்ளீடான ஸம்பந்தத்தை யெடுத்துரைத்து |
| தடை காட்டி | ஸ்வரூப விரோதி முதலான விரோதி ஸ்வரூபங்களையும் காட்டிக் கொடுத்து |
| உம்பர் திவம் மன்னும் வாழ்வுக்கு | நித்ய முக்தர்களின் ஸ்தானமான பரமபதத்திலே மன்னியிருந்து நித்ய கைங்கரியம் பண்ணுகையாகிற வாழ்ச்சிக்கு |
| சேர்ந்த நெறி | அநுரூபமான மார்க்கமாகிய ப்ரபத்தியை |
| காட்டுமவன் அன்றே ஆசாரியன் | உபதேச முகத்தாலே காட்டுகிறவனே ஆசாரியன். |

* * *—இப்பாட்டால் ஆசாரியன் படியைப் பேசுகிறார். ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடே ஒருவிதமான ஸம்பந்தமன்று, நவவிதமான ஸம்பந்தங்களுள்ளன; 1. பிதாபுத்ர பாவம். 2. ரக்ஷ்யரக்ஷக பாவம். 3. சேஷசேஷி பாவம். 4. பர்த்ரு பார்யா பாவம். 5. ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவம். 6. ஸ்வஸ்வாமி பாவம். 7. ஆதாராதேய பாவம். 8. சரீராத்ம பாவம். 9. போக்த்ருபோக்ய பாவம்—என்றிப்படி ஒன்பது வகைப்பட்ட ஸம்பந்தங்கள் திருமந்திரத்தில் தேறுகின்றன. இந்த ஸம்பந்தத்தை யுணர்த்துவான் ஆசார்யன். இவ்வளவோடும் நில்லாமல் [தடைகாட்டி] ஸ்வரூப விரோதி, உபாயவிரோதி, ப்ராப்யவிரோதி என்று மூவகைப்பட்ட விரோதிகளையும் நமః பதத்திலே நிரூபித்துக் காட்டுவன் ஆசார்யன். இவ்வளவேயுமன்றிக்கே [உம்பர் திவமன்னும் வாழ்வுக்குச் சேர்ந்த நெறிகாட்டும்] இதை இரண்டு வாக்கியார்த்தமாகப் பிரித்து அநுஸந்தித்துக் கொள்ளலாம்; உம்பர் திவமன்னும் வாழ்வைக் காட்டும், அந்த வாழ்வுக்குச் சேர்ந்த நெறிகாட்டும்—என்று. ப்ராப்யமான புருஷார்த்தத்தையும் அதற்கு ப்ராபகமான உபாயத்தையும் காட்டுவனென்றபடி. ஆக இவற்றையெல்லாம் காட்டுமவனன்றே ஆசாரியன் என்றது—இவற்றை நிஷ்கல்மஷமாகக் காட்டிக் கொடுப்பதுதான் ஆசார்யக்ருத்யம் என்றபடி.

“அம்பொன்னரங்கர்க்கும்” என்று ஸ்ரீரங்கநாதனைக் குறித்தது அந்த விசேஷ வ்யக்தியில் நோக்காகவன்று; பொதுப்பட நாராயணனைச் சொன்னபடி. அந்த நாராயணன் அம்பொன்னரங்கனாக ஸேவை ஸாதிக்கையாலே விசேஷ சப்தத்தை யிட்டுச் சொல்லிற்றென்று கொள்க. “அந்தரங்க சம்பந்தம்” என்கையாலே நம்முடைய தர்சனத்திற்கு அந்தரங்கமாகக் கொள்ளப்படுகிற சரீராத்மபாவ ஸம்பந்தத்தைச் சொல்லிற்றாகவுமாம். “உம்பர் திவமென்னும்” என்பது சிலருடைய பாடம். ... 1

அஞ்சு பொருளு மளித்தவன்பா லன்பிலார்
நஞ்சில் மிகக்கோடியர் நாம்சொன்னோம்—நஞ்சுதான்
ஊனை முடிக்கு மதுயிர் முடிக்குமேன்
றீனமிலார் சொன்னா ரிவை. 2

| | |
|---|---|
| அஞ்சு பொருளும் அளித்தவன் பால் | அர்த்த பஞ்சகத்தை உபதேசித்தருளின ஆசார்யன் பக்கலில் |
| அன்பு இலார் | பக்தி யில்லாதவர்கள் |
| நஞ்சின் மிக கொடியர் | விஷத்திற் காட்டிலும் மிகவும் கொடியராயிருப்பர்; |
| நாம் சொன்னோம் | இதனை உறுதியாகச் சொல்லுகின்றோம். |

(நஞ்சின் மிகக் கொடுமை எங்ஙனே யென்னில்;)

| | |
|---|---|
| நஞ்சு தான் ஊனை முடிக்கும் | விஷமானது சரீரத்தை மாத்திரமே முடித்திடவல்லது; |
| அது உயிர் முடிக்கும் | ஆசார்ய ப்ரேமமில்லாதிருத்தலானது ஆத்ம நாசத்தையே பண்ணி விடும்; |
| என்று இவை | என்னுமிவ்வர்த்தத்தை |
| ஈனம் இலார் சொன்னார் | ஒன்றிலும் குறைவற்றவர்களான பூருவர்கள் அருளிச் செய்து வைத்தார்கள். |

* * *—இப்பாட்டாலே, ஆசார்ய ப்ரேமமில்லாதவர்கள் ஆத்மநாசத்தைத் தாங்களே விளைத்துக் கொள்ளுமவர்களென்கிறார். "அஞ்சு பொருளுமளித்தவன்" என்கிற சொல்லால் ஆசார்யனைக் கூறுகின்றார். கீழ்ப்பாட்டில், ஜீவபரஸம்பந்தங் காட்டுதல் விரோதிகளைக் காட்டுதல் உபாயோபேயங்களைக் காட்டுதல் இவை ஆசார்ய க்ருத்யமாகச் சொல்லிற்று. அர்த்த பஞ்சகமுபதேசித்தல் ஆசார்ய க்ருத்யமாக இதிற் சொல்லுகிறது. *மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் தக்கநெறியும் தடையாகித் தொக்கியலு மூழ்வினையும் வாழ்வினையுமோதும்* என்கிற திருவாய்மொழித் தனியனில் அஞ்சு பொருள்கள் [அர்த்த பஞ்சகம்] இன்னவையென்று நிரூபிக்கப்பட்டிருக்கின்றமை யுணர்க. இந்தப் பிரபந்தந்தன்னிலும் மேலே (4) *தன்னை யிறையைத் தடையைச் சரணெறியை மன்னு பெருவாழ்வை* என்னும் பாசுரத்தில் வ்யக்தமாகச் சொல்லியிருப்பதுங் காண்க. ஆக இப்படிப்பட்ட அஞ்சு பொருள்களையு மளித்தவனான ஆசாரியன் பக்கலிலே அன்பில்லாதவர்கள் நஞ்சில் மிகக் கொடியர்—நஞ்சு கொடிது; இவர்கள் மிகக்கொடியராயிருப்பரென்கை. மிகக்கொடியரென்னுமிடத்தைப் பின்னடிகளாலே மூதலிக்கிறார். *ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானாரல்லாதார், மானிடவரல்லரென்று என் மனத்தே வைத்தேனே* என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்ததுபோல இவரும் 'நாம் சொன்னோம்' என்கிறார்.

நஞ்சுதான் ஊனைமுடிக்கும்—விஷமுண்டவர்களுக்கு தேஹநாசம் விளையுமேயல்லது ஆத்மநாசம் விளையாது; அது உயிர் முடிக்கும்—அஞ்சு பொருளுமளித்தவன்பால் அன்பில்லாமையானது ஆத்மநாசத்தையே விளைக்குமாயிற்று ஸ்ரீவசநபூஷணத்தில் (349) "இவனுக்கு சரீராவஸாநத்தளவும் ஆசார்ய விஷயத்தில் *என்னைத் தீமனங் கெடுத்தாய்* மருவித்தொழும் மனமே தந்தாய்* என்று உபகாரஸ்ம்ருதி நடக்கவேணும்" என்ற சூர்ணையை இங்கே அநுஸந்திப்பது ... ... ... 2

பார்த்த குருவி னளவிற் பரிவின்றிச்
சீர்த்தமிகு ஞானமெலாஞ் சேர்ந்தாலும்—கார்த்தகடல்
மண்ணின்மேல் துன்புற்று மங்குமே தேங்காமல்
நண்ணுமே கீழா நரகு. 3

| | | | |
|---|---|---|---|
| பார்த்த குருவின் அளவில் பரிவு இன்றி | ப்ரத்யக்ஷதைவமான ஆசார்யன் திறத்தில் பக்தி யில்லாமல் | கார்த்த கடல் மண்ணின் மேல் துன்புற்று மங்கும் | கருங்கடல் சூழ்ந்த இப்பூமண்டலத்தில் பலவகைத் துன்பங்களையுமனுபவித்து (அந்தநீசன்) நசித்தொழிவன்; |
| சீர்த்த மிகு ஞானம் எலாம் சேர்ந்தாலும் | கனத்த மஹாஜ்ஞானங்களெல்லாம் சேரப்பெற்றாலும் | கீழ் ஆம் நரகு தேங்காமல் நண்ணும் | அதோகதியான நரகத்தை நிரந்தரமாக அடைந்திடுவன். |

* * *—சிஷ்யன் ஈடேற வேண்டுவது சாஸ்த்ரதாத்பர்யஜ்ஞான விசேஷத்தாலன்றோ; அது குறையற்றிருக்குமாகில் உஜ்ஜீவிக்கத்தட்டில்லையே. ஆசார்யப்ரேமம் இருந்தாலென்ன? இல்லையாகிலென்ன? என்று சிலர் சொல்லக்கூடுமாகையாலே அதற்கு மறுப்புரைக்கிறது இப்பாட்டு. எத்தனை ஞானவிகாஸமுடையனாயிருந்தாலும் ஆசார்யனளவில் பரிவில்லையாகில் அதோகதியே கதி என்கிறாராயிற்று இதில். பார்த்த குரு என்பதற்குப் பலவகையாகப் பொருள் கொள்ளலாம்; நம் கண்ணாலே பார்க்கப்படுகிற குரு என்னுதல்; நம்மளவிலே விசேஷகடாக்ஷம் செய்தருளின குருவென்னுதல்; எம்பெருமான் தேடிப்பார்த்து வைத்த குருவென்னுதல். இப்படிப்பட்ட குருவின் பக்கலிலே பரிவின்றிக்கேயிருந்து; [சீர்த்தமிகு ஞானமெல்லாம் சேர்ந்தாலும்] ஞானம், மிகுஞானம், சீர்த்தமிகுஞானம் என்று மூன்றாகக் கொள்வது. ஸம்ஸ்க்ருத வேதாந்தஜ்ஞானம் த்ராவிட வேதாந்தஜ்ஞானம் ரஹஸ்யார்த்தஜ்ஞானம் என்கிற மூன்று ஞானங்களையுங் கொள்க. இதற்கும் மேற்பட எல்லாம் என்கையாலே மற்றுமுள்ள ஸகலார்த்தஜ்ஞானங்களையுங் கொள்வது. இவை சேர்ந்தாலும்; பார்த்த குருவினளவில் பரிவில்லையாகில்;

கார்த்தகடல் மண்ணின்மேல் துன்புற்று மங்குமே—இதற்கு எழுவாய் வருவித்துக் கொள்ள வேணும்; குருவினளவில் பரிவின்றியிருப்பவன் கருங்கடல் சூழ்ந்த மண்ணுலகில் அநுபவிக்கக்கூடிய க்லேசங்களை யெல்லாமனுபவித்துக் கொண்டுழல்வன். *இங்கே காண இப்பிறப்பே மகிழ்வரெல்லியுங் காலையே* என்றதற்கு எதிராக * अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते—அத்யுத்கடைঃ புண்யபாபைரிஹைவ பலமச்நுதே* என்கிற சாஸ்த்ரம் இவற்கே பலிக்குமென்றபடி. இஹலோகத்தில் துன்புறுவதோடும் நில்லாமல் நரகயாதனைகளையும் அநுபவிக்க நேருமென்கிறார் தேங்காமல் நண்ணுமே கீழா நரகு என்பதனால். நித்ய ஸம்ஸாரியாய்க் கிடந்துழல்வனென்றதாகவுமாம். ... 3

தன்னை யிறையைத் தடையைச் சரணெறியை
மன்னுபெரு வாழ்வையொரு மந்திரத்தின்—இன்னருளால்
அஞ்சிலுங் கேடோட வளித்தவன்பா லன்பிலார்
நஞ்சிலுங்கே டென்றிருப்பன் நான். 4

- தன்னை இறையை தடையை சரண் நெறியை மன்னு பெரு வாழ்வை — ஸ்வஸ்வரூப, பரஸ்வரூப, விரோதிஸ்வரூப, உபாய ஸ்வரூப, புருஷார்த்த ஸ்வரூபங்களாகிற இவற்றை
- ஒரு மந்திரத்தின் — பெரிய திருமந்திரத்தின் மூலமாக
- இன் அருளால் — பரமகிருபையினாலே
- அஞ்சிலும் கேடு ஓட — மேற்சொன்ன ஐந்து பொருளிலும் ஒருவகையான கெடுதலுமின்றியே
- அளித்தவன் பால் — உபதேசித்தருளின ஆசார்யன் பக்கலிலே
- அன்பு இலார் — பிரேமமில்லாதவர்கள்
- நஞ்சிலும் கேடு என்று நான் இருப்பன் — விஷத்திற் காட்டிலும் கொடியவர்களென்று நான் உறுதி கொண்டிருப்பேன்.

* * *—கீழிரண்டாம் பாட்டை வியாக்கியானிக்கிறதாயிருக்கிறது இப்பாட்டு, அதில் அஞ்சுபொருளென்றதை ஒன்றரையடிகளால் விவரிக்கின்றார். * प्राप्यस्य ब्रह्मणो रूपं प्राप्तुश्च प्रत्यगात्मनः। प्राप्त्युपायं फलं प्राप्तेस्तथा प्राप्तिविरोधि च—ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச் ச ப்ரத்யகாத்மநঃ, ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்திவிரோதி ச* என்கிற ச்லோகத்தில் சொல்லப்பட்ட அர்த்தபஞ்சகம் க்ரம விவக்ஷையின்றிக்கே விவரிக்கப்பட்டதிங்கு. இவ்வர்த்த பஞ்சகமும் திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரத்திலிருந்து உபதேசிக்கப்படும் ஆசார்யனாலே. எங்ஙனேயென்னில்; ப்ரணவத்தில் மகாரத்தாலும் லுப்தசதுர்த்தியாலும் உகாரத்தாலும் ஸ்வஸ்வரூபம்; அகாரத்தாலே பரஸ்வரூபம்; நமஸ்ஸில் (மঃ) என்பதனாலே விரோதிஸ்வரூபம்; நமஸ்ஸாலே உபாயஸ்வரூபம்; நாராயணாய என்பதனாலே உபேயஸ்வரூபம். ‘அஞ்சிலும் கேடோடவளித்தவன்’ என்றது—அர்த்தபஞ்சகத்திலும் அஜ்ஞாநஸம்சய விபர்யயங்கள் அறும்படி உபதேசித்தவனென்கை. அவன் பக்கலிலே அன்பிலாதார் நஞ்சிலும் கேடு. ... ... 4

என்பக்க லோதினா ரின்னா ரெனுமியல்வும்
என்பக்கல் நன்மை யெனுமியல்வும்—மன்பக்கல்
சேவிப்பார்க் கன்புடையோர் சன்ம நிரூபணமும்
ஆவிக்கு நேரே யழுக்கு. 5

- இன்னார் என் பக்கல் ஓதினார் எனும் இயல்வும் — இவர்கள் என்னிடத்தில் ஓதி என்னை ஆசார்யனாகக் கொண்டவர்களென்றிருப்பதும்
- என் பக்கல் நன்மை எனும் இயல்பும் — ‘என் பக்கலிலே ஆசார்யத்வ பூர்த்தியுள்ளது’ என்றிருப்பதும்
- மன் பக்கல் சேவிப்பார்க்கு அன்பு உடையோர் சன்ம நிரூபணமும் — பகவத்பக்த பக்தர்களான ஸ்ரீவைஷ்ணவர்களிடத்திலே ஜாதி நிரூபணம் பண்ணுகையுமாகிறவிவை
- ஆவிக்கு நேரே அழுக்கு — ஆத்மாவுக்கு நிச்சயமாக நாசகம்.

* * *—கீழ்ப்பாட்டுக்களிலே சிஷ்யனுக்காகும் குறைகளைப் பேசினார்; இப்பாட்டில் ஆசார்யனுக்கு நேரக்கூடிய அவத்யத்தைப் பேசுகிறார். ஸ்ரீவசநபூஷணத்தில் (308.) “ தான் ஹிதோபதேசம் பண்ணும்போது தன்னையும் சிஷ்யனையும் பலத்தை

யும் மாருடி நினைக்கை க்ரூரநிஷித்தம். தன்னை மாருடி நினைக்கையாவது தன்னை ஆசார்யனென்று நினைக்கை; சிஷ்யனை மாருடி நினைக்கையாவது தனக்கு சிஷ்யனென்று நினைக்கை." என்கிற ஸ்ரீஸூக்தியையும்; (194) "பாகவதாபசாரந்தான் அநேகவிதம்; அதிலேயொன்று அவர்கள்பக்கல் ஜன்மநிரூபணம்; இதுதான் அர்ச்சாவதாரத்தில் உபாதாநஸ்ம்ருதியிலுங் காட்டில் க்ரூரம்" என்கிற ஸ்ரீஸூக்தியையுங் கொண்டு இப்பாட்டு அவதரிக்கிறது. உபதேசிக்குமவன் உபதேசஸமயத்திலே தன்னுடைய ஆசார்யனையே இவனுக்கு உபதேசகர்த்தாவாகவும் தான் அவ்வாசாரியர்க்குக் கரணபூதனுகவும் ப்ரதிபத்திபண்ணிக்கொணடு உபதேசிக்க வேண்டியிருக்க, அப்படி செய்யாதே ஸ்வாசார்ய பரதந்த்ரனுயிருக்கிற தன்னை இவனுக்கு ஆசார்யனென்று நினைக்கை தவருகையாலே அது இப்பாட்டின் முதலடியில் தெரிவிக்கப்படுகிறது. அதற்கு மேல், உபதேசபாத்ர பூதனுனவனையும் தன்னைப்போலே தன்னுடைய ஆசார்யனுக்கு சிஷ்யனுக ப்ரதிபத்திபண்ணி உபதேசிக்கவேண்டியிருக்க, அதுசெய்யாதே இவனைத் தனக்கு சிஷ்யனென்று நினைத்துத் தன்னிடத்தில் ஆசார்யத்வமுள்ளதாக நினைக்கையும் தவருகையாலே அஃது இரண்டாமடியில் தெரிவிக்கப்படுகிறது.

இனி சதுர்த்தவர்ணம் முதலானவற்றிலே அவதரித்த பாகவதர்களிடத்தில் பகவத்ஸம்பந்தப்ரயுக்தமான சிறப்பைப்பாராதே நிகர்ஷபுத்தியினுல் அவரவர்களுடைய ஜன்மங்களை நிரூபிக்கையும் மஹாபசாரமாகையாலே அது மூன்ருமடியில் தெரிவிக்கப் பட்டது. ஆக இவையெல்லாம் ஆவிக்கு நேரேயழுக்கு என்று சொல்லித் தலைக்கட்டப்பட்டது. ... ... ... ... ... 5

அழுக்கென் றிவையறிந்தே னம்பொ னரங்கா!
ஒழித்தருளா யுள்ளில் வினையைப்—பழிப்பிலா
என்ன ரியர்க்காக எம்பெருமா னுர்க்காக
உன்ன ரருட்காக வுற்று. 6

| | |
|---|---|
| அம் பொன் அரங்கா | ஸ்ரீரங்கநாதனே! |
| இவை அழுக்கு என்று அறிந்தேன் | கீழ்ச்சொன்னவையெல்லாம் (ஆத்மாவுக்கு) அவத்யாவஹமென்று தெரிந்து கொண்டேன்; |
| பழிப்பு இலா என் ஆரியர்க்கு ஆக | ஸகல கல்யாணகுண பரிபூர்ணராய் அஸ்மதாசார்யரான பிள்ளை லோகாசார்யருக்காகவும் |
| எம்பெருமானுர்க்கு ஆக | (ஜகதாசார்யரான) எம்பெருமானுருக்காகவும் |
| உன் ஆர் அருட்கு ஆக | உன்னுடைய பரமக்ருபைக்காகவும் |
| உற்று | திருவுள்ளம்பற்றி |
| உள்ளில் வினையை ஒழித்தருளாய் | என்னுள்ளுறையும் பாபஸமூஹத்தைப் போக்கியருளவேணும். |

கீழ்ப்பாட்டுக்களில் ஆவிக்கு அழுக்காகத் தெரிவிக்கப்பட்ட விஷயங்களைப் பலர் அழுக்கென்று அறிந்திருக்கச் செய்தேயும் ப்ரக்ருதி வாஸநை தப்பவொண்ணுதாகையாலே அவரவர்கள் இவ்வழுக்குகளிலே அகப்பட்டு நசிக்கிருர்களென்னுமிடத்தையநுஸந்தித்து, இப்படிப்பட்ட அவத்யம் தமக்கு நேராதிருக்கவேணுமென்று எம்பெருமான் திருவடிகளிலே பிரார்த்திக்கிருர் இப்பாட்டால். "அழுக்கென்றிவையறிந்தேன்" என்றதற்குப்பின் (ஆகிலும்) என்று கூட்டிக்கொள்வது நன்று. 'இவை அவத்யம்' என்கிற ப்ரதிபத்தி அடியேனுக்கிருந்தாலும் என்றேனும் கெடுதல் நேராதபடி உள்ளில் வினையை ஒழித்தருளாய் என்று அம்பொன்னரங்கனை ப்ரார்த்தித்தாராயிற்று. இவ்வேண்டுகோளை எம்பெருமான் அவசியம் நிறைவேற்றியருளவேணு மென்கைக்கு அவர்ஜநீயஹேதுக்களைப் பின்னடிகளிற் பேசுகிருர்; அஸ்மதாசார்யரானபிள்ளை லோகாசாரியர்க்காகவும், உலகுக்கோருயிரான எம்பெருமானுர்க்காகவும் தேவரீருடைய திருவருள்பழுது படாமைக்காகவும் இவ்வருள் செய்தேயாக வேணுமென்ருராயிற்று. 6

தீங்கேது மில்லாத தேசிகன்தன் சிந்தைக்குப்
பாங்காக நேரே பரிவுடையோர்—ஓங்காரத்
தேரின்மே லேறிச் செழுங்கதிரினூடுபோய்ச்
சாருவரே யந்தாமந் தான். 7

| | | | |
|---|---|---|---|
| தீங்கு ஏதும் இல்லாத | ஒருவகைப் பொல்லாங்குமின் றிக்கேயிருக்கிற | ஓங்காரம் தேரின் மேல் ஏறி | பிரணவமாகிற தேரின் மீதே றிக் கொண்டு |
| தேசிகன் தன் சிந்தைக்கு பாங்காக | ஆசாரியனுடைய திருவுள்ளத் திற்கு அனுகூலமாக | செழும் கதிரின் ஊடு போய் | ஸூர்யமண்டல மார்க்கமாகச் சென்று |
| நேரே பரிவு உடையோர் | உண்மையான அன்பையுடைய வர்கள் | அம் தாமம் சாருவர் | சாச்வதஸ்தானமாகிய திரு நாட்டைக் கிட்டப் பெறுவர் கள். |

ஆசாரியன்பக்கலில் அன்பில்லாதார்க்கு அதோகதியே யென்னுமிடத்தைப் பல் வகையாலும் சொல்லிநின்றார் கீழ்; அதற்கு ப்ரதிகோடியாக ஆசார்யப்ரேமம் கனத் திருக்குமவனுக்கு உஜ்ஜீவனமுண்டென்னுமிடம் சொல்லவேண்டுகையாலே அதனை இப்பாசுரத்திலே சொல்லித் தலைக்கட்டுகிறாராயிற்று. “ தீங்கேதுமில்லாத தேசிகன் தன்சிந்தைக்குப்பாங்காக நேரே பரிவுடையோர் ” என்றது ஆசார்யப்ரேமம் கனத்தி ருப்பவர்கள்என்றபடி. தேசிகன்—ஆசார்யன் ; அவனுக்குத் தீங்கேது மில்லாமையாவது ஸ்வாசார்யன்பக்கல் ப்ரேமமற்றிருக்கைமுதலான அவத்தியங்களில்லாமை. இவை உண்டாகிக்கழிகையன்றிக்கே முதலிலேயே இவற்றின் ஸ்பர்சமின்றியே யிருக்கையைச் சொன்னபடி. இப்படிப்பட்டவர்களாய் மஹோபகாரகர்களான ஸ்வாசார்யர்கள் திருவுள் ளத்துக்கு அநுகூலமாம்படி, தமக்கு அநுபாவ்யமான அவரது திருமேனியைப் பேணிக் கொண்டு அவர்பக்கலிலே நிரவதிகமான ப்ரேமத்தையுடையவர்கள் ; இப்படிப்பட்ட ஸச்சிஷ்யர்கள் பெறும்பேற்றைப் பின்னடிகளிற் பேசுகின்றார். வைகுந்தமாநகர் இவர் களுடைய கையது என்கிறார். * வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண் ணூடே * என்கிறபடியே இங்கிருக்கும்நாள் தங்கள் வ்யாவ்ருத்தி தோற்றவும் ஸ்வரூபா நுரூபமாகவும் பரமபதங்கூடத் தங்கள் சிறுமுறிக்குச்செல்லும்படியாகவும் உபய வேதாந்த காலக்ஷேபஸ்ரீயோடும் ததீயாராதந ஸ்ரீயோடும் உகந்தருளின நிலங்களில் மங்களாசாஸநஸ்ரீயோடும் தத்கைங்கர்ய ஸ்ரீயோடும் எம்பெருமானாரைப் போலே நெடுங் காலம்வாழ்ந்திருந்து சரீராவஸாநத்தில் பரமபக்திதலையெடுத்து அந்தமில் பேரின்பத் தடியரோடு ஒரு கோவையாயிருக்கவேணுமென்கிற ப்ராப்யத்வரை விஞ்சி * हार्दानुग्रहलब्धमध्यधमनिद्वारा बहिर्निर्गतர்களாய் *ஓங்கார ரதமாருஹ்ய* என்கிறபடியே மநஸ்ஸை ஸாரத்யம் பண்ண ப்ரணவமாகிற தேரின்மேலேறி; தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக்கீண்டு புக்கு ஆராவமுதமங்கெய்தி வாழ்ந்திருக்கப்பெறுவர் என்று கூறி இப்பிரபந்தத்தையும் தலைக்கட்டினாராயிற்று. ... ... ... ... .... 7

விளாஞ்சோலைப்பிள்ளை திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.



அருளாளப்பெருமாளெம்பெருமானுர் அருளிச்செய்த

# ஞானஸாரம்

## (ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய தெளிவுரையுடன்.)

### (அவதாரிகை)

*நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன, நாரணனைக்காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகை வள்ளல் வாட்டமிலா வண்டமிழ் மறைவாழ்ந்தது* என்னும்படியாக எம்பெருமானுர் தர்சந நிர்வாஹம் செய்து கொண்டு திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளி யிருக்குமளவிலே யஜ்ஞ மூர்த்தி என்ருெரு மாயாவாதி ஸந்யாஸி ஸ்வாமியின் வைபவாதிசயங்களைக் கேட்டு ஸ்வாமியோடே தர்க்கித்து வெற்றிபெற வேணுமென்று விரும்பி ஸ்வாமிமடத்திலே வந்து ஸேவித்து ‘நான் கேட்கிற கேள்விகளுக் கெல்லாம் தேவரீர் விடை கூறவேணும்; திருப்திகரமாக விடை பெற்றேனுகில் தேவரீருக்கு சிஷ்யனுகக் கடவேன்’ என்று சொல்ல, ஸ்வாமியும் இசைந்தருள, பதினேழு நாள் வரையில் வெற்றி தோல்வியின்றியே வினுவிடை செல்லா நிற்க, முடிவில் உத்தர மருளிச் செய்ய வேண்டிய பொறுப்பு ஸ்வாமி பக்கலிலே நின்று விஷயம் தோன்ருமே யிருக்கையில் ‘நாளையாகிறது’ என்று சொல்லி ஸபாவிஸர்ஜநமாக; பிறகு ஸ்வாமியின் திருவுள்ளம் மிகவும் வியாகுலப் பட்டு, தம் திருவாராதனமான பேரருளாளரைத் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணி ‘ஆழ்வார் தொடங்கி ஆளவந்தாரளவாக இத்தனை காலம் ஒரு குறையுமின்றியே விளங்கி வந்த இத்தரிசனம் இன்று அடியேனுல் பங்கமடைவதோ? இப்படியும் ஒரு லீலை கொண்டாடத் திருவுள்ளமாயிற்ருே?’ என்று விண்ணப்பஞ் செய்து அமுது செய்யாமலே திருக்கண் வளர்ந்தருள, அன்றிரவு பேரருளாளர் கனவிலே யெழுந்தருளி ஸேவை ஸாதித்து மாயாவாதியின் வாயடங்கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச் செய்து மறைய, ஸ்வாமியும் சிற்றஞ் சிறுகாலை யெழுந்து பரமஸந்துஷ்டராய் நித்யாநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு ப்ரஸந்ந கம்பீரராய் விசார கோஷ்டிக்கு எழுந்தருள, அவ்வளவிலேயே யஜ்ஞமூர்த்தி இன்று நமக்குத் தோல்வியே திண்ணமென்று அறுதியிட்டு அப்போதே யெழுந்து ஸ்வாமி திருவடிகளிலே ஸாஷ்டாங்கப்ரணமம் பணணி நின்று ‘அடியேனை யங்கீகரித்தருளவேணும்’ என்று கைகூப்பி ப்ரார்த்திக்க, ‘மேலே விஷய விசாரம் நடைபெற வேண்டியிருக்க, இதுவென்?’ என்று ஸ்வாமி கேட்க, அதற்கு யஜ்ஞமூர்த்தி ‘ஸ்வாமிந்! தேவரீருக்குப் பெரிய பெருமாள் ப்ரத்யக்ஷமான பின்பு தேவரீரென்றும் பெருமாளென்றும் வாசியுண்டோ? இனி அடியேன் தேவரீர் ஸன்னிதியில் வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை; இந்த ஆத்மா இதுவரையில் அநர்த்தப்பட்டது போதும், இனியும் அநர்த்தப்படாதபடி நோக்கி யருள வேணும்’ என்று கனக்க ப்ரார்த்தித்து ஸ்வாமியின் திருவருளைப் பெற்று அப்போதே

ஏக தண்டத்தை முறித்தெறிந்து ப்ராயச்சித்த பூர்வகமாய் சிகா யஜ்ஞோபவீதங்களை யும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெற்று முக்கோல்பிடித்த முனியாகி, சாஸ்த்ரப்படி ஆசார்யனுடைய நாமத்தையே வஹிக்க விரும்பி ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் பேரருளாள னுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகாரஸ்ம்ருதி உலகப்ரஸித்த மாம்படி அருளாளப் பெருமாளெம் பெருமானுர் என்று திருநாமம் சாத்தியருளினுர். உடனே அவரை யழைத்துக் கொண்டுபோய்ப் பெரிய பெருமாளை ஸேவிக்கப்பண்ணிச் சிறப்பு களும்பெறுவித்து அன்று முதலாகவே திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரமு மோது வித்து மற்றும் தத்வ சிக்ஷைகளும் செய்தருளினுர்.

அவரும் ஸ்வாமி திருவடிகளிலே நிழலுமடிதாறுமாக விருந்து ஸகல தத்வார்த்தங் களையும் கேட்டு தத்வ ஹித புருஷார்த்தங்களில் விசததம ஜ்ஞாநமுடையராய் அவ்வர்த்த விசேஷங்களைப் பின்புள்ளாரு மநுஸந்தித்து உஜ்ஜீவிக்கும் படியாக ஆசார்ய நியமநத் தாலே இரண்டு ப்ரபந்தங்களை யருளிச் செய்தார். அவற்றுக்கு ஞானஸார மென்றும் ப்ரமேய ஸார மென்றும் திருநாமம் வழங்கும். இத்திருநாமம் ஸ்வாமி யெம்பெருமானுர் தாமே இட்டருளின தென்று பெரியார் பகரக் கேட்டிருக்கை. பகவச் சாஸ்த்ராதிகளிலே பல பல வசனங்கள் முமுக்ஷுக்களுக்கு அவச்யஜ்ஞாதவ்யங்களான பரமார்த்தங்களைத் தெளிவாகத் தெரிவிப்பனவாயிருக்கும்; அந்த வசனங்களையே ஒவ்வொரு பாட்டாக அமைத்து ப்ரபந்தீகரித்ததாயிருக்கும் ப்ரதம ப்ரபந்தமான ஞானஸாரம். ஜ்ஞாதவ் யார்த்த ப்ரகாசகங்களான ப்ரமாணங்களின் ஸாரமாயிருக்கையாலே ஞானஸாரமென்று பேராயிற்று. அந்த ப்ரமாண வசனங்களை யெல்லாம் அவ்வோ பாசுரங்களுக்குச் சேர ஸங்க்ரஹித்தருளி ஸம்க்ஷிப்தமானதோர் உரையும் இட்டளிளினுர் மணவாளமாமுனி கள். இராமாநுச நூற்றந்தாதிக்கு அருளிச் செய்திருந்த உரையைத் தழுவி வியாக் கியானமிட்ட பிள்ளை லோகஞ்சீயர் இந்த ஞானஸார ப்ரமேயஸாரங்களுக்கும் வியாக்கி யானமிட்டிருக்கிருர். இதுதான் அச்சாகி வெளிவந்துளதென்றும் இது மணவாள மாமுனிகளின் உரையன்று என்றும் அஸ்மதாசார்யரான அழகிய மணவாளச் சீயர் அரு ளிச் செய்யக் கேட்டிருக்கை. இவ்விரண்டு திவ்விய நூல்களிலும் அர்த்தபுஷ்டி ஒரு புற மிருக்க, மன்னிய சீர்வெண்பாவில் வைத்துப் பாடுகையாலே சொல்லழகும் மிகச் சிறந் திருக்கும். ஸ்வாசார்யரான எம்பெருமானுர் தாமே இவ்விரண்டு நூல்களையும் அருளிச் செய்வதாக இந்நூலாசிரியருடைய கருத்தாகையாலே எம்பெருமானுர்க்குக் காப்புச் செய் யுள்கூட இயற்ருது விட்டனர்.

அவதாரிகை முற்றிற்று.

---

## ஞானஸாரத் தனியன்

சுருளார் கருங்குழல் தோகையர் வேல்விழியில் துவளும்
மருளாம் வினைகெடும் மார்க்கம் பெற்றேன், மறை நான்குஞ் சோன்ன
பொருள் ஞானசாரத்தைப் புந்தியில் தந்தவன் போங்கு புகழ்
அருளாளமாமுனி யம்போற்கழல்க ளடைந்த பின்னே.

கருத்துரை:—நான்கு வேதங்களிலு மமைந்த பொருள்களைக் கொண்ட ஞானசார மென்னும பிரபந்தத்தை யருளிச் செய்த மஹாகீர்த்திவாய்ந்த அருளாளப்பெருமா ளெம்பெருமானுருடைய திருவடிகளை யடையப் பெற்றதனுல் விஷயாந்தரப்ராவண்யம் தொலையும் படியான நல்வழியைத் தெரிந்து கொண்டே னென்பதாம். ... *

---

ஸ்ரீ:

அருளாளப்பெருமாளெம்பெருமானார் திருவடிகளே சரணம்

# ஞா ன ஸா ர ம்

ஊன வுடற்சிறைநீத்து ஒண்கமலை கேள்வனடித்
தேனுகரு மாசைமிகு சிந்தையராய்—தானே
பழுத்தால் விழுங்கனிபோல் பற்றற்று வீழும்
விழுக்காடே தானருளும் வீடு. 1

| | | | |
|---|---|---|---|
| ஊன உடல் சிறை நீத்து | மாம்ஸமயமான வுடலாகிற சிறையில் நின்றும் விடுபட்டு | பழுத்தால் தானே விழும் கனி போல் | பழுத்து (க் கிளையில் தங்கியிருக்க முடியாமல்) தானே விழுகிற பழம் போன்று |
| ஒண் கமலைகேள்வன் அடி தேன் நுகரும் ஆசை மிகு சிந்தையர் ஆல் | ஸ்ரீமஹாலக்ஷ்மீபதியின் திருவடித் தேனை யநுபவிக்க வேணுமென்னுமாசை மிகுந்த மனமுடையவர்களாய்க் கொண்டு | பற்று அற்று வீழும் விழுக்காடே தான் | (உபாயாந்தரங்களிலும் உபேயாந்தரங்களிலும்) ஸங்கமற்று விழும் விழுகைதான் |
| | | வீடு அருளும் | மோக்ஷப்ராபகமாகும். |

* * *—ஆர்த்தப்ரபத்தி யென்றும் த்ருப்தப்ரபத்தி யென்றும் ப்ரபத்தி இருவகையாகச் சொல்லப்படுகிறது. தேஹாவஸாநத்தில் மோக்ஷத்தை இசைந்திருக்குமதிகாரி செய்யும் ப்ரபத்தி த்ருப்தப்ரபத்தியாம். அவ்வளவு விலம்பத்தைப் பொறுக்க கில்லாதே சடக்கென வீடுபெற விரும்பி நிற்கும் அதிகாரி செய்யும் ப்ரபத்தி ஆர்த்தப்ரபத்தியாம். இவ்விருள் தருமா ஞாலத்தில் ஒரு நொடிப்பொழுதும் இருப்பு ஸஹிக்க முடியாமையே ஆர்த்தப்ரபத்திக்கு அடியாகிறது. மரத்தில் காய் காய்த்து அது பழமாகப் பரிணமிக்கிறது; அந்தப் பழமானது மரத்தில் தங்கி நிற்குமளவு ஒன்றுண்டு; அந்த அளவு கடந்தால் தானாகவே மரத்தை விட்டு நழுவிக் கீழேவிழும்படியைக் காணுகின்றோம். இவ்வண்ணமாகவே இந்நிலத்தில் தங்கியிருக்குமளவு கழிந்த பேர் அதிகாரியானவன் ஒரு க்ஷணமும் தரித்திருக்க முடியாமல் தானாகவே விழுகிற விழுகைதான் ஆர்த்தப்ரபத்தி யென்பது; அது வீட்டையருளும்—என்றதாயிற்று.

ஸநத்குமாரஸம்ஹிதையில்—* यदा परानन्वयिभिः दुश्शकः स्मृतिभिर्विना। तेन तत्पुरतः पातः सा प्रपत्तिस्तदा भवेत्—யதா பராநந்வயிபி: துச்சக: ஸ்ம்ருதிபிர், விநா, தேந தத்புரத: பாதஸ் ஸா ப்ரபத்திஸ் ததா பவேத் *என்றுள்ள ச்லோகம் இப்பாசுரத்திற்கு மூலமாயிருக்கும். இதன் பொருளாவது—[பர அநந்வயிபி:] இப்பதம (ஸ்ம்ருதிபி:) என்று மேலுள்ள விசேஷ்யத்தில் அந்வயிக்கும் விசேஷணமாகையாலே ஸ்த்ரீலிங்கமான வதற்குச் சேர (பராநந்வயிநீபி:) என்று இதுவும் ஸ்த்ரீலிங்கமாக இருக்கவேணும்: அப்படியில்லாமை "ஆர்ஷத்வாத் ந தோஷ:;" என்கிற கட்டளையிலே அதுஷ்டமாகவே கொள்ளத்தக்கது. பராநந்வயிபிஃ ஸ்ம்ருதிபிர் விநா துச்சக:—இதர விஷயங்களிலே அந்வயமற்ற சிந்தனைகளில்லாமல் இந்நிலத்தில் தரித்திருக்க முடியாதவனாய் என்றபடி. விஷயாந்தர ஸ்மரண லேசமுமின்றிக்கே எம்பெருமானொருவனையே சிந்தித்து நிற்க வேண்டும்படியான தசை பிறந்தவனாக என்று கருத்து. இப்படிப்பட்டவனாக, யதா—எப்போது ஆகிறானோ; ததா—அப்போது, தேந— तादृशदशाविशेषेण என்றபடி. அப்படிப்பட்ட நிலைமையோடு. தத்புரத: பாத:—எம்பெருமான் திருமுன்பே விழுகை யென்பது யாதொன்றுண்டோ, ஸா ப்ரபத்தி: பவேத்— அதுதான் ப்ரபத்தியாகும் என்றபடி. இந்த ச்லோகத்தின் பொருள் இப்பாசுரத்திலே காணத்தக்கது. "ஊனவுடற் சிறை நீத்து ஒண்கமலை கேள்வனடித் தேனுகரு மாசைமிகு சிந்தையினால்" என்கிற (இப்பாட்டின்) முன்னடியும் மேலெடுத்த ச்லோகத்தின் பூர்வார்த்தமும் பர்யாயமாயிருக்கும்.

தானே பழுத்தால் விழுங்கனி போல்:—பழுத்தால் தானே விழுங்கனிபோல் என்று யோஜிப்பது. சில பழங்கள் கீழே விழாமல் மரக்கிளையிலேயே யிருக்கக் கண்டோமாகில் இன்னமும் முற்றப் பழுக்கவில்லை யென்றெ நினைக்கநேரும். முற்றப் பழுத்தபின் ஒரு க்ஷணமும் கிளையில் தங்காதென்பது சொல்லவேண்டா. அதுபோலவே, ஆர்த்தி யின் பரிபாகம் சரமாவஸ்தையளவாக முதிர்ந்த பின்பு ஒரு க்ஷணமும் இந்நிலத்தில் இருப்பு அரிதாகி ஆர்த்தப்ரபத்தி செய்யுமளவில் * आर्तेष्वाशुफला—ஆர்த்தேஷு ஆசுபலா* என்கிற ந்யாஸ திலகஸூக்திப்படியே கடுகப்பலன் கைபுகும் என்றதாயிற்று. ... 1

நரகும் சுவர்க்கமும் நாண்மலராள் கோனைப்
பிரிவும் பிரியாமையுமாய்த்—துரிசற்றுச்
சாதகம்போல் நாதன் தனதருளே பார்த்திருத்தல்
கோதி லடியார் குணம். 2

| | | | |
|---|---|---|---|
| நாள் மலராள் கோனை பிரிவு நரகு ஆய் | திருமாலைப் பிரிந்திருத்தல் நரகமாகவும் | சாதகம் போல் | சாதக பக்ஷியானது மேகத்தையே எதிர்பார்த்திருப்பதுபோல |
| பிரியாமை சுவர்க்கம் ஆய் | பிரியாமல் கூடியிருத்தல் ஸ்வர்க்கமாகவும் பெற்று | நாதன் தனது அருளே பார்த்திருத்தல் | எம்பெருமானுடைய திருவருளொன்றையே நிரீக்ஷித்திருப்பதானது |
| துரிசு அற்று | இப்படிப்பட்ட ப்ரேமத்தை உபாயமாகக் கொள்ளுகையாகிற தோஷமின்றிக்கே | கோது இல் அடியார் குணம் | குற்றமற்ற சேஷபூதர்களின் இயல்வு. |

* * * —*यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना—யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயா விநா* என்கிற ஸ்ரீராமாயண (அயோ-30-28.) ச்லோகத்தை யுட்கொண்டு முன்னடிகளும், * प्रपन्नश्चातको यद्वत्प्रपत्तव्यः कपोतवत्। रक्ष्यरक्षकयोरेतल्लक्ष्यं लक्षणमेतयोः—ப்ரபந்நச் சாதகோ யத்வத் ப்ரபத்தவ்ய: கபோதவத், ரக்ஷ்ய ரக்ஷகயோரேதத் லக்ஷ்யம் லக்ஷணமேதயோ:* என்கிற பகவச் சாஸ்த்ரவசனத்தை யுட்கொண்டு பின்னடிகளும் பேசப்பட்டன. பெருமாள் காட்டுக்குப் புறப்படுகிறபோது பிராட்டியை நிறுத்திப் போவதாகநினைத்து வார்த்தையருளிச் செய்தவளவிலே பெருமாளை நோக்கிப் பிராட்டி சொன்னது [யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்க: நிரயோ யஸ் த்வயா விநா] உம்மோடு கூடியிருப்பது தான் ஸ்வர்க்கம்; உம்மைப் பிரிந்திருப்பது தான் நரகம் என்று. இப்படி உறுதி கொண்டிருப்பதுதான் பரம பக்தனுடைய படியாகும். நாண் மலராள் கோனைப் பிரிவு நரகு; (அவனைப்) பிரியாமை சுவர்க்கம் என்றது முன்னடிகளில். * प्रपन्ने चातकन्यायः—ப்ரபந்நே சாதகந்யாய:* என்கிறவர்த்தம் பின்னடிகளிலுறையும். * एकः कृती शकुन्तेषु योऽन्यं शक्रान्न याचते—ஏக: க்ருதீ சகுந்தேஷு யோந்யம் சக்ராத் ந யாசதே* என்கிறபடியே சாதகபக்ஷியானது மேகத்தையேஎதிர்பார்த்திருப்பதுபோல, ப்ரபந்நனும் *களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்* என்றும் *உனக்குப் பணி செய்திருக்குந்தவமுடையேன் இனிப்போயொருவன்றனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின் சாயையழிவு கண்டாய்* என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானருளையே யெதிர்பார்த்திருக்கவேணும். ஆக, எம்பெருமானைப் பிரிந்துகிடப்பதை நரக ப்ராயமாக நினைப்பதும் அவனதருளையே பார்த்திருப்பதும் பரமபக்தர்களின் லக்ஷணமென்றதாயிற்று. ... ... ... 2

ஆனை யிடர்கடிந்த ஆழியங்கை யம்புயத்தாள்
கோனைவிடில் நீரிற் குதித்தெழுந்த—மீனேனவே
ஆக்கை முடியும் படிபிறத்த லன்னவன்தாள்
நீக்கமிலா வன்பர் நிலே. 3

| | |
|---|---|
| ஆனை இடர் கடிந்த ஆழி அம் கை | கஜேந்திராழ்வானுடைய துன்பத்தைப்போக்கின திருவாழியை அழகிய திருக்கையிலேயுடைய |
| அம்புயத்தாள் கோனை விடில் | திருமாலே விட்டுப்பிரிந்தால் |
| நீரின் குதித்து எழுந்த மீன் எனவே | நீரைவிட்டுக்கிளம்பியெழுந்த [நீரைப்பிரிந்த] மீன்போல |
| ஆக்கை முடியும் படி பிறத்தல் | உடல் முடியும்படியானநிலைமை விளைதல் |
| அன்னவன்தாள் நீக்கம் இலா அன்பர் நிலே | அப்பெருமானுடைய திருவடிகளைவிட்டு நீங்க கில்லாத பரமபக்தர்களின் இயல்வாம். |

* * *—ஸ்ரீராமாயணத்தில் இளையபெருமாளுடைய வார்த்தை [அயோ—53. 31.] *न च सीता त्वया हीना न चाहमपि राघव। मुहूर्तमपि जीवावो जलान्मत्स्याविवोद्धृतौ—ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ, முஹுர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யா விவோத்த்ருதௌ* என்பது. இதனுல், எம்பெருமானைப் பிரிந்தவாறே நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல் துடிப்பது பரமபக்தனுடைய லக்ஷணமென்று சிக்ஷிதமாகிறது. இதனையுட்கொண்டது இப்பாசுரம். *மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான் வேட்கையினேடு சென்றிழிந்த கானமர்வேழம் கையெடுத்தலறக் கராவதன்காலினைக் கதுவ ஆனையின் துயரம் தீரப்புள்ளூர்ந்து சென்று நின்றுழி தொட்ட திருமால் பக்தர்களிடத்து அன்பே நிரூபகமானவன்—என்றறிந்து அத்திருக் குணத்திலே யீடுபட்டு அப்பெருமானைவிட்டுப் பிரிந்தால் நீரைவிட்டுப் பிரிந்த மீன்படும்பாடுபடுமதே மெய்யன்பர்களின் நிலே என்றதாயிற்று. ... ... ... 3

மற்றேன்றை யெண்ணுதே மாதவனுக் காட்செயலே
உற்றதிதுவேன் றுளந்தெளிந்து—பெற்ற
பெரும்பேற்றின் மேலுளவோ பேறேன் றிருப்பார்
அரும்பேறு வானத் தவர்க்கு. 4

| | |
|---|---|
| மற்று ஒன்றை எண்ணுதே | (பகவத்கைங்கர்யமல்லது) வேறொன்றை நெஞ்சிலும் நினையாமல் |
| மாதவனுக்கு ஆட் செயல் இதுவே உற்றது என்று உளம் தெளிந்து | திருமாலுக்கு அடிமைத் தொழில் செய்வதொன்றே ஸ்வரூபாநுரூபமென்று மனந்தேறி |
| பெற்ற பெரு பேற்றின் மேல் பேறு உளதோ என்று இருப்பார் | (பகவத் கைங்கரியம் பெற்றுல்) அப்படி பெற்ற மஹாபுருஷார்த்தத்திற்கு மேலே ஒரு புருஷார்த்தமுண்டோஎன்று அத்யவஸாயங்கொண்டிருக்குமவர்கள் |
| வானத்தவர்க்கு அரு பேறு | நித்யஸூரிகளுக்கு அலப்யலாபமாயிருப்பர்கள். |

* * * —ஸ்ரீ சாஸ்த்ரத்தில் * ये ब्रह्मन् भगवद्दास्यभोगैकनिरतास्सदा। ते प्रियातिथयः प्रोक्ताः श्रीवैकुण्ठनिवासिनाम्—யே ப்ரஹ்மந்! பகவத் தாஸ்யபோகைகநிரதாஸ் ஸதா, தே ப்ரியாதிதயஃ ப்ரோக்தாஃ ஸ்ரீவைகுண்ட நிவாஸிநாம்* என்றுள்ள வசனத்தையுட்கொண்டு அருளிச்செய்ததாமிப்பாசுரம். இந்த ச்லோகத்தினிரண்டாம் பாதத்திலுள்ள ஏக சப்தத்தை விவரிக்கிறது பாசுரத்தினடியில் * மற்றென்றையெண்ணுதே * என்பது. மாதவனுக்கு ஆட்செய்வதே ஸ்வயம் ப்ரயோஜநமென்றுகொண்டு ப்ரயோஜநாந்தரத்தை விரும்பாதே பகவத் கைங்கர்யத்தைப்பண்ணி ‘இதனில் மிக்கோர் புருஷார்த்தமுண்டோ?’ என்று உகந்திருக்குமவர்கள் வைகுண்டவாஸிகளான நித்யமுக்தர்களுக்கு அலப்யலாபமாவர்கள். அவர்களுக்குத் திருநாடு திண்ணமென்றபடி. ... 4

தீர்த்தமுயன் றுடுவதும் செய்தவங்கள் செய்வனவும்
பார்த்தனைமுன் காத்தபிரான் பார்ப்பதன்முன்—சீர்த்துவரை
மன்னனடி யோமென்னும் வாழ்வுநமக் கீந்ததற்பின்
என்னகுறை வேண்டு மினி. 5

| | |
|---|---|
| முயன்று தீர்த்தம் ஆடுவதும் | பலக்ஷேத்திரங்களுக்குச்செல்லுகையாகிற முயற்சிகளைச் செய்து புண்ய தீர்த்தங்களில் நீராடுவதும் |
| செய் தவங்கள் செய்வனவும் | ஊன்வாட வுண்ணுதுயிர் காவலிட்டுச் செய்யும் தவங்கள் செய்வதும் |
| முன் பார்த்தனை காத்தபிரான் பார்ப்பதன் முன் | முன்பு அர்ஜுனனைக் காத்தருளினவனான கண்ணபிரானுடைய கடாக்ஷலாபத்திற்கு முன்னம் எற்குமத்தனை ; |
| சீர் துவரை மன்னன் | ஸ்ரீமத் த்வாரகாநாதனான அக் கண்ணபிரான் |
| அடியோம் என்னும் வாழ்வு நமக்கு ஈந்ததற் பின் | அடிமைச் செல்வத்தை நமக்கு அருளின பின்பு |
| இனி வேண்டும் குறை என்ன | இனி என்ன குறையுள்ளது. (தீர்த்தங்களாடவும் தவம் புரியவும் வேண்டா வென்கை.) |

* * * तावद्गच्छेत्तु तीर्थानि सरितश्च सरांसि च। यावन्नाभूच्च भूपाल! विष्णुभक्तिपरं मनः—தாவத் கச்சேத் து தீர்த்தாநி ஸரிதச் ச ஸராம்ஸி ச, யாவந் நாபூச்ச பூபால! விஷ்ணு பக்திபரம் மந:* என்று ஸ்ரீ விஷ்ணு தர்மத்திலும், * किं तस्य दानैः किं तीर्थैः किं तपोभिः किमध्वरैः। यो नित्यं ध्यायते देवं नारायणमनन्यधीः—கிம் தஸ்ய தாநை: கிம் தீர்த்தை: கிம் தபோபி: கிமத்வரை:, யோ நித்யம் த்யாயதே தேவம் நாராயணமநந்யதீ:* என்று இதிஹாஸஸமுச்சயத்திலுமுள்ள வசனங்களையுட்கொண்டு அருளிச்செய்ததா மிப்பாசுரம். பார்த்தனை முன் காத்தபிரான் என்றது—கீதையையும் அதன் ஸாரமான சரமச்லோகத்தையும் உபதேசித்து அர்ஜுநனை *ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ* என்னப் பண்ணினவன் என்றபடி. அவன் பார்ப்பதன் முன்வரைக்குமே தீர்த்த முயன்றுடுவதும் செய்தவங்கள் செய்வனவும்—என்றது, சரமச்லோகார்த்த நிஷ்டை உண்டாகுமளவுமே அந்த ப்ரவ்ருத்திகளுக்கு அவகாச முள்ளது ; அதன் பிறகு * यमो वैवस्वतो राजा यस्तवैष हृदि स्थितः। तेन चेदविवादस्ते मा गङ्गां मा कुरून् गमः—யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:, தேந சேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:* என்கிறபடியே க்ஷேத்ர தீர்த்த பர்யடநத்திலாவ தொன்றுமில்லை என்றபடி. [சீர்த்துவரை மன்னன் அடியோமென்னும் வாழ்வு நமக்கு ஈந்ததற்பின்] என்றது— *அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:* என்றருளிச்செய்து நம்மை வாழ்வித்தபின்பு என்றபடி. இது அர்ஜுனனை நோக்கி அருளிச் செய்ததாயினும் அவனை வியாஜமாகக் கொண்டு எல்லார்க்குமாக அருளிச் செய்ததாகவன்றோ பரமார்த்தமுள்ளது. * செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டிருப்பர் * என்கிறபடியே இவ்வாசிரியர்தாமும் அதற்கு அதிகாரியாகையாலே *வாழ்வு நமக்கீந்ததற்பின் என்ன குறைவேண்டு மினி * என்றருளிச்செய்யக் குறையில்லை. இப்பாசுரத்தை அநுஸந்திப்பவர்களும் அதிகாரிகளாய்க் குறையற்றவர்களாவர். 5

... ...

புண்டரிகை கேள்வ னடியாரப் பூமிசையோன்
அண்ட மோருபோருளா வாதரியார்—மண்டி
மலங்கவோரு மீன்புரண்ட மாத்திரத்தா லார்த்துக்
கலங்கிடுமோ முந்நீர்க் கடல். 6

| | | | |
|---|---|---|---|
| புண்டரிகை கேள்வன் அடியார் | திருமாமகள் கணவனுடைய அடியார்களான பாகவதோத்தமர்கள் | ஒருமீன் மண்டி மலங்க புரண்ட மாத்திரத்தால் | ஒரு மீனானது ஆழ விழிந்து கீழும் மேலுங் கலங்க வேணுமென்று புரண்டவளவால் |
| அ பூமிசையோன் அண்டம் | அப்பிரமனுடைய அண்டத்தை | முந்நீர் கடல் | மூவகை நீரையுடைய கடலானது |
| ஒரு பொருளா ஆதரியார் | ஒரு சரக்காகவே மதிக்க மாட்டார்கள் ; | ஆர்த்து கலங்கிடுமோ | நிலைமாறி யொலித்துக் கலங்குமோ ? |

* * *— * ब्रह्माण्डमण्डलीमात्रं किं लोभाय मनस्विन । शफरीस्फुरितेनाब्धेः क्षुब्धता नैव जायते— ப்ரஹ்மாண்ட மண்லீமாத்ரம் கிம் லோபாய மநஸ்விநঃ, சபரீஸ்புரிதேநாப்தேঃ க்ஷுப்ததா நைவ ஜாயதே* என்கிற வசனத்தையுட்கொண்டு இப்பாசுரமருளிச் செய்தது. உண்மையான பகவத் பக்தர்கள் மஹத்தான ஐச்வரியத்தையும் ஒரு பொருளாக மதிக்க மாட்டார்கள். ப்ரஹ்மாண்டைச்வர்யமென்பது ப்ராக்ருதர்களுக்குப் பெரிதாகத் தோற்றினாலும் பகவத்பக்தர்கள் அதை ஒரு க்ஷுத்ரவஸ்துவாக நினைப்பர்களே யல்லது பெரிய வஸ்துவாக நினையார்கள். அந்த ப்ரஹ்மாண்டைச்வர்யத்தை இவர்கள்தாம் விரும்பாதொழிந்தாலும் அது இவர்களுடைய உள்ளத்தைக் கலக்கமாட்டாதோ வென்னில் ; மஹத்தான தத்வமாகிய ஸமுத்திரத்தை ஒரு க்ஷுத்ரமத்ஸ்யம் கலக்கவல்லதோ ? அந்த க்ஷுத்ர ஜந்து எத்தனை கோலாஹலங்கள் செய்தாலும் கடல் சிறிதும் கலக்கமுறுவதில்லையன்றே. அதுபோலவேயாம் இதுவும் என்றதாயிற்று. பக்தர்கள் கடலின் ஸ்தானத்திலும், ப்ரஹ்மாண்டைச்வர்யம் ஒரு சிறுமீன் ஸ்தானத்திலும் கொள்ளப்பட்டதென்க. புண்டரிகை கேள்வன்—லக்ஷ்மீபதி. தாமரைக்கு வாசகமான கமலமென்னும் சொல் கமலா என்றும், பத்மமென்னுஞ் சொல் பத்மா என்றும் பிராட்டியைக் குறிப்பது போல, தாமரைக்கு வாசகமான புண்டரீகமென்னுஞ் சொல்லும் 'புண்டரீகா' என்று பிராட்டியைக் குறிப்பதாகத் தமிழ் மரபு. இது ஸம்ஸ்க்ருத மர்யாதைக்குச் சேர்ந்ததன்று. கோகனகை, சரோருகை, அரவிந்தை என்னுஞ் சொற்களால் பிராட்டியைக் குறிப்பது தமிழ்நூற்களில் மாத்திரமே கண்டதாகும்.

முந்நீர்—ஆற்றுநீர் ஊற்றுநீர் மழைநீர் என்று மூவகை நீரையுமுடையது கடல் ; தந்நகரமாகக் கொள்ளாமல் றன்னகரமாக (அதாவது முன்னீர் என்று) கொள்வதுமுண்டு; அப்போது *अप एव ससर्जादौ—அப ஏவ ஸஸர்ஜாதௌ* என்கிற ப்ரமாணத்தின்படி ஸ்ருஷ்டியில் முற்பட்ட நீர் என்றதாகும் ; முன் நீர் - முன்னீர். இச்சொல்லே கடலைக் குறிப்பதாயிருக்க 'முந்நீர்க் கடல்' என்றது 'கரிகலபம்' என்னுமாபோலே. 6

தோளார் சுடர்த்திகிரி சங்குடைய சுந்தரனுக்கு*
ஆளானர் மற்றொன்றி லன்புசெயார்—மீளாப்
பொருவரிய விண்ணாட்டிற் போகம் நுகர்வார்க்கு*
நரகன்றே இந்திரன்தன் நாடு. 7

| | | | |
|---|---|---|---|
| தோள் ஆர் சுடர் திகிரி சங்கு உடைய சுந்தரனுக்கு | திருத்தோள்களோடு சேர்ந்து விளங்குகின்ற திருவாழி திருச்சங்குகளையுடைய அழகியானுக்கு | மீளா பொருவு அரிய விண்நாட்டில் போகம் நுகர்வார்க்கு | மீட்சியற்றதாய் ஒப்பற்றதாய் அரிதான திருநாட்டிலே பேரின்பமநுபவிக்கக் குதூஹலமுடையவர்களுக்கு |
| ஆள் ஆனர் | அடிமைப்பட்டவர்கள் | | |
| மற்று ஒன்றில் அன்பு செயார் | அவ்வடிமைக்கு மாறான எதிலும் ஆதரம் செய்யமாட்டார்கள் ; | இந்திரன் நாடு நரகு அன்றே | ஸ்வர்க்க லோகம் நரகப்ராயமன்றே. |

* * *—*तत्पदं प्राप्तुकामा ये विष्णोस्तेषां महात्मनाम् । भोगाः पुरन्दरादीनां ते सर्वे निरयोपमाः—தத் பதம் ப்ராப்துகாமா யே விஷ்ணோஸ் தேஷாம் மஹாத்மநாம், போகாঃ புரந்தராதீநாம் தே ஸர்வே நிரயோபமாঃ.* என்கிற ப்ரஹ்மாண்ட புராணவசனத்தை யுட்

கொண்டு அருளிச்செய்ததாம் இந்தப்பாசுரம். கீழ்ப்பாட்டின் முன்னடிகளின் கருத்
தும் இப்பாட்டின் முன்னடிகளின் கருத்தும் ஒருவாறு ஒற்றுமைப்பட்டிருந்தாலும்
பின்னடிகளின் பொருளில் வேற்றுமை காண்க. உட்கொண்ட ப்ரமாணவசனத்தை
யடியொற்றின மொழிபெயர்ப்பு எம்பெருமான் திருவாழியும் திருச்சங்குமேந்தி நிற்கு
மழகிலே யீடுபட்டவர்கள் அஃதொழிந்த மற்றெதிலும் அன்பு பாராட்டமாட்டார்கள்;
அப்ராக்ருதமாய் அதிமனோஹரமாயிருக்கும் விஷயத்தின் வாசியறிந்து அதிலே
தோற்றிருக்குமவர்கள் மிகவும் ஆபாஸமாய் அவிலக்ஷணமாயிருக்கின்ற ப்ராக்ருத
விஷயங்களை விரும்புவார்களோ? *மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கைய
துவே* என்னும்படி ஸித்தமாயிருக்கின்ற விண்ணாட்டி லநுபவத்திலே ருசியுள்ளவர்
களுக்கு இஹலோக போகம் நரகப்ராயமன்றோ. ... ... ... 7

முற்றப் புவனமேலா முண்ட முகில்வண்ணன்
கற்றைத் துழாய்சேர் கழலன்றி—மற்றொன்றை
இச்சியா வன்பர்தனக் கேங்ஙனே செய்திடினும் 8
உச்சியா லேற்கு முகந்து.

| | |
|---|---|
| புவனம் எலாம் முற்ற உண்ட | ஸகல லோகங்களையும் பூர்த்தியாகத் திரு வயிற்றிலே வைத்து நோக்கின |
| முகில்வண்ணன் | காளமேக நிறத்தனான பெருமானுடைய |
| கற்றை துழாய் சேர் கழல் அன்றி | திருத்துழாய்த் தார்கள் சேர்ந்த திருவடிகள் தவிர |
| மற்று ஒன்றை இச்சியா அன்பர் | வேறு எதையும் விரும்பாத பக்தர்கள் |
| தனக்கு எங்ஙனே செய்திடினும் | எம்பெருமானுகிய தனக்கு எதை எவ்விதமாகச் செய்தாலும் |
| உகந்து உச்சியால் ஏற்கும் | திருவுள்ள முகந்து சிரஸா வஹிப்பன் (அப்பெருமான்). |

* * *— மஹாபாரதத்தில் மோக்ஷதருமத்தில் * याः क्रियास्संप्रयुक्तास्स्युरेकान्तगतबुद्धिभिः।
तास्सर्वाः शिरसा देवः प्रतिगृह्णाति वै स्वयम् —யாஃ க்ரியாஸ் ஸம்ப்ரயுக்தாஸ் ஸ்யுஃ ஏகாந்த கத புத்
திபிஃ, தாஸ் ஸர்வாச் சிரஸா தேவஃ ப்ரதிக்ருஹ்ணாதி வை ஸ்வயம் * என்றுள்ள ச்லோ
கத்தை யடியொற்றிப் பணித்ததாமிப்பாசுரம். உண்மையான பக்தர்கள் இடுமதை
யெல்லாம் எம்பெருமான் தன் திருமுடியாலே ஏற்றுக்கொள்ளுகிறானென்பதே மேற்
குறித்த ச்லோகத்திற்கும் பாட்டுக்கும் கருத்து. ப்ரளயத்திலழியாமே ஸகலலோகங்க
ளையும் திருவயிற்றிலே வைத்து நோக்கின நீலமேகச்யாமலனான எம்பெருமானுடைய
திருவடிகளைத் தவிர மற்றொன்றை விரும்பாத பக்தர்கள் வகுத்த சேஷிக்கு அடிமை
செய்யுமிடத்தில் ப்ரேமபரவசராய்க் கொண்டு அக்ரமமாகவாதல் ஸக்ரம மாகவாதல்
எப்படி செய்தாலும் திருவுள்ளமுகந்து சிரஸா வஹித்தருள்வன் அப்பெருமான். இவன்
காலாலே பொகட்டவற்றை அவன் தலையாலே ஏற்குமென்று விவக்ஷிதம். ... 8

ஆசி லருளா லனைத்துலகுங் காத்தளிக்கும்
வாசமலராள் மணவாளன் — தேசுபோலி
விண்ணாட்டிற் சால விரும்புமே, வேறொன்றை 9
யெண்ணாதார் நெஞ்சத் திருப்பு,

| | |
|---|---|
| ஆசு இல் அருளால் | குற்றமற்ற கருணையினாலே |
| அனைத்து உலகும் காத்து அளிக்கும் | எல்லாவுலகங்களையும் ரக்ஷித்தருளாநின்றவனும் |
| வாசம் மலராள் மணவாளன் | நறுமணம் மிக்க தாமரை மலரில் தோன்றிய பிராட்டிக்குக் கொழுநனுமான எம்பெருமான் |
| வேறு ஒன்றை எண்ணாதார் நெஞ்சத்து இருப்பு | தன்னைத்தவிர்த்து வேறொன்றை யெண்ணாதவர்களான பரமைகாந்திகளினுள்ளத்தில் வஸிப்பதை |
| விண் நாட்டில் சால விரும்பும் | திருநாட்டில் வஸிப்பதைவிட மிகவுமுத்தேச்யமாகக் கொள்வன். |

* * *— பகவச் சாஸ்த்ரத்தில் * येऽनन्यमनसः शुद्धा ये दास्यैकमनोरथाः। तेषां मे हृदयं विष्णोः वैकुण्ठात्परमं पदम् — யேऽநந்யமநஸச் சுத்தா யே தாஸ்யைகமநோரதா꞉, தேஷாம் மே ஹ்ருதயம் விஷ்ணோர் வைகுண்டாத் பரமம் பதம் * என்று எம்பெருமான் தானே சொல்லிவைத்தான் ; அநந்யமநஸ்கர்களும் பரமபவித்திரர்களும அடிமை செய்வதொன்றிலேயே ஊக்கமுள்ளவர்களுமான பக்தர்களின் உள்ளமானது விஷ்ணுவானவெனக்கு ஸ்ரீவைகுண்டத்திற்காட்டிலும் சிறந்த ஸ்தானமாகு மென்பது ச்லோகத்தின் கருத்து ; இதுவே கருத்துத் தான் பாசுரத்திற்கும். நிர்ஹேதுக கருணையாலே ஸமஸ்த லோகங்களையும் காத்தருளாநின்ற திருமால் அநந்ய பக்தர்களின் உள்ளத்தி லிருப்பைத் திருநாட்டில் வஸிப்பதிலுங்காட்டில் பரமபோக்யமாகக் கொள்ளுவனென்கை. [ஆசு இல் அருளால்] ஆசு என்று குற்றத்திற்குப் பெயர் ; அருளுக்குக் குற்றமாவது ஸஹேதுகமாயிருத்தல் ; அஃதில்லையெனவே நிர்ஹேதுக க்ருபை யென்றதாயிற்று. ... 9

நாளுமுலகை நலிகின்ற வாளரக்கன்
தோளுமுடியும் துணித்தவன்றன் — தாளில்
பொருந்தாதா ருள்ளத்திற் பூமடந்தை கேள்வன்
இருந்தாலு முண்மே லிருப்பு. 10

| | |
|---|---|
| பூமடந்தை கேள்வன் | லக்ஷ்மீபதியான எம்பெருமான், |
| உலகை நாளும் நலிகின்ற வாள் அரக்கன் | உலகங்களையெல்லாம் இடைவிடாது நலிந்து கொண்டிருந்த இராவணனுடைய |
| தோளும் முடியும் துணித்தவன் தன் தாளில் | தோள்களையும் தலைகளையும் துணித்தவனான தன்னுடைய திருவருடிகளில். |
| பொருந்தாதார் உள்ளத்தில் இருந்தாலும் | பொருத்தமற்ற பாபிகளின் நெஞ்சிலே இருந்தாலும். |
| முள் மேல் இருப்பு | (அவ்விருப்பானது) முள் மேலிருப்பது போலாகும். |

* * *—ப்ரஹ்மாண்டபுராணத்தில்— * भगवच्चरणद्वंद्वे भक्तिर्येषां न विद्यते। तेषां हृदि स्थितो देवः कण्टकाग्र इव स्थितः— பகவச்சரணத்வந்த்வே பக்திர் யேஷாம் ந வித்யதே, தேஷாம் ஹ்ருதி ஸ்திதோ தேவ꞉ கண்டகாக்ர இவ ஸ்தித꞉ * என்று சொல்லிற்று. எம்பெருமான தனது திருவடியிணையில் பக்தியில்லாதாருடைய நெஞ்சில் எழுந்தருளியிருந்தாலும் அவ்விருப்பு முள்மேலிருப்புப் போன்றதேயென்பது ச்லோகத்தின் கருத்து. இதுவேதான் இப்பாசுரத்தின் கருத்தும். சிவனையுபாஸித்து அவன் பக்கலிலே வாளைப்பெற்று அந்தச் செருக்கினால் அநவரதமும் உலகை நலிந்து கொண்டிருந்த லங்கேச்வரனுடைய தோள்களையும் தலைகளையும் துணித்தவனான திருமகள்கொழுநன் தனது திருவடிகளில் ஆதரமற்றவர்களின் நெஞ்சில் பொருந்தவேமாட்டான் ; ஸர்வவ்யாப்திஸித்திக்காக அங்கும பொருந்தினாலும் முள்மேலிருப்பாகவே காணுமிருப்பது —என்றாராயிற்று. ... ... ... ... 10

தன்பொன் னடியன்றி மற்றொன்றில் தாழ்வுசெய்யா
அன்பருகந் திட்ட தணுவேனினும்—பொன்பிறழும்
மேருவாய்க் கொள்ளும் விரையார் துழாயலங்கல்
மாரிமாக் கொண்டனிகர் மால். 11

| | |
|---|---|
| விரை ஆர் துழாய் அலங்கல் | பரிமளம் மிக்க திருத்துழாய் மாலையை யணிந்துள்ளவனும் |
| மாரி மா கொண்டல் நிகர் மால் | கார் காலத் தெழுகின்ற காளமேகத்தை யொத்தவனுமான எம்பெருமான் |

| பதம் | பொருள் | பதம் | பொருள் |
|---|---|---|---|
| தன் பொன் அடி அன்றி மற்று ஒன்றில் தாழ்வு செய்யா அன்பர் | தனது திருவடிகளைத் தவிர்த்து வேறொன்றில் கால்தாழாத பக்தர்கள் | உகந்து இட்டது அணு எனினும் | அன்போடு ஸமர்ப்பிக்குமது அணுவானாலும் |
| | | பொன் பிறழும் மேரு ஆய்க் கொள்ளும் | பொன்னாக விளங்குகின்ற மேரு மலையாகவே அதனைத் திருவுள்ளம் பற்றுவன். |

* * *— பௌஷ்கரஸம்ஹிதையில் — * भक्तैरण्वप्युपानीतं प्रेम्णा भूयैव मे भवेत्। भूर्यप्यभक्तोपहृतं न मे तोषाय कल्पते — பக்தைரண்வப்யுபாநீதம் ப்ரேம்ணா பூர்யேவ மே பவேத், பூர்யப்யபக்தோபஹ்ருதம் ந மே தோஷாய கல்பதே * என்று பகவான் தன்னுடைய திருவாக்கு உள்ளது. [இந்த வசனம் ஸ்ரீபாகவதத்திலும் காணகிறது.] பக்தர்கள் பக்தியுடனே அணுவளவு இட்டாலும் அது எனக்கு மிகப் பெரிதாகவே தோற்றும்; பக்தியற்றவர்கள் மிகப்பெரிதாக இட்டாலும் அதனால் நான் உகக்கமாட்டேனென்கிறான் எம்பெருமான். இப்பாசுரத்தின் கருத்து மிதுவேயாகும். மேற்குறித்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்தை மாத்திரமே பாசுரமாக்கியுள்ளார்; உத்தரார்த்தத்தின் கருத்து தன்னடையே பெறலாகுமென்று. அடுத்த மேற்பாசுரமும் குறிக்கொள்ளத் தக்கது.

"விரையார் துழாயலங்கல் மாரிமாக் கொண்டல் நிகர் மால்" என்றதில் விசேஷணமும் விசேஷ்யமும் கருத்தோடு கூடியது. ஒரு திருத்துழாய்த் தளத்தினால் த்ருப்தியடையக் கூடியவன் என்று காட்டுகிறது விசேஷணம். மேகம் எப்படி கொடுக்கப் பிறந்ததோ அப்படி எம்பெருமானும் கொடுக்க விருப்ப முடையவனேயன்றிக் கொள்ள விருப்ப முடையவனல்லன் என்னுங் கருத்தைத் தெரிவிக்கின்றது விசேஷ்யம். இப்படிப்பட்ட எம்பெருமான் தன திருவடியல்லது மற்றொன்றில் கால் தாழாத அன்பர் உகப்புடனே இடுமது அணுவளவிற்றே யானாலும் அதனை மேருவாகக் கொள்வன் என்றதாயிற்று. குசேலமுனிவனிடத்துக் கண்ணபிரான் கூறியது காண்க. ... 11

மாறு யிணைந்த மருத மிறத்தவழ்ந்த
சேறு ரரவிந்தச் சேவடியைப்—பேறுக
உள்ளாதா ரொண்ணிதியை யீந்திடினும் தானுகந்து
கொள்ளான் மலர்மடந்தை கோன். 12

| பதம் | பொருள் | பதம் | பொருள் |
|---|---|---|---|
| மலர் மடந்தை கோன் | தாமரையாள் கேள்வனான எம்பெருமான், | பேறு ஆக உள்ளாதார் | சிறப்பாகச் சிந்திக்கமாட்டாதவர்கள் |
| மாறு ஆய் இணைந்த மருதம் இற தவழ்ந்த | தன்பால் பகைமை பூண்டு சேர்ந்து நின்ற இரட்டை மருத மரங்கள் இற்று விழும்படி தவழ்ந்த | ஒள் நிதியை ஈந்திடினும் | சிறிய நிதியை ஸமர்ப்பித்தாலும் |
| சேறு ஆர் அரவிந்தம் சே அடியை | (தன்னுடைய) பாத பங்கஜத்தை | தான் உகந்து கொள்ளான் | (அதனைத்) தான் விரும்பி எற்றுக் கொள்ளமாட்டான். |

* * *— * पृथिवीं रत्नसंपूर्णां यः कृष्णाय प्रयच्छति। तस्याप्यन्यमनस्कस्य सुलभो न जनार्दनः— ப்ருதிவீம் ரத்நஸம்பூர்ணாம் யஃ க்ருஷ்ணாய ப்ரயச்சதி, தஸ்யாப்யந்யமநஸ்கஸ்ய ஸுலபோ ந ஜநார்த்தநஃ * என்கிற ச்லோகமும், கீழ்ப்பாசுரத்திலுதாஹரித்த ச்லோகத்தின் உத்தரார்த்தமும் இப்பாசுரமாகப் பரிணமித்தன வென்க. நெஞ்சு கனிந்திராமல் நவநிதிகளை யிட்டாலும் அவற்றை எம்பெருமான் கண்ணெடுத்துப் பாரான் என்றதாயிற்று.

மாருயிணைந்த மருத மிறத் தவழ்ந்தது க்ருஷ்ணவதாரத்தில் நடந்த யமளார்ஜுநபங்க சரித்திரத்தில், நாரத முனிவருடைய சாபத்தினால் நளகூபரன் மணிக்ரீவனென்கிற குபேர புத்திரர்களிருவரும் திருவாய்ப்பாடியில் இரட்டை மருத மரங்களாகத் தோன்றியிருந்தன ரென்றும், வெண்ணெய் களவுகண்ட குற்றத்திற்காக உரலிலே பிணைத்துக் கட்டப்பட்டிருந்த கண்ணபிரான் அவ்வுரலையு மிழுத்துக்கொண்டு தவழ்ந்து இவ்விரட்டை மரங்களினிடையே செல்லுகையில் உரலின் உறைதலால் அம்மரங்கள் முறிந்து விழுந்து சாபோபஹதர்களாயிருந்த யக்ஷகுமாரர்களிருவரும் சாபம் தீர்ந்து பகவானைத் துதித்து விடைபெற்றுச் சென்றன ரென்றும் புராணவரலாறு உள்ளது. இங்கு "மாருயிணைந்த மருதம்" என்று இவரருளிச் செய்வது *பொய்ம்மாய மருதான வசுரரைப் பொன்றுவித் தின்று நீ வந்தாய்* (பெரியாழ்வார் திருமொழி-3. 1. 3.) என்கிற அருளிச் செயலை யடியொற்றி யென்க. திருவாய்ப்பாடியில் எழும்பூண்டெல்லாம் அசுரப்பூண்டாகையாலே அஸுராவேசமில்லாத வஸ்து எதுவுமே யில்லையென்பது மங்களாசாஸனபரர்களான ஆழ்வார்களின் கொள்கை. இப்பாட்டின் இரண்டாமடியின் முடிவில் "பேருக, வேருக" என்பன பாடபேதங்கள். ... ... 12

பண்டே யுயிரனைத்தும் பங்கயத்தாள் நாயகற்கே*
தொண்டாமெனத்தெளிந்த தூமனத்தார்க்கு—உண்டோ
பலகற்றும் தம்முடம்பைப் பார்த்தபிமானிக்கும்
உலகத்தவரோ டுறவு. 13

உயிர், அனைத்தும் — ஆத்ம வர்க்கங்களெல்லாம்

பண்டே — அநாதிகாலமாகவே

பங்கயத்தாள் நாயகற்கே தொண்டு ஆம் என தெளிந்த — திருமாலுக்கே சேஷப் பட்டதென்று தெளிவு பெற்றிருக்கின்ற

தூ மனத்தார்க்கு — பரிசுத்தமான மனமுடைய பக்தர்களுக்கு

பல கற்றும் தம் உடம்பை பார்த்து அபிமானிக்கும் உலகத்தவரோடு — பல சாஸ்த்ரங்களை யதிகரித்துங்கூட நாம் ஜாதியிற் சிறந்திருக்கிறோ மென்று செருக்குற்ற ப்ராக்ருதர்களோடு

உறவு உண்டோ — பொருத்தமுண்டோ?

* * *—திருவயிந்திரபுரத்திலே வில்லிபுத்தூர்ப் பகவரென்று ஓர் உத்தமர் வாழ்ந்து வந்தார். அவர் அவ்வூரில் ஸ்வாமிகளெல்லாரும் அநுஷ்டாநம் செய்கிற துறையில் இறங்காமல் தமக்கென்று தனியேயொரு துறை வைத்துக் கொண்டு அதிலே அநுஷ்டானம் பண்ணிப் போவது வழக்கம். இப்படியிருக்க ஒருநாள் மற்றவர்கள் இவரை நோக்கி 'வாரீர்!, தேவரீர் தனியேயொரு துறையிற் செல்லுவானேன்? எங்கள் துறையிலேகூடி அநுஷ்டிக்கலாகாதோ?' என்று கேட்க; அதற்கு அவர் விடைகூறினார்;—"विष्णुदासा वयं यूयं ब्राह्मणा वर्णधर्मिणः । अस्माकं दासवृत्तीनां युष्माभिर्नास्ति संगतिः। नास्ति संगतिरस्माकं युष्माकं च परस्परम् । वयं तु किङ्करा विष्णोर्यूयमिन्द्रियकिङ्कराः—விஷ்ணுதாஸா வயம் யூயம் ப்ராஹ்மணா வர்ணதர்மிணஃ, அஸ்மாகம் தாஸவ்ருத்தீநாம் யுஷ்மாபிர் நாஸ்தி ஸங்கதிஃ. நாஸ்தி ஸங்கதிரஸ்மாகம் யுஷ்மாகஞ் ச பரஸ்பரம், வயம் து கிங்கரா விஷ்ணோர் யூயமிந்த்ரியகிங்கராஃ—" என்று. இதனால் அவர்களோடு தாம் உறவறுத்துக்கொண்டு பேசினாரென்பது விளங்கும். * आविद्यः प्राकृतः प्रोक्तो वैद्यो वैष्णव उच्यते। आविद्येन न केनापि वैद्यः किञ्चित्समाचरेत् — ஆவித்யஃ ப்ராக்ருதஃ ப்ரோக்தோ வைத்யோ வைஷ்ணவ உச்யதே, ஆவித்யேந ந கேநாபி வைத்யஃ கிஞ்சித் ஸமாசரேத்.* என்று பகவச்சாஸ்த்ரங்களிலும் சொல்லிற்று. இவற்றின் பொருளே இப்பாட்டாக வடிவெடுத்திருக்கிறது. ஆசார்யஹ்ருதயத்தில் "ஸாதந ஸாத்யங்களில் முதலும் முடிவும் வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறை வேறிடுவித்தது" என்கிற சூர்ணையும் அவ்

விடத்து வியாக்கியானமும் இங்கே அநுஸந்தேயம். திருமந்திரப்பொருளை நன்கு தெளியப்பெற்ற பரமைகாந்திகளுக்கு தேஹாத்மாபிமாநிகளோடே சேர்ந்து வாழ்வது பொருந்தாது எனறபடி. ... ... ... ... ... 13

பூதங்க ளைந்தும் பொருந்துடலி னுற்பிறந்த
சாதங்கள் நான்கினொடும் சங்கதமாம்—பேதங்கோண்
டென்ன பயன்பெறுவீ ரெவ்வுயிர்க்கு மிந்திரைகோன்
தன்னடியே காணுஞ் சரண். 14

| | | | |
|---|---|---|---|
| பூதங்கள் ஐந்தும் பொருந்து உடலினால் பிறந்த | பஞ்சபூதங்களின் சேர்க்கையான தேஹமடியாக வுண்டான | என்ன பயன் பெறுவீர் | என்ன பலனடையப் போகிறீர்கள் ? |
| | | எவ் உயிர்க்கும் | எல்லாவாத்மாக்களுக்கும் |
| சாதங்கள் நான்கினொடும் | நான்கு ஜாதிகளோடும் | | |
| சங்கதம் ஆம் பேதம் கொண்டு | சேர்கின்ற பேதத்தைக் கொண்டு [ஜாதிப்ரயுக்தமான பேதத்தை புத்திபண்ணி] | இந்திரை கோன் தன் அடியே சரண் காணும் | திருமாலின் திருவடிகளே புகல் காண்மின். |

* * *—देहात्मज्ञानकार्येण वर्णभेदेन किं फलम् । गतिस्सर्वात्मनां श्रीमन्नारायणपदद्वयम्— தேஹாத்மஜ்ஞாநகார்யேண வர்ணபேதேந கிம் பலம், கதிஸ் ஸர்வாத்மநாம் ஸ்ரீமந் நாராயண பதத்வயம்* என்று பரமைகாந்தி தருமத்தில் சொல்லப்பட்டவர்த்தம் பேசுகிறதாயிற்று இப்பாட்டு. நிஷ்க்ருஷ்டாத்ம ஸ்வரூபத்தில் ஜாதிபேதம் எதுவுமில்லை. சேஷத்வத்தையிட்டே நிரூபிக்கப்படுபவனான ஆத்மா ப்ராஹ்மண க்ஷத்ரியாதி ஜாதிகளிலே ஒன்றையுமுடையனல்லன். பஞ்ச பூதாத்மகமான சரீரத்தின் அமைப்பில்தான் ஜாதிபேதங்கள் காணப்படுவன. ஆகவே, நச்வரமான சரீரத்தைப்பற்றி நிற்கும் ஜாதிபேதங்களிற் கண்ணைச் செலுத்தி இகழ்வதனால் என்னாகும்? ஸகலாத்ம வர்க்கங்களுக்கும் பொதுவான பகவச்சேஷத்வம் எந்த ஆத்மாவில் பொலிகின்றதோ, அந்த ஆத்மாவில் உகந்திருப்பதே உற்றதாம் என்றதாயிற்று. ... ... 14

குடியுங் குலமுமெல்லாம் கோகனகை கேள்வன்
அடியார்க் கவனடியே யாகும்—படியின்மேல்
நீர்கெழுவு மாறுகளின் பேரும் நிறமுமெல்லாம்
ஆர்கலியைச் சேர்ந்திட மாய்ந் தற்று. 15

| | | | |
|---|---|---|---|
| கோகனகை கேள்வன் அடியார்க்கு | லக்ஷ்மீநாதனான எம்பெருமானுடைய பக்தர்களுக்கு | நீர் கெழுவும் ஆறுகளின் | நீர்நிரம்பிய மஹா நதிகளினுடைய |
| குடியும் குலமும் எல்லாம் அவன் அடியே ஆகும் | க்ராம குலாதிகளெல்லாம் அப்பெருமானுடைய திருவடி ஸம்பந்தத்தை யிட்டேயாம் ; | பேரும் நிறமும் எல்லாம் | பேர்களும் நிறங்களுமாகிய எல்லாமும் |
| | | ஆர் கலியை சேர்ந்திட | கடலைச் சென்று சேர்ந்த பிறகு |
| படியின் மேல் | (எதுபோலவெனில்; ) பூமியின் மீது (காணப்படுகின்ற) | மாய்ந்தற்று | மாய்ந்து போவது போல. |

* * *—एकान्ती व्यपदेष्टव्यो नैव ग्रामकुलादिभिः । विष्णुना व्यपदेष्टव्यस्तस्य सर्वं स एव हि ॥ नद्या नश्यति नामादि प्रविष्टाया यथाऽर्णवम् । सर्वात्मना प्रपन्नस्य विष्णुमेकान्तिनस्तथा—ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவ க்ராமகுலாதிபி:, விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்யஸ் தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி. நத்யா நச்யதி நாமாதி ப்ரவிஷ்டாயா யதார்ணவம், ஸர்வாத்மநா ப்ரபந்நஸ்ய விஷ்ணுமேகாந்திநஸ் ததா* என்கிற ப்ரமாணவசனத்தை யடியொற்றியது இப்பாசுரம். ஸ்ரீவசநபூஷணத்தில் (77) "அஹங்காரமாகிற ஆர்ப்பைத் துடைத்தால் ஆத்மாவுக்கு அழியாதபேர் அடியானென்றிறே. க்ராமகுலாதிகளால் வரும் பேர் அநர்த்த ஹேது. ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்ய:.* என்கிற சூர்ணைகளை இங்கே யநுஸந்திப்பது. பாகவத

ரல்லாதார்க்கே குலகோத்ராதிகள் நிரூபகமாகிறது ; பாகவதரானுர்க்கு எல்லாம் அவன் திருவடியேயாகும். ஆறுகள் கடலில் சேர்வதற்கு முன்பு கங்கை. யமுனை, கோதாவரி இத்யாதி நாமபேதங்களையும், வெண்மை கருமை முதலான நிறவேற்றுமைகளையும் தாங்கி நிற்கின்றன. கடலிற்புகுந்த பின்பு முன்பிருந்த நாமபேதங்களையும் வர்ண பேதங்களையும் அறவே விட்டிட்டு, கடலின் நிறமேகொண்டு கடலின் பெயரிஞலேயே வழங்கப்படுவதை இங்கு உவமையாக எடுத்துக் காட்டினது மிகப்பொருந்தும். ஆர்கலி யென்று கடலுக்குப் பெயர். ... ... ... ... 15

தேவர் மனிசர் திரியக்குத் தாவரமாம்
யாவையு மல்ல னிலகுமுயிர்—பூவின்மிசை
ஆரணங்கின் கேள்வ னமல னறிவேவடிவாம்
நாரணன் தாட் கேயடிமை நான். 16

| | | | |
|---|---|---|---|
| இலகும் உயிர் | ஒளிவடிவனுன ஜீவன் | கேள்வன் | கணவனுய் |
| தேவர் மனிசர் திரியக்கு தாவரம் ஆம் யாவையும் அல்லன் | தேவமநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களொன்று மல்லன் ; | அமலன் | அகில ஹேயப்ரத்யநீகனுய் |
| பூவின மிசை ஆர் | தாமரைமலரில் பொருந்தி வாழ்கின்ற | அறிவே வடிவு ஆம் | ஜ்ஞான ஸ்வரூபியான |
| அணங்கின் | தெய்வப் பெண்ணுகிய பெரிய பிராட்டியார்க்கு | நாரணன் | நாராயணனுடைய |
| | | தாட்கே | திருவடிகளுக்கே |
| | | அடிமை நான் | அடிமைப்பட்டவன் அஹமர்த்த பூதனுன ஆத்மா. |

* * * — नाहं देवो न मर्त्यो वा न तिर्यङ् स्थावरोऽपि वा । ज्ञानानन्दमयस्त्वात्मा शेषो हि परमात्मनः ॥ * (நாஹம் தேவோ ந மர்த்யோ வா ந திர்யக் ஸ்தாவரோபி வா, ஜ்ஞாநாநந்தமயஸ் த்வாத்மா சேஷோ ஹி பரமாத்மநః.) என்றும், * नाहं विप्रो न च नरपतिर्नापि वैश्यो न शूद्रो नो वा वर्णी न च गृहपति र्नो वनस्थो यतिर्वा । किन्तु श्रीमद्भुवनभवनस्थित्यपायैकहेतोर्लक्ष्मी-भर्तुर्नरहरितनोः दासदासस्य दासः * (நாஹம் விப்ரோ ந ச நரபதிர் நாபி வைச்யோ ந சூத்ரோ நோ வா வர்ணீ ந ச க்ருஹபதிர் நோ வநஸ்தோ யதிர் வா, கிந்து ஸ்ரீமத்புவநபவந ஸ்திதியபாயைகஹேதோர் லக்ஷ்மீபர்த்துர் நரஹரிதநோர் தாஸதாஸஸ்ய தாஸஃ.) என்றுமுள்ள ப்ரமாணவசனங்களையடியொற்றி அவதரித்தது இப்பாசுரம். இவ்வாத்மாவானவன் தேவமநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களில் ஒருவனுமல்லன் ; ப்ராஹ்மண க்ஷத்ரியாதிகளிலும ஒருவனுமல்லன் ; ப்ரஹ்மசாரி க்ருஹஸ்தாதிகளிலும் ஒருவனுமல்லன். பின்னையோவென்னில், உலகங்களைப் படைத்தளித்தழிக்கும் பெருமானுடைய தாஸாநுதாஸசரமாவதிதாஸத்வமே வடிவெடுத்தவன்—என்றதாயிற்று ... 16

ஒன்றிடுக விண்ணவர்கோன் செல்வ மொழிந்திடுக
என்று மிறவா திருந்திடுக—இன்றே
இறக்க களிப்புங் கவர்வு மிவற்ருல்
பிறக்குமோ தற்றெளிந்த பின். 17

| | | | |
|---|---|---|---|
| விண்ணவர் கோன் செல்வம் | தேவேந்திரனுடைய ஐச்வர்யமானது | இன்றே இறக்க | (அல்லது) இப்போதே மரணமாயினுமாகுக ; |
| ஒன்றிடுக | வந்து சேர்ந்தாலும் சேரட்டும் ; | தன் தெளிந்த பின் | ஸ்வஸ்வரூபத் தெளிவு உண்டான பின்பு |
| ஒழிந்திடுக | (அல்லது) உள்ள செல்வமும் ஒழிந்தாலும் ஒழியட்டும் ; | இவற்ருல் | மேற்சொன்ன நன்மை தீமைகளிஞல் |
| என்றும் இறவாது இருந்திடுக | ஒருநாளும் மரணமில்லாத வாழ்வு வாய்த்தாலும் வாய்க்கட்டும் ; | களிப்பும் கவர்வும் பிறக்குமோ | கொந்தளிப்பும் கிலேசமு முண்டாகுமோ ? |

* * *—आगच्छतु सुरेन्द्रत्वं नित्यत्वं वाऽद्य वा मृतिः । तोषं वाऽत्र विषादं वा नैव गच्छन्ति पण्डिताः :—ஆகச்சது ஸுரேந்த்ரத்வம் நித்யத்வம் வா அத்ய வா ம்ருதி:, தோஷம் வாத்ர விஷாதம் வா நைவ கச்சந்தி பண்டிதா:* என்கிற பிரமாணவசனத்தின் மொழிபெயர்ப்பாகத் தோன்றியதிப்பாசுரம். தேவேந்த்ரபதவி வரினும் வருக; உள்ள செல்வமுமொழிந்தாலுமொழிக. பிறப்புமிறப்புமில்லாத பேரின்பம்வரினும் வருக. இன்பம் பெறறோமென்று இன்புறுவதும், துன்பம் வந்ததேயென்று தளர்வதும் ஸ்வஸ்வரூபஜ்ஞானிகளுக்கு இல்லை. ... ... ... ... 17

ஈன மிலாவன்ப ரேன்றுல மெய்திலா
மானிடரை யெல்லா வணத்தாலும்—தானறிய
விட்டார்க் கெளியன் விடாதார்க் கறவரியன்
மட்டார் துழாயலங்கல் மால். 18

| | |
|---|---|
| மட்டு ஆர் துழாய் அலங்கல் மால் | தேன்னிறைந்த திருத்துழாய் மாலையை யணிந்த திருமால் |
| ஈனம் இலா அன்பர் என்றுலும் | (தன் திருவடிகளில்) குறைதவில்லாத அன்புடையவர்களென்றுலும் |
| எய்திலா மானிடரை | பகவத்பக்தரல்லாத மனிதர்களை |
| எல்லா வணத்தாலும் | எல்லாப்படிகளாலும் |
| தான் அறிய விட்டார்க்கு எளியன் | அந்தர்யாமியான தானறிய விட்டவர்களாயிருந்தால் தான் அவர்கட்கு எளியனுவன்; |
| விடாதார்க்கு அற அரியன் | அப்படி விடாதவர்களுக்கு மிகவும் அருமைப்படுவன். |

* * *—भक्तोऽपि वासुदेवस्य शार्ङ्गिणः परमात्मनः । लोकेषणादिनिर्मुक्तो मुक्तो भवति नान्यथा ॥—பக்தோபி வாஸுதேவஸ்ய சார்ங்கிண: பரமாத்மந:, லோகேஷணுதிநிர்முக்தோ முக்தோ பவதி நாந்யதா.* என்கிற ப்ரமாணவசனத்தின் அநுவாதமாயிருக்கிறதிப்பாட்டு. ஸர்வேச்வரனுனவன், தன்னளவில் எத்தனை பக்திமான்களாக இருந்தாலும் ப்ராக்ருதர்களோடு ஸம்ஸர்க்கத்தை விலக்கிக்கொள்ளாதவர்களுக்கு எளியனுகமாட்டான், மிகவும் அரியனேயாவன் என்கிறது. மதுவொழுகும் திருத்துழாய் மாலையையணிந்துள்ள எம்பெருமான் தன் திருவடிகளில் பழுதிலாவன்புடையரேயாயினும் *ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானுரல்லாதார் மானிடவரல்லரென்று என் மனத்தே வைத்தேனே* என்றும் *செங்கண்மால் நாமம் மறந்தாரை மானிடமாவையேன்* என்றும் சொல்லுகிறபடியே, மநுஷ்யஜாதியிற் பிறந்து வைத்தே பசுப்ராயராய் வர்த்திக்கும் ப்ராக்ருதர்களோடு உறவை யொழித்துக் கொண்டால்தான் அவர்களுக்கு எளியனுவன் என்றதாயிற்று. மூன்றுமடியில் 'அறிவரியன்' என்கிற பாடம் பிழை; 'அறவரியன்' என்பதே பாடம். அற—மிகவும். ... ... 18

நல்ல புதல்வர் மனையாள் நவையில்கிளை
இல்லம் நிலமா டிவையனைத்தும்—அல்லலெனத்
தோற்றியெரி தீயிற் சுடுமே லவர்க்கெளிதாம்
ஏற்றரும்வை குந்தத் திருப்பு. 19

| | |
|---|---|
| நல்ல புதல்வர் | நற்குணசாலிகளான புத்திரர்கள் |
| மனையாள் | மனைவி |
| நவை இல் கிளை | குற்றமற்ற உறவினர் |
| இல்லம் | மனை |
| நிலம் | பூமி |
| மாடு இவை அனைத்தும் | பசுக்கள் ஆகிய இவையெல்லாம் |
| அல்லல் என தோற்றி | துன்பத்திற்கு அடியானவையென்று தோன்றி |
| எரி தீயின் சுடும் எல் | எரிகிற அக்நியிற் காட்டிலும் தாபகரமாகில் |
| அவர்க்கு | அன்னவர்களுக்கே |
| ஏற்றரும் வைகுந்தத்து இருப்பு எளிது ஆம் | பெறுதற்கரிய பரமபதத்திலே சென்று சேருகை எளிதாகும். |

* * *—क्षेत्राणि मित्राणि धनानि नाथ पुत्राश्च दाराः पशवो गृहाणि । त्वत्पादपद्मप्रवणात्मवृत्तेः भवन्ति सर्वे प्रतिकूलरूपा :—க்ஷேத்ரர்ணி மித்ராணி தநாநி நாத ! புத்ராச் ச தாரா: பசவோ க்ருஹாணி, த்வத்பாதபத்மப்ரவணாத்மவ்ருத்தேர் பவந்தி ஸர்வே ப்ரதிகூலரூபா:.* என்கிற ச்லோகம் காஞ்சீஹஸ்திகிரி மாஹாத்மியத்தில் பேரருளாளப்பெருமாளை நோக்கி நான்முகன் விஜ்ஞாபித்தது. எம்பெருமானுடைய திருவடிகளில் உண்மையாக வூன்றின சித்தவ்ருத்தியையுடைய உத்தமாதிகாரிக்குப் புத்ர தார க்ருஹ க்ஷேத்ரங்களெல்லாம் நெருப்பாகத் தோற்றுமென்றது இந்த ச்லோகத்தில். இவ்வர்த்தத்தையே இப்பாசுரமும் பேசுகிறது. ஸ்ரீவசநபூஷணத்தில் "விஹிதபோகம் நிஷித்தபோகம் போலே லோகவிருத்தமுமன்று, நரகஹேதுவுமன்று ; ஆயிருக்கச்செய்தே ஸ்வரூப விருத்தமுமாய் வேதாந்த விருத்தமுமாய் சிஷ்டகர்ஹிதமுமாய் ப்ராப்யப்ரதிபந்தகமுமாயிருக்கையாலே த்யாஜ்யம். போக்யதாபுத்தி குலைந்து தர்மபுத்த்யா ப்ரவர்த்தித்தாலும ஸ்வரூபம் குலையும்" என்றருளிச் செய்தவுடனே "*க்ஷேத்ராணி மித்ராணி யென்கிற ச்லோகத்திலவஸ்தை பிறக்கவேணும் ஸ்வரூபம் குலையாமைக்கு" என்றருளிச்செய்தார் பிள்ளைலோகாசார்யர். அவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் "பேரருளாளரான பெருமாளைக் குறித்து ப்ராஹ்மா விஜ்ஞாபித்த (*க்ஷேத்ராணி மித்ராணி யென்கிற) ச்லோகத்தில் சொல்லுகிற க்ஷேத்ரமித்ரதநாதிகளான ஸமஸ்தவஸ்துக்களும் அக்நிகல்பமாய்த் தோற்றும்படியான அவஸ்தை பிறக்கவேணும் ஸ்வரூபப்ரச்யுதி பிறவாமைக்கென்கை. இந்த ச்லோகார்த்தத்தை *நல்ல புதல்வர்* இத்யாதியாலே அருளாளப்பெருமாளெம்பெருமானருமருளிச் செய்தாரிறே" என்றருளிச் செய்தது இங்கே யநுஸந்தேயம். இப்படி புத்ரகளத்ராதிகள் அக்நிகல்பமாகத் தோற்ற வேணடுமாகில் *நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே* என்றும், *வாயுநன் மக்களைப் பெற்று மகிழ்வரே* என்றும் ஆழ்வாருமாண்டாளும் இவற்றோடு கூடி வாழ்வதைப பலனாகச் சொல்லலாமோவென்னில் ; அவ்வோ அதிகாரிகளுக்குத் தக்கபடியிறே பலச்ருதிதானிருப்பது. எல்லாவற்றுக்கும் எல்லாருமதிகாரிகளன்றே. ... ... ... ... ... 19

விருப்புறினும் தொண்டர்க்கு வேண்டுமித மல்லால்
திருப்போலிந்த மார்பனருள் செய்யான் —நெருப்பை
விடாதே குழவி விழவருந்தி னலும்
தடாதே யொழியுமோ தாய். 20

| | | | |
|---|---|---|---|
| விருப்பு உறினும் | ஆசைப்பட்டாலுங் கூட | அருள்செய்யான் | கொடுக்கமாட்டான் ; |
| தொண்டர்க்கு | தன்னிடத்தில் பக்தி செய்யுமவர்களுக்கு | குழவி | குழந்தையானது |
| வேண்டும் இதம் அல்லால் | வேண்டியதான ஹிதமொழிய மற்றொன்றை | நெருப்பை விடாதே | நெருப்பி னொளியைக் கண்டு அதை விடமாட்டாமல் |
| திரு பொலிந்த மார்வன | பிராட்டிவிளங்கும் திருமார்வையுடைய எம்பெருமான் | விழ வருந்தினலும் | அதிலே விழ முயன்றாலும் |
| | | தாய் தடாது ஒழியுமோ | தாயானவள் அதைத் தகையாமல் அனுமதி செய்வளோ ? |

* * * —याचितोऽपि सदा भक्तैर्नाहितं कारयेद्धरिः । बालमग्नौ पतन्तं तु माता किं न निवारयेत् ॥ —யாசிதோபி ஸதா பக்தைர் நாஹிதம் காரயேத் ஹரி:, பாலமக்நௌ பதந்தம் து மாதா கிம் ந நிவாரயேத்* என்கிற ப்ரமாண வசநத்திற்கு ப்ரதிச்சந்தமாயிருக்கிறதிப் பாட்டு எம்பெருமான பக்கலிலே பக்தர்கள் தங்களுக்கு ஹிதமல்லாததைத் தரும்படி வேண்டினலும ஹிதபரனன அவன் ஹிதமானவற்றைத் தருவனேயொழிய அஹிதமானதை யொருபோதும் தாரான் ; இதுதான் எதுபோலவெனனில் ; விளைவதறியாத சிறுகுழவி அக்நி தஹிக்கவல்லதென்னுமிடமறியாதே அதிலே விழ முயன்றலும் அது ப்ரஜைக்கு நாசகமென்று அறியும் மாதாவானவள் அதில் விழாதபடி தகையுமத்தனையொழிய விழுகைக்கு இசையுமோ ? இசையமாட்டாளே ; அதுபோலவென்க. 20

ஆரப் பெருந்துயரே செய்திடினு மன்பர்கள்பால்
வேரிச் சரோருகைகோன் மெய்ந்நலமாம்—தேரில்
பொறுத்தற் கரிதேனினும் மைந்தனுடற் புண்ணை
அறுத்தற் கிசைதாதை யற்று. 21

| | | | |
|---|---|---|---|
| வேரி சரோருகை கோன் | நறுமணம் மிக்க தாமரையிற் பிறந்த பிராட்டியின் வல்லபனான ஸர்வேச்வரன் | பொறுத்தற்கு அரிது எனினும் | ஸஹிக்கமுடியாததே யாயினும் |
| அன்பர்கள் பால் | பக்தர்கள் விஷயத்தில் | மைந்தன் உடல் புண்ணை | தன்மகனுடம்பிலுண்டான விரணத்தை |
| ஆரபெருதுயரே செய்திடினும் | மிகப்பெரிய துக்கங்களையே விளைத்தாலும் | அறுத்தற்கு இசை தாதை யற்று | அறுப்பதற்கு இசைகின்ற தந்தையின் செயல் போன்றதாமிது. |
| தேரின் | ஆராயுமளவில் | | |
| மெய் நலம் ஆம் | (அது) உண்மையான அன்பின் காரியமேயாகும் ; | | |

* * *—கீழ்ப்பாட்டில், பக்தர்கள் அஹிதத்தை வேண்டினாலும் தாரான் எம்பெருமான்—என்று சொல்லிற்று. பக்தர்களும் துன்பங்களை யநுபவிக்கக் காணாநின்றோமே ; அது எம்பெருமான் தருமதுதானே ; எங்ஙனே தருகின்றான் ? என்று சங்கையுண்டாக, அதற்குப் பரிஹாரமாகவருளிச் செய்வது இப்பாசுரம. * हरिर्दुःखानि भक्तेभ्यो हितबुद्ध्या करोति वै । शस्त्रक्षाराग्निकर्माणि स्वपुत्राय यथा पिता ॥——ஹரிர் துக்காநி பக்தேப்யோ ஹிதபுத்த்யா கரோதி வை, சஸ்த்ரக்ஷாராக்நிகர்மாணி ஸ்வபுத்ராய யதா பிதா.* என்கிற ப்ரமாணவசனத்தை யடியொற்றியது இப்பாசுரம். மிகப்பெரிய துக்கங்களை எம்பெருமான் பக்தர்களுக்கு உண்டு பண்ணுவதாகக் கண்டாலும், அது ஹிதபுத்தியாலே செய்கிறவத்தனை. ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் வைராக்யத்தைப் பிறப்பிக்கைக்காகச் செய்கிறதாகையாலே ஹிதபுத்தியால் செய்கிறதென்னத் தட்டில்லை. ஸ்ரீவசநபூஷணத்தில் (243.) "தனக்கொரு க்லேசமுண்டானால் கர்மபலமென்றுதல் க்ருபாபலமென்றுதல் பிறக்கும் ப்ரீதியும்" என்றவிடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் ;—"முமுக்ஷுவாய் ப்ரபந்நனானாலும் ப்ராரப்த சரீரமிருக்குமளவும் தாபத்ரயங்களில் ஏதேனுமொரு க்லேசமுண்டானால் 'இது அநுபவவிநாச்யமான ப்ராரப்த கர்மபலமன்றோ, ஏவம்பூதகர்மங்களுள்ளவை கழியுமளவன்றோ இச்சரீரத்தோடே எம்பெருமான் நம்மை வைக்கிறது ; ப்ராப்திப்ரதிபந்தகங்களிலே ஒன்றாகிலும் கழியப்பெற்றோமே' என்கிற அநுஸந்தானத்தாலேயாதல், துர்வாஸனையாலே இவ்வுடம்பை விட இசையாமல் ப்ராக்ருதபதார்த்தங்களை யுபஜீவித்துக்கொண்டு ஸம்ஸாரத்துக்குள்ளே பொருந்தியிருக்கிற நம்மை துக்க தர்சநத்தைப்பண்ணுவித்து இதில் பற்றறுத்துக்கொண்டு போக நினைக்கிற ஸர்வேச்வரனுடைய க்ருபையின் பலமன்றோ இது என்கிற அநுஸந்தானத்தாலேயாதல் உண்டாகக்கடவ ப்ரீதியும். பூர்வாகம் உத்தராகம் ப்ராரப்தகண்டம் எல்லாம் கழிக்கிறவனுக்கு வர்த்தமாந சரீரத்தில் அநுபாவ்ய கர்மமித்தனையும் கழிக்கை அரிதன்றிறே கர்மபலமான துக்க பரம்பரைகளை அநுபவியாநின்றாலும் இத்தேஹத்தை விடவென்றால் இசையாதவிவனை நிர்துஃக்கனாக்கி வைப்போமாகில் இச்சரீரத்தோடே நெடுங்காலமிருக்க இச்சித்தல் இன்னுமொரு சரீரந்தன்னை இச்சித்தல் செய்யுமாகையாலே இச்சரீரத்துக்குள்ள கர்மம் அநுபவித்தே இறுக்கக்கடவன் என்றிறே வைக்கிறது ; ஆனபின்பு மற்றுண்டான கர்மங்களெல்லாம் கழித்தது ஸம்ஸாரத்தில் நின்றும் இவனைக் கடுகத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகையிலுண்டான க்ருபையாலே யானப்போலே இத்தனையும் கழியாமல் வைத்ததும் க்ருபையாலேயிறே. அநாதிகாலம் பரிக்ரஹித்த சரீரந்தோறும் அநுபவித்த துக்கம் பகவந்நிக்ரஹபலம், இது அநுக்ரஹபலம்." என்பதாம்.

துঃக்கப்ரதாநம் ஹிதபுத்தி ப்ரயுக்தமாகுமோவென்கிற சங்கையை உதாஹரண முகேந பரிஹரிக்கிறது [பொறுத்தற்கு அரிதெனினும் மைந்தனுடற்புண்ணை அறுத்தற்கிசைதாதையற்று] என்கிற பின்னடி. இவனுக்கிது பொறுக்கப்போகாதென்று தோற்றியிருந்தாலும் புத்ரனுடைய சரீரத்தில் க்ரந்தியை ஹிதபுத்தியாலே அறுக்கைக்கு அநுமதிபண்ணும் பிதாவைப்போலே யென்கை. *வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாதகாதல் நோயாளன்போல்* என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரமும் இங்கே அநுஸந்தேயம். ... ... ... ... 21

உடைமைநா னென்று முடையா னுயிரை
வட மதுரை வந்துதித்தா னென்றும்—திடமாக
அறிந்தவன்றன் தாளி லடைந்தவர்க்கு முண்டோ
பிறந்துபடு நீடுயரம் பின். 22

| நான் உடைமை என்றும் | ஜீவாத்மவர்க்கம் ஸர்வேச்வரனுடைய ஸொத்தென்றும் | திடம் ஆக அறிந்தவன் தன் தாளில் அடைந்தவர்க்கும் | திண்ணமாகத் தெரிந்து கொண்ட ஆசார்யனுடைய திருவடிகளை யாச்ரயித்தவர்களுக்கும் |
|---|---|---|---|
| உயிரை உடையான் வட மதுரை வந்து உதித்தான் என்றும் | அவ்வாத்ம வர்க்கங்களுக்கு ஸ்வாமி வடமதுரையில் வந்து பிறந்த ஸர்வேச்வரனென்றும் | பின் பிறந்து படும் நீள் துயரம் உண்டோ | பிறகு ஸம்ஸரித்து அநுபவிக்கக்கூடிய அனந்தக்லேசங்கள் உண்டோ? (இல்லை.) |

* * *—ப்ராரப்த கருமங்களை அநுபவித்தே தீரவேண்டுமாகில் இந்த ஜன்மத்தளவன்றிக்கே ஜன்மாந்தரத்திலும்போய் அநுபவிக்கவேண்டி வருமோவென்று தளரவேண்டா; ஸம்பந்தஜ்ஞான பூர்வகமாக அவன் திருவடிகளிலே சரணம் புகுந்தவர்களுக்குப் பின்பொரு ஜன்மமெடுத்து அநுபவிக்க வேண்டியதில்லை யென்கிறது இப்பாட்டில். * आर्तानामाशुफलदा सकृदेव कृता ह्यसौ । दृप्तानामपि जन्तूनां देहान्तरनिवारणी ॥—ஆர்த்தாநாம் ஆசுபலதா ஸக்ருதேவ க்ருதா ஹ்யஸௌ, த்ருப்தாநாமபி ஜந்தூநாம் தேஹாந்தர நிவாரணீ.* என்று ப்ரபத்திஸ்வபாவஞ் சொல்லுகிற ப்ரமாணவசனத்திலிருந்து இவ்வர்த்தம் கொள்ளப்பட்டதாயிற்று. * स्वत्वमात्मनि संजातं स्वामित्वं ब्रह्मणि स्थितम् । उभयोरेष संबन्धो न परोऽभिमतो मम ॥—ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம், உபயோரேஷ ஸம்பந்தோ ந பரோபிமதோ மம* என்கிறபடியே மிகச்சிறந்ததான ஸ்வஸ்வாமிபாவ ஸம்பநதத்தை யுணருகைதான் ப்ரபத்தி—என்னுமிடத்தை இரண்டரையடிகளால் தெரிவித்தபடி. ... ... ... ... 22

ஊழி வினைக்குறும்ப ரோட்டருவ ரேன்றஞ்சி
ஏழை மனமே யினித்தளரேல்—ஆழிவண்ணன்
தன்னடிக்கீழ் வீழ்ந்து சரணென் றிரந்தோருகால்
சொன்னதற்பி னுண்டோ துயர். 23

| ஏழைமனமே | அறிவிலியானநெஞ்சே !, | | |
|---|---|---|---|
| ஊழி வினை குறும்பர் | தொல்லைவினைகளாகிய குறும்பர்கள் | சரண் என்று இரந்து | நீயே சரணமாகக்கடவை என்று ப்ரார்த்தித்து |
| ஒட்டருவர் என்று அஞ்சி | ஓடிவந்து நலிவர்களென்று பயப்பட்டு | ஒருகால் சொன்னதன் பின் | ஒருகால் த்வயோச்சாரணம் செய்த பிறகும் |
| இனி தளரேல் | இனி நீ சோகிக்கவேண்டா ; | | |
| ஆழி வண்ணன் தன் அடி கீழ் வீழ்ந்து | கடல் வண்ணனான ஸர்வேச்வரனுடைய திருவடிகளிலே விழுந்து | துயர் உண்டோ | கிலேசிக்கவேண்டுவதுண்டோ? |

* * *—சரணாகதியின் பிரபாவத்தைப் பேசுகிறது இப்பாட்டு. ஜன்மபரம்பரைகள் தோறும் நாம் செய்திருக்கிற தீவினைகளை நினைக்குங்கால் நமக்கு உய்ய விரகேதென்று தளரவேண்டியிருக்கும். அந்தத் தளர்ச்சி வேண்டா; த்வயத்தை யநுஸந்தித்து எம்பெருமான் திருவடிகளிலே விழுந்தார்க்கு இந்த விசாரத்திற்கு ப்ரஸக்தியில்லையன்றோ. * मा भीर्मन्दमनो विचिन्त्य बहुधा यामीश्चिरं यातना: नामी न: प्रभवन्ति पापरिपव: स्वामी ननु श्रीधर: । आलस्यं व्यपनीय भक्तिसुलभं ध्यायस्व नारायणं लोकस्य व्यसनापनोदनकरो दासस्य किं न क्षम: ॥—மா பீர் மந்தமநோ! விசிந்த்ய பஹுதா யாமீச் சிரம் யாதநா: நாமீ ந: ப்ரபவந்தி பாபரிபவ: ஸ்வாமீ நநு ஸ்ரீதர:, ஆலஸ்யம் வ்யபநீய பக்திஸுலபம் த்யாயஸ்வ நாராயணம் லோகஸ்ய வ்யஸநாபநோதநகரோ தாஸஸ்ய கிம் ந க்ஷம:.* என்கிற முகுந்தமாலாச்லோகத்தை இந்தப் பாசுரத்திற்கு ஸம்வாத ப்ரமாணமாக அநுஸந்திப்பது. 23

வண்டுபடி துளப மார்பனிடைச் செய்தபிழை
உண்டு பலவேன் றுளந்தளரேல்—தொண்டர்செயும்
பல்லா யிரம்பிழைகள் பார்த்திருந்துங் காணுங்கண்
இல்லா தவன் காணிறை. 24

| | | | |
|---|---|---|---|
| உளம் | ஓமனமே !, | இறை | ஸர்வேச்வரன் |
| வண்டு படி துளபம் மார்பன் இடை | வண்டுகள் மொய்த்த திருத்துழாய் மாலையைத் திருமார்பிலணிந்துள்ள திருமாலிடத்து | தொண்டர் செயும் | பக்தர்கள் செய்த |
| செய்த பிழை | நாம் இயற்றிய அபராதங்கள் | பல் ஆயிரம் பிழைகள் பார்த்து இருந்தும் | பலவாயிரம் பிழைகளை (ஸர்வஜ்ஞனாகையாலே) பார்த்துக் கொண்டிருந்தாலும் |
| பல உண்டு என்று தளரேல் | பலபலவுளவே; (அவற்றின் பலன் என்னாகுமோ!) என்று கவலை கொள்ளாதே; (ஏனெனில்;) | காணும் கண் இல்லாதவன் காண் | அவற்றைக் காண்கின்ற கண் இல்லாதவனன்றோ. |

* * *—பூர்வாகமென்றும் உத்தராகமென்றும் பாபங்கள் இருவகைப்படும். ஸம்பந்தஜ்ஞானம் பிறப்பதற்கு முன்னே செய்த பாவங்கள் பூர்வாகமெனப்படும்; பிறபட்டவை உத்தராகமெனப்படும். பூர்வாகங்களைப்பற்றிக் கவலைவேண்டாவென்றது கீழ்ப்பாட்டில்; உத்தராகங்களைப்பற்றிக் கவலை வேண்டாவென்கிறது இப்பாட்டில். ஸஹஸ்ரநாமத்தில் அவிஜ்ஞாதா என்றொரு திருநாமமுள்ளது எம்பெருமானுக்கு. அறியாதவனென்று அதற்குப் பொருள். ஸர்வஜ்ஞனை அறியாதவனென்று சொல்லத் தகுதியில்லை. ஸர்வஜ்ஞனானாலும் அடியார்களின் குற்றங்களைக் காணாதவனாகையாலே அவிஜ்ஞதா என்கிறது. * अविज्ञाता हि भक्तानामागस्सु कमलेक्षण: । सदा जगत्समस्तं च पश्यन्नपि न पश्यति ॥—அவிஜ்ஞாதா ஹி பக்தாநாம் ஆகஸ்ஸு கமலேக்ஷண:, ஸதா ஜகத் ஸமஸ்தஞ்ச பச்யந் நபி ந பச்யதி.* என்று சொல்லிற்று. இதனை ஆழ்வான் வரதராஜஸ்தவத்திலே * उपालम्भोऽयं भो: श्रयति बत सार्वज्ञयमपि ते यतो दोषं भक्तेष्विह वरद ! नैवाकलयसि * என்றருளிச் செய்தார். இப்பாசுரமும் இவ்வர்த்தமே கொண்டது. எம்பெருமான் பக்தர்களின் குற்றங்களைக் காண்பதில்லை யென்றால் பக்தாபராதங்களை போக்யமாகக் கொள்ளுகிறானென்று சொல்லுகை பொருந்தாதேயென்று சங்கிக்கவேண்டா; தோஷங்களைக் காணாமையென்பது ஒருகுணம்; கண்டாலும் போக்யமாகக் கொள்ளுகையென்பது மற்றொரு குணம். அக்குணம் அடுத்த பாசுரத்தில் பேசப்படுகிறது. ச்ருதப்ரகாசிகையில் “संबन्धविशेषान्वितेषु प्रीति:—स्नेह: ; यस्य विपाका अस्थानभयशङ्कित्वम् दोषानवभास: दोषेऽपि गुणत्वबुद्धिरित्यादय: ” என்றருளிச் செய்திருப்பதை நோக்கவேணும். ப்ரேமத்தின்

பரிபாகதசை பலவகைப்பட்டிருக்கும். தோஷாதர்சித்வமென்பது ஒருதசை; தோஷங்
களையும் குணமாகக் கொள்ளுகையென்பது அதனில் மேற்பட்ட மற்றொருதசை.
க்ஷமிப்பதென்பதும் ஒருதசை. இவை பரஸ்பரவ்யாஹதங்களல்ல. தோஷாதர்சித்வத்
திற்கு மேற்பட்டதசை கிடையாதென்று சிலர் மயங்கி நிற்பதுண்டு. அவர்களைத்
தெளிவிக்கவே ச்ருதப்ரகாசிகாஸூக்தி அவதரித்ததென்க. ... ... 24

அற்ற முரைக்கி லடைந்தவர்பா லம்புயைகோன்
குற்ற முணர்ந்திகழுங் கொள்கையனோ ?—எற்றேதன்
கன்றி னுடம்பின் வழுவன்றோ காதலிப்பது
அன்றதனை யீன்றுகந்த வா. 25

| பதம் | பொருள் |
|---|---|
| அற்றம் உரைக்கில் | சாஸ்திரங்களில் அறுதியிடப்பட்ட பரமார்த்தத்தைச் சொல்லப்புகுமளவில்; (இவ்வளவே காணீர்.) |
| அம்புயை கோன் | லக்ஷ்மீபதியான எம்பெருமான் |
| அடைந்தவர் பால் | பக்தர்கள் விஷயத்தில் |
| குற்றம் உணர்ந்து | குற்றங்களைக் கண்டாலும் |
| இகழும் கொள்கையனோ | (குற்றங்களுக்காக) இகழ்ந்துவிடுமியல்வினனோ? (அல்லன்;) |
| எற்றே | அஹஹ; |
| அன்று (கன்று) அதனை ஈன்று உகந்த ஆ | அப்போதுதான் கன்றை ப்ரஸவித்து உகப்போடிருக்கின்ற பசுவானது |
| தன் கன்றின் உடம்பின் வழு அன்றோ காதலிப்பது | (அந்தத்) தனது கன்றினுடலிலுள்ள அழுக்கையன்றோ விரும்பியிருப்பது. |

* * *—எம்பெருமான் அடியார்களின் குற்றங்களைக் காணகில்லானென்றது
கீழ்ப்பாட்டில்; காணநேர்ந்தால் அவற்றை நற்றமாகக் கொள்ளுவனென்கிறது இப்
பாட்டில். இவை பரஸ்பர விருத்தமல்ல. அன்பிலே பர்வபேதங்களுண்டாகையாலே.
இதைப்பற்றிச் சொல்ல வேண்டுவதெல்லாம் வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகையிலே விரியச்
சொன்னோம், அங்கே கண்டு கொள்வது. * प्रपन्नान् माधवस्सर्वान् दोषेण परिगृह्यते । अद्य जातं
यथा वत्सं दोषेण सह वत्सला ॥—ப்ரபந்நாந் மாதவஸ் ஸர்வாந் தோஷேண பரிக்ருஹ்யதே, அத்ய
ஜாதம் யதா வத்ஸம் தோஷேண ஸஹ வத்ஸலா.* என்ற ப்ரமாணவசனத்தை யடி
யொற்றி யருளிச் செய்த திப்பாட்டு. இந்த வசனத்தில் 'பரிக்ருஹ்யதே' என்றது
பரிக்ருஹ்ணுதி யென்றதாகக் கொள்ளக்கடவது ஆர்ஷப்ரயோகமிருந்தபடி.

அற்றமுரைக்கிலென்றது—அறுதியிட்டுச் சொல்லுமளவிலென்றபடி. சாஸ்த்
ரார்த்தத்தை நிஷ்கர்ஷிக்குமளவில் என்கை. [அம்புயைகோன் குற்றமுணர்ந்து இக
ழுங் கொள்கையனோ ?] திருமால் அடியார்களின் குற்றங்களை யுணரமாட்டானென்னு
மளவேயன்று; உணர்ந்தால்தான் இகழுங்கொள்கையனோ ? பின்னையோவென்னில்,
நற்றமாகக் கொள்ளுங்கொள்கையன்காண் என்றபடி. இது ஸம்பாவிதமோவென்ன,
ஸம்பாவிதமே யென்னுமிடத்தைப் பின்னடிகளாலே மூதலிக்கிறது. தத்வத்ரயத்தில்
ஈச்வரப்ரகரணத்தில் (151.) "இப்படி யீச்வரன் கல்யாணகுணங்களோடே கூடியிருக்
கையாலே" இத்யாதி சூர்ணையில் "பார்யாபுத்ரர்கள் குற்றங்களைக் காணுக்கண்ணிட்
டிருக்கும் புருஷனைப்போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே,
குற்றங்களைப் பெரியபிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணிய
னாய் நின்று ரக்ஷித்து, காமினியுடைய அழுக்குகக்கும் காமுகனைப்போலே அவர்கள்
தோஷங்களை போக்யமாகக்கொண்டு.........அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்
னணைக்கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலுமேற்குமா
போலே பெரியபிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு
போரும்." என்று பிள்ளைலோகாசாரியர் அருளிச் செய்துள்ள திவ்யஸூக்திகளை
நிச்சலும் மன்னம் செய்யப்பெறில் ஆவிலஹ்ருதயர்களுக்கு மனம் தெளியப்பெறும். 25

தப்பில் குருவருளால் தாமரையாள் நாயகன்றன்
ஒப்பி லடிகள்நமக் குள்ளத்து — வைப்பென்று
தேறி யிருப்பார்கள் தேசுபொலி வைகுந்தத்
தேறியிருப் பார்பணிகட் கேய்ந்து. 26

| | | | |
|---|---|---|---|
| தப்பு இல் குரு அருளால் | ஞானமனுட்டான மிவற்றில் குறையற்ற ஆசாரியனுடைய திருவருளால் | தேறி இருப்பார்கள் | தெளிந்திருக்குமவர்கள் |
| தாமரையாள் நாயகன் தன் | திருமாலினுடைய | தேசு பொலி வைகுந்தத்து ஏறி | தேஜஸ்ஸுமிக்கிருக்கிற பரம பதத்திலே சென்று |
| ஒப்பு இல் அடிகள் | ஒப்பற்ற திருவடிகள் | | |
| நமக்கு உள்ளத்து வைப்பு என்று | நமக்கு நெஞ்சிலுறையும் நிதியென்று | பணிகட்கு ஏய்ந்திருப்பார் | கைங்கர்யங்களுக்கு அதிகாரிகளாயிருப்பார். |

* * *—ஆசாரியன் திருவருளாலே நமக்த எம்பெருமான் திருவடிகள் மஹாநிதியாகக் கிடைத்தனவென்று தேறியிருக்குமவர்கள் ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமைசெயயும் பாக்யசாலிகளாகத் தட்டில்லையென்கிற திப்பாட்டில். *आचार्यस्य प्रसादेन मम सर्वमभीप्सितम् । प्राप्नुयामिति विश्वासो यस्यास्ति स सुखी भवेत्॥ —ஆசார்யஸ்ய ப்ரஸாதேந மம ஸர்வமபீப்ஸிதம், ப்ராப்நுயாமிதி விச்வாஸோ யஸ்யாஸ்தி ஸ ஸுகீ பவேத்.* என்கிற ப்ரமாணவசனத்தையடியொற்றியது இப்பாட்டு. ... 26

நெறியறியா தாரு மறிந்தவர்பால் சென்று
செறிதல் செயாத் தீமனத்தர் தாமும் — இறையுரையைத்
தேறா தவரும் திருமடந்தை கோனுலகத்
தேறா ரிடரழுந்து வார். 27

| | | | |
|---|---|---|---|
| நெறி அறியாதாரும் | (பிறவிக் கடல் கடத்தற்கு) உபாய மறியாதவர்களும் | இறை உரையை தேறாதவரும் | ஸர்வேச்வரன் பணித்த சரமச்லோகத்தில் தெளிவில்லாதவர்களும் |
| | | திருமடந்தை கோன் உலகத்து ஏறார் | திருமாலின் உலகமாகிய திருநாட்டில் சென்று சேரப் பெறாதவர்களாய் |
| அறிந்தவர் பால் சென்று செறிதல்செயா தீமனத்தர் தாமும் | அவ்வுபாய மறிந்தவர்களிடத்துச் சென்று சேர்தலில்லாத தீயமனத்தவர்களும் | இடர் அழுந்துவார் | ஸம்ஸார துக்கங்களிலேயே ஆழ்ந்து கிடப்பர்கள். |

* * *—ஒருகாலும் உஜ்ஜீவிக்கப் பெறாதவர்கள் மூவர்; அவர்களாகிறார்— த்வயத்தின் உபதேசம் பெறாதவர்கள், அதையுபதேசிக்கவல்ல ஆசாரியனை அடிபணியாதவர்கள், சரமச்லோகத்திலே விச்வாஸ மற்றவர்கள் — ஆக மூவர் என்கிற திப்பாட்டில். நெறியென்று ஸம்ஸாரத்தைத் தப்புவிக்குமுபாயத்தைச் சொல்லுகிறது. இச்சொல்லால் த்வயமென்னும் மந்தரரத்னத்தை இங்கு விவக்ஷிக்கலாம். 'அறிந்தவர்பால்சென்று செறிதல் செயாத தீமனத்தர்' என்று ஆசார்ய விமுகர்களைச் சொல்லுகிறது. ஆக இவர்கள் திருமடந்தை கோனுலகத்து ஏறார், இடரழுந்துவார். * अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति । नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥—அஜ்ஞச்ச அச்ரத்ததாநச்ச ஸம்சயாத்மா விநச்யதி, நாயம் லோகோஸதி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மந:* என்கிற பகவத்கீதாவசனம இப்பாட்டுக்கு ஸம்வாதமாகும். .... 27

சரணு கதிமற்றோர் சாதனத்தைப் பற்றில்
அரணுகா தஞ்சனைதன் சேயை—முரணழியக்
கட்டியது வேறோர் கயிறு கோண் டார்ப்பதன்முன்
விட்ட படைபோல் விடும். 28

| | |
|---|---|
| சரணுகதி | (மஹாவிச்வாசரூபமான) ப்ரபத்தியானது, |
| மற்று ஓர் சாதனத்தை பற்றில் | உபாயாந்தரஙகளிலொன்றைப் பற்றுமளவில் |
| அரண் ஆகாது | தான் ரக்ஷகமாகாது ; (நழுவிப் போம் ;) |
| அஞ்சனை தன் சேயை | ஆஞ்சநேயரை |
| முரண் அழிய கட்டியது படை | அவருடைய வலிமை குன்றும் படி கட்டினதான ப்ரஹ்மாஸ்த்ரமானது |
| வேறு ஓர் கயிறு கொண்டு | வேறோர் சணற்கயிற்றைக் கொண்டுவந்து |
| ஆர்ப்பதன் முன் | கட்டமுயலும்போது |
| விட்ட போல் விடும் | நழுவினது போல் நழுவும். |

* * *—சரணுகதிக்கு மற்றோருபாயத்தின் ஸங்கத்தை ஸஹியாமையாகிற ஒரு பெருமையுண்டு ; அதுதன்னைச் சொல்லுகிற திப்பாட்டில். "சணல்கண்ட ப்ரஹ்மாஸ்த்ரம்போலே நழுவும்" என்று சொல்லிப் போருவதுண்டிறே. அது சொல்லுகிறது. * प्रपत्तेः क्वचिदप्येवं परापेक्षा न विद्यते । साहि सर्वत्र सर्वेषां सर्वकामफलप्रदा । सकृदुच्चारिता येन तस्य संसारनाशिनी । राक्षसानामविस्रम्भादाञ्जनेयस्य बन्धने । यथा विगलिता सद्यस्त्वमोघाऽप्यस्त्रबन्धना । तथा पुंसामविस्रम्भात् प्रपत्तिः प्रच्युता भवेत् । तस्माद्विस्रम्भयुक्तानां मुक्तिं दास्यति साऽचिरात् ॥—ப்ரபத்தேஃ க்வசிதப்யேவம் பராபேக்ஷா ந வித்யதே. ஸா ஹி ஸர்வத்ர ஸர்வேஷாம ஸர்வகாம பலப்ரதா. ஸக்ருதுச்சாரிதா யேந தஸ்ய ஸம்ஸாரநாசிநீ. ராக்ஷஸாநாம் அவிஸ்ரம்பாத் ஆஞ்ஜநேயஸ்ய பந்தநே. யதா விகலிதா ஸத்யஸ் த்வமோகாபி அஸ்த்ரபந்தநா. ததா பும்ஸாம் அவிஸ்ரம்பாத் ப்ரபத்திஃ ப்ரச்யுதா பவேத். தஸ்மாத் விஸ்ரம்ப யுக்தாநாம் முக்திம தாஸ்யதி ஸா அசிராத்.* என்கிற பகவச்சாஸ்த்ரவசன ப்ரதிச்சந்தமாக அவதரித்ததாயிறறு இப்பாட்டு. ... ... ... 28

மந்திரமு மீந்த குருவுமம் மந்திரத்தால்
சிந்தனைசெய் கின்ற திருமாலும்—நந்தலிலா
தேன்று மருள் புரிவர் யாவ ரவரிடரை
வென்று கடிதடைவர் வீடு. 29

| | |
|---|---|
| மந்திரமும் | திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமும் |
| ஈந்த குருவும் | அம்மந்திரத்தையுபதேசித்த ஆசாரியனும் |
| அ மந்திரத்தால் சிந்தனை செய்கின்ற திருமாலும் | அத்திருமந்திரத்தினுல் சிந்திக்கப்படுகின்ற திருமாலும் |
| நந்தல் இலாது என்றும் அருள் புரிவார் யாவர் அவர் | இடைவீடின்றி எப்போதும் அருள்புரியும்படி யிருப்பார் யாவரோ, அன்னவர்கள் |
| இடரை வென்று | ஸாம்ஸாரிக துக்கங்களைத் தொலைத்து |
| கடிது வீடு அடைவர் | விரைவில் மோக்ஷமடைவார்கள். |

* * *—मन्त्रे तद्देवतायां च तथा मन्त्रप्रदे गुरौ । त्रिषु भक्तिस्सदा कार्या सा हि प्रथमसाधनम् ॥—மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததா மந்த்ரப்ரதே குரௌ, த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா ஸா ஹி ப்ரதமஸாதநம்.* என்கிற ப்ரமாணவசனத்தில்—மந்த்ரத்தினிடத்திலும் மந்த்ரப்ரதிபாத்யமான தேவதையினிடத்திலும் மந்த்ரத்தை உபகரித்தருளின ஆசார்யன்பக்கலிலும் ப்ரேமமுண்டாகப் பெற்றவர்களுக்கே பரமபுருஷார்த்த ஸித்தியுண்டென்று சொல்லிற்று. அவ்வர்த்தமேயாயிற்று இப்பாசுரத்திலும் பொலிகின்றது.

முமுக்ஷுப்படியில் "மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ர ப்ரதனை ஆசார்யன்பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டானல் கார்யகரமாவது" என்றருளிச்செய்த சூர்ணையும் இங்கே அநுஸந்தேயம். இப்பாட்டின் மூன்ருமடியில் "அருள்புரிவர்" என்றது அருள்புரியப் பெற்றவர் என்றபடி ; 'மழை பெய்த இடம்' என்ருற்போலுமிது. ... ... ... ... ... 29

மாடு மனையுங் கிளையு மறைமுனிவர்
தேடு முயர்வீடும் செந்நெறியும்—பீடுடைய
எட்டெழுத்தும் தந்தவனே யென்றிரா தாருறவை
விட்டிடுகை கண்டீர் விதி. 30

| | |
|---|---|
| மாடும் மனையும் கிளையும் | பசுக்களும் க்ருஹமும் பந்துக் களும் |
| மறை முனிவர் தேடும் உயர் வீடும் | வைதிகர்களான முனிவர்கள் விரும்பித்தேடுகின்ற உயர்ந்த மோக்ஷமும் |
| செம் நெறியும் | அந்த மோக்ஷத்தையடைவிக் கும் செவ்விய மார்க்கமும் ஆகிய இவையெல்லாம் |
| பீடு உடைய எட் டெழுத்தும் தந்தவனே | பெருமைமிக்க திருமந்திரத்தை யுபதேசித்த ஆசார்யனே யாவன் |
| என்று இராதார் | என்று உறுதிகொள்ளாதா ருடைய |
| உறவை விட்டி டுகைவிதிகண்டீர் | உறவை விட்டொழிப்பதுதான் நூற்கொள்கையாகும். |

* * *—ऐहिकामुष्मिकं सर्वं गुरुरष्टाक्षरप्रदः। इत्येवं ये न मन्यन्ते त्यक्तव्यास्ते मनीषिभिः॥ —ஐஹிகாமுஷ்மிகம் ஸர்வம் குருரஷ்டாக்ஷரப்ரதః, இத்யேவம் யே ந மந்யந்தே த்யக்தவ்யாஸ் தே மநீஷிபிః.* என்கிற ப்ரமாணவசனத்திற்கு மொழிபெயர்ப்பாகுமிப் பாசுரம். தமக்கு அபேக்ஷிதங்களான ஐஹிகாமுஷ்மிக ஸகலவஸ்துக்களும் திருமந்த்ரத்தை உபதேசித்தருளின ஆசார்யனேயென்று அத்யவஸாயங் கொள்ளாதவர்களோடு உறவை விட்டிடவேண்டியதேயென்கிறது. மாடும் என்றது—செல்வமும் என்றபடி; "மாடு பொன் பக்கம் செல்வம்" என்பது நிகண்டு. க்ஷீரம் முதலியவற்றைத் தருகின்ற பசுக்களுமென்னவுமாம். செந்நெறியும் என்றது—மோக்ஷஸாதநங்களாமவையும் என்றபடி. அர்ச்சிராதிமார்க்கமென்னவுமாம். எட்டெழுத்துககுப் பீடுடைமையாவது—"இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்" (முமுக்ஷுப்படி) இத்யாதி சூர்ணைகளினல் தெரிவிக்கப்பட்ட பெருமையுடைமை. "உறவை விட்டிடுகை கண்டீர்விதி" என்றது—அன்னவர்கள் ஹேயர்கள் என்பதைக் காட்டி நிற்கும். ... ... ... ... ... 30

வேத மோருநான்கி னுட்போதிந்த மெய்ப்பொருளும்
கோதில் மனுமுதல்நூல் கூறுவதும்—த்தில்
சரணு கதிதந்த தன்னிறைவன் தானே
அரணுகு மேன்னு மது. 31

| | |
|---|---|
| ஒரு நான்கு வேதம் உள் பொதிந்த மெய் பொருள் | நான்கு வேதங்களினுள்ளும் பொதிந்த பரமார்த்தமாயும் |
| கோது இல் மனு முதல் நூல் கூறுவதும் | கோதற்ற மநுஸ்மிருதி முதலான நூல்கள் தெரிவிக்கும் பொருளாயும் (இருப்பது எதுவென்ருல் ;) |
| தீது இல் சரணு கதி தந்த தன் இறைவன் தானே அரண் ஆகும் என்னும் அது | தீதற்ற சரணுகதி ப்ரதிபாதகமான த்வயமந்த்ரத்தைத் தனக்கு உபகரித்த ஆசார்யன் திருவடிகளே தஞ்சமென்னும் விஷயமாம். |

* * *—வேதங்களெல்லாவற்றினுள்ளும், அவற்றுக்கு உபப்ரும்ஹணங்களான ஸகல சாஸ்த்ரங்களினுள்ளும் பொலியும் பொருள் ஒன்றே; அதாவது ஆசாரியனே

பரதைவமென்பது, என்கிற திப்பாட்டு. * गुरुरेव परं ब्रह्म गुरुरेव परा गतिः । गुरुरेव परा विद्या गुरुरेव परं धनम् ॥ गुरुरेव परः कामो गुरुरेव परायणम् । यस्मात्तदुपदेष्टाऽसौ तस्माद्गुरुतरो गुरुः । अर्चनीयश्च वन्द्यश्च कीर्तनीयश्च सर्वदा । ध्यायेज्जपेन्नमेद्भक्त्या भजेदभ्यर्चयेन्मुदा । उपायोपेयभावेन तमेव शरणं व्रजेत् । इति सर्वेषु वेदेषु सर्वशास्त्रेषु सम्मतम् । एवं द्वयोपदेष्टारं भावयेद्बुद्धिमान् धिया ॥—குருரேவ பரம் ப்ரஹ்ம குருரேவ பரா கதிஃ, குருரேவ பரா வித்யா குருரேவ பரம் தநம். குருரேவ பரஃ காமோ குருரேவ பராயணம். யஸ்மாத் ததுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குருஃ. அர்ச்சநீயச் ச வந்த்யச் ச கீர்த்தநீயச் ச ஸர்வதா, த்யாயேஜ் ஜபேத் நமேத் பக்த்யா பஜேதப்யர்ச்சயேந்முதா. உபாயோபேயபாவேந தமேவ சரணம் வ்ரஜேத். இதி ஸர்வேஷு வேதேஷு ஸர்வசாஸ்த்ரேஷு ஸம்மதம். ஏவம் த்வயோபதேஷ்டாரம் பாவயேத் புத்திமாந் தியா.* என்று பகவச்சாஸ்த்ரத்திலே விரிவாகச் சொல்லிற்று.

சரணகதிதந்த தன்னிறைவன் என்றது த்வயத்தை உபதேசம் செய்தருளின ஆசார்யன் என்றபடி. த்வயமென்கிற மந்த்ரரத்நம் சரணாகதியைச் சொல்லுமதாகையாலே அதற்கு சரணாகதியென்றே பெயராயிற்று. சரணாகதிக்குத் தீதின்மையாவது—ஸ்வரூபாநுரூபமாயிருக்கை. ... ... ... ... ... 31

மானிடவ ரென்றுங் குருவை மலர்மகள்கோன்
தானுகந்த கோல முலோக மென்றும்—ஈனமதா
வெண்ணுகின்ற நீச ரிருவருமே யெக்காலும்
நண்ணிடுவர் கீழா நரகு. 32

| | | | |
|---|---|---|---|
| குருவை மானிடவன் என்றும் | ஆசார்யனை மநுஷ்யனென்றும் | ஈனம் அது ஆ எண்ணுகின்ற | ஹீனமாக நினைக்கின்ற |
| மலர் மகள் கோன் தான் உகந்த கோலம் உலோகம் என்றும் | திருமால்தான் உகந்து பரிக்ரஹித்த திவ்யமங்கள விக்ரஹத்தை லோஹமென்றும் | நீசர் இருவருமே | இவ்விருவகைப்பட்ட நீசர்களே |
| | | எக்காலும் கீழ் ஆம் நரகு நண்ணிடுவர் | எக்காலும் அதோ கதியிற் சேர்ந்திடுவர்கள். |

* * *— शाक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुम् । मग्नानुद्धरते लोकान् कारुण्याच्छास्त्रपाणिना ॥ ஸாக்ஷாந் நாராயணோ தேவஃ க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா * என்றும், * பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து* என்றும் சொல்லுகிறபடியே நம்மைப் பிறவிக்கடலில் நின்று எடுக்கைக்காக எம்பெருமான்தானே மநுஷ்யரூபங்கொண்டு வந்திருக்கிறானென்று ப்ரதிபத்தி பண்ணாதே மேலெழுந்த ஆகாரத்தையே பார்த்து ஆசார்யனை மநுஷ்யனென்றே நினைப்பவனும், *உமருகந்துகந்த வுருவம் நின்னுருவமாகி* என்றும், *தமருகந்ததெவ்வுருவ மவ்வுருவந்தானே* என்றும் சொல்லுகிறபடியே அடியார்களுகந்த கோலத்தை எம்பெருமான் தானுமுகந்து பரிக்ரஹிக்கிற அர்ச்சாரூபத்தை அப்ராக்ருத விக்ரஹமாக ப்ரதிபத்தி பண்ணாதே லோஹங்களிலே இதுவுமொரு லோஹமன்றோவென்று நினைப்பவனுமான இவ்விருவரும நரகத்தில் நீடூழிகாலம் விழுந்து துவளுமவர்களென்கிற திப்பாட்டு. * विष्णोरर्चावतारेषु लोहभावं करोति यः । यो गुरौ मानुषं भावमुभौ नरकपातिनौ ॥—விஷ்ணோரர்ச்சாவதாரேஷு லோஹபாவம் கரோதி யஃ, யோ குரௌ மாநுஷம் பாவம் உபௌ நரகபாதிநௌ* என்கிற ப்ரமாணவசனத்திலுள்ள பொருளாயிற்று இது. *अर्चावतारोपादानवैष्णवोत्पत्तिचिन्तनम् । मातृयोनिपरीक्षायास्तुल्यमाहुर्मनीषिणः ॥ —அர்ச்சாவதாரோபாதாந வைஷ்ண வோத்பத்தி சிந்தநம், மாத்ரு யோநிபரீக்ஷாயாஸ் துல்யமாஹுர் மநீஷிணஃ* என்றதுங் காண்க. ... ... ... 32

எட்ட விருந்த குருவை யிறை யன்றென்று
விட்டோர் பரனை விருப் புறுதல்—பொட்டெனத்தன்
கண் செம் பளித்திருந்து கைத்துருத்தி நீர் தூவி
அம்புதத்தைப் பார்த்திருப்பா னற்று 33

| | | | |
|---|---|---|---|
| எட்ட இருந்த குருவை | ஸமீபத்திலுள்ள ஆசாரியனை | தன் கண் செம் பளித்திருந்து | தன் கண்களை மூடிக் கொண்டிருந்து |
| இறை அன்று என்று விட்டு | ஸ்வாமியல்லனென்று தவிர்த்து | கை துருத்தி நீர் தூவி | கைப்பட்ட துருத்தியிலுள்ள தண்ணீரைக் கீழே கொட்டி விட்டு |
| ஓர் பரனை விருப் புறுதல் | வேறு பரமபுருஷனை ப்ராபிக்க விரும்புவதானது | அம்புதத்தை பார்த்திருப்பானற்று | ஆகாயத்தில் மேகத்தை எதிர்பார்த்திருப்பவன் செயல் போன்றதாகும். |
| பொட்டென | சடக்கென | | |

* * *—ஸ்ரீவசநபூஷணத்தில் (447.) "ஆசார்யாபிமாநமே உத்தாரகம்" என்றதற்குமேல்—"கைப்பட்ட பொருளைக் கைவிட்டுப் புதைத்த பொருளைக் கணிசிக்கக் கடவனல்லன். விடாய் பிறந்தபோது கரஸ்தமான உதகத்தையுபேக்ஷித்து ஜீமூத ஜலத்தையும் ஸாகரஸலிலத்தையும் வாபீகூபபயஸ்ஸுக்களையும வாஞ்சிக்கக்கடவனல்லன்" என்றருளிச் செய்த சூர்ணைகள் இங்கே அநுஸந்தேயம். அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிவை:—"பிபாஸை விஞ்சின போது சடக்கெனப் பானம் பண்ணலாம்படி பாத்ரகதமாய்க்கொண்டு தன்கையிலிருக்கிற ஜலத்தை ஸுலபதையே ஹேதுவாக அநாதரித்துத் தரையிலே உகுத்து, ஆகாசஸ்தமாய்க்கொண்டு எட்டாதபடியாயும், பூமிஸ்தமாயிருக்க தூரஸ்தமாயும, ஆஸந்நமாயிருக்கச்செய்தே பெருகுங்காலமொழிய வற்றின காலமின்றிக்கேயும், எப்போதுமுண்டானாலும் அவ்வளவுஞ் சென்று உபஜீவிக்க வேண்டியும், இருந்தவிடந்தன்னிலேயுண்டாயும் கநித்ராதிகள் (खनित्रादि) கொண்டு கல்லிப் பெற வேண்டியுமிருக்கும் ஜீமூதாதிகளின் ஜலத்தை யாசைப்படுமவனைப்போலே ரக்ஷகாபேக்ஷை பிறந்த தசையில் அப்போதே தனக்கு உதவும்படி கைபுகுந்திருக்கிற ஆசார்யவிஷயத்தை ஸௌலப்யமேபற்றாசாக வுபேக்ஷித்து, பரமாகாசவர்த்தியாய் துஷ்ப்ராபமாயிருக்கிற பரத்வத்தையும், பூமியிலேயாயும் க்ஷீராப்தியளவுஞ் செல்லவல்லவர்களுக்கன்றி யுதவாத வ்யூஹத்தையும, ஆஸந்நமாக வந்தும் தாத்காலிகர்க்கொழிய பாச்சாத்யர்க்கு உதவாத விபவத்தையும் நித்யஸந்நிதியுண்டாயும் ஸம்பாஷணாதிகளால் இவனோடு கைகலந்திராத அர்ச்சாவதாரத்தையும், இருந்த விடந்தன்னிலே உண்டாயிருந்ததாகிலும் யமநியமாதி க்ரமேண யத்நித்து தர்சிக்கவேண்டும் அந்தர்யாமித்வத்தையும் ஆசைப்படக்கடவனல்லனென்கை. * चक्षुर्गम्यं गुरुं त्यक्त्वा शास्त्रगम्यं तु यः स्मरेत् । हस्तस्थमुदकं त्यक्त्वा घनस्थं सोऽभिवाञ्छति ॥—சக்ஷுர்கம்யம் குரும் த்யக்த்வா சாஸ்த்ரகம்யம் து யஃ ஸ்மரேத், ஹஸ்தஸ்தமுதகம் த்யக்த்வா கநஸ்தம் ஸோபிவாஞ்சதி.* என்றும், *எட்டவிருந்த குருவை யிறையன்றென்று விட்டு* என்று தொடங்கி 'அம்புதத்தைப் பார்த்திருப்பானற்று* என்றும் சொல்லக்கடவதிறே." என்று.

இவற்றால் இப்பாட்டும் வியாக்கியானிக்கப்பட்டதாயிற்று. ... ... 33

பற்று குருவைப் பரனன் றென விகழ்ந்து
மற்றோர் பரனை வழிபடுதல்—எற்றேதன்
கைப்பொருள்விட் டாரேனும் காசினியில் தாம்புதைத்த
அப்பொருள்தே டித்திரிவா னற்று. 34

| | | | |
|---|---|---|---|
| பற்று குருவை | தன்னைப்பற்றின (அல்லது, தன்னாலே பற்றப்பட்ட) ஆசாரியனை | ஆரேனும் தாம் காகினியில் புதைத்த அப் பொருள் | வேறு யாராவது பூமிக்குள் புதைத்து வைத்த நிதியை |
| பரன் அன்று என இகழ்ந்து | ரக்ஷகனல்லனென்று திரஸ் கரித்து | | |
| மற்று ஓர் பரனை வழிபடுதல் | வேறொரு பரமபுருஷனை அநு வர்த்திப்பதானது, | தேடி திரிவா னற்று | தேடித்திரியுமவனுடைய செயல் போன்றது ; |
| தன் கை பொருள் விட்டு | தன் கைப்பட்ட பொருளை விட்டு | எற்றே | என்னே அவிவேகம் ! |

* * *—கீழ்ப்பாட்டிலருளிச்செய்த அர்த்தத்தையே ப்ரகாராந்தரத்தாலுமருளிச் செய்கிற திப்பாட்டு. * सुलभं स्वगुरुं त्यक्त्वा दुर्लभं य उपासते । लब्धं त्यक्त्वा धनं मूढो गुप्तमन्वेषते क्षितौ ॥—ஸுலபம் ஸ்வகுரும் த்யக்த்வா துர்லபம் ய உபாஸதே, லப்தம் த்யக்த்வா தநம் மூடோ குப்தமந்வேஷதே க்ஷிதௌ* என்கிற ப்ரமாணவசனத்தை யடியொற்றி யவ தரித்ததாயிற்று இப்பாட்டு. அதிஸுலபனாய்த் தனக்குக் கைபுகுந்திருக்குமாசார்யனை அவரத்வபுத்தியாலே உபேக்ஷித்து, அதிதுர்லபனாய்ப் பெருமுயற்சிகள் செய்து காண வேண்டும்படி யிருக்குமீச்வரனை அநுவர்த்திப்பதானது—வேண்டினபோது விநியோகங் கொள்ளலாம்படி கைப்பட்டிருக்கும் கிழிச்சீரையை விட்டு, பூமிக்குள்ளே புதைத்து வைத்திருக்கும் பொருளைத் தேடித்திரிவதொக்கும். ... ... ... 34

என்று மனைத்துயிர்க்கு மீரஞ்செய் நாரணனும்
அன்றும் தன்னாரியன்பா லன்பொழியில்—நின்ற
புனல்பிரிந்த பங்கயத்தைப் பொங்குசுடர் வெய்யோன்
அனலுமிழ்ந்து தானுலர்த்தி யற்று. 35

| | | (இஃது எங்ஙனே யென்னில் ;) | |
|---|---|---|---|
| அனைத்து உயிர்க்கும் | ஸகலாத்மாக்களுக்கும் | நின்ற புனல் பிரிந்த பங்கயத்தை | தனக்குத் தாரகமாய் நிற்கின்ற தண்ணீரை விட்டுப் பிரிந்த தாமரையை |
| என்றும் ஈரம் செய் நாரணனும் | எந்நாளும் அருள் புரிகின்ற நாராயணனுங்கூட, | பொங்கு சுடர் வெய்யோன் தான் | தேஜஸ்வியான ஸூர்யன் தானே |
| தன் ஆரியன் பால் அன்பு ஒழியில் அன்றும் | (சிஷ்யன்) ஸ்வாசார்யனள விலே அன்பு தவிர்ந்தவாறே நிக்ரஹம் செய்திடுவன் ; | அனல் உமிழ்ந்து உலர்த்தியற்று | வெய்யிலைப்பரப்பி உலர்த்தி விடுமா போலேயாம். |

* * *—नारायणोऽपि विकृतिं याति गुरोः प्रच्युतस्य दुर्बुद्धेः । कमलं जलादपेतं शोषयति रविर्न तोषयति ॥—நாராயணோபி விக்ருதிம் யாதி குரோ: ப்ரச்யுதஸ்ய துர்ப்புத்தே:, கமலம் ஜலாதபேதம் சோஷயதி ரவிர் ந தோஷயதி.* என்கிற பிரமாணவசனத்தை யடியொற்றிப்பிறந்த திப்பாட்டு. ஆசார்யஸம்பந்தம கிடந்தாலும் ஈச்வரனேயன்றோ ஸ்வரூபவிகாஸகன் ; ஆசார்யஸம்பந்தம் குலைந்தாலும் ஆத்மகுணங்களையுடையவனுக்கு ஈச்வரன் ஸ்வரூபவிகாஸத்தைப் பண்ணானோவென்னில் ; பண்ணானென்பது மாத்திர மன்று ; ஆசார்யஸம்பந்தம் குலைந்தால் ஸ்வரூபத்தை வாடவும் பண்ணுவன். ஜலத்திலே பிறந்து ஜலத்தையே தாரகமாகவுடைய தாமரையை ஸூர்யன் விகாஸப்படுத்துகிறவன்தான். எப்போது ? அது ஜலத்தை விட்டுப் பிரியாதிருக்குமளவும். அது தானே ஜலத்தை விட்டுப் பிரிந்ததாகில் ஸூர்யன் அதை விகாஸப்படுத்துவதில்லை யென்பது மாத்திரமன்றே ; சோஷிக்கச் செய்வதையும் காணாநின்றோமே. அது போலவாயிற்று இதுவும். ஸ்ரீவசநபூஷணத்தில்—(439) "தாமரையை அலர்த்தக் கடவ ஆதித்யன்தானே நீரைப்பிரிந்தால் அத்தையுலர்த்துமாபோலே, ஸ்வரூபவிகா

ஸத்தைப் பண்ணுமீச்வரன்தானே ஆசார்யஸம்பந்தம் குலைந்தால் அத்தை வாடப் பண்ணும்" என்ற சூர்ணை இங்கே அநுஸந்தேயம். ... ... 35

வில்லார் மணிகோழிக்கும் வேங்கடப்போற் குன்றமுதல்
செல்லார் பொழில்சூழ் திருப்பதிகள்—எல்லாம்
மருளா மிருளோட மத்தகத்துத் தன்தாள்
அருளாலே வைத்த வவர். 36

| | | | |
|---|---|---|---|
| வில் ஆர் மணி கொழிக்கும் | ஒளி மிகுந்த ரத்னங்கள் திரளுமிடமான | மருள் ஆம் இருள் ஓட | அஜ்ஞாநாந்தகாரம் கெடும்படியாக |
| வேங்கடம் பொன் குன்று முதல் | திருவேங்கட மலை முதலாகவுள்ள, | மத்தகத்து | தலையின்மீது |
| செல் ஆர் பொழில் சூழ் திருப்பதிகள் எல்லாம் | காள மேகம் படிந்த சோலைகள் சூழ்ந்த திவ்ய தேசங்களெல்லாம், | தன் தாள் அருளாலே வைத்த அவர் | தன் திருவடிகளை வைத்தருளின ஆசார்யரேயாவர். |

* * *—येनैव गुरुणा यस्य न्यासविद्या प्रदीयते। तस्य वैकुण्ठदुग्धाब्धिद्वारकास्सर्व एव सः॥—யேநைவ குருணா யஸ்ய ந்யாஸவித்யா ப்ரதீயதே, தஸ்ய வைகுண்ட துக்தாப்தித்வாரகாஸ் ஸர்வ ஏவ ஸஃ* என்கிற ப்ரமாணவசநத்தை மொழிபெயர்த்ததாமிப்பாட்டு. ஸச்சிஷ்யனுய் ஸதாசார்யப்ரேம முடையனுயிருக்குமவனுக்கு ஸகல திவ்யதேசங்களும் தன்னுசார்யனேயாவன் என்கிறது. மேலெடுத்த ச்லோகத்தில் வைகுண்டத்தையும் க்ஷீராப்தியையும் த்வாரகையையும் சொல்லிற்று; பாட்டில் திருமலை முதலான திவ்ய தேசங்களைச் சொல்லிற்று. இவ்வளவே வாசி. செல்—மேகம். மேகங்கள் வந்து படியும்படி ஓங்கியிருக்கும் சோலைகள் சூழ்ந்த திருப்பதிகளெல்லா மென்றபடி. ... 36

பொருளு முயிரு முடம்பும் புகலும்
தெருளுங் குணமுஞ் செயலும்—அருள் புரிந்த
தன்னு ரியன்பொருட்டாச் சங்கற்பஞ் செய்பவர்நெஞ்
சென்நாளு மாலுக் கிடம். 37

| | | | |
|---|---|---|---|
| பொருளும் உயிரும் உடம்பும் புகலும் | செல்வமும் பிராணனும் உடலும் வீடும் | அருள் புரிந்த தன் ஆரியன் பொருட்டு ஆ | தன்பால் கிருபை பண்ணின ஆசாரியனுக்காக வென்று |
| தெருளும் குணமும் செயலும் | ஞானமும் சமதமாதி குணங்களும் செய்கைகளும் ஆகிய இவையெல்லாமும் | சங்கற்பம் செய்பவர் நெஞ்சு | ஸங்கல்பிக்குமவர்களான ஸச்சிஷ்யர்களின் நெஞ்சானது |
| | | மாலுக்கு எந்நாளும் இடம் | திருமாலுக்கு நித்யவாஸஸ்தானமாகும். |

* * *—शरीरं वसु विज्ञानं वासः कर्म गुणानसून्। गुर्वर्थं धारयेद्यस्तु स शिष्यो नेतरः स्मृतः॥ गुर्वर्थं स्वात्मनः पुंसः कृतज्ञस्य महात्मनः। सुप्रसन्नस्सदा विष्णुः हृदि तस्य विराजते॥—சரீரம் வஸு விஜ்ஞாநம் வாஸஃ கர்ம குணாநஸூந், குர்வர்த்தம் தாரயேத் யஸ் து ஸ சிஷ்யோ நேதரஸ் ஸ்ம்ருதஃ. குர்வர்த்தம் ஸ்வாத்மநஃ பும்ஸஃ க்ருதஜ்ஞஸ்ய மஹாத்மநஃ, ஸுப்ரஸந்நஸ் ஸதா விஷ்ணுர் ஹ்ருதி தஸ்ய விராஜதே.* என்னும் ப்ரமாணவசனங்களைப் பின்பற்றி யருளிச்செய்த தாமிப்பாட்டு. அர்த்தம் பிராணன் சரீரம் முதலான எல்லாவற்றையும் ஆசார்யசேஷமாக அநுஸந்தித்திருக்குமவர்கள் நெஞ்சானது ஸர்வேச்வரனுக்கு ஸர்வகாலமும் வாஸஸ்தானமாயிருக்கு மென்றதாயிற்று. ஆசார்யபக்தர்களே எம்பெருமானுடைய திருவருளுக்கு இலக்காவரென்பது கருத்து. ... 37

தேனார் கமலத் திருமா மகள்கொழுநன்
தானே குருவாகித் தன்னருளால்—மானிடர்க்காய்
இந்நிலத்தே தோன்றுதலால் யார்க்குமவன் தாளிணையை
உன்னுவதே சால வுறும். 38

| | | | |
|---|---|---|---|
| தேன் ஆர் கமலம் திரு மாமகள் கொழுநன் தானே | தேன்மிக்க தாமரைப்பூவில் தோன்றிய பிராட்டிக்கு வல்லபனான எம்பெருமான் தானே | இ நிலத்தே தோன்றுதலால் | இந்நிலவுலகத்தில் அவதரிப்பதனாலே |
| தன் அருளால் | தனது க்ருபையினாலே | யார்க்கும் | எல்லா வுயிர்க்கும் |
| குரு ஆகி | (மநுஷ்யரூபியான) ஆசார்யனாய் | அவன் தாள் இணையை | அவ்வாசாரியனுடைய உபய பாதங்களை |
| மானிடர்க்கு ஆய் | அஸ்மதாதிகளுக்காக | உன்னுவதே சால உறும் | அநுஸந்திப்பதே மிகவும் உற்றதாகும். |

* * *—ஜயாக்க்யஸம்ஹிதையிலே சாண்டில்யன் சொன்னவசனம் *साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुम्। मग्नानुद्धरते लोकान् कारुण्याच्छास्त्रपाणिना ॥ तस्माद्भक्तिर्गुरौ कार्या संसारभयभीरुणा ॥—ஸாக்ஷாந்நாராயணோ தேவঃ க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத சாஸ்த்ரபாணிநா. தஸ்மாத் பக்திர் குரௌ கார்யா ஸம்ஸார பயபீருணா.* என்பது. அதுவே இப்பாசுரத்திற்கு ஸம்வாதப்ரமாணமாம். கீழே பல பாசுரங்களினால் விரிவாக அருளிச்செய்யப்பட்ட ஆசார்யப்ரபாவம் தகுமென்கைக்காக ஆசார்யன் ஸாக்ஷாத் நாராயணனுடைய அவதாரவிசேஷமேயென்று சாஸ்த்ரம் முறையிட்டிருப்பதை எடுத்துரைத்தாராயிற்று. *பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து* என்று பெரியாழ்வாருமருளிச் செய்தார். ... ... 38

அலகை முலைசுவைத்தாற் கன்பரடிக் கன்பர்
திலத மெனத்திரிவார் தம்மை—உலகர்பழி
தூற்றில் துதியாதும் தூற்றா தவரிவரைப்
போற்றிலது புன்மையே யாம். 39

| | | | |
|---|---|---|---|
| அலகை முலை சுவைத்தாற்கு | பேய்ச்சி முலையுண்ட பெருமானுக்கு | துதி ஆகும் | (அதுவே அவர்கட்குத்) தோத்திரமாய்த் தலைக்கட்டும் ; |
| அன்பர் அடிக்கு அன்பர் | அன்பு பூண்டிருப்பாருடைய திருவடிகளிலே அன்பு பூண்டிருக்குமவர்களாய்க்கொண்டு | அவர் தூற்றாது | அந்த லௌகிகர்கள் அப்படி தூஷிக்காமல் |
| திலதம் என திரிவார் தம்மை | உலகுக்குத் திலகபூதர்களென்னும்படியாக இந்நிலத்திலுலாவும் மஹாத்மாக்களை | இவரை போற்றில் | இந்த மஹாத்மாக்களைப் பூஷித்தால் |
| உலகர் பழி தூற்றில் | லௌகிகர்களான பாமரர்கள் தூஷித்தால் | அது புன்மையே ஆம் | அந்த பூஷணம் தூஷணமேயாம். |

* * *—न्यासविद्यैकनिष्ठानां वैष्णवानां महात्मनाम् । प्राकृताभिष्टुतिर्निन्दा निन्दा स्तुतिरिति स्मृता ॥—ந்யாஸவித்யைக நிஷ்டாநாம் வைஷ்ணவாநாம் மஹாத்மநாம், ப்ராக்ருதாபிஷ்டுதிர் நிந்தா நிந்தா ஸ்துதிரிதி ஸ்ம்ருதா.* என்கிற ப்ரமாணவசனமே இப்பாட்டாக வடிவெடுத்ததாயிற்று. பகவத்பக்த பக்தர்களான பாகவதோத்தமர்களின் ஏற்றமறிந்து அவர்களைக் கொண்டாடக் கடமைப்பட்டவர்கள் *அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே* என்னும்படியிருக்கும் மஹாஜ்ஞாநநிதிகளான மஹநீயர்களேயன்றி மற்றையார்களல்லர். அவிவேகிகளான லௌகிகர்கள் பாகவதோத்தமர்களைப் பழிப்பதோடு புகழ்வதோடு ஒரு வாசியில்லை. *மனக்குற்ற மாந்தர் பழிக்கில் புகழ்* என்கிற கணக்கிலே அவர்களது பழிப்பு புகழ்ச்சியாகவே தலைக்கட்டும். பழிக்காமல் புகழ்வதற்கும் அவர்கள் அதிகாரிகளல்லர் ; அவர்கள் செய்யும் புகழ்ச்சி உத்தமர்களுக்குப் பழிப்பாகவே தலைக்கட்டும என்றதாயிற்று. அலகை—பேய்மகள் ; பூதனையைச் சொல்லுகிறது. *பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலையூடு உயிரை வற்ற வாங்கியுண்ட வரலாறு காண்க, ... ... ... ... 39

அல்லி மலர்ப்பாவைக் கன்ப ரடிக்கன்பர்
சொல்லு மவிடு சுருதியாம்—நல்ல
படியாம் மனுநூற் கவர்சரிதை பார்வை
செடியார் வினைத் தொகைக்குத் தீ. 40

| | | | |
|---|---|---|---|
| அல்லி மலர் பாவைக்கு அன்பர் | லக்ஷ்மீபதியான ஸர்வேச்வரனுடைய | மனு நூற்கு | (தருமசாஸ்த்ரங்களிற் சிறந்த) மநுஸ்மிருதிக்கு |
| அடிக்கு அன்பர் | திருவடிகளிலே அன்பு பூண்ட பக்தர்கள் | நல்ல படி ஆம் | சிறந்த உபமானமாகும்; |
| சொல்லும் அவிடு | விநோதமாகச் சொல்லும் சிறு வார்த்தையும் | பார்வை | (அவர்களது) கடைக்கண்ணோக் சமானது |
| சுருதி ஆம் | வேதத்தோடொக்கும்; | செடி ஆர் வினை தொகைக்கு தீ | தூறு மண்டின தீவினைத்திரளுக்குக் காட்டுத் தீயாம். |
| அவர் சரிதை | அன்னவர்களது அனுட்டானமானது | | |

* * *—பரமபாகவதோத்தமர்களின் வாய்ச்சொல்லுக்கு மேற்பட்ட வேதமில்லையென்றும், அவர்களுடைய நடத்தைகளுக்கு மேற்பட்ட தர்மசாஸ்த்ரமில்லையென்றும்; அவர்களது கடாக்ஷவீக்ஷணத்திற்கு மேற்பட்ட பாவனம் வேறொன்றில்லையென்றும் அருளிச்செய்து இப்பிரபந்தத்தைத் தலைக்கட்டியருளுகிறார்.

* वेदशास्त्ररथारूढा: ज्ञानखड्गधरा द्विजा:। क्रीडार्थमपि यद् ब्रूयुस्स धर्म: परमो मत:॥—வேதசாஸ்த்ரரதாரூடா: ஜ்ஞாநகட்கதரா த்விஜா:, க்ரீடார்த்தமபி யத் ப்ரூயுஸ் ஸ தர்ம: பரமோ மத: *என்கிற வசனத்தை யுட்கொண்டு *சொல்லும் அவிடு சுருதியாம்* என்றார். அவிடு—விநோத வார்த்தை. * वासुदेवं प्रपन्नानां यान्येव चरितानि वै। तान्येव धर्मशास्त्राणीत्येवं वेदविदो विदु:॥—வாஸுதேவம் ப்ரபந்நாநாம் யாந்யேவ சரிதாநி வை, தாந்யேவ தர்மசாஸ்த்ராணீத்யேவம் வேதவிதோ விது:* என்கிற வசனத்தைத் திருவுள்ளம்பற்றி *நல்லபடியாம் மனுநூற்கு அவர் சரிதை* என்றார். * न शुध्यति तथा जन्तुस्तीर्थवारिशतैरपि। लीलयैव यथा भूप! वैष्णवानां हि वीक्षणै:॥—ந சுத்த்யதி ததா ஜந்துஸ் தீர்த்தவாரிசதைரபி, லீலயைவ யதா பூப! வைஷ்ணவாநாம் ஹி வீக்ஷணை:* என்னும் ப்ரமாணத்தை யடியொற்றி "அவர் பார்வை செடியார் வினைத் தொகைக்குத் தீ" என்றார்.

ஆகவிப்படி பகவச்சாஸ்த்ரங்களிலும் இதிஹாஸபுராணாதிகளிலும் ஸாரமாக விளங்கும் ப்ரமாண வசனங்களையே பாசுரமாக்கிப் பணித்த ஞானஸாரமென்னு மிப்பிரபந்தத்தை இவ்வளவோடு தலைக்கட்டியருளினாராயிற்று. ... ... 40

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.
அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர் எழுதிய**

**ஞானஸாரவுரை**

முற்றுப்பெற்றது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

அருளாளப்பெருமாளெம்பெருமானுர் அருளிச்செய்த

## இரண்டாம் பிரபந்தமான

# ப்ரமேயஸாரம்

(ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய உரையுடன் கூடியது.)

---

அவதாரிகை :—மஹாஜ்ஞாநநிதியாய் ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதரான அருளாளப்பெருமாளெம்பெருமானுர், தம்மைத் திருத்திப் பணிகொண்ட எம்பெருமானுர் திருவடி வாரத்திலே நெடுங்காலம் பரிசர்யை பண்ணிக்கேட்ட மஹார்த்த விசேஷங்களை ஸகலஸம்ஸாரி சேதநோஜ் ஜீவநார்த்தமாக ப்ரபந்தீகரிக்கத் திருவுள்ளம்பற்றி அநேக ப்ரமாணவசந ஸாரார்த்த ஸங்க்ரஹ ரூபமான ஞானஸாரமென்னும் ப்ரபந்தத்தையருளிச் செய்தார் கீழ்; இன்னமும் கரைபுரண்ட கருணையினுலே, ஸகலசாஸ்த்ர ஸாரமான திருமந்திரத்தில் பிரதிபாதிக்கப்படுகிற ப்ரமேயங்களையெல்லாம் [—அர்த்த விசேஷங்களையெல்லாம்] தொகுத்து மற்றொரு ப்ரபந்தமிட்டருள வேணுமென்று திருவுள்ளம்பற்றி ப்ரமேயஸாரமாகிற இப்பிரபந்தத்தை யருளிச்செய்கிருர். இதில் முதற்பாட்டில், திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்திற்கு ஸங்க்ரஹமான ப்ரணவத்தின் ஸாரமான பொருளைப் பேசுகிருர்.

அவ்வா னவருக்கு மவ்வா னவரேல்லாம்*
உவ்வா னவரடிமை யென்றுரைத்தார்—இவ்வாறு
கேட்டிருப்பார்க் காளேன்று கண்டிருப்பார் மீட்சியிலா
நாட்டிருப்பா ரேன்றிருப்பன் நான். 1

| | |
|---|---|
| அ ஆனவருக்கு | அகாரத்தின் பொருளான எம்பெருமானுக்கு |
| ம ஆனவர் எல்லாம் | மகாரத்தின் பொருளான ஜீவாத்மவர்க்கமெல்லாம் |
| அடிமை என்று | சேஷபூதர்களென்று |
| உ ஆனவர் உரைத்தார் | உகாரார்த்தமான பெரியபிராட்டியாரோடொத்த புருஷகாரபூதர்களான ஆசாரியர்கள் பணிப்பர்கள்; |
| இவ்வாறு கேட்டு இருப்பார்க்கு | இவ்வண்ணமாக உபதேசமுகத்தாலே கேட்டு இவ்வர்த்தத்திலேஊன்றியிருக்குமவர்களுக்கு |
| ஆள் என்று கண்டிருப்பார் | அடிமைப்பட்டவர்களாகத் தம்மை அத்யவஸித்திருக்குமவர்கள் |
| மீட்சி இலா நாடு இருப்பார் என்று | மீளுதலில்லாத திருநாட்டிலே வீற்றிருப்பர்களென்று |
| நான் இருப்பன் | நான் உறுதியுடையேன். |

* * *—ப்ரணவத்தில் அகாரமானது ஸகல ஜகத்காரணபூதனுய் ஸர்வரக்ஷகனுன எம்பெருமானைச் சொல்லுகிறதாகையாலே [அவ்வானவருக்கு] என்றது அகாரத்தின் பொருளான எம்பெருமானுக்கு என்றபடி. இனி ப்ரணவத்தில் மகாரமானது இருபத்தஞ்சாமக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே ஜ்ஞாதாவான ஆத்மாவைச் சொல்லுகிறதாயிற்று. ஆகவே [மவ்வான வரெல்லாம்] என்றது மகாரார்த்தமான ஆத்மஸமஷ்டியெல்லாம் என்றபடி. பத்தமுக்த நித்யபேதேந மூவகைப்பட்ட ஆத்மாக்களையும் சொல்

லுகிறது. இவ்வாத்மாக்களெல்லாம் ஸர்வேச்வரனுக்கு அடிமையென்பது அகாரத்தின்மேல் ஏறிக்கழிந்த சதுர்த்தியினால் [லுப்த சதுர்த்தியினாலே] தெரிவிக்கப்படுகிறது. ஆக ஆத்மவர்க்கமெல்லாம் எம்பெருமானுக்கு சேஷபூதமென்னுமர்த்தத்தை [உவ்வானவர் உரைத்தார்] ஆசாரியர்கள் அருளிச்செய்தார்களென்றபடி. முமுக்ஷுப்படியில் உகாரத்திற்கு லக்ஷ்மீபரமான ஒரு பொருளும் சொல்லப்படுகிறது. அதுவும் ஒருவாறு பூர்வாசார்ய ஸம்மதமானதே. ஆசார்யர்கள் புருஷகாரக்ருத்யத்தில் ஸ்ரீமஹாலக்ஷ்மியையொத்திருக்குமவர்களாகையாலே உவ்வானவரென்பதனால் ஆசாரியர்கள் விவக்ஷிதர்களாகிறார்கள்.

[இவ்வாறு கேட்டிருப்பார்க்கு ஆளென்று கண்டிருப்பார்] இதனால் பாகவத சேஷத்வம் தெரிவிக்கப்படுகிறது. ஆக பகவச் சேஷத்வத்தோடுகூட பாகவத சேஷத்வத்தையும் தெரிந்து கொள்வார் யாவரோ அவர்கள்தாம் பேறுபெறுவர் எனறதாயிற்று. ... 1

குலமொன் றுயிர்பல தங் குற்றத்தா லிட்ட
கலமொன்று காரியமும் வேறும்—பலமொன்று
காணாமை காணும் கருத்தார் திருத்தாள்கள்
பேணாமை காணும் பிழை. 2

| | |
|---|---|
| உயிர் பல | ஆத்மாக்கள் பலவகைப்பட்டிருந்தாலும் |
| குலம் ஒன்று | அவ்வாத்மாக்களுக்குள்ளது தொண்டக்குலமொன்றேயாம்; |
| தம் குற்றத்தால் இட்ட கலம் ஒன்று | இவர்கள் தங்களுக்குக் கருமவசமாக எம்பெருமான் தந்த தேஹமும் ப்ராக்ருதமான தொன்றேயாம்; |
| காரியமும் வேறு ஆம் | அநுபவிக்கும் பலன்கள் வெவ்வேறு பட்டனவாம்; |
| பலம் ஒன்று காணாமை | ஒருவகையான பலனையும் எதிர்பாராமல் |
| காணும் கருத்தார் | கடாக்ஷிக்கத்திருவுள்ளமுடைய ஆசாரியர்களது |
| திரு தாள்கள் | திருவடிகளை |
| பேணாமை காணும் பிழை | விரும்பிப்பணியாத தொன்றே (துர்க்கதிகளுக்கு மூலகாரணமான) பிழை. |

* * *—ஜீவவர்க்கத்தில் பத்தாத்மாக்கள் என்று ஸம்ஸாரிகள் சொல்லப்படுகிறார்கள். இவர்கள் எம்பெருமான் திருவடியையடையப்பெறாமல் ஸம்ஸரித்தே நிற்பதற்கு அடி ஸதாசார்ய ஸமாச்ரயணமில்லாமை யென்கிறது இப்பாட்டில். [உயிர்பல, குலம் ஒன்று] ஆத்மாக்கள் பலபலவாயினும் அகிலாத்மாக்களுக்குமுள்ளது தொண்டக்குலமெனபதொன்றே. தேஹத்தோடு சேர்க்கை காரணமாக வெவ்வேறு குலங்கள் உள்ளனவாக வழங்க நேர்ந்தாலும் நிஷ்க்ருஷ்டாத்ம ஸ்வரூபத்தில் குலபேதமில்லை; தொண்டக்குலமொன்றேயாம். [தம் குற்றத்தாலிட்ட கலமொன்று] அவரவர்கள் தாம் தாம் பண்ணின பாபங்களுக்குச்சேர ஒரு சரீரத்தை ஏற்றுக்கொள்ளுகிறார்களென்றபடி. ஒரே ஆத்மா ஜன்மபேதேந பலபல தேஹங்களைப் பூண்டாலும் ஒரு ஜன்மத்தில் ஒரு தேஹமேயுள்ளதென்க. [காரியமும் வேறும்] புண்ய பாபரூபங்களான கருமங்களின் பலன்களையநுபவிக்கையாகிற காரியமும வெவ்வேறாயிருக்குமென்றபடி. இங்ஙனேயாவதற்குக் காரணமென்னென்னில்; திருத்தாள்கள் பேணாமை காணும் பிழை; யாருடைய திருத்தாள்களென்னில்; பலமொன்று காணாமை காணுங் கருத்தார் திருத்தாள்கள். க்யாதிலாபபூஜைகளில் ஒன்றையும கருதாமல் கடாக்ஷிப்பதொன்றையே கருத்தில் கொண்டவர்கள் ஆசாரியர்கள்; அவர்களுடைய திருத்தாள்களைப் பேணாமையாகிற பிழைதான் இதற்குக் காரணமென்றதாயிற்று. ... ... ... ... 2

பலங்கொண்டு மீளாத பாவ முளதாகில்
குலங்கொண்டு காரியமென் கூறீர்—தலங்கொண்ட
தாளிணையா னன்றே தனையொழிந்த யாவரையும்
ஆளுடையா னன்றே யவன். 3

| | |
|---|---|
| பலம் கொண்டு மீளாத பாவம் உளது ஆகில் | (நியமேந) பலத்தோடே சந்திப்பித்தே விடும் பாவம் உண்டாயிருக்குமாகில் |
| குலம் கொண்டு காரியம் என் கூறீர் | குலத்தினால் என்ன பலனாகும்? சொல்லுங்கள்; |
| தலம் கொண்ட | எல்லா ஸ்தலங்களையும் ஆக்ரமித்துக் கொண்ட |
| தாள் இணை யான் அவன் | உபய பாதங்களையுடையனான எம்பெருமான் |
| அன்றே | உலகளந்தவக்காலத்திலேயே |
| தனை ஒழிந்த யாவரையும் | ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த சேதநர்களையும் |
| ஆள் உடையான் அன்றே | அடிமை கொண்டவனன்றோ? |

* * *—தொண்டக்குலம் நம்பக்கலில் ஒழிக்க வொழியாததாக இருக்கச் செய்தேயும் ப்ரயோஜநாந்தர பரத்வமொன்று கிடப்பதனாலேயே அது பயனற்றதாகிறது; *தாவியன் றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்ட வெந்தாய்* என்கிறபடியே நிர்ஹேதுகமாக எல்லாரையும் தன்னடிக்கீழ்க் கொண்ட பெருமான் ஸம்ஸாரிகளைத் தன் திருவடிகளுக்கு ஆளாக்கிக் கொள்ளாமைக்கு அடி இவர்களுக்குண்டான ப்ரயோஜநாந்தர ப்ராவண்யமே யென்றதாயிற்று. ... ... ... ... 3

கருமத்தால் ஞானத்தால் காணும் வகையுண்டே
தருமத்தா லன்றியிறை தாள்கள்—ஒருமத்தால்
முந்நீர் கடைந்தா னடைத்தான் முதல்படைத்தான்
அந்நீ ரமர்ந்தா னடி. 4

| | |
|---|---|
| ஒரு மத்தால் | மந்தரமலையாகிற ஒரு மத்தாலே |
| முந்நீர் கடைந்தான் | கடலைக் கடைந்தவனாய் |
| அடைத்தான் | (அதிலே) ஸேதுபந்தம் செய்தவனாய் |
| முதல் படைத்தான் | முதலிலே (அந்த ஜலதத்துவத்தை) ஸ்ருஷ்டித்தவனாய் |
| அந்நீர் அமர்ந்தான் அடி | அந்த நீரிலே கண்வளர்ந்தருளினவனான எம்பெருமானுடைய திருவடிகளை, |
| இறை தாள்கள் தரும் அத்தால் அன்றி | அந்த எம்பெருமான் தானே தன் திருவடிகளைத் தருகையாகிற பரகத ஸ்வீகாரத்தாலன்றி |
| கருமத்தால் ஞானத்தால் காணும் வகை உண்டே | (ஸ்வயத்நரூபமான) கர்மயோக ஜ்ஞானயோகாதிகளாலே காணலாகுமோ? |

* * *—எம்பெருமானடியைக் காண வேணுமானால் கர்மயோக ஜ்ஞாநயோகாதிகளால் காணமுடியாதென்றும் அத்திருவடிகள்தாமே தம்மைக் காட்டிக் கொடுத்தால் காண இயலுமென்றும் சொல்லுகிறதாயிற்று இப்பாட்டு. முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத்தில் "இத்தால் ப்ராப்யந்தானே ப்ராபகமென்கிறது" என்ற சூர்ணையை இங்கே அநுஸந்திப்பது. உலகில் உபாயம் வேறாய் உபேயம் அதனில் வேறாயிருக்கும். "நதீநிஸ்தரணாநந்தரம் ப்லவபரித்யாகம் போலே" என்ற கணக்கிலே உபேயம் கைப்பட்டவாறே உபாயம் விடத்தக்கதாயுமிருக்கும். இங்கு அப்படியல்ல. எம்பெருமான்

திருவடிகளே உபேயம்; அதற்கு உபாயமும் அத்திருவடிகளே. பல கற்றார்க்கும் இதில் தெளிவு பிறப்பது அரிது. பகவத்ப்ராப்திக்கு ப்ரபத்தி உபாயம் என்றாலும் ப்ரபத்தவ்யனான எம்பெருமானை ப்ரபத்தி சப்தார்த்தமாக முடிந்து நிற்கும். * न्यास इति ब्रह्म । न्यास इत्याहुर्मनीषिणो ब्रह्माणम् * என்று உபநிஷத்து மோதிவைத்தது. இறையடியை இறைதாள்கள் தரும் அத்தால் காணும்வகையுண்டேயன்றி, கருமத்தாலும் ஞானத்தாலும் காணும் வகையில்லை என்றதாயிற்று. ... ... ... 4

வழியாவ தொன்றென்றால் மற்றவையும் முற்றும்
ஒழியாவ தொன்றென்றா லோமென்று—இழியாதே
இத்தலையா லேது மிலையென் றிருந்தததுதான்
அத்தலையால் வந்த வருள். 5

| | |
|---|---|
| வழி ஆவது ஒன்று என்றால் | ப்ராப்திஸாதனமாகக் கூடியது ஸித்தோபாயமானவொன்று தான் என்று சொன்னால் |
| ஓம் என்று | அதற்கு இசைந்தும், |
| மற்றவையும் முற்றும் ஒழியா | மற்றையுபாயாந்தரங்களையெல்லாம் அறவே யொழித்து |
| அது ஒன்று என்றால் | அந்த ஸித்தோபாயத்திலேயே பொருந்து என்று சொன்னால் |
| ஓம் என்று | அதற்கும் இசைந்தும் |
| இழியாதே | ஸ்வப்ரவ்ருத்தியில் கைவைக்காமல் |
| இத் தலையால் ஏதும் இலை என்று இருந்தது தான் | சேதநப்ரவ்ருத்தியாலாவது ஒன்றுமில்லையென்று உறுதிகொண்டிருப்பது தான் |
| அத் தலையால் வந்த அருள் | ஸர்வேச்வரனடியாக வாய்த்த க்ருபையாகும். |

* * *—உலகில் ஒரூரையடைவதற்குப் பல வழிகளுண்டாயிருக்கும்; இங்கு அப்படியன்று. பகவத்ப்ராப்திக்கு ப்ரபத்தியாகிற வொன்றுதான் வழி—என்றால் அதற்கிசைந்து உபாயாந்தரங்களை ஸவாஸநமாக விட்டொழிக்க வேணும். அந்த ப்ரபத்திதானும் தன்பால் உபாயபுத்தியை ஸஹியாதே அத்விதீயமாயிருக்குமென்றால் அதில் குதர்க்கங்கள் செய்து போராதே ஓமென்று இசையவேணும். அப்படியிசைந்தவாறே ஸ்வப்ரவ்ருத்தியில் இழியாத நிலைமையுண்டாகும். ஆக இத்தலையால் விளைவித்துக் கொள்வதொரு நன்மையில்லையென்றும் எந்த நன்மையும் அத்தலையாலுண்டாகுமத்தனையென்றும் துணிந்திருப்பதுதான் பகவத் க்ருபாபலம் என்றதாயிற்று. 5

உள்ள படியுணரில் ஒன்றுநமக் குண்டென்று
விள்ள விரகிலதாய் விட்டதே—கொள்ளக்
குறையேது மில்லார்க்குக் கூறுவதேன் சொல்லீர்
இறையேது மில்லாத யாம். 6

| | |
|---|---|
| ஒன்று நமக்கு உண்டு என்று | பேற்றுக்குடலான பர்கதஸ்வீகாரமொன்று நமக்குளதென்று |
| உள்ளபடி உணரில் | யதார்த்தமாக உணர்ந்து பார்க்குமளவில் |
| விள்ள விரகு இலது ஆய் விட்டதே | அவனை விட்டு நீங்கும்வழி இல்லையன்றோ; |
| கொள்ள குறை ஏதும்இல்லார்க்கு | நம்மிடத்திலொன்று கொள்ள வேண்டும்படி ஒரு குறையுமில்லாதவனான ஸர்வேச்வரனுக்கு |
| ஏதும் இறையும் இல்லாத யாம் | எவ்வுபாயமும் சிறிதுமில்லாத [அகிஞ்சநரான] நாம் |
| கூறுவது என் | ப்ரார்த்தநாரூபமாகச் சொல்ல வேண்டியது என்னவிருக்கிறது ? |
| சொல்லீர் | விவேகிகளே ! சொல்லுங்கள். |

* * *—ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை யதார்த்தமாக விவேகித்துப் பார்க்கில், பேற்றுக்கு உறுப்பாக நம்பக்கல் ஒன்றுண்டென்று வாய்திறக்க வழியில்லையாயிற்று; என்று முன்னிரண்டடிகளாற் சொல்லி, பின் சங்காபரிஹாரம் பண்ணுகிறது பின்னடிகளால். நம்பக்கல் ஒன்றுமில்லை யென்னலாமோ? 'அரங்காவடியேற்கிரங்காயே' என்கிற ஓர் உக்திமாத்திரமாவது நம்பக்கல் இல்லையோ? என்று சங்கை. அதற்குப் பரிஹாரம் கொள்ளக் குறையொன்று மில்லார்க்கு இத்யாதி. தான் ரக்ஷிக்குமிடத்தில் நம் பக்கலில் ஒன்று கூட்டிக்கொள்ள வேண்டாத நிரபேக்ஷனை அப்பெருமானுக்கு நாம் கூறவேண்டுவது மொன்றுண்டோ? நம் ஆற்ருமையின் கனத்தாலே சொல்லுகிருேமத்தனை போக்கி அத்தலைக்கு அவச்யாபேக்ஷிதமென்னும் நினைவாலே சொல்லுகிறிலோம் என்றதாயிற்று. ... ... ... ... ... 6

இல்லை யிருவர்க்கு மேன்றிறையை வேன்றிருப்பார்
இல்லை யஃதோருவர்க் கேட்டுமதோ—இல்லை
குறையுடைமை தானேன்று கூறிஞ ரில்லா
மறையுடைய மார்க்கத்தே காண்.

7

| | |
|---|---|
| இருவர்க்கும் இல்லை என்று | ஜீவாத்ம பரமாத்மாக்களான இருவர்க்கும் [மேலேபின்னடிகளில் சொல்லுகிறபடி] இல்லாமை உண்டென்றுகொண்டு |
| இறையை வென்று இருப்பார் இல்லை | ஸ்வாமியான அவனை ஜயித்திருப்பாரொருவருமிலர்; |
| அஃது ஒருவர்க்கு எட்டுமதோ | அப்படிபட்ட வெற்றி (ஸாமான்யமாக) ஒருவர்க்குக் கிட்டக்கடவதோ? |
| (இருவர்க்கும் இல்லாமையொன்று உண்டென்றது எவையென்னில்;) | |
| குறை தான் இல்லை | (அப்பெருமானுக்கு) நம்பக்கலில் ஒன்றுகொள்ள வேண்டும்படியான குறையில்லை; |
| உடைமை தான் இல்லை | (சேதநனுக்கு) ஸமர்ப்பிக்கத்தக்கதான பொருள் எதுவுமில்லை; |
| என்று | என்னுமிவ்விஷயத்தை |
| கூறிஞர் இல்லா மறையுடைய மார்க்கத்தே காண் | அபௌருஷேயமாகையாலே வக்தாக்களை யுடையதல்லாத வேதமார்க்கத்தில் கண்டுகொள். |

* * *—[இல்லை இருவர்க்கும்] எம்பெருமானுக்குமில்லை, நமக்குமில்லை. எது இல்லையென்னில்; நம்பக்கலில் ஒன்று எதிர்பார்த்திருக்குங்குறை அவனுக்கில்லை; அவனுக்கு இடலாவதோருடைமை நம்பக்கலில்லை. இப்படியிருப்பதோர் அத்யவஸாயமுண்டாகில் அவனைவென்று விடலாம்; அதாவது அவன் பக்கலில் ஸர்வஸ்வமும் பெற்று விடலாமென்கை. இவ்வத்யவஸாயம் ஒருவர்க்கு மெளிதன்று.

முதலடியில் "இல்லையிருவர்க்கும்" என்றதைத் தாமே விவரித்தருளுகிருர் *இல்லை குறையுடைமையித்யாதியால். அவன் பக்கலில் குறையில்லை, நம் பக்கலில் உடைமையில்லை. என்று முறையே அந்வயிக்கும். மூன்ருமடியில் "கூறிஞரெல்லாம்" என்பது பாடப்பிழை; 'கூறிஞரில்லா' என்பதே திருத்தமான பாடம். இது மறைக்கு விசேஷணம். வேதத்தைக் கூறினவர்கள் ஒருவருமில்லாமையாலே கூறிஞரில்லாமறையென்கிறது. அபௌருஷேயமான வேதமென்றபடி. அதனுடைய மார்க்கத்தே காண்—இவ்வர்த்தம் வேத விழுப்பொருளென்றதாயிற்று. ... ... 7

வித்த மிழவின்பம் துன்பம்நோய் வீகாலம்
தத்த மவையே தலையளிக்கும்—அத்தைவிடீர்
இச்சியா னிச்சியா தேத்த வேழில்வானத்து
உச்சியா னுச்சியா னும். 8

| | |
|---|---|
| வித்தம் இழவு இன்பம் துன்பம் நோய் வீகாலம் | தனலாபம் தனத்தினிழவு சுக துக்கங்கள்வியாதி சரீரவிநாசம் ஆகிய இவையெல்லாம் |
| தத்தம் அவையே தலை அளிக்கும் | தம் தம் கர்மாநுகுணமாக வந்து சேரும்; |
| அத்தை விடீர் | அவற்றில் கரைதலை விட்டிடுங்கள்; |
| இச்சியான் | அநந்ய ப்ரயோஜனனென்று பேர்பெற்றவன் |
| இச்சியாது ஏத்த | நிஷ்காமனுய்க்கொண்டு துதி செய்யுமளவில் |
| எழில் வானத்து உச்சியான் | பரமபதத்துச்சியிலுள்ளானன ஸர்வேச்வரன் |
| உச்சியான் ஆம் | (இவன்றனது) தலையில்வந்து சேர்ந்தவனுவன். |

* * *—[வித்தம் இழவு இன்பம் துன்பம்] வித்தம் என்று தனலாபத்தைச் சொல்லுகிறது; இழவென்று அதன் நஷ்டதத்தைச் சொல்லுகிறது. தனலாபமுண்டானுல் இன்பமடைவதும் இழவுண்டானுல் துன்பமடைவதும் உலகவியல்பாதலால் உடனே அவையும் சொல்லிற்று. இவைதவிர நோய்களும் வந்து மிடைதரும். இங்ஙனே யிருக்கசெய்தே விநாசகாலமும் ப்ராப்தமாகும். இவை அவரவர்களது கர்மாதீனமாக வந்தே நிற்கும். எவ்வகையினுலும் தடைபட்டு நில்லா. [அத்தை விடீர்] அவற்றில் மனஞ்செலுத்திக் கவலையுறுவது வேண்டாவென்றபடி. கவலையுருதிருத்தற்கு விரகு சொல்லுவன பின்னடிகள். இச்சியான் என்று அநந்யப்ரயோஜநாதிகாரியைச் சொல்லுகிறது. ஒரு பலனையும் இச்சியாதவன்—விரும்பாதவன் என்றபடி. அவன், இச்சியாது ஏத்த—ஒன்றையும் விரும்பாமல் வாய்படைத்த ப்ரயோஜநம் பெறுவோமென்று துதிக்க; அவ்வளவிலே, [எழில் வானத்துச்சியான் உச்சியானும்] சேணுயர்வானத்திருக்கும் தேவபிரான் *தனியேனுருயிரே! என் தலைமிசையாய் வந்திட்டு* என்னும் படியே அவன் தலைமிசை வந்து நின்று கூத்தாடுவன் ... ... 8

தத்த மிறையின் வடிவென்ற தாளிணையை
வைத்த வவரை வணங்கியிராப்—பித்தராய்
நிந்திப்பார்க் குண்டேரு நீணிரயம் நீதியால்
வந்திருப்பார்க் குண்டிழியா வான். 9

| | |
|---|---|
| தாள் இணையை வைத்த அவரை | தம் திருவடிகளைத் தஞ்சமாகக் காட்டிக்கொடுத்த ஆசாரியரை |
| தம் தம் இறையின் வடிவு என்று | தம்தம் ஸ்வாமியின் திவ்ய மங்கள விக்ரஹமென்று கொண்டு |
| வணங்கி இரா | வணங்கி வழிபாடுசெய்யாத |
| பித்தர் ஆய் | பித்தர்களாகி |
| நிந்திப்பார்க்கு | நிந்திக்குமவர்களுக்கு |
| ஏரு நீள் நிரயம் உண்டு | ஒருநாளும் கரையேறமுடியாத ஸம்ஸாரப்படுகுழியில் வீழ்ச்சியே யாம்; |
| நீதியால் வந்திப்பார்க்கு | முறைதவருது வணங்கி வழிபடும் ஸச்சிஷ்யர்களுக்கு |
| இழியா வான் உண்டு | மீட்சியில்லாத திருநாடேயாம். |

* * *—கீழ் எட்டுப்பாட்டுக்களிலு மருளிச்செய்த பொருள்களெல்லாம் திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரத்தின் மஹார்த்தங்களாயிருக்கும். இவ்வர்த்த விசேஷங்களைப் பரமக்ருபையினால் உபதேசித்தருளத் தாமாகவே அபிமானிக்குமாசாரியனை நிந்திப்பார்க்கும் வந்திப்பார்க்கு முண்டாகக்கடவ பலனையருளிச் செய்கிறாரிதில். “தாளிணையை வைத்தவர்” என்றே ஆசார்யரை நிர்தேசிக்கிறார். கீழே ஞானஸாரத்தில் (36.) *மருளாமிருளோட மத்தகத்துத் தன்தான் அருளாலே வைத்தவவர்* என்றருளிச்செய்ததை யடியொற்றிப் பொருள் பணித்தால் ‘தம் திருவடியைத் தலைமேல் வைத்தவர்’ என்னலாம்; இராமாநுசநூற்றந்தாதியில் *ஊழிமுதல்வனையே பன்னப் பணித்த விராமாநுசன் பரன்பாதமுமென் சென்னித்தரிக்க வைத்தான்* என்றும் அரங்கன்செய்ய தாளிணையோடார்த்தான் * என்றுமுள்ள பாசுரங்களை யடியொற்றிப் பொருள் பணித்தால், ‘எம்பெருமான் திருவடிகளைத் தலைமேல் வைத்தவர்’ என்னலாம். இரண்டும் பொருந்தியதே. இப்படிப்பட்ட ஆசாரியரை ஸர்வேச்வரன் வடிவென்று கொள்ளாதே நிந்திப்பார் நகரத்தழுந்துவர்; நீதியால் வந்திப்பார் வானேறி வாழ்வர் என்றதாயிற்று. ... ... ... ... ... 9

இறையு முயிரு மிருவர்க்கு முள்ள
முறையும் முறையே மொழியும்—மறையை
உணர்த்துவா ரில்லாநா ளொன்றல்ல ஆன
உணர்த்துவா ருண்டான போது. 10

இறையும் உயிரும் — ஸர்வேச்வரனையும் சேதநனையும்
இருவர்க்கும் உள்ள முறையும் — இவ்விருவர்க்கு முண்டான சேஷசேஷி பாவ ரூபமான ஸம்பந்தத்தையும்
முறையேமொழியும் மறையை — உள்ளபடி தெரிவிக்கின்ற வேதரூபமான திருமந்திரத்தை
உணர்த்துவார் இல்லா நாள் — உபதேசிக்குமாசாரியன் இல்லாத காலம்
ஒன்று அல்ல — அஸத்கல்பமே;
உணர்த்துவார் உண்டான போது — உபதேசிக்குமாசாரியர் உள்ள காலந்தான்
ஆன — ஸத்தானகாலம்.

* * *—கீழ்ப்பாட்டிலருளிச்செய்த ஆசார்யவைபவத்திற்கு சேஷபூதமாக ஆசார்யோபகாரவைபவத்தை இப்பாட்டிலருளிச்செய்து இப்பிரபந்தத்தைத் தலைக்கட்டியருளுகிறார். பரமாத்மஸ்வரூபத்தையும் ஜீவாத்மஸ்வரூபத்தையும் இவ்விருவர்க்கு முண்டான ஸம்பந்தத்தையும் இவற்றை உள்ளபடி யுணர்த்துகிற ஸகலவேதஸாரமான திருமந்த்ரத்தையும் உணர்த்துகையே ஆசார்யக்ருத்யம்; இதுவே ஆசார்யன் செய்தருளும் மஹோபகாரம். இம்மஹோபகாரம் நிகழாதநாள் அஸத்கல்பம். இது நிகழும் நாளே ஸத்தான நாளென்று ப்ரமேயங்களில் ஸாரமான அர்த்தத்தை யருளிச்செய்து இப்பிரபந்தத்தையும் தலைக்கட்டினாராயிற்று.

முடிவில் ஒரு விண்ணப்பம். இவ்விரண்டு பிரபந்தங்களுக்கும் பல்லாண்டுகட்கு முந்தியே வியாக்கியானமெழுத ஆவல் கொண்டிருந்தும் இடையூறுமிடைதந்தது. இவ்விஜயவாண்டு கார்த்திகைத்திங்களில் அருளாளப்பெருமாளெம்பெருமானார் மஹோத்ஸவஸமய விசேஷத்தில் மிக வெளிதாக இக்கைங்கரியம் நிறைவேறிற்று.

இப்பாசுரங்களை யநுபவித்தபோது *தேனும்பாலுங் கன்னலுமமுதுமாய் அடியேனுக்குத் தித்தித்த விதத்தைத் தெரிவிக்கப் பாசுரமறிகின்றிலேன். நமது எம்பெருமானார் தரிசனத்திற்கு இவ்விரண்டு பிரபந்தங்களும் இரண்டு திவ்ய சக்ஷுஸ்ஸுக்களென்றே உறுதி கொண்டேன். உபதேசரத்தினமாலையும் திருவாய்மொழி நூற்றந்தாதியும் போலே இவையிரண்டும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நித்யாநுஸந்தேயமாகக்கடவன. 10

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் எழுதிய

**பிரமேயஸாரவுரை**

முற்றுப்பெற்றது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---